உ

அவதார புருஷனாகிய
ஸ்ரீ க்ருஷ்ண பகவான்
பாண்டு புத்ரனாகிய அர்ஜுநனுக்குத்
துக்க பய சோர்வுகளைத் தீர்க்கும்பொருட்டு
உபதேசித்த திருவாக்காகிய

# பகவத்கீதா.

ஸம்ஸ்க்ருதத்திலுள்ள
இந்த அரிய ஞான ஶாஸ்த்ரத்தைத்
தமிழ்நாட்டார் எளிதில் அறியும்படி,
ஶிவாநுபூதிமானும்
இலங்கை ராஜாங்க
சட்ட நிரூபண ஸபையில் அங்கத்தவருமாகிய
கௌரவ ஸ்ரீமான்
பொ. ராமநாததுரை, K. C., C. M. G.,
அவர்களால்
தமிழில் இயற்றப்பட்ட மொழிபெயர்ப்பும்
விருத்தியுரையும்,

யாழ்ப்பாணம்
நாவலர்கோட்டம்
ஆ. முத்துத்தம்பிப்பிள்ளையால்
நாவலர் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டன.



விலை ரூபா உ.

1914.

# அக்ஷரப் ப்ரயோக விக்ஞாபநம்.

---

ஆங்கிலேய பாஷையிலுள்ள நாமங்களையாவது வேறு பதங்களையாவது நாம் எடுத்துத் தமிழில் வழங்கும்பொழுது, அவற்றை அப்பாஷைக்குரிய உச்சாரண ரீதியாகவே வழங்குதல் வேண்டும். அப்படி உச்சாரணம் செய்யாதவிடத்து, லக்ஷணக்கேடாகும். அவற்றைக் கேட்கும் அப்பாஷையாளர் தங்கள் பாஷா பதங்கள் என்று எளிதில் அறியமாட்டார்கள். அறிந்தாலும் விபரீத அர்த்தங்கொள்ளவும் இடமுண்டாகும். அதுவுமன்றி க்ரமமாக உச்சரிக்கத் தெரியாமையின்பொருட்டுக் கற்றோரது அவமதிப்பும் பெறப்படும். இதுபற்றி ஸம்ஸ்கிருத பதங்களை மறுபாஷையாளர் வழங்கும் பொழுது ஸம்ஸ்கிருத ரீதியாகவே உச்சாரணஞ் செய்தல் அவஸ்யமாயிற்று.

இந்நூல் ஸம்ஸ்கிருதத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்டமையால், அநேக ஸம்ஸ்க்ருத நாமங்களும் வேறு பதங்களும் தமிழில் ப்ரயோகிக்கப்பட்டன. இவற்றை ஸம்ஸ்கிருத ரீதியாகவே வழங்குதற்குப் போதிய அக்ஷரங்கள் தமிழில் இல்லாமையால், ஸம்ஸ்க்ருதத்திலிருந்து ஶ ஷ ஸ ஜ ஹ என்னும் எழுத்துக்கள் எடுத்துக்கொள்ளப்பட்டன. "சம்பவித்தல்", "சண்முகம்", "சிவன்", "சங்கரன்", "சங்கிரகம்", என்பன "ஸம்பவித்தல்", "ஷண்முகம்", "ஶிவன்", "ஶங்கரன்", ஸங்க்ரகம்", என இந்நூலில் வழங்குதல் காண்க.

தமிழில் மொழிக்கு முதலில் ஒற்றெழுத்துக்கள் வாராவாயினும், ஸம்ஸ்க்ருத உச்சாரண ரீதிக்காக அவைகள் உபயோகிக்கப்பட்டன. தமிழில் "பிரமம்" எனப்படுவது இந்நூலகத்தில் "ப்ரஹ்மம்" என்றும், "திரிதராட்டிரன்" எனப்படுவது "த்ருதராஷ்டிரன்" என்றும், "துருபதன்" எனப்படுவது "த்ருபதன்" என்றும், "துரோபதி" எனப்படுவது "த்ரௌபதி" என்றும், இவ்வாறு வருதல் அறிக.

ஸம்ஸ்க்ருதத்திலுள்ள க ச ட த ப என்னும் வர்க்கங்களின் பல பேதங்களைத் தமிழில் காட்டும்பொருட்டு எம்மால் தமிழ் அக்ஷரங்களுக்குக் குறியீடுகள் அமைக்கப்பட்டன. இந்நூலை அச்சிடத் தொடங்கியபோது, அக்குறியீடுகளையிட்டு அச்சிடின், ஸம்ஸ்க்ருதமறியாத நம்மவர்கள் மயங்குவார்களெனத் தமிழ்ப்பண்டிதர் சிலர் அபிப்ராயப்பட்டமையால், அவற்றை விலக்கினோம். விலக்கினமையால் க ச ட த ப வர்க்கங்களின் பேதங்கள் காட்டப்படாமல் நின்றன. எனவே, பரம் (param), பலன் (phalan), பலம் (balam), பயம் (bhayam), தபஸ் (tapas), தானம் (danam), தர்மம் (dharmam) முதலியவற்றிற்குக் குறியீடின்றி அவ்வவ்வர்க்கத்து முதல் எழுத்துக்களே வருதல் காண்க.

ஈண்டு எடுத்துக் காட்டப்படாத அக்ஷரப் ப்ரயோகங்கள் உளவாதலின், அவற்றையும் ஏற்றவாறு அமைத்துக் கொள்க.

ப்ரபல ஸம்ஸ்க்ருத பண்டிதரும்

மஹாமஹோபாத்யாயராகக் கொழும்பு நகரில்

விளங்குபவருமாகிய

ஸ்ரீமத் பு. ஸர்வேஸ்வர ஸர்மா அவர்கள்

இந்நூற்குச் செய்த அணிந்துரை.

---

अखण्ड सच्चिदानन्द

1. पदवाक्य प्रमाणादौ सर्वासूपनिषत्सुच
दर्शनेषुच पटुस्त्व मत्कार्ये निपुणं हिमाम ॥

2. तथापि विद्यामदमत्तमानः कीर्ति भ्रमेणोगित इश नित्यम्
विद्वद्विवादोपजयस्य दानं ह्येतद्वरं कर्म हृदीति मत्वा ॥

3. कालंच सर्वं विफलं दयालो विद्वद्विवादेन सदाहि कुर्वन्
मदांध मत्तेभ समानएव संचार माशास्वहमप्यकार्षम ॥

4. इत्थं स्थिते, श्रीलङ्कायां विद्याविभवपुष्कलः
ज्ञानवान् रामनाथाख्यो वर्तते कश्चिदीश्वरः ॥

5. महादाता महाकीर्ति रितिश्रुत्वा मुदान्वितः
तत्प्रीतिलब्धये लङ्कामगमं हे विभो तदा ॥

6. गतं मां समहान् धीमान् प्रोच्याहूयात्मजस्यवै
पितेव विद्यासामर्थ्यं ज्ञात्वा तुष्टो भवेद्यथा ॥

7. तथाकार्पोर्दयासिंधो ततो हस्तगतंच मे
दृष्ट्वाग्रन्थं कण्वैप इत्यप्राक्षीन्महाप्रभुः ॥

8. प्रत्यवोचं गुणातीत भगवद्गीतिकेत्यहम्
अपिजानासिसूक्ष्मार्थान् इत्यप्राक्षीत तवेच्छया ॥

9. शङ्कराचार्यरचितं श्रीरामानुजनिर्मितम्
द्वैत बोधक मप्यत्र सर्वभाष्यं प्रभूत्तम ॥

10. पठित्वा दशधा सम्यक् ज्ञातवानस्मिपूकल्म
इतिगम्भीरस्वाहं प्रत्यवोचमहंत्वया ॥

11. परयान्यया नित्य निश्चितः समुग्वंयथा
तत्समीपे वसेयंच तथाकार्पोरनुग्रहम ॥

12. गीताविचारेसंप्राप्ते समीपे तस्य धीमतः
गीतांतरंगलेशंच नाज्ञासिपमितीहमे ॥

13. सगरिष्कारमेवत्वं बुद्धिंतामुदपादयः
सूक्ष्मार्थो भगवद्गीताया व्याकरणशास्त्रतः ॥

14. तर्कशास्त्रेणच स्वामिन् नज्ञायेत दयानिधे
कोशादिनाचेति बुद्धि मुत्पाद्य परिपूर्णक ॥

15. स्वानभतियनस्तस्य गुणातोनस्य हेपर
ज्ञानपूर्वविचारेग ज्ञायेतेतिच मे यतिम ॥

16. प्रतिमासं प्रतिदिनं तद्विचारेषु नांहदाम
उत्पाद्य परमानन्द त्वमकार्षीरनुग्रहम् ॥

17. विद्यामद्रोऽगमदूरे विद्या फलमनुग्रहम्
प्राप्तं ते जगदाधार त्वमासेचनकेश्वर ॥

18. गतेमोहे नास्ति शक्तिः वेदांतस्योपदेशने
परेषां मे कदा भूया दात्म दर्शन मित्यहो ॥

19. प्रतीक्षे ते सदानन्द प्रीत्यानुग्रह मीप्सित
प्राप्तात्म दर्शनं मत्वन्द्यं सद्गुरुमीक्षित ॥

20. तवानुग्रहशक्तिंचाभिन्नंमत्वा मुजीव्यहम्
मर्वत्र करुणा देव कारणंते जगद्गुरो ॥

21. बहुनाकिं जगन्नाथ त्वमन्यान सकलान्विभो
इत्थं सुखेन दयया विनाक्षन्त्या मुजीवय ॥

॥ मु सर्वेश्वर शर्मा. ॥

---

ஸ்ரீமத் மஹாமஹோபாத்யாய மு. ஸர்வேச்வர சர்மா அவர்கள் இந்நூற்கு ஸம்ஸ்க்ருதத்தில் செய்த அணிந்துரை ச்லோகங்களின் மொழிபெயர்ப்பு.

அகண்டாகார ஸச்சிதாநந்தமே,

1. நீ என்னை வ்யாகரணம், மீமாம்ஸா, தர்க்கம் முதலிய பத வாக்ய ப்ரமாணங்களிலும், ஸகல உபநிஷதங்களிலும் ஷட் தர்சநங்களிலும் ப்ரவீணனாக்கி வல்லமையைச் செய்தருளினாய்.

2,3. ஈசா, அவ்விதம் செய்தருளியும், வித்யாமதம் மேலிட்ட தன்மையால், எப்பொழுதும் கீர்த்தி மோஹத்தால் ஏவப்பட்டு, வித்வான்களுடன் விவாதம் பண்ணலும், அவர்களை அபஜயஞ் செய்தலுமே சிறந்த கர்மம் என்று எண்ணி மதயானைபோற் பலதிக்கிலும் சென்று விபலமாய்த் திரிந்தேன்.

4,5. விபு, இவ்விதம் ஸஞ்சரிக்கும்பொழுது, கல்வியும், செல்வமும், ஞானமும் பெற்ற ராமநாதன் என்ற நாமமுள்ள ஓர் மஹாதயாளு ஸ்ரீ லங்காவில் வாழ்கின்றார் என்றும், அவர் ஈதலிலும் புகழிலும் பெரியவர் என்றும் கேள்வியுற்று, அங்கு சென்றேன்.

6,7. தயாஸிந்து, ஞானவானாகிய அந்த மஹான் என்னை வரவழைத்து, என் வித்வஸாமர்த்யத்தை அறிந்து, என்மேல் ப்ரீதிகொள்ளும்படி அநுக்ரஹஞ் செய்தாய். பின்னர் அந்த மஹாப்ரபு என்கையிலிருக்கும் ஒரு க்ரந்தத்தைக் கண்டு, ஈதென்னவென்று வினவினார்.

8. குணநிதே, நான் பகவத்கீதாவென்று சொன்னேன். உனது இச்சாசக்தியால் அவர் அதன் ரஹஸ்யார்த்தங்களை அறிவீராவென்று என்னைக் கேட்டார்.

9,10. ஸ்ரீ சங்கராசார்யரால் இயற்றப்பட்டதும் ஸ்ரீ ராமநுஜரால் இயற்றப்பட்டதும் த்வைதத்தை விளக்குவதுமாகிய ஸர்வபாஷ்யங்களையும் பத்துமுறை கீதாவிஷயமாக ஆராய்ந்தேன் என்று அஹந்தையால் கம்பீரமாகச் சொன்னேன்.

11. நித்ய, உனது மேலான தயையால் அந்த பஹான் அருகே கவலையற்று ஸுகமாக நான் வஸித்துவரும்படி அருளினாய்.

12-16. ஸ்வாமி, அவர் ஸந்நிதியில் கீதாவிசாரம் நடைபெற்று வருங்காலத்தில் கிஞ்சித்தேனும் கீதாவின் அந்தரங்கம் அறிந்திலேன் என்று எனக்கு நீ மேலானபுத்தியை பரிஷ்காரமாக ஊட்டினாய். தயாநிதியே, பரிபூர்ண வஸ்துவே, வ்யாகரண சாஸ்த்ரத்தாலும் தர்கக சாஸ்த்ரத்தாலும் அமரகோசமுதலியவற்றாலும் பகவத்கீதாவின் ஸூக்ஷ்மார்த்தம் அறியமுடியாதென்ற நிச்சயத்தை ஏற்படுத்தி, குணாதீதனும் ஸ்வாநுபூதிமானுமாகிய அந்த ப்ரபுவினுடைய ஞானபலத்தினால் தோன்றும் விளக்கமொன்றாலேயே கீதாவின் ரஹஸ்யப்பொருள் அறியக்கூடும் என்ற புத்தியையும் உதயமாக்கி, நாள்தோறும் மாஸந்தோறும் கீதா விசாரணைகாலங்களில் அந்தப் புத்தியை வற்புறுத்தி, நீ என்னை ரக்ஷித்தாய், பரமாநந்த வஸ்துவே.

17. ஜகத்துக்கெல்லாம் ஆதாரப்பொருளே, தெவிட்டாத பரமேஶ்வரா, எனது கல்விச்செருக்கு வெகுதூரம் அகன்றுவிட்டது. கல்வியின் பலனாகிய உனதருளைப் பெற்றேன். நீ என்னைக் காப்பாயாக.

18-20. உன் அருளால், மூடஞானம் அகன்ற பொழுது மற்றவர்களுக்கு வேதாந்தத்தைக் கீர்த்திக்காக உபதேசிப்பதில் சக்தியற்றவனென்றும், ஆஶ்சர்ய கரமான ஆத்மதர்சநம் இனி எப்போது எனக்குண்டாகுமென்றும் எண்ணி, யாவராலும் போற்றப்பட்ட நித்யாநந்தமே, உன் அநுக்ரஹத்தை அன்போடு அபேக்ஷிக்கிறேன். ஆத்ம தர்சநம் பெற்றவரும் சர்வஜனங்களால் வணங்கப்படுபவருமாகிய ஸத்குருவையும் உனது அநுக்ரஹசக்தியையும் அபின்னமாகவே சிந்தித்து நான் ஸுகஜீவியாயிருக்கின்றேன். ஜகத்குருதேவ, ஸர்வவ்யாபி, உன் கருணையே காரணம்.

21. ஜகந்நாத, மிகப்பேசுவதால் பயன் என்ன. விபு, நீ ஏனையோர் யாவரையும், என்னைப்போலவே, கருணையால் குறைவின்றி ஸுகமாக வாழ்விப்பாயாக.

# விஷய அடக்கம்.

# முகவுரை.

---

பாண்டவர்களும் தார்த்தராஷ்ட்ரர்களும் யுத்தகளத்தில் எதிர்த்து நிற்கும் ஸமயத்தில், தர்மஶாஸ்த்ரார்த்த விமூடத்தால் (பகவத்கீதா, உ. எ; அநுகீதா, கக, கூ) அர்ஜுனனுக்கு நேரிட்ட அதைர்யத்தையும் துக்கத்தையும் நிவிர்த்தி செய்யும்பொருட்டு, ஸ்ரீ க்ருஷ்ணபகவான் உபதேசித்த விஷயங்களை ஸ்ரீ வ்யாஸபகவான் மஹாபாரதத்தில், பீஷ்மபர்வத்தில் அடங்கிய பகவத்கீதா பர்வத்தில், பதினெட்டு அத்யாயங்களால் விரித்தார்.

இந்தப் பதினெட்டு அத்யாயங்கள் அர்ஜுன விஷாதயோகம், ஸாங்க்யயோகம், கர்மயோகம், ஞானயோகம், கர்ம ஸந்ந்யாஸயோகம், ஆத்ம ஸம்யமயோகம், விஜ்ஞானயோகம், அக்ஷரப்பர ப்ரஹ்மயோகம், ராஜவித்யா ராஜகுஹ்யயோகம், விபூதியோகம், விஶ்வரூப ஸந்தர்ஶனயோகம், பக்தியோகம், க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ விபாகயோகம், குணத்ரய விபாகயோகம், புருஷோத்தமப் ப்ராப்தியோகம், தைவாஸுர ஸம்பத் விபாகயோகம், ஶ்ரத்தாத்ரய விபாகயோகம், மோக்ஷ ஸந்ந்யாஸயோகம், என்று மஹாபாரதத்திலேயே வகுக்கப்பட்டன. இவையெல்லாம் சேர்ந்தபர்வம் ஸ்ரீ "பகவத்கீதா" என்று ஸம்ஸ்க்ருதத்திலும், "பகவற்கீதை" என்று தமிழிலும், வழங்கிவருகின்றது.

"பகவத்கீதா" என்ற பதம் "பகவத் உக்தா" என்று அஶ்வமேதபர்வத்தில் அடங்கிய அநுகீதாவில் விளக்கப்பட்டது. அஃதாவது, பகவான் மொழிந்தவை, பகவானது திருவாக்யங்கள், என்று பொருள்படும். ஆதலால், பகவற்கீதை "பகவற்கீதைகள்" என்றும் அழைக்கப்படும்.

"பகவான்" என்ற பதத்தின் விஶேஷ அர்த்தம் பூர்ண ஐஶ்வர்யம், வீர்யம், யஶஸ், ஸ்ரீ, ஞானம், வைராக்யம், என்ற "பகத்"

தை உடைய பரமாத்மா என்றும்,—பொது அர்த்தம் பூதங்களின் உற்பத்தி ஸ்திதி விநாசத்தையும், ஞானம் அஞ்ஞானம் என்ற வற்றின் நிலைகளையும், உள்ளபடி அறிந்த ஜீவன்முக்தன் என் றும்,—விஷ்ணு புராணத்தில் (௬. ரு. இல்.) பராசரருஷி விளக்கியி ருக்கின்றார். எனவே, பரமாத்மாவும், மாயையில் உட்புகுந்த பரமாத்மாவாகிய மகேச்வரனும், அவர் அவதாரங்களும், ஜீவன் முக்தர்களும் "பகவான்கள்" என்பது பெறப்பட்டது.

அநேக பகவான்கள் அநேக புண்யாத்மாக்களுக்கு ஞானோ பதேசம் செய்திருப்பதாலும், அந்தஞானோபதேசங்கள் எல்லாம் பகவற்கீதைகள் என்று அழைக்கத்தக்கவையாதலாலும், இதி லடங்கிய பகவற்கீதைகளை ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதத்திற் பி றந்த (அஃதாவது, க்ருஷ்ணபகவானும் அர்ஜுனனும் ஸம்வாதி த்த ஸமயத்திற் பிறந்த) பகவற்கீதைகள் என்று விசேஷிக்கப்ப டும். (அத். மஅ. ௱ம, எமக). இதுபற்றியே, ஒவ்வொரு அத்யாய முடிவிலும் "உபநிஷத்கள் என்றும், ப்ரஹ்ம வித்தை என்றும், யோகசாஸ்த்ரம் என்றும், பகவற்கீதைகள் என்றும், ஸ்ரீ க்ருஷ் ணார்ஜுன ஸம்வாதத்தில் ப்ரஸித்திபெற்ற [இந்த இந்த] அத்யாயம் முற்றிற்று" என்று எல்லா அத்யாயங்களும் விளக் கப்பட்டன.

இந்த ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்வாத பகவற்கீதையில் காம க்ரோத பய துக்க நிவிர்த்திகள் எவ்விதம் ஸித்திக்குமென்பது பூரணமாக உணர்த்தியிருக்கின்றது. ஆத்ம உத்தாரணத்தைக் கருதி வாழும் உலோகத்தாருக்கு இதனிலும் மேலான நூல் இல்லை. இந்நூல் ஆதிதொட்டு அந்தம்வரையில் அநுபவ முறை யாகவே திருவாய் மலர்ந்தருளப்பட்டது.

"அத்யாயம்" என்றது அத்யயன மல்லை; ஓர் பாடத்துக்கு உட்பட்ட விஷயங்கள் என்று பொருள்படும்.

ஒவ்வொரு அத்யாயத்தையும் இன்ன இன்ன "யோகம்" என்றது என்னை? அர்ஜுன விஷாதயோகம், ஸாங்க்யயோகம், கர்மயோகம் முதலான பெயர்கள் ஏதுகாரணத்தால் ஏற்பட்டன எனிற், கூறப்படும்.

# முகவுரை.

"யோகம்" என்ற பதம் "யுஜ்" (கூடுதல், பொருந்தல்) என்ற தாதுவில் ஜனித்து, கூடுதல், பொருந்துதல் என்று அர்த்தமாகும். ஈண்டு எது எதனோடு கூடுகிறது என்றால், அத்யாயநாமத்தால் குறிக்கப்பட்டது எதுவோ அதனோடு அர்ஜுனனுடைய அறிவு கூடுகிறது என்று கொள்ளவேண்டும். எனவே, "அர்ஜுனவிஷாதயோகம்" என்ற முதலாம் அத்யாயம் அர்ஜுனனுடைய அறிவு, விஷாதத்தோடு (சோர்வுடன் அல்லது தளர்ச்சியோடு) பொருந்திற்று என்பதைக் கூறும் முதற்பாடம் என்று அர்த்தமாகும்.

"ஸாங்க்யயோகம்" என்ற இரண்டாம் அத்யாயம் அர்ஜுனனுடைய அறிவு ஸாங்க்யம் என்ற மெய்யறிவோடு கூடிற்று எனவும், "கர்மயோகம்" என்ற மூன்றாம் அத்யாயம் அர்ஜுனனுடைய அறிவு கர்மத்தின் [illegible]த்தோடு கூடிற்று எனவும், பொருள்பட இவ்வாறு எஞ்சின பதினைந்து அத்யாய நாமங்களையும் பொருள்பண்ணவேண்டியது. காதால் ச்ரவணம்செய்து, மனஸால் மனனம்செய்து, பகவானுடைய திருவாக்யங்களின் அர்த்தங்களை அறிவு பொருந்துதலே ஈண்டு "யோகம்".

ஆனால் அர்ஜுனனுடைய அறிவுக்கு மாத்ரமோ குறித்த விஷயங்கள் யோகம் ஆகும் எனின், அன்று. அவனுக்கு உபதேசித்த வாக்யங்களை எந்த ஞானாதிகாரி கேட்டு, அல்லது வாசித்துச் சிந்திக்கிறானோ அவனுக்கும் அவை யோகமாகும். அங்ஙனமாயின், முதலாம் அத்யாயத்தைச் சிந்திப்பவனுடைய அறிவு விஷாதத்தைப் பொருந்துமோ என்று வினவலாம். பொருந்தும் என்பதற்கு ஐயமில்லை. எவ்வாறெனின், மரணத்துக்கஞ்சாத அர்ஜுனன் "நான் எவ்விதம் என்னுடைய குருமாரையும் பந்துக்களையும் கொல்லலாம், கொன்றால் தர்மத்துக்கு விரோதமே" என்று எண்ணிச் சோர்ந்து துக்கித்தது போல, வாசிக்கும் ஞானாதிகாரியும் அர்ஜுனன் கூறியது சரியே, இவன் எப்படி அவர்களைக் கொல்லலாம், என்று எண்ணிச் சோர்ந்து துக்கிப்பான். ஆதலால், இந்தத் துக்கநிலை இருவருக்கும் விஷாதயோகமே. பகவற்கீதை ௰அ. எ௰ இல், ஸ்ரீ க்ருஷ்ணபகவானுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த ஸம்வாதத்தை எவன் அத்யயனம் செய்வானோ,

# முகவுரை.

அவனால் நான் ஞானயஜ்ஞத்தால் பூஜிக்கப்பட்டவனாவேன் என்று உறுதி கூறினார்.

பகவற்கீதை அநுஷ்டுப் ஶ்லோக ரூபமாக இயற்றப்பட்டது. ஓர் அடிக்கு எட்டு அக்ஷரவீதம் முப்பத்திரண்டு அக்ஷரம் பெற்ற பா, அநுஷ்டுப் ஶ்லோகம். ௬௯௬ ஶ்லோகங்கள் பகவற்கீதையில் உள்ளன.

பகவற்கீதையிற் கூறப்பட்ட விஷயங்களில் அநேகம் மஹாபாரத சரித்ரத்தை அறிந்தாலன்றி விளங்காமலிருக்குமாதலால், அதனைச் சுருக்கமாகச் சொல்வது நன்று.

சந்த்ர வம்ஶத்திற் பிறந்து, க்ருதயுகத்தில் வாழ்ந்த, யயாதி ராஜனுக்குப் புரு என்றும், யது என்றும், இரண்டு புத்ரர்கள்.

புரு வம்ஶத்தில் தோன்றின துஷ்யந்தன் விஶ்வாமித்ரனுடைய மகளாகிய ஶகுந்தலையை விவாகம்பண்ணி, பரதன் என்ற புத்ரனைப் பெற்றான். இவனுடைய வம்ஶத்தில் ஹஸ்தி என்ற ராஜன் பிறந்தான். இவன் இக்காலத்தில் உள்ள டில்லிக்கு ஸமீபத்தில் ஹஸ்தினாபுரம் என்ற பட்டணத்தைக் கட்டினான். இவன் வம்ஶத்தில் குரு என்ற ராஜன் தோன்றினான். இவன் ப்ரஹ்மாவின் ஸனாதன உத்தரவேதி என்று ப்ரஸித்திபெற்ற ஸமந்தபஞ்சகத்தை உழுது அதில் யோகவ்ரதத்தாலாவது யுத்தஞ்செய்தாவது இறந்தவர் யாவரும் ஸ்வர்க்கலோகப் ப்ராப்தி பெறவேண்டுமென்று தபஸ்செய்து, பெருங் கீர்த்தியைப் பெற்றான்.

இந்த ஸமந்தபஞ்சகம் "குருக்ஷேத்ரம்" என்றும் அழைக்கப்படும். இது அரந்துகம் தரந்துகம் ராமா மசக்கரம் என்ற நாலு எல்லைகளுக்குள் அடங்கினதென்று மஹாபாரதத்தில் ஶல்யபர்வத்தில் கூறப்பட்டது. இந்தத்தேஶம் வடகிழக்கில் ஹரித்வாரம் வரையில், தென்கிழக்கில் வ்ருந்தாவனம் வரையில், மேற்கில் புவனம் வரையில், வடமேற்கில் பட்டியாலம் வரையில், உள்ளதென்று சில பண்டிதர்கள் உத்தேஶிக்கின்றார்கள்.

குரு வம்ஶத்தில் பிறந்தவர்களைக் கௌரவர் என்பர். த்வாபரயுக முடிவில் ஶந்தநு என்ற கௌரவராஜன், நரரூபங்

# முகவுரை.

கொண்ட கங்காதேவியை விவாகம்பண்ணித் தேவவ்ரதனையும், ஸத்தியவதியை விவாகம்பண்ணி விசித்ரவீர்யனையும், பெற்றான்.

தேவவ்ரதன் தனக்குரிய பட்டத்தை வேண்டாமென்று விசித்ரவீர்யனுக்கே கொடுத்துப் ப்ரஹ்மசர்ய வ்ரதம் ஸாதித்தபடியால் "பீஷ்மன்" (தபோவலிமையால் பயத்தைச்செய்வோன்) என்று அழைக்கப்பட்டான்.

விசித்ரவீர்யனுடைய மூத்த பத்னி த்ருதராஷ்ட்ரனையும், இளைய பத்னி பாண்டுவையும் பெற்றார்கள்.

த்ருதராஷ்ட்ரன் குருடனாய்ப் பிறந்ததால் பாண்டு பட்டாபிஷேகம் வகித்தான்.

வெகுநாள் ராஜ்யம் பண்ணித் தன் பத்னிகளாகிய குந்தி மாத்ரி என்பவர்களோடு பாண்டுராஜன் வானப்ரஸ்தாச்ரமத்திற் சென்றான். அங்கு குந்தியால் யுதிஷ்டிரன் பீமன் அர்ஜுனன் என்ற மைந்தர்களையும், மாத்ரியால் நகுலன் ஸகதேவன் என்றவர்களையும், பெற்றான். அவனும் மாத்ரியும் இறந்தபின், வனத்தில் வாஸம் செய்யும் ருஷிகள் குந்தியையும் பஞ்சபாண்டவர்களையும் ஹஸ்தினபுரத்துக்கு அழைத்துக்கொண்டுபோய் த்ருதராஷ்ட்ரன் கையில் ஒப்புவித்தார்கள்.

பாண்டவர்களின் விசேஷ குணங்களைக் கண்டு த்ருதராஷ்ட்ரனுடைய புத்ரர்களில் துர்யோதனன் முதலியவர்கள் அதிகப் பொறாமைகொண்டு அநேகவிதத்தால் அவர்களைக் கொல்ல எத்தனித்தார்கள். ஈதெல்லாம் த்ருதராஷ்ட்ரன் கேள்வியுற்றுத் தன் ராஜ்யத்தைப் பாகம்பண்ணிக் காண்டவப்ரஸ்தம் என்ற தேசத்தைப் பாண்டவர்களுக்குக் கொடுத்தான். இதில் பாண்டவர்கள் இந்த்ரப்ரஸ்தம் என்ற அத்தியலங்கார பட்டணத்தை உண்டுபண்ணினார்கள். இவர்களுடைய செல்வத்தையும் பராக்ரமத்தையும் ஸகிக்கக்கூடாத துர்யோதனன் சூதால் ராஜ்யத்தை அபகரிக்கலாம் என்றெண்ணி, தர்மநீதியில் வழுவாத யுதிஷ்டிரராஜனாகிய மூத்த பாண்டவனைக் கபடநிறைந்த தன் மாமனாகிய ஶகுனியோடு சொக்கட்டான் விளையாடும்படி அழைத்தான். இதில் தோல்வியடைந்து ராஜ்யத்தை இழந்து பஞ்சபாண்ட

வர்கள் கங வருஷகாலம் வனவாஸிகளாய்த் திரிந்தார்கள்.

அதன்பின் அவர்கள் துர்யோதனனிடம் வந்து தங்கள் ராஜ்யத்தைத் தங்களுக்கு ஒப்பந்தப்படி கொடுக்கவேண்டும் என்று கேட்க, அவன் கொடுக்கமாட்டேன் என்று சொன்னான். பாண்டவர்களுக்கும் தார்த்தராஷ்ட்ரர்களுக்கும் ஆதிமூதாதையாகிய யயாதிராஜனுடைய புத்ரனுகிய யது ராஜன் வம்ஸத்தில் தோன்றி, யாதவர்களை அரசாளும் ஸ்ரீ க்ருஷ்ணபகவான் மத்யஸ்தராக வந்தும், அவர் திருவாக்கையும் மறுத்துத் துர்யோதனன் கொடிய அகம்பாவ நிலையைச் சாதித்தபடியால், பாண்டவர்கள் தார்த்தராஷ்ட்ரர்களோடு போர்பண்ணவேண்டியதாயிற்று.

இருபக்ஷத்தாரும் தங்கள் தங்கள் இஷ்டமுள்ளவர்களின் உதவியைப் பெற்றார்கள். துர்யோதனன் ஸ்ரீ க்ருஷ்ணனுடைய சேனையை மதித்து, அதுவே தனக்குப் போதுமென்றான். பாண்டவர்கள் ஸ்ரீ க்ருஷ்ணன் மாத்ரம் தங்களுக்குப் போதுமென்றார்கள். அவ்வாறே அருளி, பகவான் அர்ஜுனனுக்கு ஸாரதியாக அமைந்து, வெற்றிக்கு வேண்டிய உபாயங்களை எல்லாம் அவனுக்குத் தக்கதக்க ஸமயங்களிற் போதித்தார்.

யுத்த ஆரம்பத்தில் மரணபயமற்ற அர்ஜுனன் தன்னோடு விரோதம் பாராட்டும் ஸஹோதரரையும் மற்றும் அநேக பந்துக்களையும் குருமாரையும் எப்படிக்கொல்லுவேன், மண்ணுசைக்காக அவர்கள் உயிரை வதைத்து மாளச்செய்தபின் எனக்கு ராஜ்ய போகத்தால் என்னபலன், ஸதாகாலமும் துக்கமே, என்றெண்ணிச் சோர்வுபெற்றுத் தன் கர்மம் யாதென்று அறியாமல் தடுமாறித், தன் அபுத்தியையும் பயத்தையும் துக்கத்தையும் தீர்க்கவேண்டுமென்று பகவானைப் ப்ரார்த்தித்தான்.

இது கேட்ட ஸ்ரீ க்ருஷ்ணபகவான் கர்மத்தின் ஸ்வரூபத்தைப்பற்றியும், பயம் மோகம் துக்கம் என்றவைகளின் நிவிர்த்தியைப்பற்றியும், விரிவாக உபதேசித்தார் அவர் திருவாக்யங்களை உணர்ந்து அர்ஜுனன் தெளிந்த புத்திமானுகிப் போர் புரிந்தான்.

# முகவுரை.

கண்ணில்லாத த்ருதராஷ்டிரன் தன் மக்களும் பாண்டவர்களும் பண்ணும் யுத்தத்தின் வ்ருத்தாந்தத்தை அறிய விரும்பினபடியால், ஸ்ரீ வியாஸருஷி த்ருதராஷ்டிரனுடைய ஸாரதியும், கல்வி சித்தஸுத்தி பொறுமை தயவு முதலிய நற்குணங்களால் சிறப்புப்பெற்றவனுமாகிய ஸஞ்ஜயனுக்கு யுத்தகாலத்தில் நடக்கின்ற ஸம்பவங்கள் எல்லாம் அறியத்தக்க ஓர் ஞான ஸக்தியை அருளினார்.

பகவற்கீதையின் முதல் அத்யாய ஆரம்பத்தில் த்ருதராஷ்டிரன் யுத்தத்தைப்பற்றிக் கேட்ட வினாவுக்கு ஸஞ்ஜயன் உத்தரம் அளித்தான்.

ஸ்ரீ க்ருஷ்ணபகவானுக்கும் அர்ஜுனனுக்கும் நடந்த ஸம்வாதம் முழுவதையும், மற்றும் ஸகல செய்திகளையும், தான் அநுக்ரஹித்த ஞான சக்ஷுவாலும் ஞான ஸ்ரோத்ரத்தாலும் ஸஞ்ஜயன் அறிந்து த்ருதராஷ்டிரனுக்கு விளக்கினான் என்று ஸ்ரீ வ்யாஸருஷியே தான் பாடின மஹாபாரதத்தில் கூறியிருக்கின்றார்.

---

# முதல் அத்யாயம்

## அர்ஜுன விஷாதயோகம்.

---

[அஃதாவது, அர்ஜுனன் தர்மசாஸ்த்ர விதிகளைக் கற்றும் அவற்றின் லக்ஷ்யார்த்தத்தை அறியாதபடியால் (பகவத்கீதா, ௨. ௭; ௰௮. ௭௰௨, ௭௰௩. அநுகீதா, ௧௫. ௯.), அதைர்யத்தையும் துக்கத்தையும் அடைந்தான் என்றதைவிளக்கும் முதற்பாடம்.]

---

த்ருதராஷ்ட்ரன் கூறினன்:

௧. ஓ ஸஞ்ஜய. யுத்தஞ்செய்ய விருப்பமுள்ளவர்களான என்னைச்சார்ந்தவர்களும் பாண்டுவைச்சார்ந்தவர்களும் தர்மக்ஷேத்ரமாகிய (1) குருக்ஷேத்ரத்தில் (2) கூடி என்னசெய்தனர். (3)

(1) அன்பு நிலையை ஏற்படுத்தும் தேசமாகிய.

அநேக ஸாதுக்கள் அங்கு எப்பொழுதும் வஸிப்பதால், அவர்களைச் சார்ந்தவர்கள் எல்லோரும் புண்யகர்மங்களை அநுஸரித்தே வாழ்வர்.

தெய்வத்திலும் ஜீவாத்மாக்களிலும் மிகப் ப்ரீதிபெற்றவர்கள் வாழுமிடம் தர்மக்ஷேத்ரம்.

(2) குருபூமியில்.

மநு ஸ்ம்ருதியில் (௨. ௧௯.) குருக்ஷேத்ரத்தை ப்ரஹ்ம ருஷிகளின் வாஸஸ்தானமென்று கூறியிருப்பதால், பரதராஜனுடைய வம்சத்தில் பிறந்த குருராஜனுடைய தேசம் என்று அர்த்தம் செய்தல் சரியன்று. குருராஜன் பிறக்க வெகுகாலத்திற்குமுன் குருக்ஷேத்ரம் ப்ரஸித்திபெற்றது. "குரு" என்ற பதம் கு (=ப்ருதிவி) ரு (=தடுத்தல்) என்ற சொற்களில் நின்று

ஜனித்து, ப்ருதிவி முதலிய ப்ராக்ருதி தத்வங்கள் யாவையும் தனைந்த ஜீவன்முக்தன் என்று பொருள்படும்.

ஶங்கராசார்ய ஸ்வாமிகளும், பாஷ்ய ஹ்ருதயத்தில், குருக்ஷேத்ரத்தை ஜீவன்முக்தர்கள் வஸிக்குமிடமென்று விளக்கினர்.

இது ஸமந்தபஞ்சகம் என்றும், ப்ரஹ்மக்ஷேத்ரம் என்றும் அழைக்கப்படும். ஸரஸ்வதி நதியைத் தெற்குப்பக்கத்திலும் த்ருஷத்வதி நதியை வடக்குப்பக்கத்திலுமுடையதென்று மஹாபாரதத்திலும் மநுஸ்ம்ருதியிலும் கூறியிருக்கின்றது.

(3) தர்ம க்ஷேத்ரத்தில் என்னசெய்தனர் என்ற வினவின் கருத்து, யுத்தகளத்தைச் சேர்ந்தபின் துர்யோதனன் பாண்டவர்களுக்கு ராஜ்யத்தில் தாயபாகம் கொடுக்கச் சம்மதித்தானா, அல்லது அவன் துர்புத்தியுடையவனானும், பாண்டவர்களுக்குத் தர்மபுத்தி வந்து ஸஹோதரர்களுக்குள் போர் வேண்டாமென்று களத்தைவிட்டு நீங்கினார்களா, அல்லது போர் புரிந்தார்களா, என்பது.

ஸஞ்ஜயன் கூறினான்:

உ. அந்த ஸமயத்தில் (1) துர்யோதனராஜன், வகுக்கப்பட்ட (2) பாண்டவஸேனையைக் கண்டு, ஆசார்யனிடஞ் (3) சென்று, இந்தவார்த்தையை உரைத்தான்.

(1) படைகள் ரணகளத்தைச் சேர்ந்த காலத்தில்.

(2) பத்ம வ்யூஹம், ஶங்க வ்யூஹம் முதலிய வ்யூஹங்களாகப் (பிரிவுகளாகப்) பாண்டவர்களால் வகுக்கப்பட்ட.

(3) பாண்டவர்களுக்கும் தார்த்தராஷ்ட்ரர்களுக்கும் யுத்த வித்தையின் விநோத தர்மங்களைக் கற்றுக்கொடுத்த குருமாரில் ஒருவராகிய த்ரோணரை ஆசார்யன் என்ற பதம் குறித்தது. இவர் ப்ராஹ்மண குலத்தில் பிறந்தவர், பரத்வாஜ ருஷியின் புத்ரன்.

துர்யோதனன் கூறினான்:

ங. ஆசார்யனே (1), புத்திமானும் உமது ஶிஷ்யனுமாகிய (2) த்ருபதன் மகனால் வகுக்கப்பட்ட பாண்டுபுத்ரர்களின் இந்தப்பெரிய ஸேனையைப்பாரும்.

(1) ஆசாரயன (தாது, சின்=கூட்டுதல், ஆ+சினோதி=நற்றிலும் + கூட்டிக்கொடுக்கிறவன்) ஶாஸ்த்ரத்தின் பொருளைச் சேர்த்து அறிவிக்கின்றவன்.

(2) இது விபரீத லக்ஷணம், பரிகாசவார்த்தை. நன்றியறிவில்லாத உம்முடைய மூட ஶிஷ்யன் உமக்கு விரோதமாக நின்று வகுத்த சேனையைப்பாரும், என்பது கருத்து.

ச. ரு. சு. இதில் (1) யுயுதானனும் (2), விராடனும் (3) மஹாரதனாகிய (4) த்ருபதனும் (5), த்ருஷ்டகேதுவும் (6), வீர்யம்பெற்ற காஶிராஜனும், சேகிதானனும் (7), புருஜித்தும், குந்திபோஜனும் (8), மானுடர்களில் மிகச்சிறந்த ஶைப்யனும் (9), யுதாமன்யுவும் (10), தைர்யம்பெற்ற உத்தமௌஜாவும், பராக்ரமம் பெற்ற ஸௌபத்ரனும் (11), த்ரௌபதேயர்களும் (12) இருக்கின்றனர். இவர்கள் எல்லோரும் ஶூரர் (13), பெரிய வில்லாளிகள், மஹாரதர்; யுத்தத்தில் பீமன் அர்ஜுனன் என்பவர்களுக்கு ஸமமானவர்கள்.

(1) இந்தப் பாண்டவ கட்சியில்.

(2) மிகப் போர் புரிகின்றவன் என்றது பெயரின் பொருள்.

(3) சத்துருக்களைக் கதறும்படி செய்கிறவன்.

(4) மஹாரதன் பெரியதேர் உடையவன். தான் பதினாயிரம் குதிரைவீரரால் சூழப்பட்டுத் தன்னையும் தன் ஸாரதியையும் தான் ஒருவனே காத்துப் போரில் வெற்றிபெறும் திறமுடையவீரன்.

(5) வ்ருக்ஷத்தை அடையாளமாகக் கொண்டவன்; மரக் கொடியோன்.

(6) உறுதியான கொடி ("கேது") உள்ளவன்.

(7) சிகிதானன் மகன்.

(8) குந்தியைக் காத்தவன்.

(9) ஶிபியுடைய மகன்.

(10) யுத்தகளத்தில் கோபரூபமாயிருப்பவன்; அல்லது யுத்தத்தை யஜ்ஞமாகக் கொண்டவன்.

(11) ஸுபத்ராவின் மகன்.

(12) த்ரௌபதியின் புத்ரர்கள்.

(13) அதிஸமர்த்தர், படைவீரர்.

எ. ஓ உத்தம த்விஜனே(1), நமக்குள் எவர்கள் [போரில்] மிகச் சிறந்தவர்களோ(2), அவர்களை நீர் அறிவீர்(3). ஆனால், என்ஸேனைக்கு எவர்கள் நாயகர்களோ, அவர்களைக் குறிப்பாக உமக்கு [பாண்டவ ஸேனைத்தலைவரைச் சொன்னவாறே] சொல்லுகின்றேன்.

(1) த்விஜர்களில் உத்தமனாகிய த்ரோணனே.

ப்ராஹ்மணர், க்ஷத்ரியர், வைஸ்யர் என்ற மூன்று வர்ணத்தாரும் த்விஜர்கள், இரண்டுபிறவி உடையவர்கள். மாதாவின் கர்ப்பத்தில் நின்று அவித்யா ஸம்பந்தமாக வெளிவந்தது முதற் பிறவி. அதன்பின் குருவினிடம ப்ரஹ்மோபதேஸம் பெற்று வேதஸாஸ்த்ரங்களையும் அநுஷ்டானங்களையும்கற்று, வித்யா ஸம்பந்தமாக வெளிவருதல் இரண்டாம்பிறவி. இவ்விதம் இப்பிறவியிலேயே இருபிறவியுள்ளவன் என்றது த்விஜபதத்தின் ஸ்தூலார்த்தம்.

அதன் ஸூக்ஷ்மார்த்தம் வேறு. ஜீவாத்மா பிறவிக்குக் காரணஸரீரமாகிய அவித்தையில் அழுந்தி அறிவற்றிருந்த காலத்தில், பகவான் அருளிய ஸூக்ஷ்ம ஸரீரத்தைப் பெற்றுச் சிற்றறிவுடன் வெளிவந்தது முதற்பிறவி. அதன்பிறகு ஈஸ்வரனிடம் அநேகாநேக ஸ்தூலஸரீரங்களைப் பெற்று, அந்த ஸ்தூலஸரீரங்களால் காமவிஷயங்களும் விஷயஸுகங்களும் அநித்யமென்றும், துக்கமே என்றும், அநுபவத்தில் நிஸ்சயித்து, கர்மபலன்களை இச்சிக்காமல் கர்மானுஷ்டானங்களைச் செய்து, சித்தஸுத்தியும் ஸமத்வ புத்தியும் பெற்று, ஞானகுருவை அடுத்து, அவர் உபதேஸித்த ஞானயோகத்தை அல்லது அஷ்டாங்கயோகத்தை அப்யஸித்து, ஞானாக்னியை வளர்த்து, அதனால் மலபந்தங்களைத் தஹித்து, ஜீவாத்மா பரிஸுத்தப்பட்டு ஹ்ருதய குகையில் நின்று வெளிவருதல் இரண்டாம்பிறவி. இதுவே ஆத்மதர்ஸனம். ஆத்மதர்ஸனம்பெற்றவன் ஆத்மஞானி.

ஸூக்ஷ்மார்த்தப்படி ஆத்மஞானியே த்விஜன்.

ஆத்மஞானத்தைப் பெறுதற்கு ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி மார்க்கங்களின் லக்ஷணத்தை அறிந்த குருவிடம் சென்று, தீக்ஷை (நியமம்) பெற்று, அந்தத் தீக்ஷையை அநுஸரித்து வருகின்ற

ஷூவாணத்தாரையும் த்விஜர் என்று உபசாரமாக அழைக்கலாம்.

(2) "விஶிஷ்டா"=விசேஷமுடையவர்கள், யுத்தகர்மத்தில் மிகச்சிறந்தவர்கள்.

• (3) "நிபோத"=அறிவீர், அறிவீராக, அறியும். இம்மூன்று பொருளில் "அறிவீர்" என்றதே நன்கு இணங்கும். "உமக்குச் சொல்லுகின்றேன் நீர் அறியும்", அல்லது "நீர் அறிவீராக", என்று பொருள் பண்ணுதல் எல்லாம் அறிந்த துரோணருக்கு அறிவின்மையைக் காட்டும்.

அ. கூ. யுத்தத்தில் ஜயம் பெறுகின்ற நீரும், பீஷ்மரும், கர்ணனும், க்ருபரும், அஶ்வத்தாமாவும், விகர்ணனும், ஸோமதத்தன் மகனும், யுத்தத்தில் ஸமர்த்தர்களும் பற்பல ஆயுதங்களை ஸாதனமாகக் கொண்டவர்களுமாகிய இன்னும்பல வேறு வீரர்களும், எனக்காக ஜீவனைத் த்யாகஞ்செய்யத்தக்கவர்களாயிருக்கின்றீர்கள்.

௰. [யுத்தஸாதனை] போதாத நமது [பெருஞ்] சேனை [புத்திமானான] பீஷ்மரால் காக்கப்பட்டிருக்கின்றது.

௰௧. எல்லாவழிகளிலும் தத்தம் இடங்களிலிருந்து நீங்கள் யாவரும் பீஷ்மரைக் காக்கவேண்டும்.

௰௨. குருவம்ஶத்தில் முத்தவரான பராக்ரமம் பெற்ற பாட்டனார் (பீஷ்மர்) அவனுக்கு (துர்யோதனனுக்கு) ஸந்தோஷத்தைப் பிறப்பிக்கின்றவராய உன்னதமாக ஸிம்ஹநாதஞ் செய்து (1) ஶங்கினை ஊதினார்.

(1) சிங்கம்போல வீரம் கூறி. அஃதாவது "நானேவீரன், உன்னை யமபட்டணத்துக்கு விருந்தாளியாக்குவேன், உயிரையும் பொருளையும் இழக்காமற் சரணம் செய்," என்று பலவாறு வாயால் கூறி, புஜாஸ்பாலனமும் (புஜத்தைக் கையால் தட்டுதலும்) கரதலஸம்மர்த்தனமும் (உள்ளங்கைகளைப் பிசைதலும்) செய்து.

௰௩. பிறகு ஶங்குகளும், பேரிகளும், பணவங்களும், ஆனகங்களும், கோமுகங்களும் ஶீக்ரமாகவே முழக்கப்பட்டன. அந்த ஶப்தம் ஒன்றுசேர்ந்தது.

௰௪. பிறகு வெண்குதிரைகள் கட்டப்பட்ட பெரிய தேரில் நிற்கின்ற மாதவனும் (1) பாண்டவனும் திவ்ய (2) ஶங்குகளை முழக்கினார்கள்.

(1) மாதவன் (மாவுடைய தவன்), லக்ஷ்மீபதி, ஸ்ரீ க்ருஷ்ணன். ஸ்ரீ மஹா விஷ்ணுவின் ஶக்தி மஹாலக்ஷ்மி. அவருடைய அவதாரம் ஸ்ரீ க்ருஷ்ணன். இந்த அவதாரத்தில் மஹாலக்ஷ்மி ருக்மிணியாய்ப் பிறந்து, ஸ்ரீ க்ருஷ்ணனை விவாகம் செய்தார்.

(2) தேவாம்ஶம்பெற்ற. அடுத்த ஶ்லோகத்துக்குரிய உரையைப்பார்க்க.

௰௫. ஹ்ருஷீகேஶன் (1) பாஞ்சஜன்யத்தையும் (2), தனஞ்ஜயன் (3) தேவதத்தத்தையும் (4), பீமகர்மாவாகிய (5) வ்ருகோதரன் (6) பௌண்ட்ரத்தையும், முழக்கினார்கள்.

(1) அத். உ, ஶ்லோ. கூ க்குரிய இரண்டாம் குறிப்பைப் பார்த்தறிக.

(2) பஞ்சஜன் என்பவன் ஒரு வலிய அஸுரன். மஹாவிஷ்ணு அவனைக்கொன்று, அவனது ஶரீரத்தின் அஸ்திகளை எடுத்து உண்டாக்கின ஶங்கின் பெயர் பாஞ்சஜன்யம்.

(3) தனத்தை ஜயித்தவன். அஃதாவது, த்ரவ்ய ஸம்பாத்யத்தில் உதயமாகும் மோகங்களை வென்றவன். தர்மத்தில் வழுவாமல்நின்று பொன் பூமி முதலியவற்றைத் தேடுகிறவன்.

(4) தேவதத்தம்=தேவர்களாற் கொடுக்கப்பட்டது.

(5) பீமகர்மா=பயம் உண்டாக்கும் தொழில் உள்ளவன்.

(6) சென்னாய் வயிறன், ஜடராக்னிமிக்கவன்.

௰௬. குந்திபுத்ரனாகிய யுதிஷ்டிர ராஜன் (1) அநந்தவிஜயத்தையும் (2), நதுலன் ஸுகோஷத்தையும் (3), ஸஹதேவன் மணிபுஷ்பகத்தையும் (4), ஊதினார்கள்.

(1) யுதிஷ்டிரன்=யுத்தத்தில் ஸ்திரபுத்தி பெற்றவன், சண்டையில் பின்வாங்காதவன்.

(2) அநந்தவிஜயம்=அளவிறந்த வெற்றிகளைத்தரும் ஶங்கு.

(3) ஸுகோஷம்=இனிய நாதமுடையஶங்கு.

(4) மணிபுஷ்பகம்=ரத்னங்கள் பதித்த, அல்லது ரத்னம் போற் ப்ரகாசிக்கின்ற, சங்கு.

௰எ. பெரிய வில்லாளியான காசிராஜனும், மஹாரதனாகிய சிகண்டியும், த்ருஷ்டத்யும்னனும், விராடனும், அன்யரால் ஜயிக்கப்படாத ஸாத்யகியும்,

௰அ. த்ருபதனும், (1) த்ரௌபதியின் புத்ரர்களும், (2) ஸுபத்திரையின் மஹா வல்லபுத்ரனும் (3), ஓ ராஜனே, தனித்தனியாக சங்குகளை ஊதினார்கள்.

(1) பாண்டவர்களுக்குப் பெண் கொடுத்த மாமன், பாஞ்சால தேச ராஜன்.

(2) த்ருபதனுடைய புத்ரி த்ரௌபதி, பஞ்சபாண்டவர்களை விவாகம்பண்ணி, ப்ரதிவிந்திய, சுதஸோம, ஶ்ருதகர்மன், சதாநிக, ஶ்ருதஸேன என்ற ஐவரைப் பெற்றாள். இவர்கள் யுத்தத்தில் மஹாவீரர்.

(3) யாதவர்களுக்கு ராஜனாகிய வாஸுதேவனுடைய புத்ரியும், ஸ்ரீ க்ருஷ்ணபகவானுடைய தங்கையுமாகிய, ஸுபத்ரை, அர்ஜுனனை விவாகம்பண்ணி, அபிமன்யு என்ற வீரனைப் பெற்றாள்.

௰௯. அந்த ஓசைகள் எல்லாம் சேர்ந்து ஆகாசத்தையும் பூமியையும் தொனிக்கச்செய்து, த்ருதராஷ்ட்ர புத்ரர்களின் ஹ்ருதயங்களைப் பிளந்தன.

உ௰.—உ௰௬. பிறகு [த்ருதராஷ்ட்ர] பூபதியே, பாண்டுவின் மகனாகிய கபித்வஜன் (1) [யுத்த] நியமம் பெற்று நின்றும் தார்த்தராஷ்ட்ரர்களைக்கண்டு, வில்லை உயர எடுத்து, அம்பு எய்யும் ஸமயத்தில், ஹ்ருஷீகேசனிடம் இந்த வார்த்தையைக் கூறினன். அச்யுத (2), இந்த யுத்தத்தில் ஆருடன் நான் போர் புரியவேண்டுமென்று அறிவதற்காக, யுத்தஞ்செய்ய விரும்பி நிற்கின்றவர்களை நான் பார்க்கத்தக்க இடத்தில், இரண்டு ஸேனைகளின் மத்தியில், ரதத்தைச் [செலுத்தி] நிறுத்து. துர்ப்புத்தியுள்ள தார்த்தராஷ்ட்ரனுக்கு (துர்யோதனனுக்கு) யுத்தத்தால் அவன் இஷ்டத்தைச் செய்ய விருப்பங்கொண்டு வந்து போர்புரியப்போகின்றவர்களை நான் பார்க்கவேண்டும்.

(1) குரங்குக்கொடியோன், ஹநுமானைத் தன் ரதத்தின் த்வஜத்தில் தரித்துக்கொண்ட அர்ஜுனன். க. ௩௰ (1)
(2) அழிவற்றவனே. ஸ்ரீ க்ருஷ்ணன்.

உ௰௪. ஓ பாரத, குடாகேஶனால் (1) இவ்விதம் வேண்டப்பட்ட ஹ்ருஷீகேஶன் (2) இரண்டு ஸேனைகளின் நடுவில் உத்தம ரதத்தை நிறுத்தி,

(1) "குடாகா"=நித்ரை, "ஈஶ"=அடக்கி ஆளுகின்றவன். நித்ரையை ஜயித்தவன். அதி ஜாக்ரதையான அர்ஜுனன்.
(2) ஸ்ரீ க்ருஷ்ணன். அத். உ, மந். கூ.

உ௰ரு. பீஷ்மன் த்ரோணன் முதலிய (1) எல்லா அரசர்களுடைய [ஸமுகத்தில்] கூடிநிற்கின்ற இந்தக் குருவம்ஶத்தாரைப் பார், ஓ பார்த்த (2), என்று கூறினார்.

(1) இவர்கள் ப்ராஹ்மண குலத்தில் பிறந்தும், க்ஷத்ரியகர்மங்களை அநுஸரித்து க்ஷத்திரியர்களுக்குத் தலைவராய் இருந்தபடியால் அரஸர்களோடு சேர்க்கப்பட்டார்கள். "மஹீக்ஷித்"=அரஸன்.
(2) ப்ருதை என்ற குந்தியின் மகன் அர்ஜுனன்.

உ௰கூ, உ௰எ. அவ்விடத்தில் இரு ஸேனைகளிலும் நிற்கின்ற பிதாக்களையும், பாட்டனார்களையும், ஆசார்யர்களையும், அம்மான்மாரையும், ஸஹோதரர்களையும், புத்ரர்களையும், பேரன்மாரையும், ஸ்நேஹிதர்களையும், மாமன்மாரையும், (இருபக்ஷத்தாரின்) நன்மையை விரும்பின [மற்ற]வரையும், பார்த்தன் கண்டான். பந்துக்களாய் நிற்கும் அனைவரையும் குந்திமகன் (அர்ஜுனன்) செவ்வையாகப் பார்த்து, மிகுந்த தயவினால் நிரம்பப்பட்டு, துக்கிக்கின்றவனாய் இதனைக் கூறினான்.

உ௰அ. ஓ க்ருஷ்ண, யுத்தஞ்செய்ய விருப்பத்தினால் வந்திருக்கின்ற இந்த ஸ்வஜனத்தைக் கண்டு,

உ௰கூ. எனது அங்கங்கள் தளருகின்றன, வாய் வரட்சியைப் பெறுகின்றது, எனது ஶரீரத்தில் நடுக்கமும் ரோமக்கூச்சமும் உண்டாகின்றன.

௩௰. காண்டீவம் (1) கையில் நின்று நழுவுகின்றது. ஶரீரம் எரிகின்றது, நிற்கமுடியாது. என்மனம் சுழல்கின்றதுபோலிருக்கின்றது.

(1) காண்டீவம் அல்லது காண்டிவம். வருணபகவானிடம் அக்னிதேவன் பெற்று அர்ஜுனனுக்குக் கொடுத்த தேவாம்ஸ வில்லு. இத்துடன் எப்பொழுதும் அம்புகள் நிறைந்த இரண்டு தூணீரங்களையும் கபித்வஜ ரதத்தையும் வருணபகவான் அளித்தார். (மஹாபாரதம், ஆதிபர்வம்).

௩௰௧. ஓ கேஸவ (1), விபரீதங்களான குறிகளையும் பார்க்கின்றேன். யுத்தத்தில் ஸ்வஜனத்தைக் கொன்று (அதனால்) மேன்மையைப் [பெறலாமென்று] எண்ணவில்லை.

(1) "கேஶ"=சிகை, "வ"=உடையவன். ஸூர்ய சந்த்ர ரேகைகளைத் தன்சிகையாக உடைய மஹேஶ்வரன் என்று மஹாபாரதத்தில் ஶாந்தி பர்வத்தில் விளக்கப்பட்டது. மஹேஶ்வரனுடைய ஓர் அவதாரம் ஸ்ரீ க்ருஷ்ணபகவான்.

௩௰௨. ஓ க்ருஷ்ண, வெற்றியையும் நான் கோரவில்லை. ராஜ்யத்தையும் [அதன்] ஸுகங்களையும் நான் அபேக்ஷிக்கவில்லை. ஓ கோவிந்த (1), எங்களுக்கு ராஜ்யத்தினால் என்ன (பயன்), போகங்களினால் என்ன [பயன்], ஜீவனால் (2) என்ன [பயன்].

(1) அத். உ. மந். கூ (உ).
(2) உயிரோடிருப்பதால்.

௩௰௩. ௩௰௪. எவர்களுக்காக ராஜ்யமும் போக்ய வஸ்துக்களும் ஸுகங்களும் எங்களால் விரும்பப்பட்டனவோ, அந்த ஆசார்யர்கள் பிதாக்கள் புத்ரர்கள் பாட்டனர் அம்மான்மார் பேரன்மார் மைத்துனர் ஸம்பந்திகள் இவர்கள் எல்லோரும் ப்ராணன்களையும் பொருள்களையும் வெறுத்து யுத்த [களத்]த்தில் நிற்கின்றனர்.

௩௰௫. ஓ மதுஸூதன (1), ஹிம்ஸிக்கின்றவர்களாய் இருந்தாலும், இவர்களைக் கொல்ல விரும்பேன். மூவுலகங்களுக்கும் அரசத்தன்மை ஏற்படுகின்றதாயிருந்தாலும் இவர்களை நான் கொல்ல விரும்பேன். பூமிக்காகக் கொல்ல விரும்புவேனோ.

(1) "மது"+"ஸூதன:"=மதுவைக் கொல்லுபவன். மது என்ற அஸுரனைக் கொன்ற ஸ்ரீ க்ருஷ்ணன், அல்லது மாயையை ஜயித்தவன்.

௩௰௬. ஓ ஜனார்தன (1), த்ருதராஷ்ட்ரன் புத்ரர்களைக்கொன்று எங்களுக்கு என்ன ஸந்தோஷம் வரும். ஆததாயி (2) களாயிருந்தும், [ஜனமாயிருப்பதால்] இவர்களைக் கொன்றால் பாபபலமே வந்து அண்டும்.

(1) "ஜன"+"அர்தன"=ஜனங்களால் வேண்டப்படுபவர், ஸ்ரீ க்ருஷ்ணபகவான்.

(2) "ஆத"=தீங்கு, "தாயி"=வளர்க்கின்றவன். வீட்டில் தீவைக்கின்றவன், விஷத்தைக் கொடுக்கின்றவன், ஆயுதத்தை எப்பொழுதும் கையிற்கொண்டவன், கள்ளன், ஒருவன் மனைவியை அபஹரிக்கின்றவன், இவர்கள் ஐவரும் ஆததாயிகள்.

துர்யோதனன், துச்சாஸனன், ஸகுனி முதலியவர்கள் பாண்டவர்களின் வீட்டை எரிக்க முயன்றபடியாலும், பீமனுக்கு நஞ்சைக் கலக்கிக் கொடுத்தபடியாலும், யுதிஷ்டிரனுடைய ராஜ்யத்தையும் த்ரவ்யத்தையும் கள்ளச் சூதாட்டத்தால் அபஹரித்தபடியாலும், த்ரௌபதியைச் சிறையாக்கித் துகிலுரிந்து ஆனந்தங்கொண்டபடியாலும் ஆததாயிகள் என்று நிந்திக்கப் பட்டார்கள்.

௩௰௭. ஆதலால், ஓ யாதவ, எங்கள் பந்துக்களான த்ருதராஷ்ட்ரன் புத்ரர்களைக் கொல்வதற்கு நாம் உரியரல்லோம். ஸ்வஜனத்தைக் கொன்று எவ்விதம் ஸுகம் பெறுவோம்.

௩௰௮, ௩௰௯. லோபத்தால் கெடுக்கப்பட்ட மனஸையுடைய இவர்கள் குலநாசத்தால் விளையும் குற்றத்தையும் (1), மித்ர த்ரோகத்தால் (2) உண்டாகும் பாதகத்தையும் பார்க்கவில்லையானாலும், ஓ ஜனார்தன, குலநாஸத்தால் ஏற்படும் குற்றத்தைச் செவ்வையாக அறிகின்ற நாம் இப்பாபத்தில் நின்று நீங்குவதற்கு ஏன் அறியோம்.

(1) குலநாஸத்தால் (குலத்தைப் பாதுகாக்கும் புருஷர்களின் மரணத்தால்) விளையுங் குற்றங்களாவன: குலதர்மக்கேடு, அதர்மவ்ருத்தி, குலஸ்த்ரீ வ்யபிசாரம், வர்ணஸங்கரம் என்றவை.

(2) மித்ர த்ரோகம்=உறவினர் ஸ்நேஹிதர்களுக்குள் பகை உண்டாக்குதல்.

சம. குலம் கெட்டால், புராண குலதர்மங்கள் கெடுகின்றன. தர்மம் கெட்டால், அதர்மம் குலம் முழுவதையும் வியாபித்து நிற்கும். அதர்மம் வியாபித்தால், க்ருஷ்ண, குலஸ்த்ரீகள் துற்பும் அடைவார்கள்.

சமக, சமஉ. ஓ வார்ஷ்ணேய (1), ஸ்த்ரீகள் துற்பும் அடைந்தால், வர்ண ஸங்கரம் உண்டாகின்றது (2). ஸங்கரம் குலத்தைக் கெடுத்தவர்களுக்கும் கெடுதிபெற்ற குலத்தாருக்கும் நரகத்துக்கு ஹேதுவாகின்றது (3). இவர்களின் பிதாக்கள் (4) பிண்ட க்ரியை (5) உதக க்ரியை (6) இல்லாமல் [துக்க ஸாகரத்தில்] வீழ்கின்றனர். (7)

(1) வர்ஷ்ணி வம்சத்திற் பிறந்தவனே. வர்ஷ்ணிகள் கோபாலர் என்றும், யாதவர் என்றும் அழைக்கப்படுவர்.

(2) குணமும் குணத்துக்குத்தக்க கர்மமும் சேர்ந்து வர்ணம் ஸ்ருஷ்டிக்கப்பட்டதென்று மேல்வரும் சமக இல் பகவான் விளக்கினார்.

நற்குணமும் நற்கர்மமும் பொருந்திய சதுர்வர்ணங்கள் க்ரமமாக நடைபெறுவதற்குப் பிதாக்களும் பதிகளும் வளர்ந்த புத்ரர்களும் பெண்களைப் பாதுகாக்கவேண்டும். புருஷர் இறந்துபோனால் ஸ்த்ரீகள் கூடாதவர்களோடு கூடிக் கலப்புள்ள மனோதர்மங்களையுடைய பிள்ளைகளைப் பெறுவார்கள். இப்படி ஸங்கர (கலப்புப்பெற்ற) ஜாதிகளாகிய அநுலோம ப்ரதிலோம அந்தராள பாஹ்ய ஜாதிகளும் வ்ராத்ய ஜாதியும் தோன்றி, யம நியம தி அநுஷ்டானங்கள் கெட்டு, தேசம் நாசத்தை அடையும்.

(3) குண கர்ம கலப்பாகிய வர்ண ஸங்கரம் குல பர்த்தாக்களை அழித்தவர்களுக்கும், யஜ்ஞம் தானம் தபஸ் என்ற பரிசுத்த கர்மங்களை விட்ட குலத்தாருக்கும் நரக வேதனைகளை உண்டுபண்ணும்.

(4) குலதர்மங்களை விட்டவர்களின் பிதாக்கள் இறந்தபின் ப்ரேத ரூபத்தைத் தரித்து.

(5) ஶ்ராத்த க்ருத்யத்துக்குரிய அன்ன உருண்டை இடுதல்.

(6) எள்ளும் தண்ணீரும் இறைத்தல். (உதகம்=தண்ணீர்.)

(7) தங்கள் புத்ரர்கள் ஶ்ராத்த கர்மங்களைச் செய்யாதபடியால், பித்ரு ரூபத்தைப் பெற்றுப் பித்ரு லோகத்தை அடையாமல், ப்ரேதமாகவே திரிந்து துக்கத்தில் தோய்ந்திருக்கின்றார்.

சயஙூ. வர்ண ஸங்கரத்தைச் செய்யும் குலகாதகக் குற்றங்களினால் வேதகாலமாக ஏற்பட்ட ஜாதி தர்மங்களும் குலதர்மங்களும் கெடுகின்றன.

சயச. ஓ ஜனார்தன, குலதர்மத்தைக் கெடுத்த மானுடர்களுக்கு உறுதியாக நரகத்தில் (1) வாஸம் ஏற்படும் என்று கேட்டிருக்கின்றோம்.

*(1) நர + அ + கம்=மானுடன் + இல்லை + சுகம். மானுடர் ஹிம்சைப்படும் இடம். (அ + கம்=அகம்=துன்பம்).*

*"நர" என்ற பதத்தின் ஈற்றிலுள்ள அகாரத்தினிடத்தில் அடுத்திருந்த "அக" என்ற பதத்தின் தலையிலுள்ள அகாரம் வந்து, முன்னிருக்கும் அகாரத்தை விலக்கி, தான் ஆட்சி பெற்று நிற்கும என்று வரருசி வார்த்திக க்ரந்தத்தில் கூறினார்.*

*கர்மபூமியாகிய இவ்வுலகத்தில் ஜனித்த மானுடர்கள் செய்யும் பாபங்களின் பலன் நரகலோகத்தில் அநுபவிக்கப்படும்.*

சயரு. ராஜ்ய ஸுகத்தின் பேராசையினால் ஸ்வஜனத்தை ஹிம்ஸிப்பதற்கு முயன்றபடியால் நாம் மஹாபாபத்தைச் செய்வதற்கு முயன்றவர்களானோம். கஷ்டம், கஷ்டம்.

சயசா. த்ருதராஷ்ட்ரன் புத்ரர்கள் யுத்தத்தில் ஆயுதத்தைக் கையிற்கொண்டவர்களாய் ப்ரதீகாரமற்றவனும் (1) ஆயுதமற்றவனும் ஆகிய என்னை ஹிம்ஸிப்பார்களாகில், அது எனக்கு மிக நலமாக இருக்கும்.

*(1) ப்ரதீகாரமற்றவன்=தனக்குப் பிறர் செய்தவாறு தான் அவர்க்குச் செய்யாதவன்.*

ஸஞ்ஜயன் கூறினான்:

சயஎ. அர்ஜுனன் இவ்விதம் கூறித் துக்கத்தால் மனங்கலங்கி அம்பையும் வில்லையும் யுத்தகளத்தில் எறிந்து தேரிலிருந்தான்.

---

உபநிஷத்கள் என்றும் ப்ரஹ்மவித்தை என்றும், யோகசாஸ்த்ரம் என்றும், பகவத்கீதைகள் என்றும் கூறப்பட்ட ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதத்தில் ப்ரஸித்திபெற்ற அர்ஜுனவிஷாதயோகம் என்றப்ரதம அத்யாயம் முற்றிற்று.

---

# இரண்டாவது அத்யாயம்

## ஸாங்க்ய யோகம்.

---

அஃதாவது, ஸாங்க்யம் என்ற மெய்யறிவை அர்ஜுனன் கேட்டுச் சிந்தித்தான் என்பதை விளக்கும் இரண்டாவது பாடம்.

---

முதலாவது அத்யாயத்துக்கும் இந்த அத்யாயத்துக்கும் என்ன ஸம்பந்தமெனின், முதலாவதில் தர்மஶாஸ்த்ரார்த்த விமூடத்தால் (பகவத்கீதா, உ. எ; அநுகீதா, ௰௬, ௬.) அர்ஜுனன் பயத்தையும் துக்கத்தையும் அடைந்தான் என்று விளக்கப்பட்டது; இரண்டாவதில் பய துக்க நிவிர்த்தி மெய்யறிவாற் பெறலாம் என்பதுபற்றி, ஸாங்க்யம் என்றழைக்கப்பட்ட மெய்யறிவின் நிர்ணயங்கள் விரிக்கப்பட்டன. இதனாற் ஸம்பந்தமுண்மையறிக.

"மெய்யறிவு", "ஸாங்க்யம்", "வேதாந்தம்", என்ற பதங்கள் பர்யாய நாமங்கள் (ஏகார்த்த வாசகங்கள்) என்று பின் வரும் உ. ௩௰அ க்குரிய உரையில் விளங்கும்.

பொய்யறிவுக்கும் மெய்யறிவுக்கும் பேதம் உண்டு. தேகமே நான் என்ற அகந்தையும், தேகஸுகத்துக்கு வேண்டிய பொன், மாதர், பூமி, வீடு, வாஹனாதிகள் எனது பொருள் என்ற மமதையும், இந்த அகந்தை மமதைகளால் உண்டான கர்த்ருத்வ போக்த்ருத்வ எண்ணங்களும் பொய்யறிவு.

தேகத்தில் வாழும் ஜீவாத்மாவே நான், ஜீவாத்மா தேடிப் பெறவேண்டிய வஸ்துவாகிய பரமாத்மாவே எனக்குச் சொந்தம், ஆதலால் அதனையே நான் பரம்பொருளாகப் பாராட்டி லோக கர்மங்களை ஈஶ்வரப் ப்ரீதியாகச் செய்யவேண்டும் என்ற உசித நிஶ்சயங்கள் மெய்யறிவு.

முதலாவது அத்யாயத்தில் தொடங்கின ஶ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதத்தை இரண்டாவது அத்யாயத்திலும் ஸஞ்சயன் த்ருதராஷ்ட்ர ராஜனுக்கு உரைக்கின்றான்.

ஸஞ்சயன் கூறினன்:

க. அவ்வித தயவுள்ளவனும், நீர்நிறைந்து கலங்கின கண்களை யுடையவனும், துக்கிக்கின்றவனுமாகிய அவனிடம் (அர்ஜுனனிடம்) மதுஸூதனன் (க்ருஷ்ணன்) இந்த வாக்யத்தைச் சொன்னர்.

ஸ்ரீ பகவான் கூறினர்:

உ. ஓ அர்ஜுன, கெட்டவர்களால் அநுசரிக்கப்பட்டதும், ஸ்வர்க்கத்துக்கு உரியதாகாததும், இழிவைச் செய்கின்றதுமாகிய இந்தக் கஶ்மலம் (1) எவ்விடமிருந்து உன்னை அடைந்தது.

(1) கஶ்மலம்=கெட்டமலம்=மிகக்கேடு. அதாவது, புத்தியைக்கெடுக்கும் அஞ்ஞானம், ஈண்டு ஶாஸ்த்ரார்த்த விமூடம் (பகவத்கீதா, உ. எ; அநுகீதா, ம௯. ௬.)

ங. அலித்வத்தை (1) அடையாதே. பரந்தபனை (2) பார்த்த (3). இது உனக்குத்தகாது. அற்பநெஞ்சின் துர்ப்பலத்தன்மையை விட்டு எழுந்திரு.

(1) தர்ம ஶாஸ்த்ரத்தைக்கற்றும் அதன் ஸ்வபர அர்த்தத்தை அறியாதபடியால் யுத்தமுனையில் வந்த விஷாதத்தை (மனத்தளர்ச்சியை) தாமஸதைர்ய வ்ருத்தி என்று ம௮ ௭௰ல் விளக்கினர். ஈண்டு (உ. ௩ ல்) அதனைக் "க்லைப்யம்" என்றார் 'க்லீபன் (அலி) உடைய தன்மை க்லைப்யம். ஆண்களுக்கும் பெண்களுக்கும் தைர்யம் உண்டு. அலிக்குத் தைர்யம் இல்லை. ஆதலால், க்லைப்யம்=அதைர்யம்.

(2) "பரான்"=சத்துருக்களை, "தப:"=வாட்டுகின்றவன்.

(3) அத். க. உ௰.

அர்ஜுனன் கூறினன்:

ச. ஓ மதுஸூதன (1), அரிஸூதன (2). எவ்விதம் நான் யுத்தத்தில் பூஜைக்குரியவர்களான பீஷ்மனையும் துரோணனையும் அம்புகளினல் எதிர்த்து யுத்தம் செய்வேன்.

(1) அத். க. ௩௰.

(2) "அரீன்"=ஶத்ருக்களை, "ஸூதன:"=கொல்லுபவன்.

ரு. இவ்வுலகத்தில் மஹா பெருந்தன்மை பெற்றவர்களான குருமாரை ஹிம்ஸிக்காமல் பிச்சையன்னம் உண்பது நலம் (1). நிவிர்த்திமார்க்கத்தை விரும்புகின்ற (2) குருமாரைக் கொன்றால், இவ்விடத்திலேயே இரத்தம் புரண்ட போகங்களை நான் புசிக்கவேண்டும்.

(1) துர்யோதனன் தங்கள் ஜீவனார்த்தத்துக்காக ஒரு க்ராமமாவது கொடுக்கக்கூடாதென்றபடியால், பிச்சைவாங்கிக் காலத்தைப்போக்குவது நலம்போலத் தோற்றுகின்றது.

(2) "அர்த்த காமான்"="அர்த்தார்த்தீ" (எ. ௰௬.)=நிவிர்த்திமார்க்கத்தை விரும்புகின்ற.

௬. எங்களுக்கு (பாண்டவர்களுக்கு) இரண்டில் (1) எது மிகச் சிறந்தது என்பது நாம் அறியோம். நாம் ஒருவேளை ஜயிப்போம், அல்லது அவர்கள் நம்மை ஜயிப்பார்கள் (2). [நாம் அவர்களை ஜயிக்க வல்லமை பெற்றிருந்தாலும்] எவர்களைக்கொன்று நாமத்து ஜீவிக்க விருப்பமில்லையோ, அந்த தார்த்தராஷ்ட்ரர்கள் (3) யுத்தமுனையில் நிற்கின்றார்கள்.

(1) பிச்சையன்னம் உண்ணுதல், கொன்று ராஜ்யத்தை அநுபவித்தல், என்ற இரண்டில்.

(2) நாம் ஜயித்தால், ராஜ்யம் கிடைக்கும். ஜயிக்கப்பட்டு ரணகளத்தில் மாண்டால், ஸ்வர்க்கலோக ப்ராப்தியாகும். ஆனால், இந்த ராஜ்ய ஸ்வர்க்க ஸுகங்கள் எனக்குவேண்டாம். குருமாரையும் பந்துக்களையும் கொல்வது கொடிய பாதகம்.

(3) யுத்தமுனையில் நிற்கின்ற தார்த்தராஷ்ட்ரர்களைக் கொல்ல விருப்பமில்லாதபடியால், எனக்கு ஒரு நல்லவழியைக் காண்பிப்பது உன் கடமையே.

எ. கார்ப்பண்ய (1) தோஷத்தால் கெடுக்கப்பட்ட சுபாவமுடையவனும், தர்ம [ஶாஸ்த்ரார்த்த]த்தில் மிக மூடபுத்தி உடையவனும் (2) ஆகிய நான் உன்னிடம் கேட்கின்றேன். எது எங்களுக்கு நல்லதென்று உன்னால் நிஶ்சயிக்கப்பட்டதோ, அதனை எனக்குத் தெரிவி. நான் உனது ஶிஷ்யன். உன்னை அண்டின என்னைக் காக்க.

(1) கார்ப்பண்யம்=க்ருபணனுடைய தன்மை (தாது "க்ருப்"=ஸாமர்த்யம்). க்ருபணன்=விஷயஸுகத்தில் விருப்பங்கொ

ண்டு பொருளை ஸாமர்த்தியமாகத் தேடுகின்றவன். எனவே, கார்ப்பண்யம்=போக்ய வஸ்துவில் பெரும்பற்றுள்ள தன்மை. (உ. சுமகூ.)

கார்ப்பண்யதோஷம்=கார்ப்பண்யம் என்ற குற்றம்; தன் தேகஸம்பந்தத்துக்குரிய அநித்ய வஸ்துக்களில் மோஹம் பெற்ற தோஷம்.

தன்பங்கை ஸ்நேஹாதாரர்களாகிய தார்த்தராஷ்ட்ரர்கள் அபஹரிக்கக் கூடாதென்ற பொருளாசைபற்றின நிலையை யுத்தமுனையில் அர்ஜுனன் உணர்ந்தான். உணர்ந்து, கார்ப்பண்ய தோஷத்தால் கெட்டேன் என்று நினைத்து, அற்பப் பொருளுக்காகச் சண்டையிட்டுப் பந்துக்களைக் கொல்வது அதர்மமே, துன்பமே, என்று நிஶ்சயித்தான். ஆனால், நான் க்ஷத்ரியனாயிருப்பதால் துஷ்ட நிக்ரஹத்துக்கும் ஶிஷ்ட பரிபாலனத்துக்குமாக ஏற்பட்ட போரைக் கைவிடுதல் தர்மமா அதர்மமா என்று யோசித்து, அதில் தெளிவு பெறாமல், ஐயோ, தர்மஶாஸ்த்ரங்களைக் கற்றும் என் புத்தி நிஶ்சயமற்றுத் தடுமாறுகின்றதே, இந்த நிஶ்சயமற்ற தன்மை தர்மத்தின் ஸ்வரூபத்தை விளங்காமலே வந்திருக்கின்றது என்று அறிந்து, என் தர்மஶாஸ்த்ரார்த்த விமூடத்தை நீக்கும் என்று ப்ரார்த்தித்தான்.

இதனை நீக்கும்பொருட்டு இந்த அத்யாயத்திலும் பின்வரும் அத்யாயங்களிலும் கர்மத்தின் ஸ்வரூபத்தையும் மெய்யறிவாகிய ஸாங்க்யத்தின் லக்ஷணத்தையும் பகவான் விளக்கத் தொடங்கினார்.

ஶ்லோகங்கள் சு, எ, அ, ல் குறிக்கப்பட்ட அர்ஜுனனுடைய வினாக்களே பகவத்கீதை நடைபெறுவதற்கு முக்ய ஆதாரங்களாயிருக்கின்றன.

(2) "தர்ம ஸம்மூட சேதா:"=தர்மத்தில் ஸம்மூடபுத்தியுடையவன்; தர்ம ஶாஸ்த்ரத்தைக் கற்றும், தர்மார்த்தத்தை அறியாத மூடன்.

தர்மம் என்றது ஜீவாத்மாக்களை அறியாமையிலும் துக்கத்திலும் நின்று உத்தாரணம் (உயரத்தூக்கி விடுதலைச்) செய்யும்படி

ஸ்ருஷ்டிக்கப்பட்ட மனஸுக்கு நல்ல வழியைக் காட்டும் ஓர் அதிவிஶேஷ ஆத்மஶக்தி. இந்தச் சித்பொருளும் சுகப்பொருளுமாகிய தர்மத்தின் ஸமாஸத்தையும் வ்யஸ்தத்தையும் (சுருக்கத்தையும் விரிவையும்) ஸூக்ஷ்ம கதியையும் போதனை ஶக்தி பெற்ற ஜீவன்முக்தனை அடைந்து கற்றாலன்றி அதன் அந்தரங்க ஸ்வரூபத்தை உள்ளபடி அறியக்கூடாதென்று அர்ஜுனனுக்கு வேறொரு ஸமயத்தில் பகவான் கூறினார். (மஹாபாரதம், கர்ணபர்வம், அத். ௧௧.)

௮. இந்த்ரியங்களை மிக வாட்டுகின்ற எனது துக்கத்தை எது தான் தீர்க்குமோ என்று நான் அறியேன் (1). பூமியில் ஶத்ருவற்றதும் [ஐஶ்வர்யம்] நிறைந்ததும் ஆகிய ராஜ்யத்தை அடைந்தாலும், தேவர்களுக்கு அதிபதியான தன்மையைப் பெற்றாலும் [எனக்குத் துக்கம் தீராது.]

(1) இஹலோக பரலோக ஸுகங்களினால் என் துக்கம் தீராது. என் மனதில் நின்று இந்த்ரியங்களை எல்லாம் வாட்டும் துக்கத்தைத் தீர்க்க ஒருவழியிருந்தால் அதனைச் சொல்லும் என்றான்.

துக்கம் என்றது யாதெனின், காரண ஶரீரமென்ற அவித்தையில் (அஞ்ஞானத்தில்) சிக்குண்டு ஸச்சிதானந்த லக்ஷணங்களை இழந்த ஆத்மா அந்த ஶரீரத்தின் குணமாகிய ஆசையால் ஸஞ்சலப்படுதலே பதறப்படுதலே. இந்த வாதனை அறிவின் பார்வையைச் சிறிதாக்குவதால் பந்தனம் என்றும், ஆஶாபாஶம் (ஆசையென்ற கயிறு) என்றும், பெரியோரால் அழைக்கப்படும்.

அவித்தை என்ற காரண தேஹத்தின் பரிக்ரஹத்தை எப்பொழுது ஆத்மா பெற்றதோ, அப்பொழுதே அந்தத் தேஹமயமாகி, தேஹத்தை நான் என்றெண்ணி, அதன் குணமாகிய கொடிய ஆசையில் மூழ்கி, அதன் த்வந்த்வ அலைகளாகிய விருப்பு வெறுப்பால் மோதப்பட்டு, துன்பப்படும்.

இந்தக் காரணஶரீர ஆஶாபாஶத்தைத் தீர்க்கும்பொருட்டு ஈஶ்வரன் ஜீவாத்மாவுக்கு ஸூக்ஷ்ம ஶரீரத்தையும் ஸ்தூல ஶரீ

ரத்தையும் தர்ம ஶாஸ்த்ரத்தையும் அருளி, ஆசைகவர்ந்த விஷ யங்களைத் தர்மவிதிப்படியே அநுபவிக்கச்செய்து, அவ்விஷயா நுபவம் அழிவுள்ளதென்றும் அசுத்தமென்றும் அறிவித்து, மெய் யறிவுக்கு அதிகாரியாக்கி, மனோலயத்தாலும் ஹடயோகத்தா லும் ஞானத்தாலும் துக்கநிவிர்த்தி பெறலாமென்ற ரஹஸ் யத்தை ஞானகுருமூலமாகப் பரிபாககாலத்தில் விளக்குவார்.

ஸஞ்ஜயன் கூறினான்:

கூ. பரந்தபனை குடாகேஶன் (1) (அர்ஜுனன்) ஹ்ருஷீகேஶ னுகிய (2) கோவிந்தனிடம் (3) யுத்தஞ்செய்யமாட்டேன் என்று இவ் விதம் கூறிச் சும்மாவிருந்தான்.

(1) அத். க. மங். உயிச க்குரிய குறிப்பைப் பார்க்க.

(2) ஹ்ருஷீகேஶன். ஹ்ருஷீக+ஈஶ=ஸந்தோஷத்தை ஏற் படுத்தும் கருவிக்கு ஈஶன். (ஹர்ஷ=ஸந்தோஷம். தாது ஹ்ருஷ்=ஸந்தோஷம்). சந்த்ர சூர்யர் லோகத்தாருக்கு ஸந் தோஷத்தைக் கொடுப்பதால், இவர்களுக்கு நாயகனுகிய மஹே ஶ்வரன் ஹ்ருஷீகேஶன் என்று பகவானே விளக்கினார். மஹா பாரதம், ஶாந்திபர்வம், மோக்ஷதர்மபர்வம் அத். கூாசயிகூ. சுரு.

(3) கோவிந்த. கோ+விந்த=பூமி+பெற்றவன் (விந்த பதத் துக்குத் தாது வித்=லாபம், பேறு) ஒருகாலத்தில் பூமி ஸமுத் ரத்தில் தாழ்ந்து போனபொழுது அதைத்தான் பெற்று உயர எடுத்தபடியால், தேவர்கள் தன்னைக் கோவிந்தா என்று போற் றினார்கள் என்று பகவான் கூறினார். (மஹாபாரதம், முன் குறித்த கட்டம்).

கோ என்ற பதம் பசுவையும் குறிப்பதால், கோவிந்தா என்ற பதத்துக்குப் பசுபாலகன் என்ற அர்த்தமும் அமையும்.

யி. ஓ பாரத (1), இரண்டு ஸேனைகளின் மத்தியில் துக்கித்துக் கொண்டிருக்கிறவனிடம் ஹ்ருஷீகேஶன், இகழ்ந்து சிரிக்கின்றவர் போல (2), இந்த வசனத்தை உரைத்தார்.

(1) பரத வம்ஶத்திற் பிறந்த த்ருதராஷ்ட்ரனே.

(2) "ப்ரஹஸன் இவ"=இகழ்ச்சியைக் காட்டும் சிரிப்புடை யவர்போல. இவ்வளவுதானு உன் புத்தி என்று அர்ஜுனன்

வுறியும்படி உதயமான புன்னகைக்குக் காரணம் அன்பே, இகழ்ச்சியன்று. ஆதலால் "சிரிக்கின்றவர்போல" என்றான் ஸஞ்ஜயன்.

அடுத்த ஶ்லோகத்தில் பய துக்க நிவிர்த்திகள் வித்திக்கும்பொருட்டருளிய உபதேஶம் தொடங்குகின்றது.

ஶ்ரீ பகவான் கூறினார்:

௰க. துக்கிக்கத் தகாதவைகளைப்பற்றி நீ துக்கித்தாய் (1), அறிவாளிகளின் மேலான வார்த்தைகளையும் பேசுகின்றாய். ஆனால், பண்டிதர்கள் (2) இறந்தவர்களைப்பற்றியும், இறக்காதவர்களைப்பற்றியும் துக்கிக்கின்றவர் அல்லர் (3).

(1) அநித்ய தேகங்களைப்பற்றித் துக்கிப்பது அறிவாளிகளுக்குத் தக்கதல்ல.

பீஷ்மர் முதலியவர்களைக் கருதித் துக்கிக்கக்கூடாதென்று பகவான் அர்ஜுனனுக்குப் போதிக்கின்றார். பீஷ்மன் முதலிய பதங்கள் வாச்யார்த்தமாகிய ஶரீரங்களைப் பற்றியிருந்தால், அச்சரீரங்களுக்குப் பிறப்பும் இறப்பும் இயல்பாயிருப்பதாலும், லக்ஷ்யார்த்த ஆத்மாவைப்பற்றியிருந்தால், அவ்வாத்மாவுக்குப் பிறப்பு இறப்பு இல்லாததாலும், துக்கிப்பது ந்யாயமில்லை என்பது கருத்து.

(2) பண்டா (மேலான அறிவு) உள்ளவன், பண்டிதன்.

(3) இறந்தவர்களைக் கருதியும், உயிரோடிருக்கின்றவர்களைக் கருதியும், துக்கிக்கக்கூடாது என்பது ஸாங்க்யம் என்ற மெய்யறிவின் தீர்மானம். இதன் ந்யாயம் அடுத்த மந்த்ரத்திலும் உரையிலும் விளங்கும்.

௰உ. நான் (1) இருக்கவில்லையென்பதே ஒருபோழுதும் இல்லை. நீ (2) [இருக்கவில்லையென்பதும் ஒருபோழுதும்] இல்லை. இந்த ஜனத்தலைவர்கள் (2) [இருக்கவில்லையென்பதும் ஒருபோழுதும்] இல்லை. நாமெல்லாம் இனிமேல் இருக்கமாட்டோம் என்பதும் இல்லை.

(1) ஸ்தூல தேகத்தைத் தரித்து நிற்கின்ற நான் (ஆத்மா).
(2) ஸ்தூல தேகத்தைத் தரித்து நிற்கின்ற நீ (ஆத்மா).

(3) ஜனத்தலைவராகத் தோன்றும் தேகங்களுக்குள் இருக்கின்ற ஆத்மாக்கள்.

இறந்தவர்களுடைய இல்லாமையைக் கருதித் துக்கிக்கின்றவன் மூடன். ஏனெனில், தேகத்தில்நின்று பிரிந்த ஆத்மா ஒருபோதும் இல்லாமற் போகவில்லை. அது அழிவற்ற வஸ்து.

இறக்காதவர்களுடைய ஸம்பாத்யக்குறைவு, வறுமை, வ்யாதி, முதலிய துன்பங்களைக் கருதித் துக்கிக்கின்றவனும் மூடன். ஏனெனில், பிறப்பு, இறப்பு என்றது தேகத்துக்கே, ஆத்மாவுக்கு இல்லை. நீ இப்பொழுது காணும் தேகங்கள் பிறந்தபடி இறக்கும் என்பது நிஶ்சயம். ஆனால், அவைகளுக்குள் விளங்கும் ஆத்மா எக்காலமும் உள்ளவஸ்து. மேலும், வறுமை செல்வம் ஜயம் அபஜயம் முதலியவைகள் கர்மபலன்களே. ஒவ்வொருவன் சென்ற பிறவிகளில் செய்த புண்ய பாப கர்மங்களுக்குத் தக்கபடி ஈஶ்வரன் ஸுகதுக்க பலன்களை இப்பிறவியிற் கொடுப்பார். ஆதலால், மெய்யறிவாளி உயிரோடிருக்கின்றவர்களின் இழவு பிணி வறுமை முதலியவற்றைப்பற்றியும் துக்கிக்கமாட்டான்.

**யங.** தேஹிநோऽஸ்மிந்யதா தேஹே கௌமாரம் யௌவநம் ஜரா ।

தேகிக்கு (1) இந்த (ப்பிறவியிற்றேன்றின) தேகத்தில் எவ்விதம் கௌமாரமோ (2) யௌவனமோ (3) ஜரையோ (4), அவ்விதமே மறுதேகப் ப்ராப்தி (வேறுதேகத்தைப் பெறுதல்). தீரன் (அறிவாளி) அதனிடத்து (5) மோகம் (6) பெறான்.

(1) ஆத்மாவுக்கு.
(2) குமாரபர்வம், பால்யம், கயஉ. வயசு வரையில்.
(3) கயஉ தொட்டு சயச வரையில் யௌவனம்.
(4) சயச க்குமேல் ஜரை (தளர்ச்சி, வயோதிகம்).
(5) தோன்றி அழியும் தேகத்தில்.

(6) அழிவற்ற தேஹி என்ற ஒருவனுக்கே இப்பிறவியில் குமாரஶரீரம் தோன்றி, அது அழிய, யௌவன ஶரீரம் தோன்றி, அது அழிய, ஜரா ஶரீரம் தோன்றுவதுபோல, அநேக வேறு தேகங்களும் அவனுக்கு உண்டாகும். இப்படித்தோன்றி அழியும் தேகத்தை நான் என்று அறிவாளி எண்ணமாட்டான்.

அதற்கு வரும் அவஸ்தைகளைத் தனக்கு வந்ததாகப் பாவிக்கமாட்டான். இது ஸாங்க்ய ஞானம் (மெய்யறிவு).

அடுத்த ஶ்லோகத்தில் ஸுகதுக்கம் முதலிய த்வந்த்வ மனோதர்மங்கள் ஆத்மாவுக்கு உரியனவல்ல என்றும், அவை காரண தேகமாகிய அவித்தைக்கும் ஸூக்ஷ்மதேக மனஸுக்கும் உரியவை என்றும், இந்த மனோதர்மங்கள் அநித்யங்களென்றும், அவைகளைப் பொறுமையோடு அநுபவிக்கவேண்டுமென்றும், உபதேஶிக்கின்றார்.

௰௪. ஆனால், (1) ஓ கௌந்தேய, மாத்ரா ஸ்பர்ஶங்கள் (2) ஶீதோஷ்ணம் (குளிர் சூடு) (3) ஸுகதுக்கம் என்றவைகளைக் கொடுக்கின்றன. அநித்யங்கள், வரவுபோக்கு உடையன (4), அவைகளை ஓ பார்த்த (5), பொறுத்துக்கொள் (6).

(1) தோன்றி அழியும் தேகத்தை நான் என்று சிந்திக்காது போனாலும் (அதில் உதயமாகும் ஸுகதுக்க ஶீதோஷ்ண த்வந்த்வங்களை அநுபவிக்கவேண்டும்.)

அநுபவிக்கும் முறை ஸாக்ஷிரூபமாகப் பொறுத்தலே என்று ௨. ௭௰ இல் விளக்கினார்.

(2) தன்மாத்ரைகளின் பற்றல். தன்மாத்ரைகள் மனவில் ப்ரவேஶிப்பதால், இந்த தன்மாத்ரா ப்ரவேஶங்களை மாத்ரா ஸ்பர்ஶங்கள் என்றார்.

தன்மாத்ரைகள் அதிநுட்ப அணுக்களாகிய பஞ்ச ஸூக்ஷ்ம பூதங்கள். இவற்றின் பெயர்கள் ஶப்த தன்மாத்ரை, அல்லது ஸூக்ஷ்ம ஆகாஶம்; ஸ்பர்ஶ தன்மாத்ரை, அல்லது ஸூக்ஷ்ம வாயு; ரூப தன்மாத்ரை, அல்லது ஸூக்ஷ்ம தேயு (அக்னி); ரஸ தன்மாத்ரை, அல்லது ஸூக்ஷ்ம அப்பு (ஜலம்); கந்த தன்மாத்ரை, அல்லது ஸூக்ஷ்ம ப்ருதிவி (மண்).

இந்தப் பஞ்ச தன்மாத்ரைகளால் வெளியிலுள்ள ஸகல தோற்றங்களும் உள்ளேயுள்ள ஞானேந்த்ரியங்களும் அந்தஃகரணங்களும் ப்ராண வாயுக்களும் கர்மேந்த்ரியங்களும் இயற்றப்பட்டனவென்று தத்வ ஶாஸ்த்ரங்களில் அறியலாம். (௨. ௨அ)

கணக்கற்ற தன்மாத்ரா கார்யங்களில், ஶீதம் உஷ்ணம் ஸுகம் துக்கம் என்றவைகளைப் பற்றியும், அவை புலப்படும்

ஸ்தானங்களாகிய அந்தஹ்கரணங்களைப்பற்றியும் மாத்ரமே, இந்த மச ம் மந்த்ரத்தில் விளக்கினார்.

(3) ரஸ தன்மாத்ரை (ஸூக்ஷ்ம ஜலம்) மனஸில் ப்ரவே ஶித்தால், ஶீதம் என்ற ஓர் குணம் ஜீவாத்மாவுக்கு (மனஸில்) ப்ரத்தியக்ஷமாகும். இவ்வாறே, ரூபதன்மாத்ரை (ஸூக்ஷ்ம அக்னி) மனஸில் ப்ரவேஶித்தால், உஷ்ணம் என்ற குணம் ஜீவனுக்குத் தோன்றும்.

(4) விருப்பு வெறுப்பு என்ற அவித்யாவின் அம்ஶங்கள் மனஸில் ஏறித் தங்கினால், விருப்பங்கொண்ட மனஸ் விரும்பின விஷயத்தைப் பெற்றவுடனே, விருப்பத்தின் பூர்த்தி மனஸில் படர்ந்து ஸுக வடிவமாகிப் ப்ரகாஶிக்கும். அஃதாவது, விருப்பம் மனஸில் உதயமாகி, தன்மாத்ரைகளால் இயற்றப் பட்ட ஓர் விஷயத்தில் நிறைவேறினால் (பலன்பட்டால்), அந்த நிறைவே (பலனே) மானஸ ஸுகமாகும்.

ஆத்ம ஸுகத்துக்கு அழிவில்லை. மானஸ ஸுகம் தோன்றி அழியும், அநித்யம்.

விருப்பங்கொண்ட மனம் விரும்பின வஸ்துவைப் பெறாது போனால் பதறும், சலனப்படும். அவ்விதமே, வெறுப்புக்கொண்ட மனம் வெறுத்த வஸ்துவை ஸ்பர்ஶித்தால் சலனப்படும். எவ்வாறெனின், விருப்பு வெறுப்பினால் ஏவப்பட்ட மனம், அவற்றோடு ஒன்றாகூடி, அவற்றின் பதட்டத்தைப் பெறும். இவ்விதம் ஆசைக்குரிய பதறுதலை (வாதனையை) மனஸ் என்ற கருவியால் ஜீவாத்மா விளங்காமையால் துக்கமென்று அறியும்.

இந்த ஸுகதுக்க உணர்ச்சியை சைவஸித்தாந்த ஶாஸ்த்ரங்கள் ஸ்வஸம்வேதனப் ப்ரத்யக்ஷம் (தன் வேதனைக் காட்சி) என்று கூறும்.

(5) மனஸில் ப்ரவேஶிக்கும் தன்மாத்ரைகள் ஓரே நிலையாக நில்லா. பற்றும், விடும்.

(6) ஆதலால், ஶீதோஷ்ண ஸுகதுக்க த்வந்த்வங்கள் பொறுக்கத்தக்கவை. தோன்றி அழியும்வரையில் ஜீவாத்மா ஸாக்ஷி ரூபமாய்நின்று ஸமாதானமாக அநுபவிக்கவேண்டும். அவைகளிற் சிக்குண்டு அவதிப்படக்கூடாது.

"திதிக்ஷஸ்வ"=பொறுத்துக்கொள்.

திதிக்ஷை=ஸுகதுக்கங்களை ஸமமாக விசாரித்து, எல்லாம் சரியே என்று பொறுத்தல்.

ஸீதோஷ்ண ஸுகதுக்க த்வந்த்வங்கள் மாத்ரா ஸ்பர்ஶ கார்யங்கள் என்றும், அநித்யங்கள் என்றும், அவற்றைத் திட புத்தியோடு ஆத்மா தரிக்கவேண்டியது என்றும் அறிவது ஸாங்க்யஞானம் (மெய்யறிவு).

௧௫. ஓ புருஷரிஷப (1), துக்கத்தையும் ஸுகத்தையும் ஸமமாகக்கொண்ட எந்தத் தீரபுருஷனை (2) இவைகள் (மாத்ரா ஸ்பர்ஶங்கள்) வதைக்கவில்லையோ, அவன் அமிர்தத்துக்கு வல்லவனாகின்றான் (3).

(1) ரிஷப, ஸிம்ஹ, ஶார்தூல (வேங்கை), வ்யாக்ர (புலி), கஜ (யானை), முதலிய பதங்கள் புருஷ என்ற பதத்தோடு கூடினால் புருஷனைச் சிறப்பிக்கும். ஆதலால், புருஷரிஷப=சிறந்த புருஷனே.

(2) தீர=புத்தியுள்ள. ஸமத்வ புத்தி பெற்ற ஜீவாத்மாவுக்குச் சஞ்சலமில்லை.

(3) அவன் இறப்புப் பிறப்பற்ற ஸ்திதியாகிய மோக்ஷத்துக்கு அதிகாரி. அமிர்தம்=அழிவற்றபதம். மாத்ரா ஸ்பர்ஶங்களால் சலனப்படாத புத்தி ஸாங்க்ய புத்தி (மெய்யறிவைச்சார்ந்த புத்தி) என்று ௨. ௩௯ ல் குறிக்கப்பட்டது.

௧௬. அஸத்துக்கு இருத்தல் இல்லை (1). ஸத்துக்கு இன்மை இல்லை (2). இவ்விரண்டின் உண்மைகள் தத்வ ஞானிகளால் அறியப்பட்டன (3).

(1) அஸத்=பொய்ப்பொருள். ஒருநிமிஷமாவது ஒரேநிலையில் நிற்காமல் தன் ரூபம் மாறிமாறிக்கொண்டே தோன்றும் வஸ்துவைப் பொய்ப்பொருள் (அஸத்) என்பார் பெரியோர். நிலையற்ற பொருள் நிலைபெற்றதுபோலத் தோற்றும், அஃதாவது, இல்லாதது உள்ளதுபோல விளங்கல். மாறிமாறிக்கொண்டே செல்லும் மேகம்போலப், பிறந்து வளர்ந்து தேய்ந்துகொண்டே தோற்றும் தேகங்கள் அஸத்பொருள்.

(2) ஸத்=மெய்ப்பொருள். எக்காலமும் உள்ளவஸ்து. இது மாறாது, இல்லாமற்போகாது. ஆனால், ஸூக்ஷ்ம ஸ்தூல தேகங்களால் (உபாதிகளால்) மறைபட்டு நிற்கும். பஞ்சப்பொறிகளுக்குத் தோற்றாதுபோனாலும், ஆத்மா ஸத்பொருளே.

(3) இந்த ஸத், அஸத், என்ற இரண்டைப்பற்றிய உண்மைகளுக்கு ஸாக்ஷி ஜீவன்முக்தர்களே. அவர்கள் தத்வங்களைப் பிரித்து உள்ளதையும் இல்லாததையும் ஸ்வாநுபவமாக அறிந்தவர்கள். (ஞி. யஅ.)

ஸத்பொருளாகிய ஆத்மா ஒருபொழுதும் இல்லாமையைப் பெறாது என்றும், அஸத்பொருளாகிய தேகங்கள் பஞ்சப்பொறிகளுக்குத் தோன்றினும் பொய்ப்பொருளே என்றும், அறிதல் ஸாங்க்ய ஞானம். (மெய்யறிவு)

யஎ. எதனால் (1) இவையெல்லாம் (2) வியாபிக்கப்பட்டனவோ, அதனை நாஸமற்றதென்று (3) அறி. அவ்யயமான (4) இதற்கு (இந்த ஆத்மாவுக்கு) நாஸத்தைச் செய்தற்கு ஒருவனும் ஸமர்த்தனல்லன்.

(1) எந்த ஸத்பொருளாகிய ஆத்மாவால்.
(2) நானாவித அஸத்பொருள் எல்லாம்.
(3) அழிவற்றதென்று. (நாஸம்=இல்லாமற்போதல்.)
(4) மாறுதலற்ற ஆத்மப்பொருள்.

அனாத்மப்பொருள் யாவற்றையும் ஆத்மா வ்யாபித்திருக்கின்றதென்றும், அனாத்மப்பொருளின் தன்மை தோன்றலும் அழிதலுமென்றும், ஆத்மா மாறுதல் இல்லாத வஸ்துவென்றும், இப்படிப்பட்ட வஸ்துவை ஒருவரும் கொல்லக்கூடாதென்றும், நிஸ்சயித்தல் ஸாங்க்ய ஞானம். (மெய்யறிவு.)

யஅ. நாஸமற்றவனும் நித்யனும் (1) இந்த்ரியங்களால் அறியமுடியாதவனும் (2) ஆகிய ஸரீரியின் (3) இந்தத் தேகங்கள் அந்தம் பெற்றவைகளாகக் கூறப்பட்டன. ஆதலால், ஓ பார்த்த, யுத்தஞ் செய்.

(1) ஸதாகாலமும் அழிவற்றவன் என்பதை "அழிவற்றவனும் நித்யனும்" என்றார்.

(2) ஆத்மாவை ஆத்மாவே அறியும். அதன் இந்த்ரியங்களாகிய மனம், புத்தி, வாக்கு, கண் முதலியவை அதனை அறியா. இந்த உண்மையையும் ஜீவன்முக்தர்களே அறிவார்கள்.

(3) சரீரத்தைத் தரித்தவன் சரீரி, தேகத்தைத் தரித்தவன் தேகி.

தோன்றி அழியும் சரீரத்தைத் தரித்து நிற்பவனை சரீரி என்ற ஆத்மா. அவன் இந்த்ரியங்களுக்குப் ப்ரத்யக்ஷனுகான். அவைகளையும் மற்றப் ப்ரக்ருதி தத்வங்களையும் யோகத்தில் கழற்றினுல், ஆத்மா கைவல்யமாகிப் ப்ரஸன்னமாவான். இது ஸாங்க்யஞான அநுபவம்.

**௧௯. எவன் இவனை (இந்தத் தேகியை)க் கொல்லுகின்றவனாக(1) நினைக்கின்றனே, எவன் இவனைக் கொல்லப்பட்டவனென்று (2) நினைக்கின்றனே, அவ்விருவரும் நல்லறிவாளிகள் அல்லர். இவன் கொல்லுகின்றவனும் அல்லன், கொல்லப்படுகின்றவனும் அல்லன்.**

(1) கொல்லுகின்றவனுக=கொல்லும் தொழிலுக்குக் கர்த்தாவாக.

(2) கொல்லும் தொழிலுக்கு விஷயம் என்று.

தேகி என்ற ஆத்மா ஸாக்ஷிசொரூபமாதலால், அதனை அகர்த்தா என்று அறிதல் ஸாங்க்யஞானம் (மெய்யறிவு).

ஜீவாத்மாவின் லக்ஷணம் அத். ௰௩ இல், மந். ௯—௰௪ இல், பகவான் கூறியிருக்கிறுர். மூலத்தையும் உரையையும் பார்த்தறிக.

பரமாத்மாவின் அம்ஸங்களாகிய ஜீவாத்மாக்கள் ஒவ்வொருவருக்கும் அவித்யா என்ற கஶ்மல (உ. உ) இருளில் பந்திக்கப்பட்ட காலந்தொட்டு அந்த மலம் நீங்கும் வரையில், பரமாத்மா அறிவுக்கறிவாய், தலைவன் என்றும், கூடஸ்த புருஷன் ("கூட" =தலை, முடி; "ஸ்த"=நிற்றல்; "புருஷ"=உள்ளிருப்பவன்), என்றும் அழைக்கப்பட்டு, நிற்கின்றது.

மலத்தில்நின்று விடுபட்டவுடனே ஜீவாத்மா கூடஸ்தனுகின்றுன் என்று பகவான் அத். ௬, மந்த்ரம் அ இல் கூறினுர். இந்தப் பரம ரஹஸ்யமான உண்மையை ஸ்வாநுபவமாக

அறிந்த ஸ்ரீ மாணிக்கவாசக ஸ்வாமிகள், அச்சோப்பதிகத்தில், "சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட அத்தன்", என்று குறித்தார்.

ஜீவாத்மா என்றவன் கூடஸ்த புருஷனாகின்றான் (பசுவாத்மா பிவமாகின்றான்) என்பதே "தத் த்வம் அஸி" (நீ அதுவாகிறாய்) என்ற வேத மஹாவாக்யத்தின் பொருள் (மஅ. நிக, நிரு)

அதுவாகும் நீ கொல்லப்படவும் மாட்டாய், கொல்லவும் மாட்டாய் என்று இந்த மகூம் மந்தரத்தில் உபதேசிக்கப் பட்டது.

கொல்லுதல் ஒரு கர்மம். கர்மங்கள் கர்மேந்த்ரியங்களால் செய்யப்படுமென்றும்,—இந்த இந்த்ரியங்கள் ஆத்ம அம்பங்களல்ல, ப்ரக்ருதி ஜன்யங்களையென்றும்,—ஜீவாத்மாவைப் பந்தித்துநிற்கும் காமம் க்ரோதம் லோபம் அஹங்கை மமதை முதலிய கஸ்மலங்கள் கர்மேந்த்ரியங்களில் ஏறித் துஷ்ட கர்மங்களைச் செய்விக்குமென்றும்,—துஷ்டகர்மங்களால் வந்த தீங்குகளை ஜீவாத்மா அறியுமென்றும்,—அறிந்தபின் தனது பக்தியை அம்மலங்களுக்கு அநுகூலப்படவிடாமல் ஒடுக்குமென்றும்,—இந்த நல்லறிவுதயத்தில் அந்தர்யாமியாகிய மஹேஸ்வரன் புண்யகர்மங்களில் புத்தியையும் கர்மேந்த்ரியங்களையும் ஏவுவாரென்றும்,—புண்ய கர்மங்களுக்கு விதிக்கப்பட்ட ஸுகபலன்களை ஜீவாத்மா அறியுமென்றும்,—அறிந்தபின் விஷயஸுகங்களை அநித்யமென்றும் வீண் வேதனையென்றும் நிஸ்சயிக்குமென்றும்,—அப்பால் விஷயஸுகங்களில் மோஹங்கொள்ளாமல் அவற்றுக்கு மேற்பட்ட ஸுகங்கள் உள்ளனவோவென்று விசாரிக்குமென்றும்,—இந்தப் பரிபக்குவ காலத்தில் மஹேஸ்வரனது அநுக்ரஹத்தால் ஞான குரு தோன்றி ஞானோபதேசம் செய்வாரென்றும்,— அதனால் மலநீக்கம் என்ற மோக்ஷம் ஸித்திக்குமென்றும்,—மேல்வரும் மந்த்ரங்களில் விளக்கப்படும்

ஆகவே, கூடஸ்த ப்ரஹ்மமாகும் ஜீவாத்மா கர்மேந்த்ரியங்களால் செய்யப்படும் கர்மங்களுக்கு ஸாக்ஷி மாத்ரமே, கர்த்தாவன்று, என்று அறிதல் ஸாங்க்ய ஞானம் (மெய்யறிவு).

**உ௰.** இவன் (இந்தச் சரீரி) ஒருக்காலும் பிறக்கின்றன் இல்லை. ஒருக்காலும் இறக்கின்றன் இல்லை. ஒருக்காலும் பிறந்து இருக்கின்றன் இல்லை (1). பிறப்பற்றவனும் நித்யனும் குறைவில்லாதவனும் இருக்கின்றன். சரீரம் ஹிம்ஸிக்கப்பட்டாலும் இவன் ஹிம்ஸிக்கப்படுகின்றன் இல்லை.

(1) *பிறப்பு, வளர்தல், தேய்தல், நாசம் (காணாமற் போதல்) என்ற விகாரங்கள் அற்ற பொருள் மெய்ப்பொருளாகிய ஆத்மா என்றும், விகாரங்கள் பெற்றவையெல்லாம் பொய்ப்பொருளாகிய ஜடம் என்றும், ஜடமாகிய தேகம் ஹிம்ஸை அடைந்தாலும், தேகி (தேகத்தில் வசிக்கும் ஆத்மா) ஹிம்ஸை அடையான் என்றும் அறிவது ஸாங்க்ய ஞானம்.*

**உ௰க.** எவன் அஜனும் (1) அவ்யயனும் (2) நித்யனும் (3) அவிநாஶியும் (4) ஆகிய ஆத்மாவை (5) [நான் என்று] அறிகின்றனோ, அந்தப்புருஷன், ஓ பார்த்த, ஆரை ஹிம்ஸிக்கின்றன், ஆரை ஹிம்ஸிப்பிக்கின்றன்.

(1) *அஜன்=பிறப்பற்றவன்.*

(2) *அவ்யயன்=வ்யயம் அற்றவன், குறைவில்லாதவன், ஒருவிதத்திலும் குன்றாதவன், மாறுதலற்றவன்.*

(3) *நித்யன்=எப்பொழுதும் ஒரேவிதமாய் நிற்பவன்.*

(4) *அவிநாஶி=விநாஶமில்லாதவன், அழிவற்றவன்.*

(5) *கூடஸ்த ஆத்மாவாகும் தன்னை. உ, ௰௬ இன் உரையைப் பார்த்தறிக.*

*மலரஹித (மலமற்ற) ஸாக்ஷாத்கார ஆத்மாவை நான் என்று இருப்பவன் அகர்த்தாவாதலால், அவன் ஹிம்ஸிக்கின்றவனும் அல்லன், வேறொருவரை ஏவிவிட்டு ஹிம்ஸை செய்கின்றவனும் அல்லன், என்று அறிதல் ஸாங்க்ய ஞானம்.*

**உ௰உ.** மானுடன் எவ்விதம் பஞ்சுபட்ட வஸ்திரங்களை விட்டு வேறு புதிய வஸ்திரங்களைத் தரிக்கின்றனோ, அவ்விதமே தேஹி பலஹீன சரீரங்களைவிட்டு வேறு புதிய சரீரங்களைப் பெறுகின்றன் (1).

(1) *ஆத்மா ஜீர்ண காயத்தைவிட்டுப் புதியகாயத்தைத தரிக்கும் என்று அறிதல் ஸாங்க்ய ஞானம்.*

**௨௰௩. ஆயுதங்கள் இவனை முறிக்கா. அக்னி இவனை எரிக்காது. ஜலம் இவனை நனைக்காது. காற்று இவனை உலர்த்தாது (1).**

(1) *வாயு அக்னி ஜலம் என்ற பூதங்கள் ஆத்மாவை வாட்டா. ஆயுதங்களும் வாதிக்கா.*

**௨௰௪. இவன் முறிக்கப்படாதவன். இவன் எரிக்கப்படாதவன். இவன் நனைக்கப்படாதவன். இவன் உலர்த்தப்படாதவன்(1). இவன் ஸநாதநன் (2). ஆதலால், இவன் நித்யன், இவன் ஸர்வகதன் (3), இவன் (4) நிலைபெற்றவன், அசைவற்றவன்.**

(1) *பூதங்களுக்கு மேற்பட்ட சிதாகாஸ சொரூபியாகிய ஆத்மாவை பூதங்கள் தீண்டா என்று மீளவும் கூறுகின்றார்.*

(2) *"ஸதா"+"பவ:" (எக்காலங்களிலும் இருக்கின்றவன்) "ஸநாதந" என்று மாறிற்று. இந்த ஸநாதந புருஷனை உண்டாக்கினவன் ஒருவனுமில்லை.*

(3) *யாவற்றையும் வியாபித்தவன், பூதங்கள்தோறும் நிற்கின்றவன்.*

(4) *இவன், இவன் என்று பலமுறை சொன்னது அவதார புருஷனாகிய ஸ்ரீ க்ருஷ்ணனுக்குப் ஆத்மா ப்ரத்யக்ஷமாயிருப்பதால்.*

*ஆயுதங்களாலாவது பஞ்சபூத ஸ்பர்ஸங்களாலாவது ஆத்மா வருத்தப்படான் என்றும், அவன் ஆகாஸம் போன்ற அசையாவஸ்து என்றும் அறிதல் ஸாங்க்ய ஞானம்.*

**௨௰௫. இவன் அவ்யக்தனாகவும் (1) அசிந்த்யனாகவும் (2) அவிகாரியாகவும் (3) [வேதங்களில்] கூறப்படுகின்றான். ஆதலால். இவனை இவ்விதம் அறிந்தால், நீ துக்கிப்பதற்கு உரியவனாகமாட்டாய் (4).**

(1) *ஞானேந்த்ரியங்களுக்குப் புலப்படாதவனாகவும்.*

(2) *மனஸால் நினைக்கப்படாதவனாகவும். சுத்தப்பட்ட அறிவு என்ற ஆத்மாவால் அறியப்பட்டவன்.*

(3) *விகாரமற்றவனாகவும். எக்காலமும் ஸாக்ஷியாய் நிற்பதால் காணப்பட்ட விஷயங்களின் வேற்றுமைகளை அடையாதவன்.*

(4) துக்கத்துக்கு ஆளாகமாட்டாய். அது பந்தியாது.

மனஸுக்கும் வாக்குக்கும் எட்டாத நிர்விகார வஸ்து என்று ஆத்மாவை அறிதல் ஸாங்க்ய ஞானம்.

இதுவரையில் ஆத்மாவுக்கு இறப்பும் பிறப்பும் இல்லாத படியாலும், அந்த அவஸ்த்தைகள் தேகத்துக்கே உரியவையா தலாலும், இறக்கும் தேகத்தைப்பற்றித் துக்கிப்பது ந்யாய மில்லை என்று உறுதி கூறினர்.

**உ௰௬. இவனை நித்யம் பிறந்தவனாகவும், நித்யம் இறந்தவனாக வும், நீ விசாரிப்பாயானாலும், ஓ மஹாபாஹு, இப்படி நீ துக்கம் பெறுவதற்கு ஆள் அல்லை (1).**

(1) எவ்வெப்போது தேகம் ஆத்மாவைப் பற்றிற்றோ, அவ் வப்போதெல்லாம் ஆத்மா பிறக்கிறதென்றும், எவ்வெப்போது ஆத்மாவை விட்டதோ, அவ்வப்போதெல்லாம் ஆத்மா இறக்கிற தென்றும், நீ எண்ணலாம். இந்த எண்ணப்படியும் துக்கிப்பது சரியன்று. ந்யாயம் அடுத்த மந்த்ரத்தில் வெளிப்படும்.

**உ௰௭. பிறந்தவனுக்கு இறப்பு நிஶ்சயமாதலாலும், இறந்தவ னுக்குப் பிறப்பு நிஶ்சயமாதலாலும், நீக்க முடியாத கார்யத்தில் நீ துக்கிப்பது ந்யாயமன்று.**

**உ௰௮. பார்த்த, [தேகங்களுக்கு ஸூக்ஷ்ம] பூதங்கள் (1) அப்ர த்யக்ஷ ஆதிகள் (2), ப்ரத்யக்ஷ மத்யங்கள் (3), அப்ரத்யக்ஷ அந் தங்கள் (4). [இப்படி ஸூக்ஷ்ம பூதங்கள் தேகங்களுக்கு ஆதி மத்யம் அந்தமாய் இருப்பது இயல்பாதலால்] அவைகளைப்பற்றி என்ன துக்கம் (5).**

(1) ஸூக்ஷ்ம பூதங்கள் என்ற தன்மாத்ரைகள். உ, ௰ரு.

(2) கண்ணுக்கெட்டாத காரணங்கள். பிதாவின் ஶுக் லத்திலும் மாதாவின் ஶ்ரோணிதத்திலும் அப்ரத்யக்ஷமாக இருந்து, இந்த ஸூக்ஷ்ம பூதங்கள் ஸ்தூல தேகத்தை ஆரம் பிக்கும்.

(3) கர்ப்பத்தில் நின்று வெளியில் வந்த நாள்தொட்டு மரண பர்யந்தம் அந்த ஸூக்ஷ்மபூதங்களை தடித்து ப்ரத்யக்ஷ மான ஸ்தூலதேகமாய்த் தோற்றும்.

(4) ஸ்தூல தேகத்தில்நின்று ஜீவனும் ஸூக்ஷ்ம ஶரீரமும் சென்றபின், ஸ்தூலதேகம், அணுவணுவாய்த் தேய்ந்து தேய்ந்து, அத்ருஶ்ய ஸூக்ஷ்ம பூதங்களில் ஒடுங்கும்.

(5) ஏன் துக்கிக்கவேண்டும். துக்கிப்பது ந்யாயமன்று.

**உ௰௯. [ஆதி மத்யம் அந்தமற்ற] இவனை ஒருவன் ஆஶ்சர்யத்தோடு ([1]) அறிகின்றான். வேறொருவன் அவ்விதமே ஆஶ்சர்யத்தோடு [இவனைப்பற்றிக்] கூறுகின்றான் ([2]). இன்னொருவன் இதனை ஆஶ்சர்யத்தோடு கேட்கின்றான்([3]). ஆனால், ஒருவன் ஶ்ரவணம் [மாத்ரம்] செய்து, இவனை [ஸ்வாநுபவமாக] அறியவேமாட்டான் ([4]).**

(1) "ஆஶ்சர்யவத்"=ஆஶ்சர்யத்தோடு. ஆத்மா பரமாஶ்சர்ய வஸ்துவாதலால் "ஆஶ்சர்யவத்" என்ற பதத்திற்கு ஆஶ்சர்யப்பொருள்போல என்ற அர்த்தம் ஒவ்வாது.

ஶரீரத்துக்குள் இருக்கும் அவ்யக்த அசிந்திய ஶரீரியை யோகாப்யாஸத்தால் மெல்லமெல்லப் பிரித்து ஸ்வாநுபவத்தில் அறிந்த ஜீவன்முக்தனுக்கு ஆஶ்சர்யம் இல்லை. தன்னைத் தான் கண்டால், ஆஶ்சர்யம் என்ன. அப்படித் தனக்கு ஆஶ்சர்யம் இல்லாவிட்டால், ஆஶ்சர்யம் பெற்றவன் யார். தன் புத்தியே.

ஸகல விஷயங்களையும் விசாரித்து ஜீவாத்மாவுக்கு அறிவிக்கும் புத்தி, ஞானகுரு வரும்வரையில், தனிப்பொருளாகிய ஆத்மா உண்டென்பதை க்ரஹிக்காது. ஞானோபதேஶப்படி, த்ரிகரண அடக்கம் என்ற மௌனத்திலேயே ஆத்மா விளங்கும். ப்ரக்ருதி சொரூபமான புத்தி ஆத்மாவை அறியாது. "நான் என்னைக் கண்டேன்" என்ற ஆத்மாவின் நிஶ்சய வசனத்தைக்கேட்டு, புத்தி ஆஶ்சர்யப்படும்.

(2) ஜீவன்முக்தர்களில் ஒருவன் ஶரீரியின் லக்ஷணத்தைக் கூறும்பொழுது, அவன் புத்திக்கே ஆஶ்சர்யம் புலப்படும். ஏனெனில், புத்தி முன்னறியாத அநேக விஷயங்கள் ஜீவன்முக்தனுடைய வாக்கில்நின்று மளமளவென்று வெளிவருதலால்.

(3) ஶ்ரவணம் செய்த ஶிஷ்யனும் உபதேஶித்ததெல்லாம் மிக்க ஆஶ்சர்யத்தோடு கேட்பான்.

(4) ஶ்ரவணமானபின், மனனமும் நிதித்யாஸனமும் செய்து மனோலயம் பெற்றாலன்றி ஆத்ம தர்ஶனம் கிட்டாது. ஆதலால், ஶ்ரவணத்தால் மாத்ரம் அறியமாட்டான் என்றார். இது அநுபவ லக்ஷணமாதலால், ஸாங்க்ய ஞானம்.

௩௰. ஓ பாரத, யாவருடைய தேகத்திலும் இந்தத் தேகி ஒருகாலத்திலும் கொல்லப்படாதவனாதலால், எல்லாத் தேகங்களைப்பற்றியும் (1) நீ துக்கிப்பதற்கு ஆள் அல்லை.

(1) ஒரு தேகத்தைப்பற்றியாவது.

கூ௰௧. மேலும், தர்மத்தில்நின்று நீங்காத (1) யுத்தத்திலும் சிறந்த வேறு கர்மம் க்ஷத்ரியனுக்கு இல்லை (2). தனது [ஜாதி] தர்மத்தை அறிந்தும் சலிப்பது சரியன்று (3).

(1) தர்மத்தில் ப்ரதிஷ்டை பெற்றிருக்கும்.

(2) தர்மவிதிகளை அநுஸரித்துவரும் க்ஷத்ரியனுக்கு யுத்தம் நேரிட்டால், அந்த யுத்தத்திலும் சிறந்த கர்மம் அவனுக்கு இல்லை.

(3) தனக்கு ஏற்பட்ட யுத்தகர்மத்தை அறிந்தும், அதனைத் தைர்யத்தோடு அநுஸரிக்காமல் நிற்பது பாபமே.

கூ௰உ. ஓ பார்த்தனே, முயற்சியில்லாமல் கிடைத்ததும்(1), திறக்கப்பட்ட ஸ்வர்க்க துவாரமும் (2), ஆகிய இவ்வித யுத்தத்தைச் சுகபலனுக்குரிய க்ஷத்ரியர்கள் பெறுகின்றனர் (3).

(1) வருந்தி அழைக்காமல் வந்ததும்.

(2) ஸ்வர்க்கலோகத்துக்குத் திறந்த வாசலும்.

(3) பூர்விகத்தில் புண்ய கர்மங்களைச் செய்தவர்களுக்கே க்ஷத்ரிய வர்ணமும் தர்ம ஸம்பந்த யுத்தமும் வந்து அமையும். அமைந்த யுத்தம் ஸ்வர்க்கலோக ஸுகங்களைக் கொடுக்கும்.

௩௰௩. நீ இந்தத் தர்ம ஸம்பந்த யுத்தத்தைச் செய்யமாட்டாயாகில், அதனால் உனது தர்மத்தையும் புகழையும் இழந்து பாபத்தைப் பெறுவாய் (1).

(1) இது தொட்டு ௩௰௭ வரையில் இகபர பலனை விரும்பும் கர்மாதிகாரிக்குரிய யுத்தியைச சொல்லுகின்றார்.

௩௰௪. ஜீவர்கள் உனக்கு அழிவற்ற அகீர்த்தியையும் கூறுவார்கள். வெகுமானிக்கப்பட்டவனுக்கு அகீர்த்தி மாணத்திலும் பெரிது.

௩௰௫. எவர்களால் நீ வெகுமானிக்கப்பட்டவனாயிருந்து [விளங்கினாயோ], அந்த மஹா ரதர்கள் உன்னைப் பயத்தினால் யுத்தத்தில் நின்றும் நீங்கினவனாக எண்ணுவார்கள். தாழ்வை அடைவாய்.

௩௰௬. உனது சத்துருக்கள் உன் சாமர்த்தியத்தைப் பழிக்கின்றவர்களாய், சொல்லக்கூடாத அநேக வார்த்தைகளைப் பேசுவார்கள். அதனிலும் மிகுந்த துக்கம் என்ன.

௩௰௭. ஓ கௌந்தேய, கொல்லப்பட்டால் ஸ்வர்க்கத்தைப் பெறுவாய், ஜயித்தால் பூமியைப் அநுபவிப்பாய். ஆதலால், யுத்த நிஸ்சயத்துடன் எழுந்திரு (1).

(1) இனி அடுத்த ௩௰௮ வது ஶ்லோகத்தில் இகபர பலன்களுக்கு மேற்பட்ட நித்ய ஸுகத்துக்கு ஹேதுவான ஸமத்வ புத்தியோடு எழுந்திரு என்றும், ௩௰௯ இல் ஸமத்வபுத்தி மெய்யறிவென்ற ஸாங்க்யத்துக்கு மிகச்சாதனமான புத்தி என்றும் விளக்குவார்.

௩௰ இல் நிறுத்தப்பட்ட ஸாங்க்ய (மெய்ஞ்ஞான) உபதேஶம் ௩௰௮ ல் மீளவும் ஆரம்பிக்கப்பட்டது.

௩௰௮. ஸுக துக்கங்களையும், லாப அலாபங்களையும், ஜய அபஜயங்களையும் ஸமப்படுத்தி (1) யுத்தத்துக்கு ஆயத்தனாக இரு. இவ்விதமிருந்தால், பாபத்தைப் பெறமாட்டாய் (2).

(1) துல்யமாக்கி, அஃதாவது, துலாம் (தராசு) போலச் செய்து.

தட்டில் இடப்பட்ட பதார்த்தங்களை தராசு ஓரே நிறையாக்குதல்போல, த்வந்த்வ பதார்த்தங்களை ஓரேவிதமாக மதிக்கின்ற புத்தி ஸமத்வபுத்தி. அத். ௰உ, மந். ௰௮, ௰௯.

அஞ்ஞான சொரூபங்களாகிய ராக த்வேஷம் (விருப்பு வெறுப்பு) என்ற த்வந்த்வம் (விரோத இரட்டைகள்) புத்தியில் ஏறியிருந்தால், அந்தப் புத்தி த்வந்த்வப்படும். த்வந்த்வ புத்தி ஏகாந்தநிலையில் நின்று விசாரிக்கக்கூடாமல், விருப்புக்கும் வெறுப்புக்கும் மாறிமாறி அடிமைப்பட்டே விசாரிக்கும். ஶப்த ஸ்பர்ஶ ரூப ரஸ கந்தம் என்ற விஷயங்களை, விருப்பு வெறுப்புக்கேற்றபடி, நல்லது கெட்டது என்று ஸங்கல்பிக்கும். ஒருநேரம் ஸுகசொரூபியாயும், இன்னொருநேரம் துக்கசொரூபியாயும் இருக்கும். தன்னோடு ஒத்திருந்தவர்களை மித்ரரென்றும், ஒவ்வாதவர்களைப் பகைவரென்றும் பாராட்டும். மேலும் ஒரு கர்மத்தில் ப்ரவேஶிக்கும் பொழுது, தர்ம ஶாஸ்த்ரம் தனக்கு விதித்ததை நேரே அநுஷ்டிக்காமல், "இது எனக்கு லாபமா அலாபமா"—"இதில் எனக்கு ஜயம் உண்டா அல்லது அபஜயம் உண்டா"—"இதனால் எனக்கு ஸுகமா துக்கமா"—என்ற பேத நினைவுகளை விளைவித்துச் செய்யவேண்டியவைகளைச் செய்யவிடாமற் பண்ணும் தர்மவிதிகளை அநுஷ்டித்தாலும், அவைகளுக்குரிய ஸ்வர்க்கலோக பூலோக இன்பங்களுக்காகவே அநுஷ்டிக்கும்.

இவ்வாறு விருப்பு வெறுப்புடன் கர்மங்களைச் செய்யும் ஜீவாத்மா பிறப்பு இறப்பு என்ற ஸம்ஸார துக்கங்களால் பந்திக்கப்படும். இந்த ஸம்ஸார துக்கம் எவ்விதம் தீருமென்று ஞானதிகாரி தாகமாய்த் தேடித்திரிவான். துக்க நிவிர்த்திக்கு முதல் உபாயம் ஸமத்வ புத்திப் பழக்கமே என்று பகவான் திருவாய்மலர்ந்தருளினர்.

(2) த்வந்த்வங்களை ஸமப்படுத்தும் புத்தியால் உன் க்ஷத்ரிய தர்மத்தை நிறைவேற்று. அப்படி விருப்பு வெறுப்பற்றும் அகந்தை மமதையற்றும் நிறைவேற்றும்பொழுது, கொலை முதலிய ஹிம்ஸைகள் நடந்தால், அந்தப் பாபங்களில் நின்று ஜனிக்கும் துக்க பலன்கள் உன்னை அண்டா. இது மஹேஶ்வரனது கர்ம சக்ரத்தின் ஆஞ்ஞை.

நாரத ருஷிக்கும் அஸிததேவல ருஷிக்கும், நடந்த ஸம்

வாதத்தில் இந்த மிக ரஹஸ்யமான கர்மபல நிவிர்த்தி நன்ருய் விளக்கப்பட்டது. த்வந்த்வங்களை ஸமப்படுத்திப் பழகப் பழக, புத்தி, விருப்பு வெறுப்பென்ற த்வந்த்வங்களால் சலனப்படாமல், அசையாத தீபம்போல நின்று, ஆத்ம விஷயங்களை விசாரிக்கும். அவ்விசாரணையால், ஜீவாத்மா மெய்யறிவென்ற ஸாங்க்யத்தைப் பெற்று ப்ரஹ்ம மயமாகும். அதுபற்றியே அஸிததேவல ருஷி "புண்ய பாப பலன்கள் நசிப்பதற்காக [மெய்யறிவென்ற] ஸாங்க்ய ஞானம் விதிக்கப்படுகின்றது; அவை நசிபட்டால் இவனுக்கு பரப்ரஹ்ம பாவ (பரசிவ சொரூப) கதியைப் பெரியோர் பார்க்கின்றார்கள் (பெறுவான் என்று நிஸ்சயிக்கின்றனர்)" என்று கூறினர். மஹாபாரதம், ஶாந்திபர்வம், மோக்ஷதர்மபர்வம், அத். உ௱௭௰௫. ஸமத்வ புத்தியை அநுஸரித்தாலன்றி ஸாங்க்ய ஞானம் வராது. மெய்யறிவுக்கு இன்றியமையாத படித்தரம் ஸமத்வ புத்தியே.

௩௰௯. ஓ பார்த்த, உனக்குக்கூறப்பட்ட இது (இந்தத் த்வந்த்வ ஸமத்வம்) ஸாங்க்யத்தைப்பற்றிய புத்தி (1). மேலும், [எந்த] ஸமத்வ புத்தியோடு கூடிக் கர்ம[பல] பந்தத்தை விடுவாயோ (2), அதனை (அந்த ஸமத்வ புத்தியை) யோகத்திலும் (யோகம் என்ற பதத்தின் பொருளிலும் அடங்கினதாக) அறி (3).

(1) "ஸாங்க்யே புத்தி" என்ற மூல க்ரந்தம் ஸாங்க்யத்தில் புத்தி என்ற பொருள்படும். அஃதாவது, ஸாங்க்யம் என்ற மெய்யறிவைச் சார்ந்த புத்தி என விரியும்.

விருப்பு வெறுப்பு என்ற த்வந்த்வங்களைச் சார்ந்த புத்தியை அவித்யாவில் புத்தி என்று சொல்லலாம். இந்த த்வந்த்வங்களை விட்டு, மெய்யறிவைப்பற்றின புத்தி ஸாங்க்யத்தில் புத்தி என்று கூறப்படும்.

த்வந்த்வங்களை எப்பொழுது புத்தி ஸமப்படுத்துமோ, அப்பொழுதே ஸாங்க்யம் என்ற மெய்யறிவில் நிஷ்டை பெறும்.

ஸ்வர்க்காதி போக இச்சைகளை அநுஸரித்து, அவற்றிற்கு மேற்பட்டவை ஒன்றுமில்லை என்ற பொய்யறிவாளிக்கு ஸமத்வ புத்தி அமையாது. அவனுக்கு உரியது த்வந்த்வ புத்தியே.

ஸ்வர்க்காதி போகங்கள் அநித்யங்கள் என்றும், விசாரிக்குமளவில் துன்பங்கள் என்றும், நிஶ்சயிக்கும் தீரர்களுக்கே த்வந்த்வம் அழிந்து, ஸமத்வம் ப்ரகாஶிக்கும். இந்த ஸமத்வ புத்தியில்லாமல் ஜீவாத்மா மெய்யறிவைப்பெறாது. த்வந்த்வங்களை ஸமப்படுத்தும் ஶக்தி எப்பொழுது புத்திக்கு ஏற்பட்டதோ, அப்பொழுது அது மெய்ப்பொருளாகிய ஆத்மாவுக்கு வஶப்பட்டு நிற்கும் என்பதுபற்றி, "இது ஸாங்க்யத்தைப்பற்றிய புத்தி" என்று பகவான் கூறினார்.

ஸாங்க்யம், மெஞ்ஞானம், பரஞானம், வேதாந்தம் என்ற பதங்கள் மெய்யறிவுக்குப் பர்யாயங்கள் என்று ஐந்தாம் வேதமாகிய மஹாபாரதத்தில், ஶாந்திபர்வத்தில், ஸ்தாபிக்கப்பட்டது. நாலு வேதங்களின் தாத்பர்யமும் அப்படியே.

யஜுர் வேதத்தைச் சார்ந்த ஶ்வேதாஶ்வதர உபநிஷத் ௪, ௰, இல் "எவன் நிர்க்குண ப்ரஹ்மத்தை ஸாங்க்யத்தாலும் யோகத்தாலும் அறிகின்றானோ, அவன் மோக்ஷத்தைப் பெறுகின்றான்" என்று உபதேஶிக்கப்பட்டது.

பகவத்கீதையை மஹாபாரதத்தில் வெளியிட்ட ஸ்ரீ வ்யாஸ பகவான் பரஞானத்தைப்பற்றி நிற்பவனே ஸாங்க்யன் என்று விளக்கினார். விஷயங்களில் ஆசையற்றவனும், வந்தவைகளை ஸமாதானமாகப் பெறுகின்றவனும், ஜீவனுக்கு ஆவஶ்யமானதை மட்டும் கவனிக்கின்றவனும், ஆநந்தத்தை நிவிர்த்தி செய்கின்றவனும், ஐம்பொறி அடக்கமுள்ளவனும், தன் கர்மங்களைத் தவறாமற் செய்கின்றவனும், முயன்ற காரியங்களை நிறைவேற்றுகின்றவனும், மண் பொன், மித்ரன் ஶத்ரு, புகழ்ச்சி இகழ்ச்சி என்றவைகளை ஸமமாக மதிக்கின்றவனும், குருவினிடத்திலும் ஶாஸ்த்ரங்களிலும் ஶ்ரத்தை பெற்றவனுமே மோக்ஷத்தை அடைகின்றான், இவனே ஸாங்க்யன், என்று வ்யாஸ ருஷி மஹாபாரதத்தில் ஶாந்திபர்வத்தில் (அத். ௨௱௩௰௬ இல்) கூறியிருக்கின்றார்.

மேலும், யாஜ்ஞவல்க்ய ருஷி ஜனக மஹாராஜனுக்கு உரைத்ததையும் அறியவேண்டியது. அஃதாவது "ஸாங்க்யத்

துக்கு ஸமானமான ஞானம் இல்லை, யோகத்துக்கு ஸமானமான பலம் இல்லை, இவ்விரண்டும் ஒன்றே என்று அறியத்தக்கது; அவிவேகிகள் ஸாங்க்யமும் யோகமும் வெவ்வேறென்று நினைக்கின்றனர்; நான் நிஸ்சயமாக ஒன்றென்றே நினைக்கின்றேன; யோகிகள் எதனை அறிகின்றார்களோ, அது ஸாங்க்யர்களாலும் அறியப்படுகின்றது; எவன் ஸாங்க்யத்தையும் யோகத்தையும் ஒன்றாக அறிகின்றானோ, அவன் தத்வவித் (ஆத்மாவை அறிந்த ஜீவன்முக்தன்); வேதங்களில் மனீஷிகள் (மனோலயம் பெற்ற மஹான்கள்) யோகத்தை எட்டுக்குணமுள்ளதென்று கூறுகின்றனர்; ஸூக்ஷ்மமான ஸாங்க்யத்தை எட்டுக்குணம் பெற்றதாகக் கூறுகின்றார்கள் இல்லை." (மஹாபாரதம், ஸாந்திபர்வம், அத் ௩௱௰௬). எனவே, ஸாங்க்யம் என்றது பரஞானம், யோகம் என்றது அஷ்டாங்கயோகம்.

வேதங்களின் ஞானகாண்டமாகிய உபநிஷத்துகளில் குறிக்கப்பட்ட லக்ஷ்யார்த்தங்களைப் பராமரிக்கும்பொருட்டு, ப்ரஹ்மா நினைத்தவுடனே அவர் மனவயில்நின்று தோன்றின எழு மானஸ புத்ரர்களாகிய ஸந, ஸநத்ஸுஜாத, ஸநக, ஸநந்தந, ஸநத்குமார, கபில, ஸநாதன முனிவர்கள் அந்த மேலான உத்யோகத்தைப் பெற்று, நிவிர்த்தி மார்க்க பரிபாலகர் என்று அழைக்கப்பட்டார்கள்.

இவர்களில் கபிலமுனிவர் வேதாந்தப்பொருளை விளக்கும் "காபிலம்" என்ற நூலைச் செய்தார். இக்காலத்தில் இது கண்டவர்களை நாம் அறியோம். ஆனால், கபிலர் நிவிர்த்தி மார்க்க பரிபாலகராதலால், உபநிஷத் பொருளுக்கு விரோதமாகப் போதிக்கவேமாட்டார். மஹாபாரதத்தில் ஸாந்திபர்வத்தில் அவருடைய போதனைகள் அநேகம் விரிக்கப்பட்டிருக்கின்றன. அவையெல்லாம் வேதாந்தமே. நிவிர்த்தி மார்க்கமாகிய "வேதாந்தத்தை நான் செய்தேன்" (அத். ௰ரு, மந். ௰ரு.) என்ற பகவான், "ஸித்தர் (மெய்யறிவாளி) களுக்குள் கபில முனியும் நானே" என்றார். (அத். ௰, மந். உ௰௬.)

ஞானஸித்தர், மெய்ஞ்ஞானியர், ஸாங்க்யர் என்றழைக்

கப்பட்டவர்கள் பிறவியிலேயே விருப்பு வெறுப்பை ஸமத்வப் படுத்தும் ஶக்தியுடையவர்களாய், மனோலயத்தைப் பெற்று ஆத்ம தர்ஶனத்தை விரைவில் அடையத்தக்கவர்களாதலால், நிராசை என்ற பூமியில் வாழ்பவரென்று போற்றப்படுவார்கள். இந்த அதிபக்குவ குணத்தை இயல்பில் அடையாதவர்களாயும், மனோலயத்தில் த்ருஷ்டி பெற்றவர்களாயும், உள்ள புண்ய புருஷர்கள் ப்ராணாயாமப் பழக்கத்தில் ப்ரவேஶிப்பதால், அஷ்டாங்க யோகிகள் என்று கூறப்படுவார்கள். இதற்குப் ப்ரமாணம் தாயுமானஸ்வாமி, சுகவாரி, ௬,—

"பற்றுவன அற்றிடும் நிராசை என்றொரு
பூமி, பற்றிப் பிடிக்கும் யோகப்
பாங்கிற் ப்ராணலயம் எனுமொரு பூமி, இவை
பற்றின் மனம் அறும் என்னவே
கற்றையஞ் சடைமுனி, தானே கனிந்த கனி,
கனிவிக்க வந்த கனிபோற், கண்டது."

அஃதாவது, கற்றையஞ்சடைமுனியாகிய தக்ஷிணாமூர்த்தி உபதேஶித்தவாறு, நிவிர்த்தி மார்க்கத்தைப்பற்றி நிற்கின்றவர்கள் இருவகையார்: நிராசை பெற்றவராகிய ஸாங்க்யர்களும், நாடி (நரம்பு) வலிமைபெற்ற ப்ராணாயாமிகளுமே. இந்த ந்யாயத்தால் மேற்குறித்த ஶ்வேதாஶ்வதர உபநிஷத்தில் ஸாங்க்யத்தாலும் யோகத்தாலும் மோக்ஷத்தைப் பெறலாம் என்று கூறப்பட்டது.

ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் ஸந்தோஷிக்கின்ற மனுஷர்கள் காமகாமிகள் (உ, எ௰.) அல்லது க்ருபணர்கள் (சிற்றின்ப ஸுகிகள்). நிவ்ருத்தியில் ஸந்தோஷங்கொண்டவர்கள் ஸாங்க்யரும் அஷ்டாங்க யோகியரும்.

(2) கர்ம [பல] பந்தம்=கர்மங்களை விருப்பு வெறுப்புடன் செய்தலால் ஜனிக்கும் ஸுக துக்க பலன்கள் என்ற பந்தனங்கள்.

இவை ஆத்மாவின ஸாக்ஷித்வத்தை (கயிற்றால் கட்டினது போல) சுருக்கும், குறைக்கும். ஆதலால், கர்மபலன்கள் பந்த

ணங்கள் என்று கூறப்பட்டன.

ஸமத்வ புத்தியால் கர்மபல பந்தனம் நீங்கும்.

(3) இந்த அத்யாயத்தில், ௪அ ம் ஶ்லோகத்தில் "யோகம்" என்றது ஸமத்வபுத்தியே என்று விளக்கியிருப்பதால், "யோகே து இமாம் ஶ்ருணு" என்ற சொற்கள் "யோகம் என்ற பதத்திலும் இதனைக் (இந்த ஸமத்வபுத்தியைக்), காண்க," என்று பொருள்பண்ணவேண்டியது. இதன் தாத்பர்யம், ஸமத்வபுத்தி ஸாங்க்யர்களுக்கும் (மெய்யறிவாளிகளுக்கும்) அஷ்டாங்க யோகிகளுக்கும் பொது லக்ஷணம் என்று அறி, என்பது.

ஸாங்க்யர்களும் அஷ்டாங்கயோகிகளும் தரிக்கின்ற முடி வஸ்த்ரம் முதலிய ஸ்தூல தர்மங்களை அநேகர் தரித்துக் கொண்டு, நான் ஸாங்க்யன், நான் யோகி, என்று நாடகம் நடிப்பார்கள். உலகமும் இந்த வேஷதாரிகளைக் கண்டு மயங்கும். ஆனால், உபநிஷத்களில் அதிவிஶேஷமாகக் கூறப்பட்ட ஸாங்க்யர்களுக்கும் யோகிகளுக்கும் ஸ்வய லக்ஷணம் ஸமத்வ புத்தியே என்றது நிஶ்சயம்.

"யோகம்" என்ற பதம் ஸமத்வ புத்தி என்ற அர்த்தத்தை எப்படிப்பெறுமெனில், பொருந்தல் பொருத்தல் என்ற பொருள்களில், யோகம் இவ்விடத்தில் பொருத்தல், பொருந்தச்செய்தல், என்ற பொருளைக் கொண்டு, ஶீதம் உஷ்ணம், ஜயம் அபஜயம், ஸுகம் துக்கம், ஶத்ரு மித்ரன் முதலிய த்வந்த்வங்களை ஒன்றுபடச்செய்தலால், புத்திபூர்வமாகப் பர்யாலோசனைசெய்து, தனக்குள் இந்த த்வந்த்வங்கள் யாவும் ஸமம் என்று அறியவேண்டியது. இவ்வாற்றால் யோகம் ஸமத்வ புத்தியாகும் எனக.

**௪௰. இதனிடத்து (இந்த ஸமத்வபுத்தி அநுஷ்டானத்தில்) ஆரம்பத்துக்கு நாஶமில்லை, கேடில்லை (1). இந்தத் தர்மத்தின் (2) ஸ்வல்ப [அநுஷ்டான]மும் பெரும் பயத்தில் நின்று காக்கின்றது (3).**

(1) விருப்பு வெறுப்பு என்ற ஆஶாபாஶத்தை நீக்கும் பொருட்டு, அவை பற்றும் விஷயங்களைப் புத்தியால் விசாரித்து, அவ்விஷயங்களில் ஸுகதுக்கம் லாப அலாபம் முதலிய

த்வந்த்வங்கள் இல்லை என்று அறிந்து, அவற்றை ஒரே மாதிரி மதிக்கப்பழகினால், புத்தி விருப்பு வெறுப்பின் வலிமைக்கு அடிமைப்படாமல் துல்யமாய் நிற்கும்.

(2) இந்த த்வந்த்வ ஸமத்வப் பழக்கத்தை ஆரம்பித்தால், அந்த ஆரம்பத்துக்கு அழிவில்லை, வளரும். வளர்ந்து, தனக்காவது பிறருக்காவது கேட்டைச் செய்யாது.

(3) இந்த த்வந்த்வ ஸமத்வ அப்யாஸம் சிறுக நடைபெற்று வந்தாலும், பெரும் பயங்களைக் குறைக்கும்.

கர்மபல நிவிர்த்திக்கு உபாயம் த்வந்த்வ ஸமத்வப் பழக்கமே. தனக்கு, அல்லது களத்ர புத்ர மித்ராதிகளுக்கு, ரோகம் (வ்யாதி) பொருள் நஷ்டம் அபகீர்த்தி முதலிய துன்பங்கள் நேரிட்டால், ரோகம் அரோகம், லாபம் அலாபம், கீர்த்தி அபகீர்த்தி முதலிய த்வந்த்வங்களை பக்வகாலத்திலேயே ஸமரஸப்படுத்தப் பழகினவன் பயப்படான்.

அப்பழக்கம் சொற்பமாயின், அதற்குத் தக்கபடி பயம் குறையும். உ, நிம்ச (உ) இல் த்வந்த்வ ஸமத்வப் பழக்கத்தின் முடிவு கூறப்பட்டது. ஆண்டுக் காண்க.

**சம்க. குருநந்தன (1). இதனிடத்து (இந்த ஸமத்வ அநுஷ்டானத்தில்) நிஸ்சலன சொரூப ஏக புத்தி [உண்டு] (2). நிஸ்சலனமில்லாதவர்களின் நினைவுகள் அநேக கவர்கள் பெற்றவைகளாகியும், முடிவில்லாதவையாகியும் (இருக்கின்றன) (3).**

(1) குருவம்ஸத்தாரை ஸந்தோஷிப்பிக்கின்றவனே.

(2) விருப்பு வெறுப்புகளைத் தன்மேல் ஏறவிடாத புத்திக்குச் சலனமில்லை. அசைவற்ற தீபம்போல் ஏகமாய்நின்று ப்ரகாஸிக்கும்.

(3) இந்த அசைவற்ற தன்மையைப் பெறாத த்வந்த்வபுத்தி ஸங்கல்ப விகல்ப ரூபமாயிருக்கும். ஒருநினைவில் நின்று அநேக விபரீத நினைவுகள் தோன்றி, அவைகளுக்கேற்றபடி துக்கம் பயம் மோகம் என்ற துன்பங்களும், இடையிடையே அல்ப ஸந்தோஷங்களும், தோன்றும்.

இதற்கோர் உதாரணம்: விருப்பு வெறுப்பு என்ற த்வந்த்வங்களில் அகப்பட்ட ஒருவனுடைய மனைவிக்கு வ்யாதிவந்தால் அவன் பரிகார முயற்சியோடு மாத்ரம் நில்லாமல், "ஐயோ, எனக்கேன் இந்தக் கஷ்டம் வந்தது. இவள் இறந்துபோனால், நான் என்ன செய்வேன், என் பிள்ளைகளை ஆர் காப்பார், இவளைப்போன்ற பெண் எங்கே கிடைக்கும், இன்னொரு விவாகம் செய்தால் எவ்வளவு பணம் அழியும், அழிந்தும் புதுப்பெண் சரியாக இணங்கி நடப்பாளா" என்ற முடிவில்லாத நினைவுகளை நினைத்துச் சலனப்படுவான். நோயாளிகள் அநேகர் சுகப்பட்டு வாழ்வதைக் கண்டும், தன்மனைவி மாண்டேபோவாள் என்று ஸங்கல்பித்துப் பல விகல்பங்களை அதில்நின்று விரிப்பான்.

இனி, அடுத்த மூன்று ஶ்லோகங்களில் விஷயபோகத்திலும் இஷ்டகாம்ய ஸித்திகளிலும் பற்றுவைத்து யாகாதி கர்மங்களைச் செய்கின்றவர்களுக்கு ஸமத்வபுத்தி அமையாது என்று கூறப்படும்.

**சயஉ, சயங. பார்த்த, [கர்மகாண்ட] வேத வாக்யத்தில் பற்று வைத்தவர்களும், [கர்மத்தைவிட] வேறு [கதி] இல்லையென்று கூறுகின்றவர்களும், [விஷய] போகத்தையும் (1) ஐஶ்வர்யத்தையும் (2) பெற விருப்பங் கொண்டவர்களும், ஸ்வர்க்கத்தையே மேலானதென்று மதிக்கின்றவர்களும், ஆகிய அறிவீனர்கள் (3) [உயர்ந்த] ஜன்ம கர்மபலனைக் கொடுக்கின்றவையும் (4) அதிக க்ரியா விஶேஷங்களையுடையவையும் (5), [அர்த்தவாத] புஷ்பங்கள் (6) உள்ளவையும், ஆகிய பல [வேத] வாக்கைக் கூறுகின்றனர்.**

(1) விஷய ஸுகங்களையும்.

(2) ராஜாங்க ஶக்திகளையும், மற்றும் பல ஸித்திகளையும்.

(3) ஸ்வர்க்க கதிக்கு மேற்பட்ட ப்ரஹ்மலோகப் ப்ராப்தியையும், அதற்குமேற்பட்ட மோக்ஷ ஸ்திதியையும் அறியாத மூடர்கள்.

(4) யாகாதி கர்மங்கள் உயர்ந்த தேவ ரூபங்களைக் கொடுக்கும் [என்ற வாக்கைக் கூறுகின்றனர்.]

(5) கண்ணுக்கு அலங்காரமாயும், காதுக்கு இனிமையாயும், மனஸுக்கு ஸுகமாயும், இருக்கும் க்ரியைகளை உடையதாகிய [வேதவாக்கைக் கூறுகின்றனர்.]

(6) புஷ்பங்கள் மனதை மலரச்செய்வதுபோல, விஷய புருஷர்களுக்கு ஆநந்தமாயிருக்கும் கர்மங்களின் போக ஐஶ்வர்ய பலன்களை விரிக்கின்ற அர்த்தவாதங்களை உடையதாகிய [வேதத்தைக் கூறுகின்றனர்].

அர்த்தவாதங்கள்=ப்ரயோஜனத்தை விளக்கும் வார்த்தைகள்.

கூறுகின்றனர்=எடுத்து உரைப்பர்.

இந்த மந்த்ரத்தின் தாத்பர்யம் என்னவெனில், வேத கர்ம காண்டத்தில் பூர்வபக்ஷமாகக் கூறப்பட்ட காம்யார்த்த வாதங்களை (இச்சித்த யாகாதி கர்மங்களின் பலன்களைச் சிறப்பித்துப் பேசும் வசனங்களை) அறியாமையால் ஸித்தாந்தமாகக்கொண்டு ஸ்வர்க்காதி போகங்களுக்கும் பலனை அடக்கியாளும் ஸித்திகளுக்கும் மேலான வாழ்வு இல்லை என்று வீண் நிஶ்சயத்தைப் பெற்று, அந்த வேதவாக்யங்களைக் கூறிக்கொண்டே திரிவார்கள் விஷய ஸுகிகள் (சிற்றின்ப ஸுகங்களில் மையல் கொண்டவர்கள்) என்க.

சழிச. அவ்வாக்கால் மனம் அபஹரிக்கப்பட்டு, போகத்திலும் ஐஶ்வர்யத்திலும் பற்றுண்டவர்களின் ஸமாதிப் பழக்கத்தில் நிஶ்சலன சோருபபுத்தி அமைகின்றதில்லை (1).

(1) "விதீயதே" என்ற பதம் "த்ருஞ்" என்ற தாதுவில் ஜனித்ததாக எண்ணி, "அமைகின்றது" என்று பொருள் பண்ணுக. "ந விதீயதே"=அமைகின்றதில்லை.

காம்ய அர்த்தவாதங்களால் எடுபட்ட மனம் ஶாந்தப்படாது. அவ்வித மனஸோடு ஸம்பந்தப்பட்ட புத்தி ஸமாதிக்குரிய ப்ரத்யாஹார த்யானப் பழக்கங்களில் ப்ரவேஶித்தலால், மனஸிலுள்ள ஆசைகள் புத்தியிற்சென்று அப்பழக்கங்களைக் கெடுக்கும். உ, நிழிக.

*புத்தி சலனமின்மையைப் பெற்றாலன்றி ஸமாதிக்கு ஹேதுவாயிராது.*

**சுலிரு. ஓ அர்ஜுன, வேத [கர்ம காண்டங்கள்] த்ரிகுணங்களால் ஏற்பட்ட பொருள்களை விஷயமாகக் கொண்டவைகளாதலால் (1), நீ த்ரைகுண்யங்களில்நின்று நீங்கினவனாகவும் (2), த்வந்த்வத்தில்நின்று நீங்கினவனாகவும் (3), நித்ய ஸத்வத்தில் நிற்கின்றவனாகவும், யோகம் (5) க்ஷேமம் (6) என்றவைகளில்நின்று நீங்கினவனாகவும், இரு. ஆத்மவானாய் (7) இரு.**

(1) *ப்ரக்ருதியின் குணங்களாகிய ஸத்வ ரஜஸ் தமஸில் நின்று ஸகல ஸூக்ஷ்ம ஸ்தூல ஸரீரங்களும், போக்யப்பொருள்களும், புவனங்களும், விஷயஸுகங்களும், நாநா வ்ருத்திகளும், தோன்றின. இவையெல்லாம் ப்ரக்ருதி ஜன்யங்களாதலால், தோன்றினவாறு அழியும். வேதகர்ம காண்டத்தில் கூறப்பட்ட யாகாதி கர்மங்கள் இந்த அநித்ய போகங்களைப்பற்றியும் ஐஸ்வர்யங்களைப்பற்றியும் இருப்பதால், நீ அக்கர்மபலன்களில் மோகமற்றிருக்கவேண்டும்.*

(2) *த்ரைகுண்யங்கள்=த்ரிகுணங்களைக் கொண்டு ஸ்ருஷ்டிக்கப்பட்டவை.*

*ப்ரக்ருதி ஜன்ய விஷயஸுகங்களில்நின்று ஆத்மா விலகவேண்டும் என்பது கருத்து.*

(3) *அஞ்ஞான அம்ஸங்களாகிய விருப்பும் வெறுப்பும் த்வந்த்வ மூலபதார்த்தங்கள். அவற்றால் மனஸில் தோன்றின ஸுக துக்க, லாப அலாப, ஜய அபஜய, நினைவுகள் த்வந்த்வ கார்யங்கள். இவ்வித த்வந்த்வங்கள் புத்தியில் நின்று விலகினவனாகவும்.*

(4) *அழிவற்ற பரமாத்மாவில் ப்ரதிஷ்டை பெற்றவனாகவும்.*

(5) *யோகம்=இதுவரையில் பெறாததைப் பெறவேண்டும் என்ற நினைவு.*

(6) *க்ஷேமம்=பெற்றதைக் காக்கவேண்டும் என்ற நினைவு.*

(7) *தேகமே நான் என்றவன் தேகவான். ஆத்மாவே நான் என்ற புத்திமான் ஆத்மவான். இதனை உள்ளபடி அநுபவமுறையாக அறிந்தவன் ஜீவன்முக்தன்.*

ஈண்டு "ஆத்மவானாய் இரு" என்பது ப்ரக்ருதி ஜன்யமாகிய ஸ்வர்க்காதி போகங்களில் ஆத்மாவை அழுந்தவிடாமல் இரு என்று பொருள்படும்.

இனி, சயிசு ம் ஸ்லோகத்தில் வேதகர்மாநுஷ்டானங்களால் பெறக்கூடிய ப்ரயோஜனம் ப்ரஹ்ம தர்ஸனமும், ஆத்மா யாது, ப்ரக்ருதி யாது, என்றறிந்த அறிவாகிய விஞ்ஞானமும் என்று குறித்து, அந்த ஸ்வாநுபவங்கள் பெற்றபின், வேதகர்மங்கள் ஸ்வாநுபூதிமானுக்கு ப்ரயோஜனமில்லை என்று உபதேஸிக்கப்படும்.

**சயிசு. எங்கும் ஜலம் நிறைந்த ஸ்தானங்களில் கிணற்றின் பலன் (1) எவ்வளவு ஸித்திக்கின்றதோ, அவ்வளவு பலன் விஞ்ஞானம்பெற்ற (2) ப்ராஹ்மணனுக்கு (3) ஸர்வ வேதங்களில் (4) ஸித்திக்கின்றது.**

(1) "உதபானே அர்த:"=தண்ணீர் குடிக்கும் இடத்தில் ப்ரயோஜனம்=கிணற்றைப்பற்றிய ப்ரயோஜனம் = கிணற்றின் பலன்.

(2) "விஜாநத:"=விஞ்ஞானம் பெற்ற.

விஞ்ஞானம் என்றது விஸேஷ ஞானம். அஃதாவது, அனாத்மாவாகிய ப்ரக்ருதியின் லக்ஷணத்தையும் ஆத்மாவின் லக்ஷணத்தையும் பிரித்தறியும் அறிவு. சு. அ; எ. உ.

(3) ப்ராஹ்மணன்=ப்ரஹ்மத்தை தர்ஸித்தவன். சச்சிதாநந்தசொரூபியானவன். இவனே ஜீவன்முக்தன்.

இவனுடைய புத்ரர்களும், ப்ரஹ்மத்தைத் தர்ஸிக்க முயன்று, அந்தத் தர்ஸனைக்கு விதித்த வ்ரதங்களைப் பக்தியோடு ஸாதித்துவந்தால், உபசாரமாக ப்ராஹ்மணர் என்று அழைக்கப்படுவர்.

ப்ரஹ்மத்தை ஸ்வாநுபவமாகத் தர்ஸித்து, 'ஆத்மா யாது, ப்ரக்ருதி யாது என்றறிந்த ஜீவன்முக்தனே விஞ்ஞானம் பெற்ற ப்ராஹ்மணன்.

(4) ஸர்வ வேதவாக்யங்களில், அஃதாவது, சதுர்வேதங்களில் கூறினபடியே.

கிணற்றின் பலன் வெள்ளப் பெருக்கால் நாசமானது போல, கர்மபலன்கள் அகண்டாகார ஜீவன் முக்தியால் நாசமடையும்.

"கிணற்றின் பலன்" என்ற உவமை காம்ய கர்மாநுஷ்டானியின் பலனைக் குறித்தது. "எங்கும் ஜலம் நிறைந்த ஸ்தானம்" என்ற உவமை ஜீவன் முக்தி பதவியைக் குறித்தது.

சச்சிதானந்த ப்ரஹ்மத்தை தர்சித்து ஜீவன் முக்தி (துக்கநிவிர்த்தி) பதத்தைப் பெற்றவனுக்குக் கர்மங்களால் பலனில்லை என்று இந்த மந்த்ரத்தில் விளக்கி, அடுத்த மந்த்ரத்தில் நிஷ்பல கர்மாநுஷ்டானமே அர்ஜுனனுக்கு உரியது என்றார்.

**சுலோ. உனக்குக் கர்மத்திலேயே அதிகாரம், ஒருநாளும் [கர்ம] பலன்களில் [அதிகாரம்] இல்லை (1). கர்மபலத்துக்குக் காரணனாக இராதே (2). அகர்மத்தில் (3) உனக்கு ஸங்கம் (4) வேண்டாம்.**

(1) உனக்குரிய கர்மங்களில் நீ மனதைச் செலுத்தவே வேண்டும், ஆனால் உன் மனம் அவற்றால் வரும் ஸுக துக்க பலன்களைக் கருதக்கூடாது.

தன் தேகமும் மனஸும் நான் என்று வாழும் ஹீன கர்மாதிகாரி தேக மானஸ ஸுகங்களுக்காகவே கர்மங்களைச் செய்வான். அந்த ஸுகங்கள் இல்லாவிடில் தான் செய்ய வேண்டிய கர்மங்களைச் செய்யமாட்டான். இந்த அல்ப புத்திமானுக்கு மேற்பட்ட புத்திமானாகிய நீ, ப்ரியம் அப்ரியங்களை நீக்கி, உனக்குரிய க்ஷத்ரிய கர்மங்களைச் செய்யவேண்டும்.

(2) இப்படி ப்ரியம் அப்ரியங்களை விலக்கி, உனக்குரிய கர்மங்களைச் செய்தால், தோன்றியழியும் ஸுக துக்கங்களுக்கு ஹேதுவாகிய கர்மபீஜங்கள் உண்டுபடமாட்டா.

விருப்பு வெறுப்பு என்ற ஆசையோடு கர்மங்களைச் செய்தால் அந்த ஆசையே ஸுக துக்க பலன்களை உண்டாக்குவதற்கு பீஜம் (விதை, காரணம்) ஆகும். கர்மபீஜங்களாகிய ப்ரியம் அப்ரியம் கர்ம பழங்களாகிய ஜனன மரணங்களையும், மற்றத்

துன்பங்களையும் விளைவிப்பதால் "கர்மபலத்துக்குக் காரணனாக இராதே" என்றார்.

(3) அகர்மம்=கர்ம அனாரம்பம் (ங. ச, அ.)

இது அவிவேக ஸந்நியாஸம் என்று மஅ. எ இல் விளக்கப்பட்டது.

(4) பற்று. ஓர் விஷயத்தோடு மனம் சேர்தல் ஸங்கம் எனப்படும்.

**சமஅ. தனஞ்ஜய, [அகர்மத்தில்] ஸங்கத்தை ஒழித்து, ஸித்தி அஸித்தி என்றவைகளில் ஸமனாகி (1), [த்வந்த்வ ஸமத்வம் என்ற] யோகத்தில் நின்று, கர்மங்களைச் செய். ஸமத்வம் (2) யோகம் (3) என்று கூறப்படுகின்றது.**

(1) த்வந்த்வ கார்யங்களை ஏக பாவனை செய்து, அஃதாவது, ஒரே விதமாக மதித்து.

(2) ஸமத்வம்=ஸமனுடைய தன்மை, ஏக பாவனைசெய்பவனுடைய நிலை.

(3) த்வந்த்வ புத்திகள் ஒன்றுபட்டால் (ஐக்யமானால்), யோகமாகும்.

த்வந்த்வங்களை ஸமத்வபுத்தியால் ஒன்றாக்கின ஸ்திதியே யோகம்.

**சமகூ. அவர கர்மம் (1) [ஸமத்வ] புத்தி யோகத்திலும் தூரம் அல்லவா (2). தனஞ்ஜய, [ஸமத்வ] புத்தியில் சரணத்தை விரும்பு (3). பலனுக்குக் காரணமானவர்கள் க்ருபணர்கள் (4).**

(1) தாழ்ந்த கர்மம். இக பர விஷய பலன்களில் விருப்பங்கொண்டு செய்யப்பட்ட கர்மம் காம ஸங்கல்ப கர்மம். (ச. மகூ), அல்லது ஸக்த கர்மம் (ங. உமரு). இது தாழ்ந்த கர்மம் (அவர கர்மம்) ஏனெனில், சிற்றின்ப ஸுகத்திலும் ஆதி வியாதி என்ற துக்கத்திலும் ஜீவாத்மாவை அழுத்துவதால்.

விஷயபலன்களில் பற்றில்லாமல் ஸமத்வபுத்தியோடு செய்யப்பட்ட கர்மம் நிஷ்காம கர்மம், அல்லது அஸக்த கர்மம்

(௩.௰௬). இது உத்க்ருஷ்ட(உயர்ந்த)கர்மம், ஏனெனில் ஜீவாத்மாவை அவித்யாவில்நின்று உத்தரணம் (உயரஎடுத்தல்) செய்வதால்.

அவர கர்மாநுஷ்டானி, ப்ரவ்ருத்தி மார்க்கத்திற் சென்று, ஸ்வர்க்க நரக பூலோக போகங்களை அநுபவிப்பான்.

உத்க்ருஷ்ட கர்மாநுஷ்டானி, நிவ்ருத்தி மார்க்கத்திற் சென்று மென்மேலும் சித்த ஸுத்தியைப் பெற்று, ஞானதிகாரியாகி, க்ரமமாக மோக்ஷத்தைப் பெறுவான்.

(2) ஸமத்வ புத்தியால் செய்யப்பட்ட கர்மம் உயர்ந்த கர்மமாதலால், அதற்கும் த்வந்த்வ புத்தியால் செய்யப்பட்ட கர்மத்துக்கும் வெகு தூரம்.

காம ஸங்கல்ப கர்மத்தைப் பல ஜன்மங்கள் தோறும் அநுஸரித்து, விஷய ஸுகத்தில் மோஹம் குன்றின காலத்தில் நிஷ்காம்ய புத்தி தோன்றுவதால், காம்ய கர்மத்துக்கும் நிஷ்காம்ய கர்மத்துக்கும் (ஸமத்வ புத்தி யோகத்திற்கும்) வெகு தூரம் என்றார்.

(3) ஶரணத்தை விரும்பு=வாஸத்தை (ஆஶ்ரயத்தை)ப் பெறு. ஸமத்வபுத்தியோடு வாழ விரும்பு.

(4) ப்ரக்ருதி கார்யமான மண் பொன் பெண் முதலிய அநித்ய பொருட்களைப் பற்றிப்பிடித்திருக்கிறவர்கள் "க்ருபணர்கள்" என்று வேதம் ஞான காண்டத்தில் கூறுகின்றது: "எவன் அழிவற்ற பொருளை விசாரிக்காமல், இவ்வுலகத்தில் நின்று இறக்கின்றானோ, அவன் க்ருபணன்." க்ருபணனுடைய தன்மை கார்ப்பண்யம். உ. எ.

"பலனுக்குக் காரணமானவர்கள் க்ருபணர்கள்" என்ற வாக்யம் ஸுக துக்க பலன்களைப் பெறுவதற்கு உரியவர்கள், விஷயகாமிகள், என்று பொருள்படும் ("குடத்தைச் செய்வதற்கு உரியவன்" என்ற வாக்யம் "குடத்துக்குக் காரணனை குயவன்" என்று பொருள் படுவதுபோல). அநித்ய ஸ்வர்க்காதி போகங்களில் இச்சை வைத்துக் கர்மங்களை அநுஷ்டிக்கின்றவர்களுக்கு அந்த அநித்ய பலன்களே கொடுபடும்.

**௫௰. புத்திமான் இஹத்தில் (1) புண்ய கர்மபலன் பாப கர்ம பலன் என்ற இரண்டையும் விடுகின்றன். ஆதலால் [த்வந்த்வ ஸமத்வம் என்ற] யோகத்திற்காக முயலுதி. கர்ம [அநுஷ்டான]ங்களில் [ஸமத்வம் என்ற] யோகம் கௌசலம் (2).**

(1) *இந்தக் கர்ம பூமியில்.*

(2) *கௌசலம்=குசலனுடைய தன்மை. குச=தர்ப்பைப்புல்லு, ல=வெட்டுகிறவன். தன் கையைப் பாதுகாத்துத் தர்ப்பையைக் கொய்கின்றவன். குசலன் ஸமர்த்தன் என்று பொருள்படும்.*

*கர்மங்களைச் செய்கின்றவனுக்கு நிஷ்காம்ய புத்தியே மோக்ஷத்தைப் பெறுதற்கு முக்ய ஸாமர்த்யம் என்பது பற்றி, "யோகம் கௌசலம்" என்றார்.*

**௫௰௧. விருப்பு வெறுப்புக்களை அடக்கின அறிவாளிகள் (1) கர்ம ஜன்ய பலனை விட்டு (2), ஜன்மபந்த முக்தர்களாய் (3), அநாமய (4) பதத்தைப் பெறுகின்றனர்.**

(1) *ஸம்ஸ்க்ருதத்தில், "மநீஷிண:"=மநீஷையுள்ளவர்கள். (தாது, "மன்"=நினைத்தல், "இஷ்"=அடக்குதல்), அஃதாவது மனமடக்கமுள்ளவர்கள், மனதில் தோன்றும் விருப்பு வெறுப்புக்களை அடக்கின அறிவாளிகள்.*

(2) *கர்மங்களில்நின்று பிறந்த பலன்களை அடையாமல்.*

(3) *ஜனன மரணம் என்ற பந்தங்களால் விடப்பட்டவர்களாய்.*

(4) *"ஆமயம்"=துக்கம், +"ந"=இல்லை. அநாமய பதம்= துக்கமற்ற பதம்=ப்ரஹ்ம பதம். ௨, ௭௰௨.*

**௫௰௨. எக்காலத்தில் உனது புத்தி மோஹம் (1) என்ற கலிலத்தை (கெடுதிப் போருளை)க் கடக்குமோ (2), அக்காலத்தில் (3) கேட்டதிலும் கேட்கப்போகிறதிலும் (4) நிர்வேத வஸ்துவை (5) அறிவாய்.**

(1) *மோஹம் என்றது அஞ்ஞானத்தின் (அறியாமையின்) ஓர் வ்ருத்தி. ஒன்றனிடத்தில் இல்லாத பிறிதொரு தன்மையை*

அதனிடத்து உள்ளதாக அறிவது மோஹம். பாம்புத் தன்மையற்ற பழுதையை (கயிற்றை) பாம்புத்தன்மை பெற்றதாக அறிதலும், ஆத்ம லக்ஷணமற்ற தேகத்தை ஆத்ம லக்ஷணம் பெற்றதாக அறிதலும், சுத்தியற்ற விஷயபோகத்தைச் சுத்தி பெற்றதாக அறிதலும், மோஹநிலைகளே. இவைகளால் அர்ஜுனன் வாதிக்கப்பட்டான. (௧அ. ௭௰௩.)

இந்த மோஹம் புத்தியில் ஏறினல், பழுதையில் பாம்பையும், அனாத்மாவில் ஆத்மாவையும், அநித்யத்தில் நித்யத்தையும், அசுகத்தில் சுகத்தையும், தோன்றுவித்து, புத்தியை மயக்கி, மூடவழியிற் செலுத்தி, ஜீவாத்மாவுக்கு உதவியற்று, துக்கத்தை மென்மேலும் தந்து, கேடு செய்யும். ஆதலால், மோஹத்தைக் கெடுதிப்பொருள் (கலிலம்) என்றார்.

(2) இத்தன்மைகளைப் பெற்ற மோஹத்தை எக்காலம் புத்தி தாண்டுமோ, விலக்கி நிற்குமோ.

(3) ராக த்வேஷம் (விருப்பு வெறுப்பு) என்ற த்வந்த்வங்களை புத்தி ஸமப்படுத்தின காலத்தில்.

பகவான் எ. உ௰எ இல் "இச்சா த்வேஷங்களில் நின்று பிறந்த த்வந்த்வ மோஹம்" என்றார். மோஹத்துக்கு த்வந்த்வ ரூபம் வந்தது ராக த்வேஷங்களால். ராக த்வேஷங்கள் புத்தியில் ஏறினவுடனே, புத்தி ஜாக்ரதையாக அவற்றை ஸமப்படுத்தினல், அவைகள் அழிந்துவிடும்.

இந்த ஸமத்வப் பழக்கம் முதிர முதிர, புத்தி சுத்தப்பட்டு ஆத்ம விஷயங்களை லகுவாய் அறியும்.

(4) இதுவரையில் ஶ்ரவணம் பண்ணின உபதேஶமொழிகளிலும், இனிமேல் ஶ்ரவணம் பண்ணப்போகின்ற உபதேஶமொழிகளிலும், (வஸ்துவை அறிவாய்).

ஸமத்வ புத்திப் பழக்கத்தால் மோஹத்தை ஜயிக்காது போனல், ஞானோபதேஶத்தின் அர்த்தங்கள் விளங்கா.

(5) நிர்வேத வஸ்து=ஶ்ருதிக்கு எட்டாத பொருள்.

"நிர் கத: வேதாத்" (வேதத்திற்கு அப்பாற் சென்ற) என்ற வாக்யம் "நிர்வேத" என்றாயிற்று.

வழக்கத்தில் "நிர்வேதம்" வைராக்யம் எனப் பொருள்படும். எப்படியென்றால் "நிர்வேதம்" என்ற பதம் அறிய விருப்பமில்லாத தன்மை என்று பொருள்பட்டு, வைராக்யமாகுதலால். இந்த அர்த்தம் ஈண்டு ஒவ்வாது. பரமாத்மா வாக்குக்கும் மனஸுக்கும் எட்டாத பொருளாதலாலும், வேதம் வாக்கு ரூபமாதலாலும், "நிர்வேதம்" இந்த மந்த்ரத்தில் வேதவாக்யங்களுக்கு எட்டாத வஸ்துவென்றே அர்த்தப்படும்.

வேதங்களின் ஞானகாண்டமாகிய உபநிஷத்களில் பரமாத்மா "அவாங்மனஸ கோசரம்" (வாக்குக்கும் மனஸுக்கும் விஷயமாகாத பொருள்) என்று விளக்கப்பட்டது.

**௫௩. ஶ்ருதிகளினால் ஸம்ஶயம் பெற்ற உன் புத்தி (1) சலனமற்று ஸமாதிப் பழக்கத்தில் (2) எப்பொழுது அசலமாக ப்ரதிஷ்டை பெறுமோ, அப்பொழுது [ராக த்வேஷ ஸமத்வம்] என்ற யோகத்தைப் பெறுவாய் (3).**

(1) வேத வாக்குகளின் அர்த்தங்களைப்பற்றி நிஶ்சயம் இல்லாத உனது புத்தி.

த்வந்த்வ மோஹங்கொண்டவனுக்கு ஶ்ருதியின் கர்ம, உபாஸன, ஞான காண்டங்களிலுள்ள வசனங்கள் அர்த்தப்படாமலும், ஒற்றுமையில்லாதவைபோலத் தோன்றியும், ஸம்ஶயத்தை உண்டுபண்ணும். வேத தர்ம ஶாஸ்த்ரார்த்த அறியாமைக்குக் காரணம் த்வந்த்வமோஹமே.

(2) ௪௰ இல் கூறினதை இங்கு முடித்தார். அங்கு த்வந்த்வ விஷய ஸமத்வம் கூறப்பட்டது. இங்கு அதற்குக் காரணமான ராக த்வேஷ (விருப்பு, வெறுப்பு) ஸமத்வம் கூறப்பட்டது.

ஸமத்வம் என்ற யோகத்தில் வெளியிலுள்ள விஷய ஸமத்வமும், உள்ளிலுள்ள ராக த்வேஷ ஸமத்வமும், அடங்கியிருக்கின்றன.

விஷய ஸமத்வப் பழக்கத்தால் விருப்பு வெறுப்புக்களின் வலிமை குறையுமென்பதும், அது குறைய, தேகாதிகளின் நன்

மை தீமை என்றவைகளைப்பற்றி வரும் பயங்களும் குறையு மென்பதும், சயி (க) இல் விளக்கப்பட்டன.

இந்த (ருயிரு ம்)ஶ்லோகத்தில் உபதேஶிக்கப்பட்டது என்னவென்றால், விஷய ஸமத்வப்பழக்கத்தால் விருப்பு வெறுப்பின் வலிமை குறைந்தாலும், அவற்றின் சலனப்படுத்தும் திறம் (உ. எயி) முற்றும் ஒழியாதென்றும், அப்படி ஒழிவதற்குப் புத்தி ஸமாதிப் பழக்கத்தில் ப்ரவேஶிக்க வேண்டுமென்றும் அறிக.

விருப்பு வெறுப்புக்கள் மனவில் தோன்றிக் கர்மேந்த்ரியங்களைத் தங்கள் ஏவலாளாகச் செய்வதால் (உ. கூயிஎ) ...... போனபடி புத்தி செல்லாமல், ஜீவாத்மாவின் நன்மையைக்கருதி யமம், நியமம், ஆஸனம், ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம், தாரணை, த்யானம், ஸவிகல்ப ஸமாதி, என்ற அஷ்டாங்கயோக அப்யாஸங்களில் ("ஸமாதிப் பழக்கத்தில்") ப்ரதிஷ்டை பெற்றால், விருப்பு வெறுப்பின் மலஶக்தி ஜீவாத்மாவையும் வாதிக்காது, புத்தியையும் சலனப்படுத்தாது.

(3) எனவே, ஸமத்வயோகம் விஷய ஸமத்வம் தொட்டு ஸவிகல்ப ஸமாதி வரையில் ப்ரவேஶித்து நிற்கும். இதற்கு மேல் உள்ளது முடிவான நிர்விகல்ப ஸமாதி. இது நிராசை என்றும், மோக்ஷம் என்றும், ப்ராஹ்மீஸ்திதி (உ. எயிஉ) என்றும் அழைக்கப்படும்.

**அர்ஜுனன் கூறினான்:**

**ருயச. கேஶவ, ஸமாதியில் ஸ்திதிபெற்ற (1) ஸ்திதப் ப்ரஜ்ஞனுக்கு (2) என்ன லக்ஷணம். ஸ்திததீ (3) என்ன பேசுவான், எவ்விதம் இருப்பான், எவ்விதம் நடப்பான் (4).**

(1) ஸமாதிப் பழக்கத்தில் ப்ரதிஷ்டைபெற்ற.

(2) ஆத்மாவைப் பற்றியே நிற்கின்ற புத்திமானுக்கு.

ப்ரஜ்ஞை=புத்தி. ப்ரஜ்ஞன்=புத்தியுடையவன்.

எவனுடைய புத்தி ஆத்மாவில் ப்ரதிஷ்டை பெற்று நிற்கின்றதோ, அவன் (அந்த ஆத்மா) ஸ்திதப் ப்ரஜ்ஞன்.

(3) "தீ"=புத்தி. ஸ்திததீ=ஸ்திதப் ப்ரஜ்ஞன்.

(4) அனாத்ம விஷயங்களை விட்ட புத்திமானாகிய ஜீவன் முக்தன் எதைப்பற்றிப் பேசுவான், எவ்விதம் இந்த லோகத்தில் இருப்பான், எவ்விதம் ஸஞ்சரிப்பான்.

இந்த வினாக்களுக்கு விடை ௫௰௫ இல் அனாத்ம விஷயங்களை நீக்கி, ஆத்ம கார்யங்களைப் பற்றியே பேசுவான் என்றும், ௫௰௬ இல் த்ரிகரண அடக்கம் என்ற மௌனத்தில் இருப்பான் என்றும், அருளப்பட்டது.

**பகவான் கூறினார்:**

**௫௰௫. ஓ பார்த்த, மனமையடைந்த ஸர்வ காமங்களையும் எப்பொழுது எவன் விடுகின்றானோ, அப்பொழுது [அவனுடைய புத்தி] ஆத்மா, ஆத்மாவிலேயே ஸந்தோஷங்கொண்டு (1), ஸ்திதப் ப்ரஜ்ஞன் என்று கூறப்படுகின்றான்.**

(1) ஸ்திரதையைப் பெற்ற ஜீவன்முக்தனுடைய புத்தி ஸப்த ஸ்பர்ஸ ரூப ரஸ கந்த விஷயங்களில் ஸந்தோஷங்கொள்ளாமல், தன்னுடைய ஸ்வரூபமாகிய ஆத்மாவிலேயே ஸந்தோஷங்கொண்டு.

வேதாந்த தத்வ ஸாஸ்த்ரங்களில் புத்தி முதலிய ப்ராக்ருதி தத்வங்களை "புத்தியாத்மா" "மன ஆத்மா" என்று கூறுவது வழக்கம்; ப்ராக்ருத ரூபங்களோடும் ஆத்மா ப்ரவேசித்திருப்பதால்.

(2) ஸ்திதப்ப்ரஜ்ஞன் என்று அழைக்கப்பட்ட ஜீவன்முக்தன் எப்படியிருப்பான் என்றால், தன் மனமையடைந்த ஸர்வ ஆசைகளிலும் சிக்காமலிருப்பான். மேலும், அவனுடைய புத்தி அனாத்ம விஷயங்களில் த்ருப்தி பெறாமல், ஸதாகாலமும் ஆத்ம நிஷ்டை பெற்று, ஆத்மானந்தத்தில் ஸந்தோஷங்கொள்ளும்.

**௫௰௬. துக்கங்களில் (1) உத்வேகம் பெறாத மனமுடையவனும் (2), [விஷய] சுகங்களில் ஸங்கமில்லாதவனும் (3), காமம் பயம் கோபமற்றவனும், ஆகிய ஸ்திததீ (4) முனி (5) என்று கூறப்படுகின்றான்.**

(1) ஈண்டு துக்கம் என்றது வியாதியாலாவது, பகையின் பிரிவுபாடுகளாலாவது, பொருள் பந்து ஜனம் கீர்த்தி நஷ்டத்தாலாவது மனஸில் ஜனித்த துன்பங்கள்.

(2) இவ்வித துன்பங்கள் ஸம்பவித்தால், அவற்றில் அழுந்தா மனமுடையவனும்.

தன் பூர்வ கர்மத்துக்கேற்றபடி வந்த துன்பங்களைத் தணியவிடாமல், நினைத்து நினைத்து ஏங்கும் மனம், துக்கத்தில் உத்வேகம் (உன்னதம்) கொண்ட மனம்.

(3) சிற்றின்ப போகம் துன்பமே, என்று தீர்மானித்து, அதில் சேர்க்கை (ஸங்கம்) இல்லாதவனும்.

(4) ஆத்மாவில் ஸ்திதி (ப்ரதிஷ்டை) பெற்ற புத்தியுள்ளவன் ஸ்திததீ. உ. நுயச. (௩).

(5) முனி=மனம் வாக்குக் காயம் என்ற த்ரிகரணங்களையும் அடக்கி ஆளுகின்றவன். இந்தத் த்ரிகரண அடக்கமுள்ளவன் மௌனி, அல்லது முனி.

ஸ்திதப் ப்ரஜ்ஞன் என்ன பேசுவான் என்றால், விஷய சுகங்களில் பற்றில்லாதபடியாலும், ஆதி வியாதி என்ற துன்பங்களை அலக்ஷ்யம் பண்ணியிருப்பதாலும், பயம் கோபம் மோகம் முதலிய கலிலங்கள் அற்றிருப்பதாலும், அவன் லோக விக்ஷேபங்களைப்பற்றி மிகபடப்பேசான். வந்தவைகளை ஸமாதானமாகப் பெற்று, ஜீவிப்பதற்கு ஆவஶ்யமானதை மட்டும் கவனித்து ஐம்பொறிகளையும் மனதையும் வாக்கையும் அடக்கி வாழ்வதால், அவன் வார்த்தைகள் மிகக் குறைந்திருக்கும்.

**நு௰எ. எவன் யாவற்றிலும் ஸ்நேஹமற்றவனாய் (1), அந்தந்தச் சுபாசுபத்தை அடைந்து (2) ஸந்தோஷிக்கவில்லையோ, வெறுக்கவில்லையோ (3) அவனுடைய (4) ப்ரஜ்ஞை (புத்தி) ப்ரதிஷ்டை பெற்றிருக்கின்றது (5).**

(1) ப்ரக்ருதி கார்யங்களொன்றிலும் பற்றில்லாதவனாய்.

(2) இந்த்ரியங்கள் தத்தம் விஷயங்களைச் சேரும்பொழுது மனஸில் ஏறின விருப்பு வெறுப்புக் கேற்றபடி ஜன்யமான சுக துக்கங்களை ஸாக்ஷி ரூபமாக அறிந்து.

(3) அந்தச் சுகத்தில் விருப்பும், அசுகத்தில் வெறுப்பும், கொள்ளவில்லையோ.

(4) அந்த ஜீவன்முக்தனுடைய.

(5) ஆத்மாவைப் பற்றியே நிற்கின்றது, அனாத்ம விஷயங்களிற் சிக்கி இழுபடாமல்.

**௫௰௮. எவன் இந்த்ரியார்த்தங்களில் நின்று ஆமை [தன்] அங்கங்களை [ஒடுக்குகின்றது] போல, எல்லா இந்த்ரியங்களையும் எப்பொழுது ஒடுக்குகின்றனோ, அப்பொழுது அவனுடைய ப்ரஜ்ஞை ப்ரதிஷ்டையுள்ளது (1).**

(1) ஆத்மாவில் நிஷ்டை பெற்ற புத்தி இந்த்ரிய நிக்ரஹம் (அடக்கம்) செய்துகொண்டேயிருக்கும்.

தத்தம் விஷயங்களைப் பற்றப்போகும் இந்த்ரியங்களைச் சித்தத்தால் அடக்குதலே இந்த்ரிய நிக்ரஹம்.

சித்தம் இந்த்ரியங்களை அடக்கும் முறை எப்படியெனில், சித்தம் நாபி ஸ்தானத்தில் நின்றுகொண்டு, கண்ட ஸ்தானத்திலுள்ள மனவின் மூலமாக இந்த்ரியங்களை உள்வாங்கும், ஆமை தன் அங்கங்களை உள்வாங்குவது போல.

இந்த்ரிய நிக்ரஹம் பெற்றவனுடைய புத்தி ஆத்மாவில் ப்ரதிஷ்டை பெற்ற புத்தி. இந்த்ரிய நிக்ரஹமாவது தத்தம் விஷயங்களைப் பற்றப்போகும் இந்த்ரியங்களை அடக்குதல்.

**௫௰௯. ஆஹாரமற்ற தேஹிக்கு ரஸமொன்று தவிர மற்றைய விஷயங்கள் நீங்குகின்றன (1). பரத்தைக் கண்ட இவனுக்கு (2) ரஸமும் நீங்குகின்றது (3).**

(1) அன்னத்தைப் பலநாள் உண்ணாத ஜீவனுடைய மெய் கண் மூக்குச் செவி என்ற ஸூக்ஷ்ம இந்த்ரியங்கள் தத்தம் விஷயங்களாகிய ஸ்பர்ஶம் ரூபம் கந்தம் ஶப்தம் என்றவைகளைப் பற்றாமல் உட்சென்று மனவில் ஒடுங்கும்.

ஆனால், வாய் (ஜிஹ்வா) என்ற ஸூக்ஷ்ம இந்த்ரியம் உட்செல்லாமல், ஸ்தூல வாயில்நின்று, ரஸ பதார்த்தத்தை நாடியே நிற்கும்.

(2) இந்த ஜீவாத்மாவுக்குப் பரமாத்ம தர்ஶனம் பக்குவகாலத்தில் கிடைத்தால்.

(3) வாய் என்ற ஸூக்ஷ்ம இந்த்ரியம் ரஸபதார்த்தங்களில் பற்றில்லாமல், உள் வாங்கி நிற்கும்.

இதன் தாத்பர்யம் கண் மூக்குச் செவி மெய் என்ற நாலு பொறிகளை ஆஹாரமின்மையால் ஒடுக்கலாம். ஆனால், ஆத்ம தர்ஶனமே வாய் என்ற பொறியை ருசிபதார்த்தங்களில் செல்லாமல் ஒடுக்கும். எனவே, ஜீவன்முக்தனுக்கே ஐம்பொறி அடக்கம் முற்றாக ஸித்திக்கும் என்பது பெறப்பட்டது. ௫௯.

௬௰, ௬௰௧. ஓ கௌந்தேய, கடையும் இந்த்ரியங்கள் (1) [ஆத்ம ஸமாதிப்பழக்கத்தில்] முயல்கின்ற புத்தியுள்ள புருஷனுடைய மனஸையும் பலாத்காரமாக எடுத்துச் செல்கின்றன (2). [ஆதலால்] அவை யாவற்றையும் அடக்கி, [ஸமத்வம் என்ற] யோகத்தைப் பெற்று (3), மத்பரனாக (4) இருக்கவேண்டும். எவனுடைய இந்த்ரியங்கள் தன் வஶத்திலேயோ (5), அவனுடைய புத்தி ப்ரதிஷ்டை பெற்றது (6).

(1) தயிரை மத்து கடைவது போல, மனஸை இந்த்ரியங்கள் மாறிமாறி சிதறச் செய்யும்.

(2) ஜீவாத்மாவைப் பந்திக்கின்ற ஆசை, மோஹம், அபிமானம், முதலிய மலங்களைத் தீர்க்கும்பொருட்டு, ஈஶ்வரன் ஜீவாத்மாவுக்கு ஸூக்ஷ்ம ஶரீரத்தையும் ஸ்தூல ஶரீரத்தையும் கொடுத்தார். இருபது தத்வங்கள் கூடி ஸூக்ஷ்ம ஶரீரமாயிற்று. இவற்றில், மனம் ஒன்று, புத்தி ஒன்று, இந்த்ரியங்கள் என்ற மெய் வாய் கண் மூக்குச் செவி ஐந்து. இந்தப் பஞ்ச ஸூக்ஷ்மப் பொறிகள் தத்தம் விஷயங்களாகிய ஸ்பர்ஶம் ரஸம் ரூபம் கந்தம் ஶப்தம் என்றவைகளைக் கவர்ந்து, அவற்றின் ப்ரதிபிம்பங்களை மனஸில் ஏற்றும். அப் ப்ரதிபிம்பங்களைப் பெற்ற மனம் உத்வேகமாக அந்த இந்த்ரியங்களோடு கூடி ஓடித்திரிந்தால், புத்திக்கடங்காமல், மீறின குதிரைகள் தாங்கள் சென்ற வழியில் ஸாரதியை இழுப்பதுபோல, புத்தியையும் இழுத்துச் செல்லும்.

(3) ஆகையால், ஆராய்வு இல்லாமல் இந்த்ரியங்கள் சென்றவழியில் மனம் செல்லக்கூடாது. மனம் சென்ற வழியில் புத்தி செல்லக்கூடாது. விசாரிக்கும் சக்தியுள்ள புத்தி, விருப்பு வெறுப்புகளை ஸூமப்படுத்தி, மனஸையும் இந்த்ரியங்களையும் அடக்கி, தான் நிதானித்த வழியில் அவற்றைச் செலுத்த வேண்டும்.

(4) இப்படி ஆராய்ந்து இந்த்ரியங்களையும் மனஸையும் அடக்கின புத்தி, பரமாத்மாவே மேலான வஸ்து என்று நிஶ்சயித்து, அதில் ப்ரதிஷ்டைபெற்றே இருக்கும்.

மத் பரன்=என்னை (பரமாத்மாவை) பரனாக (மேலானவனாக) க் கொண்டவன். ௯. ௩௰௪.

(5) எவனுடைய இந்த்ரியங்கள் வெளிமுகமாக நிற்காமல், உள்முகமாக ஆத்மாவுக்கு அடிமைப்பட்டு நிற்குமோ.

ஶப்த ஸ்பர்ஶ ரூப ரஸ கந்த மயமான லோக விஷயங்களை ஜீவாத்மா அறிவதற்காக இந்த்ரியங்கள் இயற்றப்பட்டதால், அவ்விந்த்ரியங்கள் ஜீவாத்மாவின் நல்ல கதிக்குரிய விஷயங்களை மாத்ரம் க்ரஹிக்கவேண்டும். எதைக் கண்ணால் பார்க்கக்கூடாது, எதைக் காதால் கேட்கக்கூடாது, எதை வாயால் உண்ணக்கூடாது, எதை மூக்கால் மணக்கக்கூடாது, எதை மெய்யால் தொடக்கூடாது, என்று புத்தி விசாரித்தபடி இந்த்ரியங்கள் ஜீவாத்மாவுக்குச் சேவை செய்யவேண்டும்.

(6) இவ்வாறு ஆத்மாவின் முக்தியைக் கருதி, இந்த்ரியங்களை அடக்கியாளும் புத்தி, ஆத்ம நிஷ்டை பெற்ற புத்தி.

அடுத்த மந்த்ரத்தில் எவ்விதம் ஆத்மாவில் புத்தியைப் ப்ரதிஷ்டை பண்ணலாமென்றும், அப்படிப் ப்ரதிஷ்டை பண்ணாதுபோனால் ஜீவாத்மாவை மலங்களில்நின்று விடுவிக்கக்கூடாதென்றும், உபதேஶிக்கின்றார்.

**௬௰௨, ௬௰௩. விஷயங்களை த்யானிக்கின்ற புமானுக்கு (புருஷனுக்கு) அவற்றில் ஸங்கம் உண்டாகின்றது (1). ஸங்கத்தில் நின்று காமம் (ஆசை) பிறக்கின்றது (2). காமத்தில் நின்று கோபம் பிறக்கின்றது (3). கோபத்தில் நின்று பெரு மோஹம் பிறக்கின்றது (4).**

பெரு மோஹத்தில் நின்று ஸ்ம்ருதி சேதம் உண்டாகின்றது (5). ஸ்ம்ருதி சேதத்தால் புத்திநாஶம் உண்டாகின்றது (6). புத்தி நாஶத்தால் [ஜீவாத்மா] கெடுகின்றன் (7).

(1) இந்த்ரியங்கள் கவர்ந்த விஷயத்தை ஜீவாத்மா (புமான்) ஜாக்ரதையாகக் கவனித்தால் (த்யானித்தால்), அவ்விஷயத்துக்கும் தனக்கும் ஓர் ஸங்கம் (சேர்க்கை, புணர்ச்சி) உண்டாகின்றது.

(2) தனக்கும் விஷயத்துக்கும் ஸங்கமான ஸமயத்தில் ஆசை ஜனிக்கின்றது. ஞாதாவாகிய ஜீவனும், ஜ்ஞேயம் என்ற விஷயமும், ஐக்யப்பட்ட அவஸ்தை ஞானம் (அறிதல்). விஷயத்தை அறிந்த அவஸ்தையிலன்றி, வேறு ஸமயத்தில் (அப்ரத்யக்ஷமாக இருக்கின்ற) ஆசை (காமம்) ஜீவாத்மாவுக்கு ப்ரத்யக்ஷமாகாது. ஜீவாத்மாவுக்குள் மறைந்து நின்றிலகும் ஆசை எந்த ஸமயத்தில் வெளிப்படுமென்றுலோ, இந்த்ரியம் பற்றின விஷயத்துக்கு மனம் ஸஹாயமாய் நின்று, மனஸுக்கு ஜீவாத்மா ஸஹாயமாய் நின்ற ஸமயத்திலேயே வெளிப்படும். இச்சை உதயமாகுதலுக்குக் காரணம் அறிதலே.

(3) இவ்வாறு தனக்குப் ப்ரத்யக்ஷமான ஆசையை வேறொருவன் தடுத்தால், உடனே கோபம் பிறக்கின்றது. தடைபெற்ற ஆசையே கோபரூபமாகின்றது, ஓடுகின்ற தண்ணீர் தடைபெற்றவுடனே நுரைத்துப் பாய்வதுபோல.

(4) கோபம் ப்ராணவாயுவைச் சீறச்செய்யும், புத்தியைத் தட்டழியப்பண்ணும். ப்ராணனும் புத்தியும் சலனப்பட, புத்தியை மயக்கும்பொருளாகிய மோஹம் அதிகரிக்கும், மிகப் பெரியதாகும்.

(5) மோஹமும் அதிகரிக்க, புத்தி கற்ற தர்மவிதிகள் எல்லாம் மோஹ இருளில் மறையும்.

"ஸ்ம்ருதி விப்ரம"=ஸ்ம்ருதி சீர்கேடு, கலக்கம், சேதம்.

(6) தர்ம விதிகளின் ப்ரகாஶம் மோஹத்தால் மறைபட, புத்தியின் பார்வையும், விசாரிக்கும் வல்லபமும், இல்லாமற் போகும்.

(7) ஜீவாத்மாவுக்கு நல்ல வழியைக் காட்டும்படி புத்திக்கு ஶக்தியில்லாதுபோனால், ஜீவாத்மா மேன்மேலும் மலத்தில் அழுந்தி அளவிறந்த துன்பங்களை அநுபவிப்பான்.

௬௰௪. ராகத்வேஷங்களில்நின்று பிரிந்தவைகளும், தனக்கு வஶப்பட்டவைகளும், ஆகிய இந்த்ரியங்களால் விஷயங்களை அநுபவிக்கின்றவனும், [தனக்கு] அடிமைப்பட்ட புத்தியையுடையவனும், ஆகிய [புமான்] ப்ரஸாதத்தைப் (1) பெறுகின்றான்.

(1) ப்ரஸாதம்= தெளிவு, மலமற்ற (அல்லது மலம் குறைந்த) தன்மை; ஆத்மஸுகம். ௰அ. ௩௬, ௩௭.

இந்த்ரியங்கள் விருப்பு, வெறுப்பு என்ற மலங்களுக்கு அடிமைப்படாமலும், ஆத்ம ஸுகத்துக்கே அடிமைப்பட்டும், இருந்தால், ஜீவாத்மா, ஸாக்ஷிரூபமாய் நின்று புத்தியின் விளக்கத்தை அறிந்து, தெளிவு பெற்று, மோக்ஷ வாழ்வை அடைவான்.

௬௰௫. ப்ரஸாதத்தில் இவனுடைய (இந்த புமானுடைய) துக்கங்களின் அழிவு ஸித்திக்கின்றது (1). மேலும், தெளிவுபெற்ற புமானுடைய புத்தி(2) சூழ்ந்த பார்வையை ஶீக்ரமாகப் பெறுகின்றது(3).

(1) ப்ரஸாதம் பெற்ற புமானுக்கே (ஜீவாத்மாவுக்கே) துக்க நிவிர்த்தி.

ப்ரஸாதத்தில்=தெளிவு நிகழுங்காலத்தில்.

(2) "ப்ரஸன்ன சேதஸ:" = தெளிவு பெற்ற புமானுடைய புத்தி.

"சேதஸ்"=புருஷன் (௨. ௬௰), சேதனன், புமான்(௨.௬௨), ஸாக்ஷி, ஜீவாத்மா.

௰௩. ௬ இல் சேதனை "சேதனா" என்றார்.

பரமாத்மாவும் ஜீவாத்மாவும் சித்பொருளாதலால் சைதன்ய வஸ்துக்கள் என்றும், சேதன வஸ்துக்கள் என்றும், சேதஸ் என்றும், அழைக்கப்படும். ஆனால், பரமாத்மாவுக்கும் ஜீவாத்மாவுக்கும் பேதமுண்டு. பரமாத்மா மலரஹிதனாதலால்,

ஸதா காலமும் ஆனந்த ஸ்வரூபி. ஜீவாத்மா மலஸஹிதனுத லால் துக்க ஸ்வரூபி. காரணசரீரமாகிய அவித்யாவின் அம் சங்களாகிய காம க்ரோத மோஹாதி மலங்களில் சிக்குண்டு துக்கியாகுன்.

(3) இந்த மலங்களினின்று தெளிவு (ப்ரஸாதம்) பெற்ற காலத்தில், இவனுடைய கருவியாகிய புத்தி அம்மலங்களால் தடைபெருமல், இவனைச் சூழ்ந்திருக்கும் விஷயங்களை முற் ருக விசாரித்து, இவனுக்கு உற்ற துணையாய்நின்று, ப்ரக்ருதி காரியங்களைப் பிரித்துப் பிரித்து உள்ளபடி அறிவிக்க, ஜீவா த்மா இவ்வொன்றும் நானல்ல என்றும், இவற்றுக்கெல்லாம் நான் ஸாக்ஷி என்றும், அறிந்து, ஆனந்த சொரூபியாவான்.

"புத்தி: பர்யவதிஷ்டதே"=புத்தி சூழ்ந்த நிலையை (அவஸ் தானததை) அடைகின்றது; புத்தி சூழ்ந்த பார்வையைப் பெறுகின்றது.

காரண ஸூக்ஷ்ம ஸ்தூல சரீரங்கள் ஒன்றும் நானல்ல, இவற்றுக்கெல்லாம் நான் ஸாக்ஷி, என்ற ஞானேதயத்துக்கு பர்யவஸ்தித (சூழ்ந்த பார்வையுடைய) புத்தி அத்யாவஸ்யம்.

இப்படிப்பட்ட அகண்ட புத்தி உனக்கு அவஸ்யம், அர் ஜுனு; உனக்குச் சூழ்ந்த பார்வையில்லாதபடியால், தர்மத்தின் லக்ஷணம் விளங்கவில்லை. தர்ம ஸாஸ்த்ரார்த்த அறியாமையால் நீ துக்கிக்கின்ருய், என்று பகவான் சுட்டினர்.

**சுயசு. [த்வந்த்வ ஸமத்வம் என்ற] யோகம் பெறதனுக்கு [ப்ர திஷ்டித] புத்தியில்லை. [அந்த] யோகமற்றவனுக்கு [மத்பர] பாவ னையுமில்லை (1). [மத்பர] பாவனையற்றவனுக்கு ஸாந்தியுமில்லை (2). அஸாந்தனுக்கு (3) [பரம] ஸுகம் (4) ஏது.**

(1) உ. சுயசு இல் கூறின மத்பரத்வம். மத்பரத்வம் அல் லது மத்பரபாவனை = அஹம் என்ற பரமாத்மா ஸகல ப்ரா க்ருதம் பொருட்களுக்கும் மேலான பொருள் என்ற உணர்ச்சி.

(2) காம க்ரோத மோஹாதிகளால் ஏற்பட்ட துக்கத்தின் ஒழிவே ஸாந்தி. பரமாத்மாவை மேலான வஸ்து என்று நிஸ்ச

யித்து அத்தோடு ஐக்யமானவனுக்கே துக்க நிவிர்த்தி என்ற மோக்ஷம் ஸித்திக்கும்.

(3) துக்க நிவிர்த்தியில்லாதவனுக்கு.

(4) மேலான அழிவற்ற மோக்ஷ ஸுகம் எப்படி வரும்.

**௬௰எ. எந்த மனம் [அங்கிங்கு] பாயும் இந்த்ரியங்களுக்கு அநு கூலமாய் நிற்கின்றதோ, அது (1) இவனுடைய புத்தியைத் [தன் வழியில்] கொண்டுபோகின்றது (2). காற்று ஜலத்தில் தோணியைத் [தன் வழியில் கொண்டுபோவது] போல.**

(1) அந்த மனம்.

(2) உ. ௬௰௩. இல் இரண்டாம் குறிப்பைப் பார்க்க.

**௬௰அ. ஆதலால், மஹாபாஹோ (1), எவனுடைய எல்லா இந்த்ரியங்களும் இந்த்ரியார்த்தங்களில்நின்று நிக்ரஹிக்க (ஒடுக்க)ப் பட்டனவோ, அவனுடைய ப்ரஜ்ஞை (புத்தி) ப்ரதிஷ்டை பெற்றது.**

(1) பெரிய புஜங்களையுடையவன், மஹா வல்லபசாலி.

**௬௰௯. எல்லா ப்ராணிகளுக்கும் யாது இரவோ (1), அதனில் மனமடக்கமுள்ளவன் (2) ஜாக்ரதையாக இருக்கின்றான் (3). எதனிடத்து ஜீவர்கள் ஜாக்ரதையாக இருக்கின்றார்களோ, அஃது அறியும் முனிக்கு இரவு (4).**

(1) விளங்கவில்லையோ. "நிசா"=இரவு; இருளினால் மூடப்பட்ட பொருள்; புலப்படாத பொருள்.

(2) "ஸம்யமீ"=அடக்கம் ("யமம்")செவ்வையாக ("ஸம்") உள்ளவன்; இந்த்ரியங்களினின்று பிரிந்த மனம் உடையவன்; மனமடக்கமுள்ளவன்; ஜிதேந்த்ரியன்.

(3) இந்த்ரிய விஷயங்களில் பற்றுள்ள காமகாமிகளுக்கு எந்தப்பொருள் ப்ரத்யக்ஷம் இல்லையோ, அந்த ஆத்மப் பொருளையே ஜிதேந்த்ரியன் கவனித்துக்கொண்டிருக்கின்றான்.

(4) எந்த அநித்யப் பொருளைக் காமகாமிகள் விழிப்பாகக் கவனிக்கிறார்களோ, அதனிடத்து ஸம்யமிக்கு (ஜிதேந்த்ரியனுக்கு)க் கவனமில்லை.

*காமகாமி அறியத்தக்க விஷயங்கள் எல்லாம் பொய்ப்பொருள்; ஸம்யமி (மனமடக்கமுள்ளவன்) அறியத்தக்க விஷயங்கள் எல்லாம் மெய்ப்பொருள்.*

**எ௰. பூர்ணத்வம் உடையதும் (1), தன் நிலை குலையாததும் ஆகிய (2) ஸமுத்ரத்தில் ஜலங்கள் எவ்விதம் [அதனைமீறமல்] ப்ரவேசிக்கின்றனவோ, அதுபோல எவனிடத்து (எந்தப் புருஷனிடத்து) ஸர்வ காமங்களும் (3) [அவனுக்கு அடிமைப்பட்டுப்] ப்ரவேசிக்கின்றனவோ (4), அவன் சாந்தியைப் பெற்றே நிற்கின்றன் (5). காமகாமி (6) [சாந்தியைப் பெறுகின்றன்] இல்லை.**

*(1) எப்பொழுதும் நிறைந்தேயிருக்கின்றதும்.*

*(2) நதிகளும் மழைகளும் நாள்தோறும் தனக்குள் ப்ரவேசித்தாலும், ஒருபோதும் தன் சொந்த குணத்தையாவது இருப்பிடத்தையாவது விடாததுமாகிய.*

*(3) எந்தெந்த ஆசைகளும்.*

*(4) தனக்குள் உதயமாகின்றனவோ. அப்ரத்யக்ஷமான ஆசை தனக்கு ப்ரத்யக்ஷமாகுதலை காமப் ப்ரவேசம் என்றூர். உ. சுஎஉ இல் இரண்டாம் குறிப்பைப் பார்க்க.*

*(5) "சாந்திம் ஆப்னோதி"=சாந்தியை அடைகிறன்=சாந்தியைப் பெற்றே நிற்கின்றன்.*

*ஜீவன்முக்தனுடைய மனவில் ஆசை தோன்றினதால் அவனுடைய ஆத்ம சாந்தி (கைவல்ய ஆத்மநிலை) மாறுது. ஆதலால், "சாந்திம் ஆப்னோதி" என்ற வாக்யம் "சாந்தியைப் பெற்றே நிற்கினறன்" என்று பொருள்படும்.*

*(6) காம விஷய ஸுகத்தில் விருப்பங்கொண்டவன்; காம விஷய அபேக்ஷி.*

*ஆத்மாவுக்குள் காமங்கள் உதயமாகித் தத்தம் விஷயங்களைப்பற்றி, அவ்விஷய அநுபவத்தால் அவைகள் அஸ்தமனமாகுதல் (அழிதல்) "ஆசை தீர்த்தல்" என்றும், "ஆசை பயன்படுதல்" என்றும், "விருப்பம் நிறைவேறுதல்" என்றும் கூறப்படும்.*

*காமோதயந்தொட்டு காமாஸ்தமனம் வரையில் அல்பஜ்*

ஞத்வமுடைய ஜீவாத்மாக்கள் அநேக துக்கங்களை அநுபவிப்பார்கள். பூரணத்வம்பெற்ற மஹாத்மாவுக்குக் காமத்தால் வாதனையில்லை.

ஜீவாத்மா இந்த்ரிய விஷயங்களை விரும்பிக்கொண்டேயிருப்பதால், காமகாமி என்றபெயர் அவனுக்கு ஏற்பட்டது. காமகாமத்தால் (விஷயவிருப்பத்தால்) மனம் சலனப்பட்டு, விருப்பம் நிறைவேறாதமட்டும் துக்கசொரூபியாயிருப்பான். நிறைவேறினாலும், இன்னும் வேறு விருப்பங்கள் உதயமாகி, மென்மேலும் அவனை வாதிக்கும்.

விஷய ஸுகம், தோன்றி அழிவதால், மிக அல்பம் என்றும், ப்ரக்ருதிரூப விஷயங்களை ப்ரக்ருதிரூப ஆசைகள் விரும்புதலும் வெறுத்தலும் இயல்பே என்றும், அறிந்த ஜீவன்முக்தன் தன் தேகத்தில் ஆசை உதயமானால், தன் பூர்ண நிலையில் ஆசை வற்றிநின்று, ஆசையால் வாதிக்கப்படாமல், ஶாந்தி என்ற ஒழிவைப் பெற்றே வாழ்வான்.

இவ்விதம் ஸாக்ஷி சொரூபமாய் ஆசை கவர்ந்த விஷயங்களை அநுபவிக்கும் மஹாத்மாவின் பூர்ண ஆசைவற்ற ஆநந்த நிலை எப்படியிருக்குமோவென்றால், நதிகளையும் மழைகளையும் பெற்ற ஸமுத்ரம் தனக்குரிய ஸ்தானத்தையும் ஸ்திதியையும் விடாததுபோலிருக்கும், என்று பகவான உபதேஶித்தார்.

**எ௰க. எந்தப் புமான் எல்லாக் காம [விஷய] ங்களையும் விட்டு, (1) [காமங்களில்] ஸங்கமற்றவனாகவும் (2) மமதையற்றவனாகவும் (3) அஹந்தையற்றவனாகவும் (4) ஸஞ்சரிக்கின்றனோ (5) அவன் ஶாந்தியைப் பெறுகின்றன் (6).**

(1) காம விஷயங்களில் மனதைச் சிக்கவிடாமல்.

காம விஷயங்களாவன ஶப்த ஸ்பர்ஶ ரூப ரஸ கந்தங்கள். இவற்றுள் வீடு வயல் தோட்டம் பெண் பிள்ளை பணம் நகை முதலியவை அடங்கும். இவற்றைச் சிந்திக்குங்காலத்தில் பற்றற்றுச் சிந்திக்கவேண்டியது.

(2) ஆசைகள் தனக்குள் உதயமானால், அவ்வாசைகளில் மனம் சிக்காமலும்.

(3) எனது விஷயங்கள், எனது ஆசைகள், என்ற புத்தி அற்றவனாகவும்.

(4) நான் இதை அதைச் செய்கின்றேன் என்ற புத்தியில்லாதவனாகவும்.

(5) உலகத்தில் வாழ்கின்றான்.

(6) விறகில்லாதுபோனால் நெருப்பு அணைவதுபோல, காமத்துக்கு விஷயங்களாயிருக்கும் பெண் பொன் பூமி முதலியவற்றை மனம் சிந்திக்காதிருந்தால், காமம் தணியும். காமம் தணிந்தால், ஸ்தூல தேகத்தைப்பற்றி வந்த புறப்பொருட்களில் "எனது" என்ற மோஹம் குறையும். இந்த மமதை குறைய, ஸூக்ஷ்ம தேகத்தைப் பற்றிவந்த அஹப்பொருளில் "நான்" என்ற மோஹம் குறையும். இந்தப் பொய் அஹந்தை குறைய, ஸூக்ஷ்ம தேகத்தில் வாழும் ஆத்மா, ப்ரக்ருதி தத்வங்களை மெல்லமெல்ல யோகாப்யாஸத்தால் கழற்றி, தன்னை ஒருநாள் தர்ஶிக்கும். இந்த ஆத்ம தர்ஶனத்தைப் பெற்ற மாத்ரத்தில் துக்க வியோகம் என்ற ஶாந்தி தன்னுள் ப்ரகாஶிக்கும்.

**௭௰உ. ஓ பார்த்த, இதுவே (1) ப்ராஹ்மீஸ்திதி (2). இதனையடைந்து, மோஹத்தை அடைகின்றானில்லை (3). இதனிடத்து (4) கடைசிகாலத்திலும் (5) நிலைபெற்று (6), ப்ரஹ்ம நிர்வாணத்தைப் பெறுகின்றன்.**

(1) இந்த ஶாந்தியே, துக்கம் ஒழிதலே.

(2) பரப்ரஹ்மத்துக்குரிய நிலை. ஸச்சிதானந்தம் என்ற ஆத்ம பூர்ண ஸ்திதி.

(3) அஸத்ய ஜட துக்க சொரூப ப்ரக்ருதியில் சிக்குண்ட ஜீவாத்மா ஸச்சிதாநந்த சொரூபத்தைப் பெற்றபின், ஒருபொழுதும் மோஹத்தைப் பெறான். உ. ௱௰உ. (க)

(4) இந்த ஶாந்தியில், ப்ராஹ்மீஸ்திதியில்.

(5) "அந்த காலே"=கடைசிகாலத்திலும், அந்த்ய காலத்திலும். அஃதாவது, ப்ராரப்த கர்ம முடிவில் தேகம் நழுவுகின்ற ஸமயத்திலும்.

ஶாந்தி அல்லது துக்க விமோசனம் ஜீவன்முக்தனுக்கு ஸதேஹ தசையிலும் விதேஹ தசையிலும் உண்டு. ஆதலால், "கடைசிகாலத்திலும்" என்ற வாக்யம் ஸ்தூல ஸூக்ஷ்ம ஶரீரங்கள் நழுவும் நேரத்திலும் என்று பொருள்படும்.

ஜீவன்பத்தனை (அஃதாவது, காமாதி மலங்களால் பந்திக்கப்பட்ட ஜீவன்) மரணகாலத்தில் ஸ்தூல தேஹத்தை மாத்ரம் இழந்து, தன் ஸூக்ஷ்ம ஶரீரத்தோடு சென்று, நரக ஸ்வர்க்க லோகங்களுக்குரிய ஶரீரங்களைப் பெற்று, அந்த அநுபவங்கள் முடிந்தபின் மறுபடியும் பூலோகத்துக்கு ஸூக்ஷ்ம தேகத்தோடு வந்து, வேறொரு ஸ்தூல தேஹத்தைப் பெறுவான்.

(6) ஜீவன்முக்தனுக்கு (அஃதாவது, மலங்களில்நின்று விடுபட்ட ஜீவனுக்கு) ப்ராரப்த கர்ம முடிவில் ஸ்தூல தேஹமும் ஸூக்ஷ்ம தேஹமும் ஒன்றாகூடி விழும். அதுவரையிலும் ஶாந்தி ஒருபோதும் நீங்காமல்நின்று.

(7) ஸ்தூல ஸூக்ஷ்ம தேஹங்கள் நழுவினபின், ஜீவன்முக்தன் பரப்ரஹ்மத்துக்குரிய போக்குவரவற்ற (பிறப்பு இறப்பற்ற) நிலையைப் பெறுகின்றான்.

நிர்வாணம்=செல்லாமல் நிற்கும் நிலை. அஃதாவது, பிறப்பு இறப்பு அற்ற ஸ்திதி.

ப்ரஹ்ம நிர்வாணம்=பரப்ரஹ்மத்துக்குரிய போக்குவரவற்ற பூர்ண நிலை.

---

# மூன்றாம் அத்யாயம்

## கர்மயோகம்.

---

[அஃதாவது, கர்மத்தின் ஸ்வரூபத்தையும் ஸூக்ஷ்ம கதியையும் அர்ஜுனன் கேட்டுச் சிந்தித்தான் என்று கூறும் மூன்றும் பாடம்.

---

அவித்யாவில் அகப்பட்டு அனாத்மஸங்கம் என்ற துன்பத்தில் அழுத்தப்பட்ட ஜீவாத்மாவை உத்தரணம் செய்வதற்காகவே கர்மங்களும், ஸூக்ஷ்ம ஸ்தூல ஶரீரங்களும், புவனங்களும் போகங்களும் ஸ்ருஷ்டிக்கப்பட்டனவென்றும்; அந்த அவித்யாவையும் அதனால் வரும் துக்கத்தையும் நிவிர்த்தி செய்யும்பொருட்டு ஸ்வதர்மங்களை அன்போடு அநுஷ்டிக்கவேண்டுமென்றும்; நற்கர்மங்களின் பலன்களைப் பற்றாமல் தனக்குரிய கர்மங்களை ஸமத்வபுத்தியோடு செய்துவந்தால் நிஷ்கர்மாவின் தன்மையாகிய நைஷ்கர்ம்யம் ஓங்கி வளரும் என்றும்; நைஷ்கர்ம்யத்தால் ஞானமும், ஞானத்தால் பயதுக்க நிவிர்த்திகளும், ஸித்திக்குமென்றும், இந்த அத்யாயத்தில் விளக்கப்பட்டது.

நிஷ்காம கர்மாநுஷ்டானத்தைப் பெரியோர் கர்மயோகம் என்று சொல்வார்கள். கர்மங்களின் விஷய பலன்களைக் கருதிச் செய்யப்பட்ட ஸகாம கர்மாநுஷ்டானம், பிறப்பு இறப்பு என்ற துன்பங்களைத் தருவதால், யோகம் என்று அழைக்கப்படாது.]

அர்ஜுனன் கூறினான்:

௧. ஜனார்த்தன, கேஶவ, கர்மத்திலும் புத்தி மிகப்பெரிதென்று உனக்கு எண்ணமானால், அகோர [யுத்த] கர்மத்தில் என் என்னை ஏவுகின்றாய் (1).

(1) ௨. ௪௭ இல் உனக்குக் கர்மத்திலேயே அதிகாரம் (அஃதாவது, உனக்குரிய க்ஷத்ரிய கர்மங்களை நீ செய்யவே வேண்டும்) என்றும்; ௨. ௪௯ இல் பலனை நாடிய கர்மாநுஷ்டானத்துக்கும் புத்தியோகத்துக்கும் வெகுதூரம் (அஃதாவது, ஸமத்வ புத்தியோடு செய்யப்பட்ட கர்மாநுஷ்டானமே உசித கர்மாநுஷ்டானம்) என்றும்; [ஸமத்வ] புத்தியில் ஶரணத்தை விரும்பவேண்டும் (அஃதாவது, கர்மத்தில் ப்ரவேஶிக்கும்பொழுதெல்லாம் ஶுபாஶுப பலன்களில் மனதைச் செல்லவிடாமல், புத்தி ஸமத்வ நிலையில் நின்றே கர்மங்களை நடத்தவேண்டும்) என்றும்; திருவாய் மலர்ந்தருளிய வாக்யங்களின் அர்த்தத்தை விளங்காமல், அர்ஜுனன கர்மத்துக்கும் புத்திக்கும் ஒரு ஸம்பந்தமில்லாததுபோலெண்ணி, கர்மத்தில் ஏனென்னை ஏவுகின்றாய் என்றான். அடுத்த ஶ்லோகத்தில், கர்மத்தைப் பற்றியும் புத்தியைப் பற்றியும் கூறின வாக்யங்கள் எல்லாம், தன் மனதில் கலப்புப் பெற்று, அர்த்தம் புரியாமல் நிற்கின்றன என்றான்.

௨. கலப்புள்ளது போலிருக்கின்ற வாக்யத்தால் எனது புத்தியை மயக்குகின்றவன்போலிருக்கின்றாய் (1). [கர்மம் புத்தி என்ற இரண்டனுள்] எதனால் நான் ஶ்ரேயஸை அடைவேனோ, அவ்வொன்றை நிஶ்சயம் செய்து கூறுவாயாக (2).

(1) கர்மத்தைப்பற்றியும் புத்தியைப்பற்றியும் உபதேஶித்த வாக்யங்கள் அர்ஜுனன் மனதில் குழம்பிப் பொருள்படாத ந்யாயம் ௩. ௨௯ இல் விளக்கப்பட்டது. பரமாத்மாவை அறிந்தவர்கள் புத்தி பேதம் செய்யமாட்டார்களென்றும், போதித்த விஷயங்களில் மயக்கம் இருந்தால், அது ஶிஷ்யனுடைய அபக்வத்தால் வந்ததென்றும், அங்கு பகவான் குறித்தார்.

(2) நான் பெற்றிருக்கும் துக்க நிலையைத் தீர்த்து (௨. அ), மேலான ஸுகத்தைக் கொடுக்கக்கூடியது கர்மமா புத்தியா என்று ஒன்றைச் சொல்லும்.

கர்மாநுஷ்டானத்தில், கர்மமும் புத்தியும் ஸம்பந்தப் பட்டே நிற்பதால், கர்மத்தால் நான் ஸ்ரேயஸ்ஸை அடைவேனோ, அல்லது புத்தியால் நான் ஸ்ரேயஸை அடைவேனோ, என்று அர்ஜுனன் கேட்டது பொருந்தாக் கேள்வி (அஸங்கத ப்ரஸ்னம்). இவனுடைய ஸாஸ்த்ரார்த்த விமூடத்தை அறிந்த பகவான் கர்மத்துக்கும் புத்திக்கும் உள்ள ஸம்பந்தத்தையும், கர்மங்களுக்கும் கர்மபலன்களுக்கும் உள்ள ஸம்பந்தத்தையும், கர்மாநுஷ்டானத்துக்கும் கர்ம ஸந்ந்யாஸத்துக்கும் உள்ள ஸம்பந்தத்தையும் இந்த மூன்றும் அத்யாயந்தொட்டு பதினெட்டாம் அத்யாயம் வரையில் அளவற்ற தயவோடு விளக்கினார்.

விமூடம் என்ற அவித்யாவில் சிக்குண்ட ஜீவாத்மாவை நிவிர்த்தி செய்யும்பொருட்டு ஸூக்ஷ்ம ஸ்தூல ஸரீரங்களையும், பதிநான்கு லோகங்களையும், உபாஸனா தேவதைகளையும், குருமாரையும், கர்மங்களையும் ஸ்ருஷ்டித்து, எந்த புத்தியோடு ஜீவாத்மாக்கள் கர்மங்களைச் செய்வார்களோ, அந்த புத்திக்கு ஏற்றபடி கர்மபலன்களையும் பகவான் வகுத்தார்.

விருப்பு வெறுப்பால் ஏவப்பட்டு விஷய போகங்களைக் கருதிநிற்கும் மனஸுக்கு அநுகூலமான புத்தி, ஸகாம புத்தியாதலால், தாழ்ந்த புத்தி (அவர புத்தி) என்று கூறப்படும். இந்த ஹீன புத்தியுடன் ஜீவாத்மா ஸுப கர்மங்களைச் செய்தால், விஷய ஸுகங்களைப் பூலோகத்திலும் ஸ்வர்க்கலோகத்திலும் பெறும். அஸுப கர்மங்களைச் செய்தால், அஸுகங்களைப் பூலோகத்திலும் நரகலோகத்திலும் பெறும்.

தாழ்ந்த புத்தியோடு செய்யப்பட்ட நற்கர்மங்களின் பலன்கள் ஸுகபோகங்கள் என்று கூறப்பட்டாலும், அவை துன்பமென்பது நிஸ்சயம். ஒருநாள் தோன்றினவாறு இன்னொருநாள் அழிவதாலும், தோன்றிக் கொண்டிருக்கும்பொ

ழூதே விருப்பு வெறுப்பாலும் கோப லோப தாபங்களாலும் பலவித விகாரங்களைப் பெற்றிருப்பதாலும், அழியும் ஸமயத்தில் பெருந்துயரத்தை விளைவிப்பதாலும், விருப்பு வெறுப்புகளை ஒழித்த ஞானவானுடைய ஆத்ம ஸுகத்திற்கு அன்னியமாயிருப்பதாலும், விஷய ஸுகம் துன்பசொரூபமே.

ஸகாம புத்தியோடு கர்மாநுஷ்டானத்தை நடத்திவரும் மானுடர்களுக்கு இகபர லோகங்களில் விதிக்கப்பட்ட பலனெல்லாம் சோர்வு பய துக்க ஸம்பந்தமாயிருக்கும். இது பற்றி, ஸகாம புத்திமான்களுக்குரிய மார்க்கம் துக்கப் ப்ரவ்ருத்தி மார்க்கம் என்று பெரியோர் கூறுவார்கள்.

நிஷ்காம புத்தியோடு அநுஸரிக்கப்பட்ட கர்மங்கள் கோப லோப மோஹங்களை நீக்கிச் சித்தஶுத்தியையும், ஞான ஶாஸ்த்ரங்களின் அர்த்தத்தை க்ரஹிக்கத்தக்க அறிவையும், நிஶ்சலன ஸுகத்தையும் கொடுக்கும். இதுபற்றி, நிஷ்காம புத்திமான்களுக்குரிய மார்க்கம் துக்கநிவிர்த்தி மார்க்கம் என்றும், மெஞ்ஞான ஸுகமார்க்கம் என்றும், பெரியோர் கூறுவார்கள்.

ஆகவே, புத்தியின் நிஷ்டை (நிலை) க்கு ஏற்றபடி, கர்மங்கள் துக்கப் ப்ரவ்ருத்தி மார்க்கத்திலும் துக்க நிவிர்த்தி மார்க்கத்திலும் ஆத்மாக்களைச் செலுத்தும். இது பகவானுடைய கர்ம சக்ரத்தின் இயல்பு.

இந்த கர்ம சக்ரத்தின் உற்பத்தியை அத்யாயம் ௩, மந்த்ரங்கள் ௰—௰௩இல் உபதேஶித்து, எவன் கர்ம பூமியாகிய இந்த லோகத்தில் காரண கார்ய ஸம்பந்தமாக நடைபெற்று வரும் கர்ம—கர்மபல சக்கரத்தை அநுஸரிக்கவில்லையோ, அவன் துன்பத்தையே ஜீவனமாகக்கொண்டு பயனின்றிக் காலத்தைக் கழிப்பான் என்று ௩. ௰௬இல் உறுதிசெய்தார்.

அடுத்த ஶ்லோகத்தில், புத்தியின் நிஷ்காமநிஷ்டை ஜீவாத்மாவை மோக்ஷம் என்ற துக்கநிவிர்த்தியில், இரண்டு வழியால் ஏற்றும் என்று போதிக்கின்றார்.

விஷய ஸுகம் துக்கமே என்று நிஶ்சயித்து, அதில்நின்று முக்தி (விடுதலை) பெறவேண்டுமென்ற மானுடர்கள் இருவகை

யாராகிய ஸாங்க்யரும் யோகிகளும் என்று குறித்தபின், ஸாங்க்யர்களுக்குரிய மோக்ஷமார்க்கம் மெஞ்ஞானம் என்றும், யோகிகளுக்குரிய மோக்ஷமார்க்கம் கர்மயோகம் என்றும், வழமைப் ப்ரகாரம் உபதேஶிக்காமல், இந்த மோக்ஷமார்க்கங்கள் புத்தியின் நிலைகளே என்றும், ஸாங்க்யர்களின் புத்திநிலை மெஞ்ஞான நிஷ்டை என்றும், யோகிகளின் புத்திநிலை கர்மயோக நிஷ்டை என்றும் அதிவிஶேஷமாக மூன்றாவது மந்த்ரத்தில் உபதேஶிக்கின்றார்.

**ஸ்ரீ பகவான் கூறினார்:**

**௩. பாபமற்றவனே (1), இந்த லோகத்தில் (2) ஸாங்க்யர்களுடைய (3) ஞான யோகத்தாலும் (4), யோகிகளுடைய (5) கர்மயோகத்தாலும் (6), நிஷ்டை (7) இருவிதமாக (8) முன் என்னாற் கூறப்பட்டது (9).**

(1) நான் தீர்மத்துக்கு விரோதமாக நடக்கின்றேன் என்று எண்ணி, பயத்தையும் துக்கத்தையும் அடைந்ததால் அர்ஜுனனை உபசாரமாகப் "பாபமற்றவனே" என்றார். பாபத்துக்கு அஞ்சினவனே என்று பொருள் பண்ணுக.

(2) இந்தக் கர்மபூமி என்ற மானுட லோகத்தில்.

அநேக லோகங்களில் ஜீவாத்மாக்கள் யஜ்ஞம் தானம் தபஸ் என்ற கர்மங்களைச் செய்தாலும், இந்தப் பூலோகத்தில் மாத்ரம் செய்யப்பட்ட கர்மங்களுக்குப் பலன்கள் உண்டு. அப்பலன்களுக்கேற்றபடி தனு கரண புவன போகங்கள் அமையும். ஸ்வர்க்க நரக புவனங்கள் போக லோகங்கள் எனப்படும். பூலோகமும் ஒரு போக லோகமாயிருந்தும், இதில் செய்யப்பட்ட கர்மங்களில்நின்று பலன்கள் ஜனிக்குமாதலால், பூலோகத்தைக் கர்மபூமி என்று கூறுவார்கள். அஃதாவது, கர்மாநுஷ்டானத்துக்குத் தக்கபடி ப்ரயோஜனங்களை ஶீக்ரமாகக் கொடுக்கக்கூடிய பூமி என்பது கருத்து.

(3) பிறவியில் அமைந்த குணத்தால் விஷய ஸுகங்களையும் தோன்றியழியும் த்ருஶ்யப் பொருள்களையும் அபேக்ஷிக்காதவர்களும், காமக் க்ரோத லோபங்களால் வாதிக்கப்படாதவர்

களும், ஆத்ம விசாரத்தில் ப்ரீதிகொண்டவர்களும், ஆகிய ஜீவர்கள் ஸாங்க்யர். இவர்களின் விசேஷ லக்ஷணங்கள் நிராசை மெய்யறிவு த்யானம். அநேக பூர்வ ஜன்மங்களில் பாப கர்மங்களைச் செய்து, அவைக்கேற்றபடி விஷய போகங்களை அநேக முறை அநுபவித்து, அவற்றின் அநித்யத்தையும் ஹீனத்தையும் உணர்ந்து, அவற்றில் ப்ரீதிகொள்ளாமல், தங்களுக்குரிய கர்மங்களை ராக த்வேஷமின்றிப் பூர்த்தியாகவும் அன்போடும் செய்துவந்தவர்களுக்கு மாதாவின் கர்ப்பத்திலேயே ஸத்வகுணம் என்ற ஸாங்க்யத்தன்மை அருளப்படும். காய் கனிவது போல, மானுடர்களிற் பக்குவப்பட்டவாகள் ஸாங்க்யர், ஸத்வகுணவான்கள். நிராசையிலும் மெய்யறிவிலும் முதிர்ந்த ஆத்மாக்கள்.

(4) இவர்களுடைய புத்தி, வெவ்வேருகத் தோற்றும் பொய்ப்பொருட்களை உபேக்ஷித்து, அகண்டாகார மெய்ப்பொருளையே விசாரிக்கும். இந்த எல்லையற்ற சச்சிதானந்த முழுப்பொருளை (க்ருத்ஸ்ந வஸ்துவை, ௩. உ௰௯)ப் பற்றி நிற்றல் ஞானயோகம். நிராசையில் வரூம் ஸாங்க்யர்களுக்குரிய யோகம் ஞானயோகம். இவர்களுக்கு இயல்பில் மஹேஶ்வர (அந்தர்யாமி ஈஶ்வர) உபாஸனை ஸித்திக்கும்.

(5) ஈண்டு யோகிகள் என்றது அஷ்டாங்க யோகத்தில் ஓர் அங்கத்தையாவது அண்டிநிற்கின்றவர்களை. இவர்கள் ஆசையின் ராக த்வேஷ த்வந்த்வங்களை ஸமப்படுத்துவதற்கு (௬. உ௰அ) ப்ரயத்னம் செய்கின்றவர்கள். இவர்களுக்கு வகுக்கப்பட்ட மனோதர்மங்கள் அல்லது அப்யாஸங்கள் எட்டுவகையாதலால் அஷ்டாங்க யோகம் எனப்படும். அவையாவன:—

யமம் = அஹிம்ஸை (இன்னுசெய்யாமை), ஸத்யம் (வாய்மை), அஸ்தேயம் (களவுசெய்யாமை), அன்ய ஸ்த்ரீ கமன வெறுப்பு, அபரிக்ரஹம் (ஏர்ப்பது இகழ்ச்சி என்ற புத்தியால் வந்த வாங்காமை) என்ற அடக்கங்கள்.

நியமம் என்றது சௌசம், ஸந்தோஷம், தபஸ், வேதபாராயணம், ஈஶ்வரனில் ஶ்ரத்தை என்ற உறுதியான பழக்கங்கள்.

ஆஸனம் என்றது கைகால் முதலியவையின் அமைபபுகக ளான பத்மம் ஸ்வஸ்திகம் முதலிய அங்க பந்தங்கள்.

ப்ராணாயாமம்=ரேசகம் பூரகம் கும்பகம் என்ற ப்ராண வாயு நிக்ரஹ உபாயங்கள்.

ப்ரத்யாகாரம் என்றது பாஹ்ய இந்த்ரியங்களை தத்தம் விஷயங்களில்நின்று திருப்புதல்.

தாரணை என்றது அத்விதீய வஸ்துவில் மனம் புத்தி சித் தம் என்ற அந்தர் இந்த்ரியங்களை நிறுத்துதல்.

த்யானம் என்றது அத்விதீய வஸ்துவில் புத்தி நிற்கும்பொ ழுது இடையிடையே மனம் அவ்வஸ்துவை நினைத்து நினைத் துப் ப்ரவாகித்தல் (பெருகுதல்).

ஸவிகல்ப ஸமாதி என்றது ஞாதா ஞானம் ஞேயம் என்ற விகல்பங்களோடு அத்விதீய வஸ்துவில் ப்ரகாசம் பெற்ற ஜீவ தத்வத்தின் நிலை. இந்த நிலையை சைவ ஸித்தாந்தத்தில் ஆத்ம தர்சனம் என்பார்கள்.

இவ்வித அஷ்ட நிலைகளை ஜீவாத்மா உறுதியாகப் படிப்படி அநுஷ்டித்தால், முடிவான நிர்விகல்ப ஸமாதி என்ற ப்ரஹ்ம தர்சனம் (சிவ தர்சனம்) ஸித்திக்கும்.

(6) கர்மயோகம் என்றது நிஷ்காம கர்மாநுஷ்டானம். அஃதாவது, கர்மங்களுக்குரிய பலன்களைக் கருதாமல், ஈச்வரப் ப்ரீதியாகச் செய்யப்பட்ட கர்மாநுஷ்டானம். இதுவே கௌசல கர்மாநுஷ்டானம் (க்ருத க்ருத்யம்) ஆதலால், கர்ம யோகம் என்ற பெயரைப் பெற்றது.

(7) நிஷ்டை=உறுதியானநிலை. ஈண்டு, புத்தியின் ஸங்க நிஷ்டை என்று அர்த்தமாகும்.

விஷய ஸங்கங்களையும் காம க்ரோத குணங்களையும் அண் டிக் கர்மங்களை நடத்தும் புத்தி ஜீவாத்மாவை சிற்றின்ப வழி என்ற துக்கப் ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் சேர்ப்பிக்குமாதலால், அப்புத்தியின் நிலையை "நிஷ்டை" என்று பெரியோர் கூறுர். நிஷ்டை என்ற சிறந்த பதம் துக்க நிவிர்த்தி மார்க்கத்தில் (மோக்ஷ நெறியில்) ப்ரதிஷ்டைபெற்ற புத்திக்கே உரியது.

(8) சிற்றின்பத்தைத் வெறுத்துப் பேரின்பத்தை நாடும் புத்திகள் தாங்கள் சேவிக்கின்ற ஜீவாத்மாக்களை அந்தப் பேரின்பத்தில் இரண்டு வழியால் ஏற்றும். ஸாங்க்ய ஜீவர்களை ஞான யோக அநுஷ்டானத்தாலும், அஷ்டாங்க யோக ஜீவர்களைக் கர்மயோக அநுஷ்டானத்தாலும் கரையேற்றும்.

(9) முற்காலத்தில் தக்ஷிணாமூர்த்தியாக நான் தோன்றி இந்த உண்மையை ஸநக முதலிய ருஷிகளுக்கு உபதேசித்தேன்.

சயடு ம் பக்கத்தில் உள்ள உரையைப் பார்த்தறிக.

ஒன்றையும் பற்றாத நிராசை என்ற நிலையிலும், அஷ்டாங்கயோகத்தில் வாயுவைப் பற்றிப்பிடிக்கும் பழக்கத்தால் ஸித்திக்கின்ற ப்ராண லயத்திலும், மனம் அடங்கும்என்று ஜடாமகுடம் தரித்த தக்ஷிணாமூர்த்தி விளக்கினார்.

மனம் அடங்க, அறிவு என்ற ஆன்மா ப்ரகாசிக்கும். நினைப்பும் மறப்பும் (அஞ்ஞான ஸுஷுப்தியும்) அற்ற கைவல்யதசையில் ஆத்மா துக்கநிவிர்த்தியைப் பெறும். இதுவே உயர்வு தாழ்வற்ற நித்ய ஸுகம், பரமுக்தி.

கர்மாநுஷ்டானியின் புத்திக்கேற்றபடியே கர்மங்களில் நின்று கர்மபலன்கள் ஜனிக்கும் என்றும், ஸகாமபுத்தியோடு செய்யப்பட்ட கர்மங்கள் ஜீவாத்மாவை துக்கப் ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் செலுத்திப் பிறப்பு இறப்பு என்ற துன்பங்களில் மேன்மேலும் ஆழ்த்தும் என்றும், நிஷ்காம புத்தியோடு செய்யப்பட்ட கர்மங்கள் ஜீவனை துக்க நிவிர்த்தி மார்க்கத்தில் ஏற்றும் என்றும், மூன்றாவது மந்த்ரத்தில் குறித்து, நாலாவதில் கர்மங்களைச் செய்தாலன்றி புத்திமான் நிஷ்காம தன்மையைப் பெறான் என்றும், இந்த நைஷ்கர்ம்யம் கர்மாநுஷ்டானத்தாலேயே ஜனிப்பதால், கர்மங்களை ஆரம்பிக்காமலிருப்பதும், ஆரம்பித்த கர்மங்களை விட்டு விடுதலும், தான் ஸ்ருஷ்டித்த கர்ம சக்ரத்துக்கு நேர் விரோதம் என்றும், விளக்கப்படும்.

**௪. கர்மங்களின் அனாரம்பத்தால் (1) புருஷன் (2) நைஷ்கர்ம்யத்தை (3) அடைகிறனில்லை (4). [கர்ம] ஸந்ந்யாஸத்தாலேயே (5) [அந்த நைஷ்கர்ம்ய] ஸித்தியையும் அடைகிறனில்லை.**

(1) செய்யவேண்டிய ஸ்வதர்மங்களைத் தொடங்கிச் சரியாகச் செய்யாதிருந்தால்.

(2) ஜீவாத்மா.

(3) நிஷ்கர்மாவின் தன்மை நைஷ்கர்ம்யம்.

"நிர்"=இன்மை, "கர்ம"=செயல், "ஆ"=உடையவன், என்ற ஸம்ஸ்க்ருத பதங்கள் சேர்ந்து "நிஷ்கர்மா" என்று ஒரு பதமாயிற்று. இது கர்மத்தின் இன்மையை உடையவன், கர்மமற்றவன், என்று வாச்யார்த்தப்படும். ஆனால், ௩. ௫ இல் "ஒருவனும் ஒரு ஸமயத்திலும் ஒரு க்ஷணமும் கர்மத்தைச் செய்யாதவனாக இருக்கின்றானில்லை" என்று பகவான் உறுதியாகக் கூறினபடியால், கர்மமற்றவன் என்ற வாச்யார்த்தம் ஒவ்வாது. ஒவ்வாதெனில், நிஷ்கர்மா, என்ற பதத்தின் லக்ஷ்யார்த்தம் யாது? நிஷ்காம கர்மா, என்றதே.

நிஷ்காம க்ர்மா=[பலனில்] விருப்பமில்லாமல் கர்மத்தைச் செய்கின்றவன்.

கர்மத்தைச் செய்கின்றவன் யார் ஜீவனா, கர்மேந்த்ரியமா, அல்லது த்ரிகுணங்களா. ௩. உ௭ இல், ப்ரக்ருதி குணங்களால் செய்யப்பட்ட கர்மத்தை ஜீவாத்மா, அஹங்கார விமூடத்தால், "நான் செய்கிறேன்" ("நான் கர்த்தா") என்று நினைக்கின்றான் என்று சொன்னார்.

ஆதலால், "நிஷ்கர்மா" என்ற பதத்தின் லக்ஷ்யார்த்தம், த்ரிகுண சேஷ்டையால் கர்மேந்த்ரியங்கள் கர்மங்களைச் செய்யும்பொழுது அவற்றின்பலனைப் பற்றாதிருக்கும் ஜீவாத்மா என்று ஸித்திக்கின்றது. கர்மேந்த்ரியங்களால் செய்யப்படும் கர்மங்களின் பலன்களை விரும்பாமல், அக்கர்மங்களுக்கு ஸாக்ஷியாக நிற்கின்ற ஜீவாத்மா "நிஷ்கர்மா. இவனை "அகர்த்தா" என்றும் கூறுவார்கள்.

நைஷ்கர்ம்யம்=அகர்த்ருத்வம். அஃதாவது, கர்மேந்த்ரியங்கள் செய்யும் கர்மங்களை நான் செய்யவில்லை என்றும், அக்கர்ம பலன்களில் எனக்கு விருப்பமில்லையென்றும், ஸாக்ஷிரூபமாய் ஆத்மாவிருக்கும் தன்மை. (அ+கர்த்ருத்வம் = கர்த்தாவின் தன்மை இல்லாமை.)

(4) கர்மாநுஷ்டானத்தின் முக்ய ப்ரயோஜனம் அகர்த்ருத்வமாதலால், கர்மங்களை ஆரம்பித்து நடத்திவரவேண்டும். கர்மாரம்பமற்றிருத்தல் அகர்த்ருத்வத்தை ஏற்படுத்தாது.

அகர்த்ருத்வம் அமையாதுபோனல், ஞானமுமில்லை மோக்ஷமுமில்லை.

(5) "ஸம்" (செவ்வையாக), "நி" (மிகவும்), "ஆ" (சுற்றிலும்), "அஸ்" (எறிதல்) என்ற அநேக பதங்கள் கூடி "ஸந்ந்யாஸம்" என்று ஏகபதமாயிற்று. இதனர்த்தம் முற்றுக விடுதலே. எதனை விடுதல் என்று விசாரித்தால், கர்மங்களை விடுதல் என்று மூடர்கள் சொல்வார்கள். அது சரியன்று, கர்ம பலன்களை விடுதல் என்று அறிவாளிகள் சொல்வார்கள். சு. க இல் "எவன், கர்மபலத்தை நாடாமல், செய்யவேண்டிய கர்மத்தைச் செய்கிறனே, அவன் ஸந்ந்யாஸி. அக்னி [ஹோத்ரம் முதலிய யாகங்கள்] அற்றவனும், [தானம் தபஸ் என்ற] க்ரியையற்றவனும் ஸந்ந்யாஸியன்று" என்று பகவான் ஸ்பஷ்டமாகக் கூறியிருக்கிறர்.

எனவே, ஸந்ந்யாஸம் என்ற பதம் (மூடர்களின் உத்தேசப்படி) கர்மங்களை முற்றுக விடுதல் என்றும், (அறிவாளிகள் அறிந்தபடி) பலனில் பற்றற்ற கர்மாநுஷ்டானம் என்றும் விளங்கும்.

௩. ச இல் "ஸந்ந்யாஸத்தாலேயே [நைஷ்கர்ம்ய] ஸித்தியை அடைகிறனில்லை" என்றது கர்மங்களை முற்றுக விடுதலால் (கர்ம ஸந்ந்யாஸத்தால்) ஜீவாத்மா அகர்த்ருத்வத்தைப் பெறமாட்டான் என்று பொருள்படும்.

யஅ. சயகூ இல் "ஸந்ந்யாஸத்தால் நைஷ்கர்ம்ய ஸித்தியைப் பெறுகிறன்" என்றர். இதில் ஸந்ந்யாஸம் என்றது கர்மபல ஸந்ந்யாஸம்.

நைஷ்கர்ம்யம் என்ற அகர்த்ருவத்தைப் பெறுதற்கு, பலனில் பற்றில்லாத கர்மாநுஷ்டானம் அவஸ்யம் என்று விளக்கி, அடுத்த ஶ்லோகத்தில் ஜீவர்கள், ப்ரக்ருதி குணங்களால் ஏவப்படுகின்றதாலும் தேகங்களைத் தரித்து நிற்பதாலும், கர்மங்களைச் செய்யாதிருத்தல் அஸாத்யமென்று உபதேஸிக்கின்றர்.

**௫. ஸகலரும், தன்வஶமற்று ([1]), ப்ரக்ருதி ஜன்ய குணங்களி னால் ([2]) கர்மத்தைச் செய்விக்கப்படுகின்றனராதலால் ([3]); ஒருவனும் ஒரு ஸமயத்திலும் ஒருக்ஷணமும் கர்மத்தைச் செய்யாதவனாக இருக் கின்றானில்லை ([4]).**

(1) ஸ்வதந்த்ரமற்று. ஆத்மாக்கள் தங்கள் சொந்தக் கைவல்ய நிலையில் நிற்காமல்.

(2) ப்ரக்ருதியின் குணங்களாகிய ஸத்வம் ரஜஸ் தமஸால். ஸத்வகுணம், ஸுகத்திலும் கற்றலிலும் புத்தியை ஏவி, ஸுக ஸங்கத்தாலும் கல்வி ஸங்கத்தாலும் ஜீவாத்மாவைப் பந்திக்கின்றது. (௰௪. ௬); ரஜஸ்குணம், விருப்பு வெறுப்பு ரூபமாய்த் தோன்றி, மனதை விஷயங்களில் ஏவி, வாக்கு பாணி பாதம் பாயு உபஸதம் என்ற கர்மேந்த்ரியங்களால் கர்மங்களைச் செய்வித்து, கர்மஸங்கத்தால் ஜீவாத்மாவைப் பந்திக்கும். (௰௪. ௭); தமஸ்குணம், அறிவை மறைத்து, மறதி நித்ரை சோம்பலால் ஜீவாத்மாவைப் பந்திக்கும் (௰௪. ௮, ௯).

ஆத்மகோடிகள் குணங்களால் ஏவப்பட்டும் பந்திக்கப் பட்டும் ஜீவிக்கின்றனர்.

(3) ப்ரக்ருதி குணங்களால் ஏவப்பட்ட ஜீவாத்மாக்களின் கர்மேந்த்ரியங்கள் கர்மங்களைச் செய்யும் பொழுது, அக்கு ணங்களோடு அதிஸம்பந்தப்பட்ட ஜீவாத்மா அறியாமையால் நான் கர்மங்களைச் செய்கின்றேன் என்ற புத்தியோடிருக்கி றான் (௩. ௨௰௭). உள்ளபடி அவன் கர்மங்களுக்கு ஸாக்ஷியே யன்றி கர்த்தாவன்று. இதுபற்றி, ஜீவர்கள் "கர்மத்தைச் செய்விக்கப்படுகின்றனர்" என்றார்.

(4) ப்ராண அபான ஸமான வ்யான உதான பஞ்சவாயுக் களும், மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற பஞ்ச புத்தி யிந்த்ரியங்களும், உள்ளம் மனம் புத்தி சித்தம் அஹங்காரம் என்ற பஞ்ச அந்தஃகரணங்களும், வாக்கு பாணி பாதம் பாயு உபஸ்தம் என்ற பஞ்ச கர்மேந்த்ரியங்களும் ப்ரக்ருதி சொரூ பங்கள். இவற்றிலுள்ள தாமஸ ராஜஸ ஸாத்வீக குணங்கள் இவற்றை ஓயாமல் ஏவி, ஜாக்ர ஸ்வப்ன ஸுஷுப்தி அவஸ்

தைகளுக்குரிய கர்மங்களை (தொழில்களை)ச் செய்வித்துக் கொண்டே யிருப்பதால், கர்ம ஸந்ந்யாஸம் ஒருபொழுதும் ஸித்திக்காது. கர்மங்களை முற்றுக விட்டேன் என்றெண்ணி யிருக்கின்றவன் மூடன். (அறிவாளிக்குக் கர்மபல ஸந்ந்யாஸம் ஸித்திக்கும்).

அஸாத்ய கர்ம ஸந்ந்யாஸத்தில் ப்ரவேஸித்தவனுடைய மூட நிலைகளை வரும் மந்த்ரத்தில் விளக்குகின்றார்.

**௬. எவன் கர்மேந்த்ரியங்களை ஒடுக்கி (1), மனஸால் இந்த்ரியார்த்தங்களை நினைக்கின்றனோ (2), அந்த விமூட புத்தியுள்ளோவன் மித்யாசாரன் என்று கூறப்படுகின்றன் (3).**

(1) எவன் கர்மேந்திரியங்களின் தொழில்களை அடக்கி. வாக்கு சொற்களை வெளிவிடாமலும், கைகள் கொடுக்கல் வாங்கல் முதலிய கர்மங்களைச் செய்யவிடாமலும், பாதங்கள் நடையைச் செய்யவிடாமலும், பாயு மலவிஸர்க்கத்தையும், உபஸ்தம் ஜல ஸுக்ல விஸர்க்கங்களையும் செய்யவிடாமலும், ஓரிடத்தில் கண்ணை மூடிக்கொண்டு நான் யோகி என்றிருப்பவர்களை இதில் கண்டித்தார்.

(2) எவன் முன் கண்ட கேட்ட மணத்த ருஸித்த ஸ்பர்ஸித்த விஷயங்களை மனஸால் நினைத்துக்கொண்டிருக்கின்றானோ.

தேகத்தை அடக்கி மனஸை ராஜ்யம் செய்யும்படி விட்டுக்கொண்டிருப்பது மூடயோகியின் நிலை.

(3) இந்த வனுமூடன், மாயையில் அழுந்தி வாழ்நாளை வீழ்நாளாக்குவதால், மித்யாசார ஸந்ந்யாஸி என்று அறிவாளிகளால் அழைக்கப்படுவான்.

மித்யாசாரன்=பொய் நடையைப் பெற்றவன்: (மித்தை=பொய்.)

இந்த மித்யாசார ஸந்ந்யாஸம் (போலித் துறவு) அறியாமையால் அல்லது டம்பத்தால், அல்லது கோபத்தால், அல்லது கடன்காரர் பயத்தால், அல்லது பொருள் பந்து கீர்த்தி

முதலியவற்றை இழந்த துக்கத்தால், அல்லது காயக்லேஶத் தால் (௰அ. அ.) தரிக்கப்படும்.

இனி, ஸதாசார ஸந்ந்யாஸியின் (மெய் நடையுள்ள துற வியின்) லக்ஷணத்தைக் கூறுவார்.

**எ. அர்ஜுன, மனஸால் இந்த்ரியங்களை ஒடுக்கி (1) கர்மயோ கத்தை (2) கர்மேந்த்ரியங்களால் எவன் ஸங்கமற்று (3) ஆரம்பஞ் செய்கின்றனோ (4), அவன் [இவனிலும்] வேறு (5).**

(1) மெய் வாய் கண் மூக்கு செவி என்ற ஞானேந்த்ரியங் களை, தத்தம் விஷயங்களாகிய ஸ்பர்ஶ ரஸ ரூப கந்த ஶப்தங் களைப் பற்றவிடாமல், மனஸால் உள்ளே இழுத்து (உ. ருஅ).

(2) கர்மயோகம் என்ற நிஷ்காம கர்மாநுஷ்டானத்தை, கர்மபல ஸந்ந்யாஸத்தை.

(3) கர்மேந்த்ரியங்களோடு நெருங்கின ஸம்பந்தமில்லாமல்.

(4) எவன் தொடங்கிச் சாதிக்கின்றனோ.

(5) அவன் மித்யாசார ஸந்ந்யாஸி அன்று. ஸதாசார ஸந்ந்யாஸியே, அவனே கர்மயோகி (ரு. ௰க; ௬. க.)

கர்மயோகத்தில் ஸித்திபெற்றுத் தன்னை அறிந்தவன் யுக்தன், ஜீவன்முக்தன். (ரு. அ, ௬).

**அ. அகர்மத்திலும் (1) கர்மம் (2) மிகச் சிறந்ததானதால், உனக்கு நியமிக்கப்பட்ட கர்மத்தை (3) நீ செய். அகர்மத்தால் ஶரீ ரத்தின் யாத்ரையும் (4) நடைபெறாது.**

(1) அகர்மம்=கர்மம் இன்மை, கர்ம அநாரம்பம்.

(2) கர்மாநுஷ்டானம்.

(3) உனது ஸ்வதர்மத்தை.

(4) சரீரத்தின் கதி; போகுதல் வருதல் என்ற தொழில்; தேகஸஞ்சாரம்.

ஐந்தாம் மந்த்ரத்தில் கூறினவாறு, இந்த மந்த்ரத்தில் அகர்மத்தின் அஸாத்யத்தை உறுதியாக விளக்கினார்.

அடுத்த ஶ்லோகத்தில் நிஷ்காம கர்மாநுஷ்டானமாகிய கர்

மயோகத்தை யஜ்ஞார்த்த கர்மாநுஷ்டானம் என்றும், ததர்த்த கர்மாநுஷ்டானம் என்றும் பெருமைப்படுத்தி, மூடலோகம் துன்பத்தைத் தரும் ஸகாம கர்மாநுஷ்டானத்தைப்பற்றியே நிற்கும் என்று கூறுகின்றார்.

**௯. கௌந்தேய, யஜ்ஞார்த்த கர்மத்திலும் (1) வேறான கர்மத்தில் இந்த (2) லோகம் கர்மபந்தனம். ததர்த்த கர்மத்தை (3) ஸங்கமற்றவனாக நீ செய்.**

(1) யஜ்ஞார்த்த கர்மம் (யஜ்ஞ அர்த்த கர்மம்)=ப்ரஹ்மத்தை உத்தேசித்துச் செய்யப்பட்ட கர்மம்.

இக பர சிற்றின்ப ஸுகங்களைக் கருதாமற் செய்யப்பட்ட கர்மம் பேரின்பம் என்ற ப்ரஹ்மானந்தத்துக்கு ஹேதுவாயிருப்பதால், அக்கர்மம் ப்ரஹ்மத்தைப் பற்றிய கர்மம் (யஜ்ஞார்த்த கர்மம்).

"யஜ்" என்ற தாதுவின் பொருள் பூஜை என்றிருப்பதால், யஜ்ஞம் என்ற பதம் பூஜிக்கப்படும் பரமாத்மாவையும், தேவ பூஜைக்கு ஸாதனமான யாக கர்மங்களையும், குறிக்கும். ஈண்டு யஜ்ஞார்த்தம்=ப்ரஹ்மார்த்தம்.

யஜ்ஞார்த்த கர்மத்தை மதர்ப்பண (மத்+அர்ப்பண) கர்மமென்றும் (௯. உ௭), ததர்த்த (தத்+அர்த்த) கர்மமென்றும் (௩. ௯.) கூறுவார்கள். இவையெல்லாம் ஈஶ்வரனில் ப்ரீதி வைத்துச் செய்யப்பட்ட கர்மம், அல்லது ஈஶ்வரனுடைய ப்ரீதியைப் பெறத்தக்க கர்மம், என்று பொருள்படும்.

கர்மசக்ரத்தை உண்டுபண்ணி ஸதாகாலமும் ஜீவாத்மாக்களை ரக்ஷிக்கின்ற தயாள மஹேஶ்வரனை யஜ்ஞம் தானம் தபஸ் என்ற கர்மங்களால் நிஷ்காமமாகப் பூஜிக்கின்றவர்கள் ஈஶ்வரார்ப்பண, அல்லது ப்ரஹ்மாதான, கர்மாநுஷ்டானிகள்(ரு.௰).

(2) இந்தப் பூலோகத்தில் வஸிக்கும் மானுடர்கள், விஷய ஸுகங்களால் பந்திக்கப்பட்டு, கர்மபலன்களுக்காகவே கர்மங்களை அநுஷ்டிப்பார்கள். இவர்கள் க்ருபணர்கள் (உ. ச௰௯).

(3) தத்பொருளைக் கருதின கர்மம். (௰அ. உ௭). பலனை

நாடாமல், தத் பரம் என்ற மஹேஶ்வரனைக் கருதிச் செய்யப் பட்ட கர்மம் ததர்த்த கர்மம் (ரு. ௰௯).

இனி, யஜ்ஞாதி கர்மங்களின் உற்பத்தியையும் ப்ரயோஜனத்தையும் கீழ்வரும் ஏழு மந்த்ரத்தில் (௰—௰௬ இல்) உபதேசிக்கின்றார்.

**௰. முற்காலத்தில் (1) ப்ரஜாபதி (2) ப்ரஜைகளை (3) யஜ்ஞங்களோடு கூடி ஸ்ருஷ்டித்து (4), இதனால்(5) [அவித்யாவில் கட்டுண்ட] ஜீவாத்மாவை வெளிவிடுங்கள் (6); இது (இந்த யஜ்ஞகர்மம்) உங்களுடைய இஷ்டங்களுக்குக் காமதேனுவாகும் (7) என்று கூறினார்.**

(1) ஸ்ருஷ்டி ஆரம்பகாலத்தில்.

(2) ப்ரஜைகளை ஸ்ருஷ்டிக்கும் பதியாகிய ப்ரஹ்மா.

(3) "ப்ரஜா" என்ற ஸம்ஸ்க்ருத பதம் "ப்ர" என்ற உபஸர்க்கத்தோடு கூடின "ஜன்" (ஜனித்தல், வெளிவருதல்) என்ற தாதுவில் நின்று பிறந்து, ஜனம் என்று பொருள்படும்.

ப்ரஜைகள், ஜனங்கள், என்ற பதங்களின் நேர் அர்த்தம் ஜனித்தவர்கள், ஜனனத்தைப் பெற்றவர்கள் என்பதாம்.

ப்ரஹ்மா ஆருக்கு ஜனனத்தைக் கொடுத்தார்?

ஜீவாத்மாக்கள், அநாதி நித்யமாதலால், ப்ரஹ்மாவினிடம் ஜனனத்தைப் பெறவில்லை.

ஆனால், அவர்கள் அவித்தைகள் என்ற காரண சரீரங்களில் சிக்குண்டதாலும், அவர்களுக்கு அங்கம் ஸவதந்த்ரம் கருவி முதலிய பொருட்கள் இல்லாமையால் அவித்தைகளில் நின்று நீக்கம்பெறக்கூடாததாலும், ப்ரஹ்மா அவர்களுக்கு மஹா விநோத கர்மநிஷ்டர்களாகிய ஞானேந்த்ரியங்களையும் அந்தஃகரணங்களையும் கர்மேந்திரியங்களையும் ப்ராணவாயுக்களையும், ஜீவாத்மாவை அவித்யாவில்நின்று உத்தரணம் செய்யும் பொருட்டு, உண்டாக்கினார். இப்படி ஜனித்த கர்மநிஷ்டர்கள் பரஸ்பர ஸம்பந்தமாக ஒன்றுகூடி ஜீவாத்மாவுக்கு பந்துவாயும் (௬. ௬), அவனுக்கு வேண்டிய பக்குவங்களையும் போதனைகளையும் முக்திபர்யந்தம் செய்யும் தத்த்வங்களாயும், இருப்பதால்;

அவைகளைப் ப்ரஜைகள் என்றார்.

இந்த அத்ருஶ்ய தத்த்வக்கூட்டத்துக்குள் ஜீவாத்மா வீற்றிருப்பதாலும் (எ. ரு), அவற்றின் உதவியால் இகபர விஷயங்களை அதிவிஞேதமாக அறிவதாலும், அக்கூட்டம் ஸூக்ஷ்ம சரீரம் என்று அழைக்கப்பட்டது.

ஸூக்ஷ்ம சரீரம், ஸ்தூல சரீரத்தைப்போல, அறிவில்லாத வஸ்து அன்று. ஸ்தூல சரீரத்தை அங்குமிங்கும் ஏவி, தின்பண்டங்களைச் சுமந்துகொண்டு வரப்பண்ணி, பாகஞ்செய்வித்து, ஆஹாரத்தை உள்ளே செலுத்தி, அன்னத்தை ஜீரணிப்பித்துச் சக்கையை வெளியே தள்ளி, ஸாரத்தைப் பலவிதமாக்கி, ஸ்தூல நரம்பு இரத்தம் தசை எலும்பு தோல் முதலிய தாதுக்கள் ஒவ்வொன்றுக்குமுரிய ஸாரத்தைப் பிரித்துக் கொடுத்து, தங்களுக்குமுரியதை வஹித்து, அஞ்ஞானம் என்ற இருளில் மூழ்கியிருக்கும் ஜீவாத்மாவுக்கு லோக விஷயங்களைக் காட்டி, ஞானம் என்ற ஒளியில் விடுவதற்கு ஆன்ற துணையாக ஒன்றுகூடி நிற்கும் ஸூக்ஷ்ம கர்மாக்கள், "ஸத்" என்ற தேவாத்ம ஶக்தியின் அம்ஶத்தையும் "அஸத்" என்ற ப்ரக்ருதியின் அம்ஶத்தையும் பெற்று ஜீவிப்பதால், "ஸதஸத்" என்று அழைக்கப்பட்டது. (மநு ஸ்ம்ருதி, க. ௰௪; பகவத்கீதா, ௬. ௰௬). இந்த ஸதஸத் புருஷர்களை "ப்ரஜைகள்" என்றார்.

(4) ஸூக்ஷ்ம சரீர தத்த்வங்களாகிய ஸதஸத் புருஷர்களையும், அவர்கள் ஆத்ம உத்தரணத்துக்காகச் செய்யவேண்டிய யஜ்ஞம் தானம் தபஸ் என்ற கர்மங்களையும், உண்டாக்கி.

கர்மேந்திரியங்கள் கர்மங்களைச் செய்வதற்கு மற்ற மூன்று இந்திரிய க்ராமங்களின் (கூட்டங்களின்) ப்ரவ்ருத்தி அவஶ்யம். அதாவது, ப்ராணவாயுக்களும், அந்தஃகரணங்களும் ஞானேந்திரியங்களும் கர்மேந்திரியங்களோடு சேர்ந்தால் கர்மாநுஷ்டானம் வித்திக்கும்.

ப்ரஜைகள் என்று குறிக்கப்பட்ட ஸூக்ஷ்ம சரீர தத்வங்களில் ஶ்ரோத்ரம் (செவி) ப்ரஹ்மா கூறினதைக் கேட்டவுடன், மனஸ் அதனை க்ரஹித்து, புத்தி அதன் அர்த்தத்தை அறிந்து,

சித்தம் அஹங்காரம் என்ற தத்வங்கள் கர்மேந்திரியங்களை உபதேசித்தவாறு செய்விக்கும்.

(5) இந்த யஜ்ஞம் தானம் தபஸ் என்ற கர்மங்களால்.

தானமும் தபஸும் யஜ்ஞத்துக்குரியவையாதலால், ஒருமையாக "இதனால்" என்றார்.

யஜ்ஞம் தானம் தபஸ் என்ற கர்மங்களின் லக்ஷணம் ௰௭ ஆம் அத்யாயத்தில், மந்த்ரங்கள் ௰௧ தொட்டு ௨௨ வரையில், கூறினார். யஜ்ஞத்தில் ஞானயஜ்ஞமும் அடங்கிற்று. (௪. ௨௰௫.) மூன்றாம் அத்யாயத்தில் பதினோராம் மந்த்ரத்துக்குரிய ௪-வது உரையைப் பார்த்தறிக.

(6) "ப்ரஸவிஷ்யத்வம்" என்ற ஸம்ஸ்க்ருத பதம் "ப்ரஸவத்தைச் செய்யுங்கள்" என்று பொருள்படும்.

"ப்ரஸவம்" என்ற பதத்தின் அர்த்தம் "ப்ராணி கர்ப்ப விமோசனம்" (ப்ராணியைக் கர்ப்பத்தில் நின்று வெளிவிடுதல்) என்று பாணினி (வ்யாகரணத்தில், தாதுபாடத்தில்) விளக்கினார்.

ஆதலால், "ப்ரஸவிஷ்யத்வம்" = ஜீவாத்மாவை வெளிவிடுங்கள். எதில்நின்று வெளிவிடுவது எனின், அவித்யாவில் நின்று என்றறிக.

ஸூக்ஷ்ம சரீர தத்த்வங்களைப் ப்ரஸவிக்கச் சொன்னதாலும், ப்ரஸவத்தின் அர்த்தம் கர்ப்பத்தில் நின்று வெளிவிடுதல் என்றதாலும், ப்ரஹ்மா ஜீவாத்மாவை பிஸு ஆகவும், ஸூக்ஷ்ம சரீரத்தைக் கர்ப்பம் ஆகவும், எண்ணிப் பேசினார் என்பதற்கு ஐயமில்லை.

ஜீவாத்மாவுக்கு கர்ப்பம் அந்தஃகரணாதி ஸூக்ஷ்ம தத்த்வங்கள் என்று பகவான் அநுகீதாவிலும் அர்ஜுனனுக்கு உபதேசித்திருக்கின்றார். இதன் உண்மை ஜீவன்முக்தர்கள் அறிவார்கள். ஸூக்ஷ்ம சரீர தத்த்வங்களில் ப்ரதான தத்த்வமாகிய புத்தியிலிருந்தே ஸூத்தப்பட்டு ஜீவாத்மா யோகாநுபவத்தில் வெளிப்படுகின்றது. இந்த ஆத்ம தர்ஸனத்தைப் பெற்றவர்கள் புத்தி தத்த்வத்தை ஹ்ருதய குகை என்றும் கூறுவார்கள்.

இந்த ஹ்ருதயகுகை என்ற புத்திதத்வம் ஜீவாத்மா வுக்கு கர்ப்பமாயிருப்பதற்கு ஓர் த்ருஷ்டாந்தம் உண்டு. பய றின் அத்ருஸ்ய வித் (பீஜம்), பருப்புக்குள் அகப்பட்டு, தோ லால் மூடப்பட்டிருக்கும். அதை பூமி என்ற கர்ப்பத்தில் விதைத்தால், தோலும் பருப்பும் பூமியின் உஷ்ணத்தால் பிளக் கப்பட்டு, வித் முளையாகி வெளிவரும். அதுபோல, அவித்யா வில் அகப்பட்ட ஜீவாத்மா, ஸூக்ஷ்ம சரீரம் என்ற கர்ப்பத் தில் தரிபட்டு, பக்குவகாலத்தில் அவித்யாவை அவமதித்து வெளிப்படும். ஆதலால், "அநேந ப்ரஸவிஷ்யத்வம்" என்ற வாக்யம் "இந்த யஜ்ஞாதி கர்மங்களால் அவித்யாவில் கட் டுண்ட ஜீவாத்மாவை வெளிவிடுங்கள்" என்றே பொருள்படும்.

யஜ்ஞம் தானம் தபஸ் என்ற கர்மங்களை ஸ்ரத்தையோடு செய்துவரும் ஸூக்ஷ்ம கர்மநிஷ்டர்களின் தேஜஸ் ஜீவாத்மாவு க்குள் இருக்கும்(ம.மக)ஞானாக்னியை ஏற்ற, அந்த ஞானாக்னி, க்ரமமாக வளர்ந்து, ஜீவாத்மாவின் மலபந்தங்களை நாளுக்கு நாள் எரித்து, அதனைப் பூர்த்தியாகச் சுத்தப்படுத்தின ஸுப தினத்தில் அவ்வாத்மா புத்தி தத்வ கர்ப்பத்திலின்று தேஜோ மய ஸச்சிதானந்தரூபமாய் "வெளிப்பட்டு", ஜீவன்முக்தன் என்று அழைக்கப்படும்.

"வெளிப்படுதல்" என்றது காரண ஸூக்ஷ்ம ஸ்தூல தேகங்களில் சிக்காமல் கைவல்யமாகித் தனக்கே ப்ரத்யக்ஷமா குதல். இப்படி ஜீவன்முக்தன் தன்னை அறிந்து, ப்ரக்ருதியால் இயற்றப்பட்ட தத்த்வங்கள் யாவும் தனக்கு அன்யம் என்ற றிந்து, அவற்றின் வ்யாபாரங்களில் ஸங்கமற்று, ஸாக்ஷியாயும் ஆநந்த சொரூபியாயும் வாழ்வான்.

(7) இந்த யஜ்ஞாதி கர்மங்களை விதித்தபடி நீங்கள் அன் புடன் செய்தால், உங்கள் இஷ்ட காம்யங்கள் எல்லாம் ஸித் திக்கும்.

உங்களுடைய இஷ்டங்களுக்கு காமதேனுவாகும்=எந்த இக பர ஸுகங்களை உங்கள் மனம் விரும்பிற்றோ, அவற்றை ஸ்ரத்தையோடு செய்யப்பட்ட கர்மங்கள் தவறாமற்கொடுக்கும். காமதேநு (அல்லது காமதுக்) ஸ்வர்க்கலோகத்தில் வஸிக்கும்

ஓர் விநோத பசு. இச்சித்ததெல்லாம் கொடுக்கத்தக்க வல்ல பம் பெற்றிருப்பதால், "தேநுக்களில் காமதுக்கும் நானே" என்று பகவான் விபூதியோக அத்யாயத்தில் கூறினர் (௰.௨௮).

**௰௧. இதனால் தேவர்களை [மனோ] பாவனை செய்யுங்கள் (1). அந்த தேவர்கள் உங்களை [மனோ] பாவனை செய்வார்கள் (2). ஒருவ நுக்கொருவர் பாவனை செய்கின்றவர்களாய் (3) பரம ஶ்ரேயஸைப் பிறகு பெறுவீர்கள் (4).**

(1) இந்த யஜ்ஞாதி கர்மாநுஷ்டானத்தால் தேவர்களை உபாஸியுங்கள்.

தேவர்களுக்கும் மானுடர்களுக்கும் யஜ்ஞம் தானம் தபஸ் என்ற கர்மங்களால் ஸம்பந்தம் உண்டாக்கியிருப்பதால், அவர் களை த்யானித்து இக்கர்மங்களைச் செய்யவேண்டும்.

(2) உபாஸிக்கப்பட்ட தேவர்கள் உபாஸகர்களைத் தழு வியே நிற்பார்கள்.

(3) கர்மோபாஸனையால் உறவு கலந்தவர்களாய்.

(4) தேவர்களில் ஶ்ரத்தை வைத்துச் செய்யப்பட்ட கர்மா நுஷ்டானத்தின் முக்ய பிரயோஜனமாகிய சித்த ஶுத்தியைப் பெற்று (௰௮. ௫), அதன்பின் ("பிறகு") நிஷ்காமபுத்தி உண் டாகி, ஞான யோகத்தை அண்டி, அதன் பரம ஸித்தியாகிய மோக்ஷத்தைப் பெறுவீர்கள்.

ஸௌக்ஷ்ம ப்ரஜைகள் ஞானயோகத்துக்கு உரியவர்களா னால், ஜீவாத்மாவுக்கு ஞானமும் முக்தியும் ஸித்திக்கும்.

கர்மாநுஷ்டானத்தின் நிலை இப்படி இருக்கின்றதென்று கூறி, தேவ பூஜைக்குரிய த்ரவ்யங்களைத் தேவர்களுக்கு நிவேத னஞ்செய்தே ப்ரஜைகள் தங்களுடைய போகங்களில் ப்ரவே ஶிக்க வேண்டுமென்று ப்ரஹ்மா அடுத்த ஶ்லோகத்தில் உபதே ஶிக்கின்றார்.

**௰௨. தேவர்கள் (1), யஜ்ஞத்தாற் பாவனை செய்யப்பட்டு, உங் களுக்கு இஷ்ட போகங்களைக் கொடுப்பார்கள் (2). அவர்களாற் கொடுக்கப்பட்டவைகளை, அவர்களுக்குக் கொடாமல், எவன் அநுப விக்கின்றனோ, அவன் கள்ளன் (3).**

(7) "தேவ" என்ற பதம், "திவ்" என்ற தாதுவில் ஜனித்து, ப்ரகாஶிக்கின்றவன் என்று பொருள்படும். தேவர்கள் மேனியிலும் புத்தியிலும் ஸித்தியிலும் ப்ரகாஶம் பெற்ற ஆத்மாக்கள்.

தேவர்களின் உற்பத்தியும் பிரிவுகளும் வாஸஸ்தானமும் கூறுதும்.

பரப்ரஹ்மத்தில் அடங்கிநின்ற பராஶக்தி தனக்குள் உதயமாகித் தன்னை விஜ்ரிம்பித்தபின், இந்த்ரியங்களுக்கு புலப்படாத பிந்துவாகி (வட்டமாகி), அதிஸூக்ஷ்ம நாதமாயிற்று. இந்தப் பரப்ரஹ்மமும் பராஶக்தியும் பிந்துவும் நாதமும் அரூபங்கள்.

நாதம் என்ற ஶப்த ப்ரஹ்மத்தினிடம் நாநா ஶக்திகள் உதித்து, ஒன்றுக்கொன்று ப்ரபலமாகாமல் நின்ற நிலையில் விளங்கும் ஸச்சிதானந்த வஸ்து ஸதாஶிவம் என்று போற்றப்படும்.

இதிலிருக்கும் க்ரியாஶக்தி, மற்ற இச்சா ஞான ஶக்திகளுக்கு மேம்பட்ட அவசரத்தில், மூலப் ப்ரக்ருதியை விகர்க்கம் செய்து அதன் தன்மையை தமஸ் ரஜஸ் ஸத்வம் என்ற முக்குணங்களாய்ப் பிரிக்கும். அகண்ட ஸாத்விக குணமாகிய மாயையில் இந்த ஸச்சிதானந்த வஸ்துவும் தன் அபின்ன ஶக்திகளும் வஶித்து, அதிற் சிக்காமல், அதனையும் அதிற் தோன்றின கார்யங்கள் யாவற்றையும் ஆண்டுவருங்காலமெல்லாம் மஹேஶ்வரன் என்றும், அந்தர்யாமி ஈஶ்வரன் என்றும், தேவாதி தேவன் என்றும், அழைக்கப்படும்.

மஹேஶ்வரனுடைய பஞ்ச க்ருத்ய ஶக்திகள் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார திரோபவ அநுக்ரஹ தத்வங்களென அண்டாண்ட கோடிகள் தோறும் விளங்கும்.

ஒவ்வொரு ப்ரஹ்மாண்ட ஸம்ரக்ஷணைக்காக ப்ரஹ்மா விஷ்ணு ருத்ரன் என்ற த்ரிமூர்த்திகளை மஹேஶ்வரன ஈஶ்வர தத்வங்களோடு வெளிவிட்டு, ப்ரஹ்மாவில் தன் ஸ்ருஷ்டி தத்வமும், விஷ்ணுவில் ஸ்திதி தத்வமும், ருத்ரனில் ஸம்ஹார தத்வமும், ப்ரபல்யமாகும்படி செய்தார்.

இன்னும் அநேக மூர்த்திகளையும் அவதார புருஷர்களை

யும் ஒரோர் அவஸரத்தைப்பற்றிப் பற்பல யுகங்களில் ஸ்ருஷ்டித்தார். இவ்விதம் ந்ருத்த மூர்த்தி (நடராஜன்), ஸோமாஸ்கந்த மூர்த்தி, சந்த்ரசேகர மூர்த்தி, பிக்ஷாடனமூர்த்தி முதலிய திருக்கோலங்களும், நரஸிம்ஹம், ராமசந்த்ரன், ஸ்ரீ க்ருஷ்ணன் முதலிய அவதார புருஷர்களும் தோன்றினார்கள்.

கைலாஸபதியாகிய ருத்ரனில்நின்று கணேசர் ஸுப்ரஹ்மண்யர் முதலிய மூர்த்திகள் ஈஸ்வர தத்வங்களோடு தோன்றினார்கள்.

ப்ரஹ்மாவில்நின்று ஈஸ்வரதத்வங்களோடு ஸ்வயம்பு மநு தோன்றினர்.

ஸ்வயம்பு மநு ப்ரஜைகளைப் பரிபாலிக்கத்தக்க ஸக்திகளையுடைய மரீசி, அத்ரி, ப்ருகு, அங்கிரஸ், புலஸ்த்ய, புலக, க்ரது, தக்ஷ, வஸிஷ்ட, நாரத ப்ரஜாபதிகளை உண்டாக்கினார்.

இவர்களில் மரீசியின் புத்ரராகிய காஸ்யப முதலிய அக்னிஷ்வாத்தர்கள் தேவர்களின் பித்ருக்கள் (பிதாமார்) ஆனார்கள் என்றும், அத்ரியின புத்ரராகிய ஸோமன் முதலிய பர்ஹீஷத்துக்கள் தைத்யர் தானவர் யக்ஷர் கந்தர்வர் உரகர் ராக்ஷஸர் கின்னரர் கிம்புருடர்களுக்கு பித்ருக்களானார்கள் என்றும், ப்ருகுவின் புத்ரராகிய ஸோமபாள் ப்ராஹ்மண வர்ணத்தாருக்கு பித்ருக்களானார்கள் என்றும், அங்கிரஸின் புத்ரராகிய ஹவிர்புக்குகள் க்ஷத்த்ரிய வர்ணத்தாருக்கு பித்ருக்களானார்கள் எனறும், புலஸ்த்யரின் புத்ரராகிய ஆஜ்ஜ்யபர் வைஸ்ய வர்ணத்தாருக்கு பித்ருக்களானார்கள் என்றும், வஸிஷ்டரின் புத்ரராகிய ஸுகாலிகள் ஸூத்ர வர்ணத்தாருக்கு பித்ருக்களானார்கள் எனறும், இந்தப் பித்ருகணங்கள் கோபமற்றவர்களாயும் பரிஸுத்தர்களாயும் எப்பொழுதும் ப்ரஹ்ம விசாரணை செய்பவர்களாயும் மஹாநுபாவர்களாயும் வாழ்கின்றனர் என்றும், இவர்களின் புத்ர பௌத்ராதிகளே லோகங்கள் தோறும் கணக்கற்றிருக்கிறார்கள் என்றும், எவ்வாறெனில் பித்ருக்களில்நின்று தேவாஸுரர்களும், தேவர்களில்நின்று ஸகல சராசரங்களும், க்ரமமாகத் தோன்றின என்றும், இந்தப் பித்ரு

கணங்கள் மிகுந்த தயையுள்ளவர்களாயும் ப்ராசீனர்களாயும் லோகக்ஷேமத்தைக் கோருகிறவர்களாயும் இருப்பதால், அவர்களின் அன்பைப் பெறும்படி ஶ்ராத்த கர்மங்களைப் பரிஶுத்த ஆரண்யங்களிலும் நதிதீரங்களிலும் ஜனஸங்கமில்லாத இடங்களிலும் செய்யவேண்டும் என்றும், இப்படிச் செய்தால் ஶ்ராத்த கர்த்தாவின் ஸந்ததியும் ஆயுளும் நற்குணமும் வேதப்பொருளில் அன்பும் ஓங்கிவளரும் என்றும், இந்த தேவப் பித்ருக்களின் க்ருபையினால் அவனுடைய லேபபாகி (பிண்டப்பாகமுடைய) பித்ருக்களாகிய பிதாவும் மாதாவும், பிதாமஹனும் பிதாமஹியும் (பாட்டனும் பாட்டியும்), ப்ரபிதாமஹனும் ப்ரபிதாமஹியும் (இரண்டாம் பாட்டனும் பாட்டியும்) பித்ரு லோகத்துக்கு அழைக்கப்பட்டு, பித்ரு ரூபம்பெற்று, பக்குவகாலத்தில், ஸ்வர்க்க லோகத்துக்கு முறையாகச் செல்லுவார்கள் என்றும், தன் பித்ருக்களை வஸுதேவதைகளாகவும், பிதாமஹர்களை ருத்ரதேவதைகளாகவும், ப்ரபிதாமஹர்களை ஆதித்ய தேவதைகளாகவும் த்யானிக்கவேண்டியது என்றும், இந்தப் பித்ருக்களுக்கு அரசன் யமராஜன் என்றும், வேத, புராண, தர்மஶாஸ்த்ரங்கள் போதிக்கின்றன.

மரீசியின் புத்ரனாகிய காஶ்யப தேவபித்ரு, தக்ஷ ப்ரஜாபதியின் பதின்மூன்று புத்ரிகளை விவாகஞ்செய்து, அதிதியால் ௰உ ஆதித்யர்களைப் பெற்றார். இவர்களில் விவஸ்வத் என்றவர் ஒருவர். பன்னிரண்டு ஆதித்யர்களுக்கும் பொதுவானது ஸூர்ய லோகம். அதிதியின் ஸகோதரியாகிய திதியால் காஶ்யபர் தைத்யர்களையும், தநுவால் தானவர்களையும், ப்ராதாவால் அநேக அப்ஸர ஸ்த்ரீகளையும் கந்தர்வர்களையும், கத்ருவால் ஶேஷ வாஸுகி, முதலிய ஸர்ப்பங்களையும், வினதாவால் கருடபகவானையும் பெற்றார்.

அத்ரி என்ற மஹருஷி சந்த்ர பகவானைப் பெற்றார். இவருக்கு உரியது சந்த்ரலோகம். சந்த்ரன் புதனைப் பெற்றார். அங்கிரஸ மஹருஷி தேவர்களுக்கு குருவாகிய ப்ருஹஸ்பதியைப் பெற்றார். புலஸ்த்ய மஹருஷி யக்ஷர் ராக்ஷஸர் கின்ன

ரர் (பாதி மனுஷ்ய பாதி அஸ்வ ரூபங்கள்) வானரர் என்பவர்களை உண்டாக்கினார். புலஹ மஹருஷி கிம்புருஷர் (பாதி மனுஷ்ய பாதி ஸிம்ம ரூபங்கள்) ஸிம்மம் புலி கரடி கோநாய் என்றவற்றைப் பெற்றார். ப்ருகு அஸுரகுருவாகிய ஸுக்ரனைப் பெற்றார். விவஸ்வத் பகவான் யமராஜனைப் பெற்றார். இந்த யமன் தென்திசையிலுள்ள பித்ருலோகத்துக்கு அரசனாயும், பாதாளங்களுக்குக் கீழுள்ள நரகலோகங்களுக்கு அதிபதியாயும் இருப்பர்.

பூலோகத்தில் செய்த புண்ய கர்மத்தால் ஜீவாத்மாக்கள் தேவப் பிறப்பை தேவலோகத்தில் பெறுகின்றனர். இந்தக் கர்ம தேவர்களில் ப்ரதானி இந்த்ரன். இவர் ஸ்வர்க்க லோகத்துக்கு அரசனாதலால், மரீசி முதலிய மஹருஷிகளில்நின்று தோன்றின புராண தேவர்கள் தாமும் அவருடைய கொலுவுக்குப் போவார்கள்.

ஸ்வர்க்கலோகம் எங்கள் ப்ரஹ்மாண்டத்துக்குரிய பதினாலு பிரிவுகளில் ஓர் லோகம். ஏழு பாதாளங்கள் கீழ்லோகமென்றும், இவைக்கு மேற்பட்ட பூ புவர் ஸ்வர் மஹ ஜந தப ஸத்ய லோகங்கள் மேல் லோகம் என்றும் கூறப்படும்.

தேவர்கள் தத்தம் யோக்யதைக்கேற்றபடி புவர்லோகந் தொட்டு ஸத்ய லோகம் வரையில் வாஸஞ்செய்வதால், இந்த மேலாறு லோகங்களைத் தேவ லோகம் என்பார்கள்.

புவர்லோகத்திலுள்ள ஸூர்யமண்டலத்துக்கப்பால் த்ருவ மண்டலம் வரையிலிருக்கும் ஸ்வர்க்க லோகத்தையும் தேவ லோகம் என்பார்கள். இதனுள் ஸப்த ருஷிகள் வாழும் மண்டலங்களும், சந்த்ர பகவானுடைய பத்னிகள் வாழும் உடுஎ நக்ஷத்ரங்களும், இன்னும் அநேக தேவ ஸித்த ஸாத்ய லோகங்களும் உண்டு.

பூ புவர் ஸ்வர்க்க லோகங்களின் மத்தியில் ஸாதாரண த்ருஷ்டிக்கு எட்டாதபடி நிற்கும் மஹமேரு என்ற கனகமய பர்வதத்தையும் தேவலோகம் என்பார்கள். இதன் கொடுமுடியில் த்ருவ மண்டலமும், மத்ய தளத்தில் ப்ரஹ்மாவின் பட்ட

ணமும், அதன் கிழக்கே இந்த்ரனுடைய பட்டணமாகிய அம ராவதியும், தென்கிழக்கில் அக்னிதேவனுடைய பட்டணமாகிய தேஜோவதியும், தெற்கில் யமனுடைய பட்டணமாகிய ஸம்யம னியும், தென்மேற்கில் நிருதிதேவனுடைய பட்டணமாகிய க்ரு ஷ்ண அஹங்காரவதியும், மேற்கில் வருணதேவனுடைய பட்ட ணமாகிய ஸுதாவதியும், வடமேற்கில் வாயுதேவனுடைய பட் டணமாகிய கந்தவதியும், வடக்கில் குபேரனுடைய பட்டண மாகிய அளகாபுரியும், வடகிழக்கில் ஶிவபுரம் என்ற கைலாஸ மும் உண்டு. மஹாமேருவில் தேவாதிதேவனாகிய ஶிவபெரு மான் ஸகளரூபியாய் ப்ரதான தேவர்களோடு வீற்றிருப்பதால், அதனை ஶுராலயம் என்பார்கள். ஆதித்யர்களும் நவக்ரஹங் களும் அஶ்வினி முதலிய நக்ஷத்ரங்களும் இந்தஶுராலயத்தை ப்ரதக்ஷிணம் செய்து வருவார்கள்.

பூலோகத்தில்நின்று ஸ்வர்க்க லோகத்தைப்பெற்ற புண்ய புருஷர்கள் தத்தம் கர்ம பலனுக்கேற்றபடி திவ்ய வஸ்த்ரங்க ளையும் கந்தங்களையும் புஷ்பங்களையும் கிரீடகுண்டலங்களையும் அஸ்தாபரணங்களையும் கண்டசரங்களையும் அம்ருத பானங்க ளையும், நிர்த்தம் வாத்யம் ஸங்கீதத்தோடு அதிஸுந்தர அக்ஷர ஸ்த்ரீகளால் உபஸரிக்கப்பட்டு, அநுபவிப்பார்கள். இப்படித் திவ்ய போக்யங்களை ஸந்தோஷமாகப் புஸிக்கும் பொழுது புண்ய க்ஷயம் வரும். உடனே தரிக்கப்பட்ட புஷ்பமாலைகள் வாடும். இந்த ஸ்வர்க்க வியோகக் குறியைக் கண்டு துக்கிக் கும் தேவனுடைய ஸ்தூல ஶரீரம் தனக்குள்ளிருக்கும் அக்னி தத்வத்தால் தஹிக்கப்படும். அப்பால், ஸூக்ஷ்ம ஶரீரத்தோடு புவர்லோக வழியால் மேகமண்டலத்தை அணுரூபமாய் அடைந்து, மழைத்தாரையில் அகப்பட்டு பூமியில் வீழ்ந்து ஓர் ஜன்மத்தைப் பெறுவான்.

பரததேஶமாகிய இந்தியாவில் தொன்றுதொட்டு மஹேஶ் வரனும் திரிமூர்த்திகளில் விஷ்ணு ருத்ரனும், கணேஶர் ஸுப்ர மண்யர் முதலிய ஈஶ்வரர்களும், ஸூர்ய சந்த்ர அக்னி வருண பகவான்களும், பித்ருக்களும், ஸன்மார்க்கத்தை விரும்பின

மானுடரால் போற்றப்படுகின்றனர்.

(2) யஜ்ஞாதி கர்மங்களால் உபாஸிக்கப்பட்ட தேவர்கள் உபாஸகர் விரும்பின சுகங்களை அருள்வார்கள்.

(3) அவர்களிடம் பெற்ற பொருளில் ஒரு சிறு பாகத்தை அவர்களுக்கு நிவேதனம் செய்து உபாஸகர் அநுபவம் பண்ண வேண்டும். அப்படித் தங்கள் நன்றியறிவை வளர்க்காதுபோனால், லோபம் மிகுந்து, மற்றவர்களின் பொருளை அபஹரிக்கும் கள்ளத்தன்மையைப் பெற்றுத் தண்டிக்கப்படுவார்கள்.

வேத விதிப்படி பஞ்ச மஹா யஜ்ஞங்கள் செய்தால், ஜீவ காருண்யம் ஹ்ருதயத்தில் விளையும்.

பஞ்ச மஹா யஜ்ஞமாவது, தேவர்களுக்கு ஹோமம் என்ற யஜ்ஞத்தால் ஹவிஸ் (மந்த்ர பூர்வமாக இடப்பட்ட த்ரவ்யங்கள்) கொடுத்தலும், பிதிர்களுக்கு தர்ப்பணம் என்ற யஜ்ஞத்தால் திலபிண்டோதகம் (எள்ளு பிண்டம் தண்ணீர்) கொடுத்தலும், அதிதி (ஸத்பாத்ர விருந்தாளி) களுக்கு ஸத்காரம் என்ற யஜ்ஞத்தால் அன்ன தானாதிகள் கொடுத்தலும், மஹேஶ்வரனுக்கும் ஜீவன்முக்தர்களுக்கும் பாடம் என்ற யஜ்ஞத்தால் ஆநந்தத்தைப் பெருக்குதலும், பூத ப்ரேத பிஶாச கணங்களுக்கு பலி என்ற யஜ்ஞத்தால் அவைக்கேற்ற உணவைக் கொடுத்தலுமாம்.

௰௩. [தேவ] யஜ்ஞசிஷ்டத்தை (1) உண்ணுகின்ற ஸத்துக்கள் எல்லாப் பாபங்களில் நின்று விடப்படுகின்றனர் (2). எந்தப் பாபிகள் தம் தேகத்துக்காகப் பாகம் செய்கின்றார்களோ, அவர்கள் துக்கத்தை அநுபவிக்கின்றார்கள் (3).

(1) யஜ்ஞ ஶிஷ்டமாவது உபாஸிக்கப்பட்ட தேவதைக்கு நிவேதனம் செய்தபின் எஞ்சின அன்னம் பழம் முதலிய த்ரவ்யங்கள்.

(2) தன்னைப் பரிபாலிக்கும் தேவதைக்குப் படைத்த அன்னத்தை அதன் ப்ரஸாதமென்று அன்புடன் உண்டுவருகின்றவர்கள் நல்லவர்கள். ஏனெனில், அன்ன பானாதியைப் பாகஞ் செய்யக் குட்டனீ (உலக்கை), பேஷணீ (அம்மி, ஆட்டுக்கல்),

சுல்லீ (அடுப்பு), உதகும்பீ (தண்ணீர்க்குடம்), மார்ஜனீ (விளக்குமாறு) என்ற கருவிகள் அவஶ்யமாதலால், அக்கருவி பூர்வகமாகப் பஞ்ச ஸூனங்கள் (தோஷங்கள்) பாகம் பண்ணுகின்றவனைப் பற்றும். இந்தத்தோஷங்களை நிவிர்த்திக்கும்பொருட்டு, தேவ பூஜைக்காகவே பாகம் செய்கிறேன் என்றெண்ணி, பாகம்பண்ணினதைத் தேவதைக்கு நிவேதித்தபின் அவன் உண்டால், பஞ்ச ஸூனங்கள் ஒழியும் என்பது பற்றி "எல்லாப் பாபங்களில்நின்று விடப்படுகின்றனர்" என்றார்.

ப்ரத்தாமய (அன்பு சொரூப) மாகிய ஜீவாத்மா (௰ள. ௩) அவித்யாவில் வீழ்ந்து, அதன் வடிவமாகி, சரீரமே நான் என்றெண்ணி, சரீரத்தின் கர்மங்களையும் போகங்களையும் சுகங்கள் என்ற பாபிக்குத் தேவ ஆராதனை விதிக்கப்பட்டது.

(3) தன் தேவதையை மறந்து, தன் தேகசுகத்துக்கு மாத்ரம் பாகம் செய்கின்றவன், மேன்மேலும் தேகவானாகிக் காமக்ரோத லோபங்களால் வாதிக்கப்பட்டு, ஶாந்தியில்லாதவனாய்த் திரிவான்.

௰௪. அன்னத்தில்நின்று (1) [ஸ்தூல] பூதங்கள் (2) பிறக்கின்றன. மேகத்தில்நின்று அன்னம் பிறக்கின்றது (3). யஜ்ஞத்தில்நின்று மேகம் பிறக்கின்றது (4). யஜ்ஞம் கர்மத்தில்நின்று பிறக்கின்றது (5).

(1) அன்னத்தின் ஸாரம் ஆண்களில் ஶுக்லமாயும், பெண்களில் ஶ்ரோணிதமாயும், பரிணமித்து, அந்த ஶுக்ல ஶ்ரோணித யோகத்தில் நின்று.

(2) ஸ்தூல சரீரங்கள்.

(3) நெல்லு கோதுமை முதலிய தான்யங்கள் அன்னமாகின்றன. இவற்றுள்ளே இருக்கின்ற அத்ருஶ்ய பீஜங்கள் ஸூக்ஷ்ம சரீரங்களோடு கூடிய ஜீவாத்மாக்களே. இவர்கள் ஸம்ஸார சக்ரத்திலுள்ள உத்தர மத்யம தக்ஷிண மார்க்கங்களொன்றில்நின்று மேகமண்டலத்தில் ப்ரவேஶித்து, மழைத் துளிகளில் அகப்பட்டு, தான்ய வயல்களில் வீழ்ந்து, தான்ய வேரினால் தண்டுக்குள் இழுபட்டு, கதிரிற்சென்று, நெல்லு

கோதுமை முதலிய ஸ்தூலரூபங்களைப் பெறுகின்றன. இது பற்றி, "மேகத்தில்நின்று அன்னம் (தான்யம்) பிறக்கின்றது" என்றார்.

(4) யஜ்ஞம் தானம் தபஸ் என்ற கர்மங்களை மனுஷ்யர் இந்த லோகத்தில் செய்வதால், மேகங்களுக்கு ராஜனாகிய இந்த்ரன் மழையை, ஜனங்களின் தர்மத்துக்கேற்றபடி, வர்ஷிக்கச் செய்வான்.

புண்ய கர்மங்களை அன்புடன் செய்யாத ஜனங்கள் வஸிக்கும் தேசங்கள் கோடையாலும் மண்மாரியாலும் அழியும் என்பது ஸத்யம். வளம் தளம் தங்கிய தேசம் எங்குண்டோ, அங்கு தேவப் ப்ரீதியும் மனுஷ்யப் ப்ரீதியும் ப்ரபலமென்று விஶ்வாஸிக்கலாம்.

(5) பத்தாம் மந்த்ரத்தில் ப்ரஹ்மா யஜ்ஞத்தை ஸ்ருஷ்டித்தார் என்று கூறி, இந்த மந்த்ரத்தில் யஜ்ஞம் கர்மத்தில்நின்று பிறக்கின்றதென்றார். கர்மத்தை ஸ்ருஷ்டித்தபின் அதைக் காரணமாகக்கொண்டு யஜ்ஞத்தை ஸ்ருஷ்டித்தார் என்பது கருத்து.

மண்ணை உண்டாக்கி அதனால் குடம் பானை முதலியவற்றை உண்டாக்கினதுபோலும், தங்கத்தை உண்டாக்கி அதனால் கனகாபரணங்களை உண்டாக்கினதுபோலும், "கர்மம்" என்ற வஸ்துவைக்கொண்டு யஜ்ஞம் தானம் தபஸ் என்ற கார்யங்களை உண்டாக்கினார்.

"கர்மம்" என்றது ஸ்தூல சரீரங்களின் பிறப்பைச் செய்யும் விஸர்க்கம் என்று அ. ௮ இல் விளக்கினார். ஒன்றுக்குள் இருக்கும் பொருளை வெளியே தள்ளும் ஶக்திபெற்ற வஸ்து விஸர்க்கம். கர்மம் எப்படிப்பட்ட விஸர்க்கம் என்றால், கணக்கற்ற ஸ்தூல சரீரங்களை ஆறு ஸ்தூல சரீர தத்வங்களில்நின்று வெளிவிடும் விஸர்க்கமாம்.

இந்த ஸ்தூல சரீர விஸர்க்க வஸ்துவாகிய கர்மத்தைக் கொண்டே ப்ரஹ்மா யஜ்ஞாதி கர்மங்களை ஸ்ருஷ்டித்தார் என்றறிக. கர்மம் ஸாமான்ய வஸ்து, யஜ்ஞாதி கர்மங்கள் விஶேஷ வஸ்த்துக்கள், பொன்னும் நகையும்போல.

௰௫. கர்மத்தை [ப்ரக்ருதி] ப்ரஹ்மத்தில்நின்று பிறந்ததாகவும் [1], [ப்ரக்ருதி] ப்ரஹ்மத்தை அழிவற்ற [பரப்ரஹ்மத்] தில்நின்று பிறந்ததாகவும் (2), நீ அறி. ஆதலால் (3), ஸர்வ வ்யாபகமும் நித்யமுமாகிய [பர] ப்ரஹ்மம் யஜ்ஞத்தில் ப்ரதிஷ்டை பெற்று நிற்கின்றது (4).

*(1) ஸ்தூல சரீர விஸர்க்க வஸ்துவாகிய கர்மத்தை ப்ரஹ்மா ஸ்ருஷ்டிக்கவில்லை. அந்த வஸ்து ப்ரக்ருதியில் நின்று தோன்றிற்று.*

*ப்ரக்ருதி மிகவும் விரியத்தக்க பொருளாதலாலும், ஜீவேஸ்வரஜகத் என்ற ப்ரபஞ்சம் ப்ரக்ருதியைக்கொண்டு பரப்ரஹ்மத்தால் விரிக்கப்பட்டதாலும், அந்த ப்ரக்ருதி "மஹத்தான ப்ரஹ்மம்" என்று உபசரிக்கப்பட்டது (௰௪. ௩).*

*இந்த ப்ரக்ருதியாலேயே ஸர்வ கர்மங்களும் செய்யப்படுகின்றன என்றும் ௰௩. ௨௰ இல் பகவான் விளக்கினார். ஆதலால், ஸ்தூல சரீர விஸர்க்கவஸ்துவாகிய கர்மம் ப்ரக்ருதிஜன்யமே.*

*ஶைவ ஸித்தாந்திகள் கர்மவஸ்துவை கர்மமலம் என்றும், அது ஜீவாத்மாவைப் பந்திக்கும் பொருளாகிய ஒரு பாஶம் என்றும், சொல்வார்கள்.*

*பகவானும், ௰௮. ௩ இலும் ௪௰௮ இலும், கர்மங்கள் தோஷமுள்ள கர்மவஸ்துவைக்கொண்டு இயற்றப்பட்டமையால் அவையெல்லாம் தோஷத்தால் வ்யாபிக்கப்பட்டன என்று கூறியிருப்பதால், கர்மவஸ்து கர்மமலமே.*

*மேலும், பகவான் ௰௪. ௫ இல் ப்ரக்ருதியில்நின்று மூன்று குணங்கள் பிறந்தன என்றும், அவற்றிலொன்று ரஜஸ் என்றும் கூறி, ௰௪. ௭ இல் ரஜஸ்குணம் ஜீவாத்மாவைக் க்ரியைகளில் பற்று வைக்கச் செய்யும் என்று விளக்கினார்.*

*மேலும், லௌகிக வைதிக கர்மங்களின் காரணங்களை விசாரிக்குமிடத்தில், சேஷ்டை ரூபமாயிருக்கும் ரஜஸ் குணம் அக்காரணங்களில் ஒன்று என்று கூறினார் (௰௮. ௰௩, ௰௪).*

*ஆதலால், இந்த ௰௫ ம் மந்த்ரத்தில் குறிக்கப்பட்ட கர்ம*

வஸ்து ரஜஸ்குணம் என்றும், ரஜஸ்குணம் ப்ரக்ருதியில் நின்று பிறந்ததென்றும் அறிக.

இனி, ப்ரக்ருதி எதில்நின்று வந்ததென்று சொல்லுகின்றார்.

(2) ஒருபொழுதும் ஒரேநிலையில் நிற்காமல், மாறிமாறித் தோன்றியும் மறைந்தும், அத்ருஶ்யமாக மிக விரிவுபெற்றும், இருப்பதால், க்ஷர (அழிவுள்ள) ப்ரஹ்மம் என்று அழைக்கப் பட்ட ப்ரக்ருதி, அக்ஷர (அழிவற்ற) ப்ரஹ்மம் என்ற, பரமாத்மாவில்நின்று பிறந்தது என்றார்.

ஸச்சிதானந்த ஸ்வரூபமாகிய அக்ஷர பரமாத்மாவில் நின்று அந்ருத ஜட துக்க ஸ்வரூபமாகிய க்ஷரப் ப்ரக்ருதி பிறந்தது என்றால், அர்த்தம் என்ன? ப்ரக்ருதியில் நின்று கர்மவஸ்துவும், கர்மவஸ்துவில்நின்று யஜ்ஞமும், யஜ்ஞத்தில்நின்று மேகமும், மேகத்தில்நின்று அன்னமும், அன்னத்தில்நின்று ஸ்தூல சரீரமும் பிறந்தவாறு, பரிசுத்த பரமாத்மாவில்நின்று அசுத்த ப்ரக்ருதி பிறந்ததா என்ற விசாரணைக்கு, "ஒன்றில் நின்று ஒன்று பிறக்கின்றது" என்ற வாக்யத்தின் லக்ஷணம் அறிதல் அவஶ்யம்.

"பிறப்பு" என்றது தோற்றம். "பிறக்கின்றது" என்றது "தோன்றுகின்றது". "ஒன்றில்நின்று ஒன்று பிறக்கின்றது" என்ற வாக்யத்தில், "ஒன்றில்நின்று" என்ற பதம் ஐந்தாம்வேற்றுமை உருபு.

ஐந்தாம்வேற்றுமை அபாதானத்தையும் ஹேதுவையும் (காரணத்தையும்) குறிக்கும்.

எந்த இடத்தில்நின்று ஒருவஸ்து விழுந்ததோ, வந்ததோ, தோற்றினதோ, அந்த இடம் விழுந்த வந்த அல்லது தோன்றின வஸ்துவுக்கு அபாதானமாகும். அந்த அபாதானத்துக்கு விழுந்த வந்த அல்லது தோன்றின வஸ்து அபாதேயமாகும். எனவே, "ப்ரக்ருதி பரப்ரஹ்மத்தில்நின்று பிறந்தது" என்ற வாக்யத்தில், பரப்ரஹ்மத்தை அபாதானமாகவும், ப்ரக்ருதியை அபாதேயமாகவும் அறியவேண்டியது. அஃதாவது, ப்ரக்

ருதி என்ற வஸ்து பரப்ரஹ்மம் என்ற ஸ்தானத்திலின்று தோன்றிற்று என்று அர்த்தமாகும், எவ்வாறெனில், ஒரு வீட்டிலிருந்து ஒரு பெண் புறப்பட்டதுபோல: அவள் வீடுமன்று, வீட்டின் அம்ஸமுமன்று. அப்படியே ப்ரக்ருதி ஸச்சிதானந்தமுமன்று. ஸச்சிதானந்தத்தின் அம்ஸமுமன்று.

இனி, ஹேதுவைக் குறிக்கும் ஐந்தாம் வேற்றுமைக்கு உதாஹரணம் "மண்ணில்நின்று குடம் பிறந்தது" என்ற வாக்யம். அவ்வாக்யத்தின் அர்த்தம் மண் என்ற காரணத்திலிருந்து குடம் என்ற கார்யம் தோன்றிற்று என்பது. அஃதாவது, மண்ணின் அம்ஸமே குடம், மண்ணே குயவன் ஶக்தியால் குடமாயிற்று, என்று பொருள்படும். எனவே, "ப்ரக்ருதியில் நின்று கர்மவஸ்துவும் கர்மவஸ்துவில்நின்று யஜ்ஞமும், யஜ்ஞத்தில்நின்று மேகமும், மேகத்தில்நின்று அன்னமும், அன்னத்தில்நின்று ஸ்தூலசரீரமும் பிறந்தன" என்ற வாக்யத்தில், ப்ரக்ருதியே (பரமேஶ்வரனுடைய ஶக்தியால்) கர்மவஸ்துவென்றும், யஜ்ஞமென்றும், மேகமென்றும், அன்னமென்றும், ஸ்தூல சரீரமென்றும் மாறிற்றென்று அறியவேண்டியது.

௯. அ இல் ப்ரக்ருதியை முக்ய காரணமாகக்கொண்டு ஸூக்ஷ்ம ஸ்தூல சரீரங்களை பகவான் இயற்றினார் என்றும், ௯. ரு இல் இவற்றையெல்லாம் அவர் தோற்றுவித்துச் சுமந்து கொண்டிருந்தாலும், அவர் இவற்றில் ஸங்கமற்று (பற்றற்று) நிற்கின்றார் என்றும் உபதேஶித்திருப்பதால், "பர ப்ரஹ்மத்தில்நின்று ப்ரக்ருதி பிறந்தது" என்ற வாக்யம் பர ப்ரஹ்மம் என்ற சிதாகாஶத்தில் ஒடுங்கின ப்ரக்ருதி வெளிவந்தது, தோன்றிற்று, என்று பொருள்படும். பரப்ரஹ்மந்தான் ப்ரக்ருதியாயிற்று என்று நினைக்கவேகூடாது.

(3) ஜீவாத்மாவை அவித்யாவிலிருந்து விடுவிப்பதற்காக, கர்ம சக்ரத்தை உண்டுபண்ண நினைத்து குயவன் மண்ணால் கடாதிகளைச் செய்கின்றதுபோல, ப்ரக்ருதியை முதற்காரணமாகக் கொண்டு, ஜீவர்களுக்கு ஸூக்ஷ்ம ஸ்தூல சரீரங்களையும் புவனங்களையும் போகவிஷயங்களையும் உண்டுபண்ணி, சமையல்

உண்ணல் உடுத்தல் முதலிய அநாத்ம கர்மங்களையும், யஜ்ஞம் தானம் தபஸ் என்ற ஆத்ம கர்மங்களையும் வகுத்து, ஆத்ம கர்மங்களால் தன்னைப் பூஜித்து மேலான பதவிகளைப் பெறும்படி பரமேஶ்வரன் செய்திருப்பதால்.

(4) யஜ்ஞம் தானம் தபஸ் என்ற ஆத்ம கர்மங்களை க்ரமமாக ஶ்ரத்தையோடு செய்பவர்களில் பரமாத்மா நிலையாகநின்று ப்ரகாஶிக்கும்.

கர்மாநுஷ்டானிகளின் "உருவேற, திருவேறும்" என்பது கருத்து. அஃதாவது, யஜ்ஞாதி கர்மங்களால் திருவருளை நாளுக்குநாள் ரூபீகரிக்க (சிந்திக்க, த்யானம் செய்ய), அது ஜீவாத்மாவின் மலபந்தங்களைத் தஹித்து, தன்னை அறியத் தக்க ஞான ஶக்தி அதற்கு அநுக்ரஹித்து, தன்னைப்போல ஸச்சிதானந்தமாக்கும்.

**௰௬. பார்த்த, எவன் இவ்விதம் நடத்தப்பட்ட [கர்ம] சக்ரத்தை (1) இவ்விடத்தில் (2) அநுசரிக்கவில்லையோ, அவன் துன்பத்தையே ஜீவனமாகக்கொண்டும் (3), இந்திரியக்ரீடையைப் பெற்றும் (4) பயனின்றி ஜீவிக்கிறன் (5).**

(1) பரப்ரஹ்மத்தினிடம் ஒடுங்கின ப்ரக்ருதி பராஶக்தியால் ஏவப்பட்டு, மீளவும் தோன்றி, அந்த ப்ரக்ருதியில்நின்று கர்மவஸ்துவாகிய ரஜஸ்குணம் தோன்றி, ரஜஸ்குணத்தில் நின்று யஜ்ஞமும், யஜ்ஞத்தில்நின்று மேகமும், மேகத்தில் நின்று அன்னமும், அன்னத்தில்நின்று ஸ்தூல சரீரமும் ப்ரலய கால பர்யந்தம் ஓயாமல் பரமேஶ்வரனது ஆஜ்ஞைப்படி தோன்றி வருதல் "கர்ம சக்ரம்" என்று அழைக்கப்படும். ஏனெனில் காரண கார்ய ஸம்பந்தமாகநிற்கும் யஜ்ஞமும் மேகமும் அன்னமும் ஸ்தூல சரீரமும் கர்மவஸ்துவைக்கொண்டு இயற்றப்பட்டதாலும், இவையெல்லாம், சக்ரம் ஓயாமல் உருளுவதுபோல, நடைபெற்று வருதலாலும் என்க.

ஜீவேஶ்வரஜகத் என்ற ப்ரபஞ்சம் (விரிவு) எவ்வளவோ, அவ்வளவும் பரமாத்மாவின் கர்ம சக்ரம். இதனுள் அடங்கின

அநேக நாம ரூபங்களில் ஈண்டு அதிவிசேஷ வஸ்துக்களாகிய பரப்ரஹ்மம், ப்ரக்ருதி, ரஜஸ்குணம், யஜ்ஞம், மேகம், அன்னம், ஸ்தூல சரீரம் என்றவை குறிக்கப்பட்டன. இவற்றோடு வர்ணாஸ்ரம தர்மத்தையும் கர்மபலனையும் (௰அ. ௰௨) ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி மார்க்கங்களையும் (அ. ௨௰௪, ௨௰௭) கூட்டிக் கர்ம சக்ரமென அறிக.

(2) இந்தக் கர்மபூமி என்ற மனுஷ்ய லோகத்தில்.

(3) எப்பொழுதும் துக்கத்தையே ஸம்பாதித்துக்கொண்டும்.

கர்ம சக்ரத்தின் தன்மையை அறியாதவன் விருப்பு வெறுப்பில் அழுந்தி, ஒன்றிலும் த்ருப்தி பெறுமல், துக்க சொரூபியாய்த் திரிவான்.

(4) மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற இந்திரியங்களின் விளையாட்டுக்கு அடிமைப்பட்டும்.

இந்திரியக்ரீடை=இந்திரியங்கள் தத்தம் விஷயங்களை நாடிக்கொண்டேயிருத்தல்.

(5) மானுட தேகத்தைப் பெற்றும், அதனல் பெறவேண்டிய சித்த ஸுத்தியையும் ஞானத்தையும் கவனிக்காமல், அநாத்ம விஷயங்களைப்பற்றி வீணுக ஆயுளைப் போக்குவான்.

கர்ம சக்ரத்தின் இயல்பை அறியாத ஜீவன்பத்தன் துக்க சொரூபியாகத் திரிவான் என்று இந்த மந்த்ரத்தில் கூறி, அடுத்த மந்த்ரத்தில் கர்ம சக்ரத்தின் பயனை முற்றுகப் பெற்று ஆனந்த சொரூபியான ஜீவன்முக்தன் அந்தச் சக்ரத்தில்நின்று விடுபட்டவன் என்று உபதேசிக்கின்றுர்.

ஜீவன்பத்தன்=கர்ம சக்ரத்தில் பந்திக்கப்பட்ட (கட்டுப்பட்ட) ஜீவன்.

ஜீவன்முக்தன்=கர்ம சக்ரத்தில்நின்று விடுபட்ட ஜீவன்.

**௧௭. எந்த மானவன் (1) ஆத்மாவில் அன்புபெற்றவனே, ஆத்மாவினல் த்ருப்தி அடைந்தவனே, ஆத்மாவில் ஸந்தோஷம் பெற்றவனே (2) அவனுக்குக் (3) [கர்ம சக்ரம்] கார்யமில்லை (4.)**

(1) எந்த மனுஷ்யன்.

(2) பரமாத்மாவில் ப்ரீதிகொண்டு, அந்தப் பரம்பொருளே எனக்குப் போதுமென்றும், அதனிலேயே ஆநந்தமடைந்தும் இருப்பானே.

கர்ம சக்ரத்தின் ஸித்தாந்தத்தை அறிந்து, அவரகர்ம (உ. சம்௯) பலன்களாகிய ஸ்வர்க்காதி சிற்றின்பங்களை அவமதித்து, உத்க்ருஷ்ட கர்ம பலன்களாகிய சித்த ஶுத்தியையும் ஸமத்வபுத்தியையும் பெற்ற ஞானதிகாரியே ஆத்மானந்தத்தைப் பெறத்தக்கவன்.

(3) இவ்வாறு சித்த ஶுத்தியையும் ஸமத்வபுத்தியையும் ஆத்மானந்தத்தையும் பெற்று வாழும் ஜீவன்முக்தனுக்கு (ஆத்மஞானிக்கு).

(4) கர்ம சக்ரம் இனி வேண்டியதில்லை.

பெறவேண்டிய ப்ரயோஜனத்தைப் பெற்றதினமே, அவன் கர்ம சக்ரத்திலிருந்து விடுபட்டு ஸச்சிதானந்த பரமாத்மாவோடு கூடி நிற்பான். ஆதலால், இவனுக்குக் கர்மசக்ரம் சவம் சுடு தடி போலாகும்.

**௰அ. இவ்விடத்தில் (¹) அவனுக்கு [யஜ்ஞாதி கர்மங்களைச்) செய்ததாலும் ஒருபலனில்லை, செய்யாமையாலும் பலனில்லை (²). ஸகல பூதங்களில் [தன்] பலனுக்காக அண்டவேண்டிய பூதமொன்றும் இவனுக்கில்லை (³).**

(1) இந்த லோகத்தில் (ப்ராரப்த கர்மம் முடிந்து, விதேக முக்தி பெறும் வரையில்). உ. ௭௰உ க்குரிய ⁽³⁾ம் குறிப்பைப் பார்க்க.

(2) ஜீவன்முக்தன் யஜ்ஞாதி கர்மங்களைச் செய்தாலும் செய்யாவிடினும், அவனுக்கு அக்கர்மங்களால் ஒரு பலனுமில்லை.

கர்ம சக்ரத்துக்கு அப்பாற்பட்டதால் அவனுடைய கர்மேந்திரியங்கள் செய்யும் கர்மங்களின் பலன்கள் அவனைச் சாரா. அப்பலன்களைக் கர்மசக்ரம் அவன் நண்பர் பகைஞருக்குப் பிரித்தூட்டும், நண்பருக்குப் புண்யபலனையும், பகைஞருக்குப் பாபபலனையும் ஊட்டும்.

(3) தேவர் மானுடர் முதலிய ஜீவர்களில், ஒருவரையும் தன் நன்மைக்காக இவன் பின்தொடரவேண்டியதில்லை. ஸர்வ வ்யாபக பரமேஶ்வரனை அண்டியிருப்பதால், ஜீவன்முக்தனுடைய இஷ்ட காம்யங்களைச் சராசரங்களால் அது நிறைவேற்றும்.

௧௯. ஆதலால் (1), செய்யவேண்டிய கர்மத்தை எக்காலமும் ஸங்கமற்றுச் செய். கர்மத்தை ஸங்கமற்றுச் செய்யும் புருஷன் பரத்தைப் பெறுகின்றான் (2).

(1) கர்ம சக்ரத்தின் நிலை இப்படியிருப்பதால்.

(2) உனக்குரிய வர்ண தர்மங்களையும் ஆஶ்ரம தர்மங்களையும் பற்றில்லாமற் செய்.

க்ஷத்த்ரியனுக்குரிய யுத்த கர்மத்தை நீ கைவிட்டால், கர்ம சக்ரத்துக்கு விரோதமாக நடந்து பெருந்துக்கத்துக்கு ஆளாவாய். ஆனால் அந்தச் சக்ரத்துக்கு இசைந்து நடந்தால், மேலான பதவிகளை அடைவாய் என்பது கருத்து. ௧௬. ௨௰௩.

௨௰. ஜனகன் முதலானவர்கள் கர்மத்தினாலேயே ஸம்ஸித்தியைப் பெற்றார்கள் (1). நீயும் லோக ஸம்க்ரஹத்தையே கவனிக்கின்றவனாய் (2), கர்மத்தைச் செய்வதற்குத் தக்கவன்.

(1) க்ஷத்த்ரியர்களில் மஹா கீர்த்தி பெற்ற ஜனகன் முதலிய அரசர்கள், தங்கள் ராஜ்யத்தைச் செவ்வையாக நடத்திக்கொண்டே, நைஷ்கர்ம்ய ஸித்தியைப் பெற்றார்கள்.

(2) லோக ஸங்க்ரஹத்துக்காகவே, பரோபகாரத்துக்காகவே.

பரமேஶ்வரன் தன் பஞ்ச க்ருத்யங்களைத் தன் நன்மைக்காகச் செய்யாமல் ஜீவாத்மாக்கள் உய்யும்பொருட்டே செய்வது போல (௩. ௨௰௩), நீ உன் ப்ரக்ருதியின் சுகங்களைக் கருதாமல் லோகத்தாரின் நன்மைக்காகவே உன் யுத்த கர்மத்தைச் செய்வதற்குரியவன்.

ஸம்க்ரஹம் (ஸம் = செவ்வையாக, க்ரஹம் = பிடித்தல், நிறுத்துதல்) = கெட்டவழியிற் செல்லவிடாமல் நிறுத்துதல்,

கரையேற்றல், பரிபாலனஞ்செய்தல்.

உ௰௧. ஶ்ரேஷ்டன் (1) எதனை எதனைச் செய்கின்றனோ, அதனை அதனை மற்றவர் செய்கின்றார்கள். அவன் எதனை ப்ரமாணமாகக் (2) கொள்ளுகின்றனோ, அதனை லோகம் அநுஷ்டிக்கின்றது.

(1) தலைவன்.
(2) ஸாதனமாக; ஸித்தியை ஏற்படுத்தும் கருவியாக.

உ௰௨. பார்த்த, மூவுலகங்களிலும் எனக்குச் (1) செய்யவேண்டியது ஒன்றுமில்லை. [இதுவரையில்] என்னால் பெறப்படாததாய் [இனிப்] பெறவேண்டிய பொருள் இல்லை (2). [ஆனால் நான் பஞ்ச க்ருத்யம் (3) என்று] கர்மத்திலேயே இருக்கின்றேன்.

(1) என் நன்மையைக் கருதி ஒரு கர்மமும் செய்யவேண்டியதில்லை.
(2) ப்ரயாஸப்பட்டு ஒருபொருளையும் நான் ஸம்பாதிக்க வேண்டியதில்லை.
(3) பஞ்ச க்ருத்யமாவன: ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோதானம், அநுக்ரஹம்.

உ௰௩. மனுஷர் எல்லாம் என் வழியை (1) அநுஸரிக்கின்றனர். நான் ஒரு ஸமயத்திலாவது [எனது பஞ்ச] க்ருத்யத்தில் சோம்பலற்று இருக்கவில்லையாகில் (2), [அவர்கள் தங்கள் கர்மத்தைச் செய்யமாட்டார்கள்].

(1) நல்லவர்கள் ஸகல தேஶங்களிலும் நான் வகுத்த கர்மாநுஷ்டான மார்க்கத்தை.
(2) ஜாக்ரதையாக எனது பஞ்ச க்ருத்யங்களை அந்தந்த வேளையில் செய்யாதுபோனால்.

உ௰௪. நான் [பஞ்ச] க்ருத்யத்தைச் செய்யாதிருந்தால், இந்த லோக ஜனங்கள் சிதறுவார்கள் (1). ஸங்கீரத்தையும் (2) செய்கின்றவனாவேன். இந்த ப்ரஜைகளை ஹிம்ஸை செய்கின்றவனாவேன் (3).

(1) ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி மார்க்கங்களை அநுஸரிக்காமல், ஆசைகளால் அடிபட்டுத் திரிவார்கள்.

(2) ஸங்கரம்= கலப்பு, மிஶ்ரம் "ஸம்" என்ற உபஸர்க்கத்தோடு கூடின "க்ரு" தாது, கலப்பு என்று பொருள்படும்.

ஸங்கரத்தையும் செய்கின்றவனுவேன்=நான் ஸ்ருஷ்டித்த குண கர்ம நியதிகளையும் குழப்பின கர்த்தாவாவேன்.

(3) "உபஹந்யாம்" = ஹிம்ஸிப்பேன், ஹிம்ஸை செய்கின்றவனுவேன், ப்ரயோஜனமற்ற துன்பங்களை உண்டுபண்ணுகிறவனுவேன்.

உ௰௫. பார்த்த, எவ்விதம் கர்ம [பல] த்தில் பற்றுவைத்து அவித்வான்கள் கர்மங்களைச் செய்கின்றர்களோ, அவ்விதம் வித்வான், லோக ஸங்க்ரஹத்தைச் செய்யக் கருதி, [கர்மபலத்தில்] பற்றற்றவனுய் [கர்மங்களைச் செய்வான்] (1).

(1) வித்வான்களுக்கும் அவித்வான்களுக்கும் (அறிவாளிகளுக்கும் மூடர்களுக்கும்) உள்ள வித்யாசம் அவர்கள் கர்மாநுஷ்டானத்தால் விளங்கும் என்றும்; அவித்வான் கர்மபல காமி, வித்வான் கர்மபல த்யாகி, என்றும், அர்ஜுனன் கர்ம பல த்யாகம் செய்யவேண்டும் என்றும், இந்த மந்த்ரத்தில் கூறப்பட்டது.

உ௰௬. கர்ம [பல] த்தில் பற்றுவைத்த அஜ்ஞானிகளுக்கு வித்வான் [அக்கர்மாநுஷ்டானங்களைப் பழித்து] புத்தி பேதத்தைப் பிறப்பிக்கக்கூடாது (1). [தானும் ஸமத்வ புத்தி] யுக்தனுய் (2), [தனக்குரிய கர்மத்தைச்] செய்துகொண்டு, [பிறருக்குரிய] ஸகல கர்மங்களையும் செய்விக்கவேண்டும்.

(1) அறிவாளி ஒருவருக்கும் புத்திபேதத்தைச் செய்யமாட்டான் என்றும், அர்ஜுனன் தன் யுத்த கர்மத்தைவிட்டால் லோகவாஸிகளின் புத்தி மாறும் என்றும், பகவான் உபதேஶித்த வாக்குகள் அர்ஜுனனுடைய ஸம்ஶய புத்தியைத் தீர்க்கவே உதயமானவை என்றும், ஈண்டுக் குறிக்கப்பட்டது.

மூன்றும் அத்யாயத்தில் இரண்டாம் மந்த்ரத்தில் கலப்

புள்ளதுபோலிருக்கின்ற வாக்யத்தால் எனது புத்தியை மயக்குகின்றவன் போலிருக்கின்றாய், என்று கூறின அர்ஜுனனுக்கு உ௰௬ இல் ஸமாதானம் சொன்னார். அறிவாளிகள் அறிவீனர்களுடைய புத்தியைக் கலக்கமாட்டார்கள் என்றும், நீ அறிவாளியாயிருப்பதால் பாமர (ப்ரமாணமற்ற) ஜனங்களின் புத்தியைப் பிளவுபடுத்திக் கெட்ட வழியில் விடக்கூடாது என்றும், உரைத்தார்.

புத்திபேதம் என்றது புத்தி இரண்டுபட்டு, அதுவோ இதுவோ என்ற ஸம்ஶயங்கொண்ட புத்திகள்.

"புத்திபேதத்தைப் பிறப்பிக்கக்கூடாது" என்ற வாக்யத்தின் பொருள் நல்லபுத்தியோடு இருக்கின்றவர்களில் விபரீத நிலைகளை உண்டுபடுத்தக் கூடாதென்றதே. நல்ல மார்க்கத்தில் சரியாக நடக்கின்றவர்களின் புத்தியில் மாறாட்டம் செய்வது பாபம். கெட்ட மார்க்கத்தில் நிஶ்சயத்தோடு செல்லுகின்றவர்களில் ஸம்ஶயம் உண்டுபடுத்துகிறது புத்திபேதமன்று. இது, புத்தியோக ஸாதனமாதலால், புண்ய கர்மம் என்றறிக.

(2) உ. சரு௮ இல் யோகம் ஸமத்வம் என்று கூறப்படுகின்றது என்றதால், யுக்தனைப் ("யுக்த") என்ற பதம் ஸமத்வம் பெற்றவனைப் ("ஸம:") என்று பொருள்படும். விருப்பு வெறுப்பு முதலிய த்வந்த்வங்களை ஸமப்படுத்தினவன் யுக்தன்.

இனி, கர்மாநுஷ்டானத்தின் கௌஶலமாகிய நைஷ்கர்ம்யத்தைப் பெறுவதற்கு கர்த்ருத்வ புத்தி தடையாயிருப்பதால், அந்தக் கர்த்ருத்வத்தின் உற்பத்தியை அடுத்த மந்த்ரத்தில் விளக்குகின்றார்.

**உ௰எ. கர்மங்கள் எல்லாம் ப்ரக்ருதியின் குணங்களினால் செய்யப்படுகின்றன (1). அஹங்கார விமூட ஆத்மா (2) நான் கர்த்தா (3) என்று எண்ணுகின்றான்.**

(1) கர்மங்களைச் செய்பவன் ஜீவாத்மா அன்று. ப்ரக்ருதியில் நியதியற்று மிக மிஶ்ரமாயும் இருள்ரூபமாயும் இருந்த தன்மைகளைப் பகவான் தனது ஶக்தியால் வெளியிட்டுத் தமஸ்

ரஜஸ் ஸத்வம் என்ற குணங்களாகப் பிரித்தார். இந்தக் குணங்களில் ரஜஸ் குணம் கர்மேந்த்ரியங்களினின்று அவற்றைக் கர்மங்களில் ஏவும். ஆதலால், கர்ம கர்த்தா ரஜஸ் குணமே, ஜீவனன்று.

(2) தமோகுணம் என்ற இருளினால் மயக்கப்பட்ட ஜீவாத்மா, அஹங்கார அவஸ்த்தையில், ரஜோ குண வ்ருத்தியால் கர்மேந்திரியங்கள் செய்யும் கர்மங்களை நான் தான் செய்கின்றேன் என்று அறிகிறான்.

அஹங்காரம் என்றது ஸூக்ஷ்ம ஶரீரத்தின் ஒரு தத்வம். இதனோடு உள்ளம் மனம் புத்தி சித்தம் என்ற தத்வங்கள் கூடி அந்தஃகரணங்கள் எனப்படும். அந்தஃகரணங்களும் புறக்கரணங்களுமாகிய மெய் வாய் கண் மூக்குச் செவியோடுகூடி ஞான ஸாதனங்கள் (அறியும் கருவிகள்) எனப்படும். இந்தப் பத்து ஞான ஸாதனங்களும், வாக்கு பாணி பாதம் பாயு உபஸ்தம் என்ற ஐந்து கர்மேந்திரியங்களும், ப்ராணன் அபானன் ஸமானன் வ்யானன் உதானன் என்ற ஐந்து வாயுக்களும், ஆக உ௰ தத்வங்களும் ஒன்றுகூடி ஜீவாத்மாவின் ஸூக்ஷ்ம ஶரீரம் எனப்படும்.

இந்த உ௰ தத்வங்களில் மனம் நினைக்கும், புத்தி விசாரிக்கும், சித்தம் தீர்மானிக்கும், அஹங்காரம் தீர்மானித்ததை "நான் செய்யவேண்டும்" என்று ஆடும். உள்ளம் ஞான ஸாதனங்களால் அறியப்பட்டவைகளை வாஸனைகளாக வைத்திருக்கும். அறியாமை என்ற தமஸில் அழுந்தப்பட்ட ஜீவாத்மா, அஹங்கார அவஸ்த்தையைப் பெற்ற ஸமயத்தில், கர்மேந்திரியங்கள் செய்யும் தத்தம் கர்மத்தை நான் செய்கின்றேன் என்று அறியும்.

(3) நான் கர்த்தா=நான் செய்கின்றவன்.

நான் கர்மங்களைச் செய்கின்றேன் என்று எண்ணுகின்றவன் கர்த்ருத்வம் உடையவன்.

கர்த்ருத்வம் (கர்த்ரு=கர்த்தா, செய்கின்றவன்; த்வம்=தன்மை)=கர்த்தாவின் தன்மை.

இந்தக் கர்த்ருத்வம் ஜீவாத்மாவுக்கு ப்ரக்ருதி ஸங்கத்தால் வந்தது. ப்ரக்ருதியில் பற்றிப் பிடிக்கும் தன்மையிருப்பதாலும், ஜீவாத்மா தன்னைப் பற்றினவர்களில் அன்பு கொள்ளுவதாலும், ப்ரக்ருதியின் தொழிலைத் தன் தொழில் என்று எண்ணி, அத்தொழில்களால் மனவில் தோன்றும் சுக துக்கங்களைத் தனதென்று மயங்கித் தட்டழியும்.

**௨௰௮. மஹாபாஹு, குண கர்ம விபாகத்தின் உண்மையை அறிந்தவன் (1) குணங்கள் குணங்களில் இருக்கின்றன என்று நிஶ்சயித்து (2), [குணங்களில்] ஸங்கத்தைப் பெறுகிறனில்லை (3).**

(1) குணகர்மவிபாகம்=குணங்களின் ப்ரவாகப்படி ஏற்பட்ட கர்மங்களின் பிரிவுபாடு.

அத்ருஶ்ய குணங்களை அவற்றின் கார்யங்களால் அறியலாம்.

தமோகுணத்தின் கார்யம் அஞ்ஞானம் மோஹம் மறதி; ரஜஸ் குணத்தின் கார்யம் விருப்பு வெறுப்பு செயல்; ஸத்வ குணத்தின் கார்யம் விசாரம், கற்றல், சுகம்.

இம்மூன்று குணங்களின் வ்ருத்திகள் இப்படிப் பிரிக்கப்பட்டாலும், ஒன்றோடொன்று கலந்தே நிற்கும். ஆதலால், தமோகுணம் தமஸில் தமஸுமாம், தமஸில் ரஜஸுமாம், தமஸில் ஸத்வமுமாகும்; ரஜோகுணம் ரஜஸில் தமஸுமாம், ரஜஸில் ரஜஸுமாம், ரஜஸில் ஸத்வமுமாகும்; ஸத்வகுணம் ஸத்வத்தில் தமஸுமாம், ஸத்வத்தில் ரஜஸுமாம், ஸத்வத்தில் ஸத்வமுமாகும்.

இந்த நவ விபாகங்களில் (பிரிவுகளில்) எந்தக் குணம் ப்ரபலமாயிற்றோ, அது மனம் வாக்கு பாணி பாதம் பாயு உபஸ்தம் என்ற இந்திரியங்களில் ப்ரவேஶித்து, அதற்கேற்ற கர்மங்களைச் செய்விக்கும். இப்படி குணங்களில்நின்று கர்மங்கள் பலவிதமாக ஜனிக்கின்றன என்ற உண்மையை அறிந்த ஜீவாத்மா கர்மேந்த்ரியங்களால் செய்யப்பட்ட கர்மங்களை நான் செய்கிறேன் என்று மயங்கமாட்டான்.

(2) அலைகளும் சாறலும் நுரையும் ஸமுத்ரத்தில் தோன்று

வதுபோல, குணங்களின் காரியங்களாகிய ஸூக்ஷ்ம ஸ்தூல சரீரங்களும், தேசம் வீடு விஷயம் முதலிய போக்ய வஸ்துக்களும், புண்ய பாவ மிஶ்ர கர்மங்களும், குணங்களிலேயே தோனறுகின்றன என்றும் நிஶ்சயித்து.

(3) ஆகாஶம் எப்படி ஸமுத்ரத்தையும் அதன் கார்யங்களாகிய அலை சார்ல் நுரையையும் பற்றுமல் இருக்கின்றதோ, அப்படியே அறிவுள்ள ஜீவாத்மா குணங்களையாவது குணங்களின் கார்யங்களையாவது பற்றுமல் வாழ்வான்.

"குணங்கள் குணங்களில் இருக்கின்றன" என்ற வாக்யம் குணங்கள் குணி என்ற ஆத்மாவில் இல்லை என்று குறிக்கின்றது.

ஶரீரத்தைத் தரித்தவன் ஶரீரி (ஆத்மா) என்றதுபோல, குணங்களைத் தரித்தவன் குணி. குணியாகிய ஜீவாத்மா வேறு, அதன்மேல் ஏறிக் க்ரீடிக்கும் குணங்கள் வேறு.

**உ௰௯. ப்ரக்ருதியின் குணங்களினுல் மிக மோகம் பெற்றவர்கள் (1) குணங்களுடைய கர்மங்களில் பற்றைப் பெறுகின்றனர் (2). அகண்ட வஸ்துவை அறியாத மந்தர்களை அகண்ட வஸ்துவை அறிந்தவன் [புத்தி பேதம் செய்து] சலனப்படுத்தமாட்டான் (3).**

(1) ப்ரக்ருதியின் குணங்கள் மனம் வாக்கு முதலிய இந்த்ரியங்களில் ப்ரவேஶித்துக் கர்மங்களைச் செய்விக்கும் தன்மையைப்பற்றி அறியாத மிகுமூடர்கள்.

(2) குணங்கள் செய்யும் கர்மங்களை நான் செய்கிறேன் என்று எண்ணி, அதில் சிக்குண்டு, பயம் சோர்வு துக்கங்களை அநுபவிக்கின்றனர்.

(3) கர்த்ருத்வ புத்தியின் உற்பத்தியையும், அதனுல் வரும் துன்பங்களையும் அறிந்த மஹான் அபக்குவிகளுக்கு அவற்றை விளக்கமாட்டான். ஏனெனில், ஞானுதிகாரமின்மையால் அவர்களுடைய புத்தி பேதித்துத் தங்கள் கர்மாநுஷ்டானத்தை அவமதிக்குமாதலால்.

"அக்ருத்ஸ்நவித:"=அகண்டவஸ்துவை அறியாத. ("க்ருத்ஸ்நம்"=முழுப்பொருள், பிரிக்கப்படாத வஸ்து, அகண்ட

ஸச்சிதானந்தம்; "அ"+"வித:"=அறியாத).

மந்தர்=மந்த புத்தியுடையவர்கள், மூடர்.

"க்ருத்ஸ்நவித்"=அகண்ட வஸ்துவை அறிந்தவன், ஆத்ம ஞானி, ஜீவன்முக்தன்.

கர்மபல காமிக்கு நைஷ்கர்ம்யத்தைப்பற்றி உபதேசித்தால், அவன் புத்தி சலனப்பட்டு, அவனுக்குரிய அவர கர்மானுஷ்டானத்தில் ஶ்ரத்தையற்று, உத்க்ருஷ்ட கர்மானுஷ்டானத்தில் ப்ரவேஶிக்க ஶக்தியில்லாதவனாய்க் கெடுவான்.

**௩௰. அத்யாத்ம புத்தியால் (1) எல்லாக் கர்மங்களையும் என்னிடம் ந்யாஸம் செய்து (2), தன் ப்ரக்ருதியின் ஹிதத்தை அபேக்ஷிக்காதவனும் (3) மமதையற்றவனும் (4) துக்கமற்றவனும் ஆகி, யுத்தம் செய்.**

(1) "அத்யாத்ம சேதஸா" = ஆத்மாவைப் பற்றின புத்தியால்.

"அத்யாத்ம" (அதி+ஆத்ம = இல்+ஆத்மா = ஆத்மாவிலுள்ள) = ஆத்மாவை ஆதாரமாகக்கொண்ட.

ஆத்மாவை ஆதாரமாகக் கொண்ட புத்தி ஆத்மாவில் ப்ரதிஷ்டைபெற்ற புத்தி. இது லோகவிஷயங்களைப் பற்றித் திரியாமல் ஆத்ம விஷயங்களையே விசாரிக்கும்.

(2) ப்ரக்ருதியின் குணங்களால் செய்யப்பட்ட கர்மங்களை பரமேஶ்வரனிடம் ஒப்புவித்து.

ஈஶ்வரனிடம் ந்யாஸிக்கப்பட்ட கர்மம் ஈஶ்வரார்ப்பண கர்மம். நான் (என்ற ஜீவாத்மா) கர்மங்களைச் செய்யவில்லை, அவற்றைப் ப்ரக்ருதி செய்கின்றது, ப்ரக்ருதியும் ப்ரக்ருதியின் கர்மமும் ஈஶ்வரனன்றி நடவாதபடியால், ஈஶ்வரனே ஸர்வ காரணன் என்று நிஶ்சயித்து, அவரிடம் உடல் பொருள் ஆவி மூன்றையும் அர்ப்பணம் செய்தல் (ஒப்புவித்தல்) ஈஶ்வரார்ப்பணம்.

(3) "நிராஶீ:"=ஆஶீஸ் அற்றவன். மானஸ தேக விருப்பு வெறுப்புக்களில் ஸங்கமில்லாதவன், அஹந்தையற்றவன்.

(4) "நிர்மம:"=தன் தேகத்தைச் சூழ்ந்திருக்கும் ஜடப்

பொருள்களை எனது என்றெண்ணுமல் வாழ்கின்றவன், மமதை யற்றவன்.

(5) க்ஷத்ரிய புத்தியுள்ளவனுகிய நீ லோக ஸம்க்ரஹத்துக் காகப் (௩. உ௰) போர் செய்.

அடுத்த மந்த்ரத்தில், இந்த ஈஶ்வரார்ப்பண புத்தியோடு கர்மங்களைச் செய்கின்றவன் அகர்த்தாவாகிறுன் எனப்படும்.

**௩௰௧. எந்த மனுஷர்கள் எனது இந்த [நைஷ்கர்ம்ய] மதத்தை (1) அஸூயையற்றவர்களாகவும் (2) ஶ்ரத்தையுள்ளவர்களாகவும் (3) நித்யம் அநுஷ்டிக்கின்றர்களோ, அவர்கள் கர்மங்களால் விடப்படுகின்றனர் (4).**

(1) என்றால் கூறப்பட்ட நைஷ்கர்ம்யம் என்ற கொள்கையை (புத்தியின் நிலையை).

(2) அஸூயை = திருப்தியீனம், ஸம்மதம் இல்லாமை, பொறுமை.

அஸூயையற்றவர்கள் = பொறுக்கும் மனமுடையவர்கள். "இது கடினமாயிருந்தும் இதைக் கவனமாய்க் கேட்போம், சிந்திப்போம்", என்ற புத்தியுள்ளவர்கள்.

நான் என்று அழைக்கப்பட்ட ஆத்மா கர்மங்களைச் செய்கிறதில்லை; கர்மேந்திரியங்களே ரஜஸ் குணத்தால் ஏவப்பட்டுக் கர்மங்களைச் செய்கின்றன; அக்கர்மங்கள் ஈஶ்வர ஸந்நிதானத்தில் அவரது ஶக்தியை அண்டியும் அவரது ஆஞ்ஞைப்படியும் நடைபெறுவதால், அவரே கர்த்தா, நான் கர்த்தாவன்று; அவர் கர்த்தாவாகினும், பற்றில்லாமல் ஸர்வத்தையும் நடத்தி வருவதால், அவர் அகர்த்தா; கர்த்திருத்வமற்ற பரமேஶ்வரனிடம் எனக்கருளிய கர்மேந்திரியங்கள் செய்யும் கர்மங்களை ஒப்புவிக்கவேண்டும்: என்பது முதலிய நிஶ்சயங்களை க்ரஹிக்க வருத்தப்படும் அபக்விகள் நைஷ்கர்ம்ய மதத்தில் அஸூயை பெற்றவர்கள் என்றறிக. அஹந்தை மமதை என்ற மலங்கள் நிறைந்த மனுஷர்கள் நிஷ்கர்மாவின் தன்மைகளைப் பொய் மதம் என்றும், அஸாத்ய நிலை என்றும் இகழுவார்கள்.

(3) நைஷ்கர்ம்ய மதத்தில் அஸூயையற்றிருப்பது போ தாது. அதில் மிக அன்பு (ஶ்ரத்தை) பெற்றுத் தினந்தோறும் கர்மங்களை ஈஶ்வரனிடம் ந்யாஸம் செய்து வரவேண்டும்.

(4) ஈஶ்வரார்ப்பண கர்மாநுஷ்டானிகள் அகர்த்ருத்வத் தைப் பெறுவார்கள்.

**௩௰உ. எவர்கள் அஸூயையுள்ளவர்களாய் எனது இந்த [நைஷ்கர்ம்ய] மதத்தை அநுசரிக்கவில்லையோ (1), அவர்களை ஸர்வ ஞானத்தில் விமூடர்களாகவும் (2) விவேகமற்றவர்களாகவும் (3) நாஶத்தை அடைந்தவர்களாகவும் (4) அறி.**

(1) நைஷ்கர்ம்ய தர்மத்தின் லக்ஷணத்தைப் பொறுதி யோடு மனமடங்கிக் கேட்டும் சிந்தித்தும் அறியாது போனால்.

(2) ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்ட அகண்டாகார ஆத்மா வைப் பற்றிய ஞானத்தில் மிக மூடர்களாயும்.

ஸர்வஞானம் = அகண்ட வஸ்துவாகிய பரமாத்மாவைப் பற்றிய ஞானம்.

"ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" (இதெல்லாம் ப்ரஹ்மம்) என்ற மஹா வாக்யம் உபநிஷத்தில் இருப்பதாலும், அகண்ட பரமாத்மா கண்டித ப்ரக்ருதியை வ்யாபித்ததால் நாநாரூப ஜகத தோன்றிற்று என்று ஜீவன்முக்தர் தங்கள் அநுபவத்தில் கண்டதாலும், "ஸர்வஞானம்" என்றது அகண்ட பரமாத்மா வைப் பற்றிய ஞானமென்றே பொருள்படும். இதை "க்ருத்ஸ்ந ஞானம்" என்றும் கூறுவார் பெரியோர்.

(3) ஆத்மா எது, அனாத்மா எது, என்று அறியத்தக்க விவேகம் இல்லாதவர்களாயும்.

(4) பிறந்தும் பிறப்பின் ப்ரயோஜனமாகிய நைஷ்கர்ம்ய தர்மத்தை அறியாதவர்களுக்கு இப்பிறவி நாஶமாய்ப் போயி ற்று என்பது பற்றி, இவர்கள் நாஶத்தை அடைந்தவர்கள் என்றார்.

நாஶம் = இல்லாமை; பிறந்துட பிறவி பெறுதவனுடைய தன்மை; இருளில் மூழ்கின நிலை.

௩௰௩. ஞானவானும் தனது ப்ரக்ருதிக்கு இசைவாக முயல்கின்றன் (1). பூதங்கள் (2) [தத்தம்] ப்ரக்ருதியை அடைகின்றன (3). [ப்ரக்ருதியை] நிக்ரஹம் என்ன செய்யும் (4).

(1) ப்ரக்ருதியாகிய காரண ஸூக்ஷ்ம ஸ்தூல சரீரங்கள் வேறு, நான் வேறு, என்று உள்ளபடி அறிந்த ஜீவன்முக்தனுனும், அந்தச் சரீரங்களின் குணங்களுக்கு ஏற்றபடி பரோபகார முயற்சிகளில் ப்ரவேசிக்கின்றான்.

(2) பூதங்கள் = ஜீவர்கள், பந்தப்பட்ட ஜீவாத்மாக்கள்.

(3) தத்தம் சரீரங்களின் குணங்களுக்கு அடிமைப்பட்டே இருக்கின்றனர்.

(4) ப்ரக்ருதி ராக த்வேஷ ரூபமாயும், தாமஸ ராஜஸ ஸத்வ குண ரூபமாயும், மாறிமாறிச் சேடித்துக்கொண்டிருப்பதால், ப்ரக்ருதியில் அகப்பட்ட ஜீவன் அதை எப்படி அடக்குவான்?

நிக்ரஹம் = அடக்கம்.

ப்ரக்ருதி அடங்காத வஸ்துவானபடியால், ஜீவாத்மா, ப்ரக்ருதியில் ஸங்கமில்லாமல், தனித்து நிற்கவேண்டும் என்று அடுத்த மந்த்ரத்தில் உபதேசிக்கின்றார்.

௩௰௪. ஒவ்வொரு இந்த்ரியத்தின் விஷயத்தில் (1) ராக த்வேஷங்கள் நிலைபெற்றவைகள் (2). அவ்விரண்டுக்கும் [தேஹி] வஸமாகக் கூடாது (3). அவை இவனுக்குப் பரிபந்திகள் (4).

(1) "இந்த்ரியஸ்ய இந்த்ரியஸ்ய அர்த்தே" (இந்த்ரியத்தின் இந்த்ரியத்தின் அர்த்தத்தில்) என்ற வாக்யம் ஸ்லோக அக்ஷரக் கணக்குக்காக ஏற்பட்டது. "இந்திரியங்களின் அர்த்தங்களில்" என்று பன்மையாகக் கூறவேண்டிய இடத்தில் "இந்த்ரியத்தின் இந்த்ரியத்தின் அர்த்தத்தில்" என்று இரட்டித்த ஒருமையாகக் கூறப்பட்டது. "ஒவ்வொரு இந்த்ரியத்தின் விஷயத்தில்" என்று பொருள்படும்.

(2) ஒருவனுடைய மனஸுக்குள் இருக்கும் ராக த்வேஷ

ங்கள் எவ்விதம் வெளியிலுள்ள விஷயங்களில் நிலைபெற்றிருக்கின்றன எனில்: மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற இந்த்ரியங்கள் தத்தம் விஷயங்களாகிய ஸ்பர்ஶம் ரஸம் ரூபம் கந்தம் ஶப்தம் என்றவைகளைப் பற்றினவுடனே, அவ்விஷயங்களின் ப்ரதிபிம்பங்கள் மனஸில் தோன்றும். தோன்ற, மனஸ் அப்ப்ரதிபிம்பங்களைப் பற்றும். பற்றின ஸமயத்தில் மனஸிலுள்ள ராகமாவது, த்வேஷமாவது, உதயமாகிப் ப்ரதிபிம்பத்தோடு நிற்கும். இந்த ரஹஸ்யத்தை அறியாத ஜீவாத்மா ராக ஸம்பந்தமான விஷயத்தை நன்றென்றும், த்வேஷ ஸம்பந்தமான விஷயத்தைத் தீதென்றும், நினைக்கும். ராக த்வேஷங்களற்ற ஞானி விஷயங்களை நல்லவை கெட்டவை என்று கூற மாட்டான்.

எனவே, "இந்த்ரியத்தின் விஷயத்தில் ராகத்வேஷங்கள் நிலைபெற்றவைகள்" என்ற வாக்யம் அஞ்ஞானியின் மனஸில் தோன்றின விஷயப் ப்ரதிபிம்பங்களில் விருப்பும் வெறுப்பும் ப்ரதிஷ்டை பெற்றிருக்கின்றன, என்று பொருள்படும்.

(3) விருப்பு வெறுப்புகள் மனஸில் தோன்றினாலும், ஜீவாத்மா அவைகளுக்கு அடிமைப்படக்கூடாது. அவற்றை ஜயிக்கவேண்டும், அல்லது அவற்றைவிட்டுத் தான் எட்டிநிற்க வேண்டும்.

(4) ஏனெனில், அவைகள் ஜீவாத்மாவுக்கு மாறான வழியுள்ளவைகளானபடியால்.

பரிபந்திகள்=மாறான வழியுள்ளவைகள், நேர் விரோதிகள்.

ராக த்வேஷங்களை அண்டின ஜீவன் துக்க சொரூபியாகுவதாலும், அவற்றை விட்டவன் ஆநந்த சொரூபியாகுவதாலும், அவை ஜீவனுக்கு நேர் விரோதிகள் என்று இந்த மந்த்ரத்தில் விளக்கி, அடுத்த மந்த்ரத்தில் விஷய ஸாதகங்களை நாடும் விருப்பங்கள் மனம் வாக்கு காயங்களைத் தன் நிலைக்கு மாறான பரதர்மங்களில் ஏவும் என்றும், அதனால் ஸ்வதர்ம அநுஷ்டானத்தின் ப்ரயோஜனமாகிய இந்திரிய ஶாந்தியும் ஶாந்தியும் ஸித்திக்கமாட்டா என்றும், உபதேஶிக்கின்றார்.

௩௰௫. சாதுர்யமாக அநுஷ்டிக்கப்பட்ட (1) பரதர்மத்திலும்(2) ஸ்வதர்மம் (3), குணத்தில் தாழ்வாயிருந்தாலும், [தேஷிக்த] ஶ்ரேயஸைச் செய்யும் (4). ஸ்வதர்மத்தில் மரணம் ஶ்ரேயஸைச் செய்யும். பரதர்மம் பயத்தைச் செய்யும் (5).

(1) இந்த மந்த்ரத்தில் கூறப்பட்டது மேல்வரும் ௰அ. ௪௰௭ இலும் கூறியிருக்கின்றது: "சாதுர்யமாக அநுஷ்டிக்கப் பட்ட பரதர்மத்திலும் ஸ்வதர்மம் தாழ்ந்ததாயினும் சிறந்தது. ஸ்வபாவத்தால் நியமிக்கப்பட்ட கர்மத்தைச் செய்கின்றவன் கில்பிஷத்தை (அஶுத்தியை)ப் பெறமாட்டான்".

"ஸ்வநுஷ்டித:" (ஸு+அநுஷ்டித:)=நன்றாய் அநுஷ்டிக் கப்பட்ட; செவ்வையாகச் செய்து வரும்.

(2) பரதர்மம் = அன்ய கர்மம், அஃதாவது, ஒருவனு டைய ஜன்ய குணத்துக்கு மாறான கர்மம். ஜன்யகுணம் = மாதாவின் கர்ப்பத்தில் அருளப்பட்ட மனோநிலைகள்.

கர்மேந்த்ரியங்களுக்கு அருளப்பட்ட வல்லபத்தைக் கொண்டு பரதர்மங்களை ஒருவன் மனோவலிமையால் செய்ய லாம் என்பது பற்றி, சாதுர்யமாகச் செய்யப்பட்ட பரதர்மம் என்றார்.

(3) ஸ்வதர்மம் = சொந்தக் கர்மம், அஃதாவது, ஒருவனு டைய ஜன்ய குணத்துக்கு அநுகூலமான கர்மம்.

பிறவியிலேயே பகவானால் மனுஷர்களுக்கு அமைக்கப் பட்ட நற்குணங்கள், நான்குவகையாகப் பிரிக்கப்பட்டுச், சதுர் வர்ணம் என்று அழைக்கப்பட்டன.

இந்தச் சதுர் வர்ணத்தின் உண்மையை அறிந்தாலன்றி ஸ்வதர்மம் எது, பரதர்மம் எது, என்று அறியக்கூடாது. ஆத லால், சதுர் வர்ணம் என்ற நான்கு வித ஜன்ய குணங்களின் உற்பத்தியையும் ஸூக்ஷ்மகதியையும் ஈண்டு விசாரிப்பது அவ ஶ்யம். ௪. ௰௩ க்குரிய உரையைப் பார்க்க.

வ்யபிசாரம் பெற்ற (நியமமற்ற போக்குகளையுடைய) ப்ரக் ருதியின் மிஶ்ர குணங்களை பகவான் தன் தர்ம நியதி ஶக்தியால் நன்று தீது எனப் பிரித்து, நற்குணங்களுக்குத் தக்கபடி கர்

மங்களையும் பிரித்து, இந்த குண விபாகத்தாலும் கர்மவிபாகத்தாலும் சதுர் வர்ணத்தை நான் உண்டாக்கினேன் என்று ச. ௰௩ இல் உறுதியாகக் கூறினர்.

எனவே, நற்குண நற்கர்ம சேர்க்கையால், சதுர் வர்ணங்கள் பிறந்தன.

தர்மாதர்ம விவேகமுள்ள ஜீவர்களுக்காகவே சதுர்வர்ணம் இயற்றப்பட்டது. இது தர்மம் இது அதர்மம் என்ற அறிவில்லாதவர்களையும், சொற்கேளாமலும் நன்முயற்சியைப் பற்றுமலும் வீண் ஆசைகளால் ஏவப்பட்டு ஐம்பொறி வழிகளில் மிருகங்களைப்போல நாடோடுகின்ற மூர்க்கர்களையும், பகவான் துன்பம் என்ற அக்னியால் வாட்டி; அவர்களின் புத்தியில் தர்ம சிந்தனைகளை ஊட்டிச், சதுர்வர்ணம் என்ற படித்தரத்தில் (ஏணியில், ஸோபானத்தில்) ஏற்றுவார்.

மாதாவின் கர்ப்பத்திலேயே ஜீவாத்மாவின் பக்குவத்துக்குத் தக்கபடி ஓர் நியமகுணம் அருளப்படும். இது சிதருமல் மரணபர்யந்தம் நின்று ஜீவாத்மாவை அலையவிடாமற் காக்கும்.

இந்த உறுதியான ஸ்வகுணத்தால் தனக்கு நேரிட்ட நானாவித அநுபவங்களை அர்த்தம் செய்து, அங்கிங்கு திரியாமல், ஜீவாத்மா நிதானமாய் வாழும். இப்படி நியதிபெற்ற ஸ்வகுணங்கள் நான்குவகைப்படும். அவை ஶூத்ரத்வம் வைஶ்யத்வம் க்ஷத்ரியத்வம் ப்ராஹ்மணத்வமாம். இந்த நற்குணங்களைப் பெற்ற ஜீவர்கள், மேலான நிலையை அடைந்த ஜாதிகளாதலால், போற்றத்தக்கவர்கள்—"வர்ணத்தார்" (தாது, "வரண்" = ஸ்துதித்தல், போற்றுதல்)—என்று வேத வித்துக்களால் அழைக்கப்பட்டார்கள்.

ப்ராஹ்மணத்வம் என்றது தெய்வ நிஶ்சயம், சித்த ஶுத்தி, நேர்மை, பொறுமை, விஷய வெறுப்பு, ஆத்ம அனாத்ம விவேகம் முதலிய ஜன்யகுணம் (௰அ. ௪௰௨). க்ஷத்ரியத்வம் என்றது ஆபத்தில் கலங்காமை, ஶத்ருவுக்கு அஞ்சாமை, ஸமயத்துக்கேற்ற ஸாமர்த்யம், க்ராம தேஶ அதிகாரத்தில் விருப்பம், ஜனங்களைக் காப்பதில் முயற்சி முதலிய ஜன்ய

குணம் (ம-அ. ௪௰௩). வைஸ்யத்வம் என்றது த்ரவ்ய விநிமயத்தில் (கைமாறுதலில்) விருப்பம். அஃதாவது, நிலம் பொன் தான்யம் முதலிய பொருட்களை வாங்கிச் செய்கைபண்ணிக் கைமாறுதலில் ஸ்வபாவ விருப்பம் (ம-அ. ௪௰௪). ஶூத்ரத்வம் என்றது பணிசெய்தலில் ஸ்வபாவ விருப்பம் (ம-அ. ௪௰௫). அஃதாவது, தனக்கு மேற்பட்ட அறிவாளியை நாடி, அவன் சொன்னதை ஶ்ரத்தையோடு செய்யக் காத்திருப்பதில் ஸ்வபாவ விருப்பம்.

இவ்வகையான ஜன்ய குணங்களை உடையவர்கள் ஸ்தூல தேகத்தைப் பெற்று இவ்வுலகத்தில் எங்கும் வாழ்கின்றனர். ப்ராஹ்ம குணவான்கள் லௌகிக விஷயங்களில் அபிமான மற்று, வைதிக கர்மங்களிலும் ஆத்ம விசாரங்களிலும் புத்தியைச் செலுத்தி, தங்களைப் பற்றிய மலங்களை முற்றுக நீக்கி, ப்ரஹ்ம சொரூபியானூர்கள். இப்படி ப்ரஹ்மமயமான ஜீவாத்மாக்களே ஸாய ப்ராஹ்மணர்கள். இந்த ரஹஸ்யத்தை அறியாத பாமர ஜனங்கள் ப்ராஹ்மணனுடைய ஸ்தூலதேகத்தை ப்ராஹ்மணன் என்றெண்ணி, அந்தத் தேகத்தில்நின்று தோன்றின பிள்ளைகள் யாவரையும் ப்ராஹ்மணர்கள் என்று போற்றுவார்கள். நடை உடை பாவனையில் இவர்கள் ப்ராஹ்மணத் திருமேனியைப்போல இருந்தாலும், இயல்பில் முற்கூறிய ப்ராஹ்ம குணமின்றி வேறு ஸ்வபாவ குணத்தோடு பிறந்திருக்கக் கண்டது நிஶ்சயம். மஹாபாரதத்தில் ப்ரஸித்திபெற்ற த்ரோணரும் க்ருபரும் ப்ராஹ்மண வழியிற் பிறந்தும் தங்கள் ஜன்ய குணமாகிய க்ஷத்ரியத்வத்தையே அநுஸரித்து ரணகளத்தில் சென்றூர்கள். அப்படியே, க்ஷாத்ர குணவான்களுடைய ஸ்தூல தேகத்தில்நின்று பிறந்த ஜீவர்கள் சிலர் ப்ராஹ்மண குணவான்களாயும், சிலர் வைஸ்ய குணவான்களாயும், சிலர் ஶூத்ர குணவான்களாயும், இருக்கக் கண்டது நிஶ்சயம். இவ்வாறே, வைஸ்ய குணவான்களுடைய ஸ்தூல தேகத்தில்நின்று சில ஜீவாத்மாக்கள் வைஸ்ய குணத்தோடும், சிலர் ப்ராஹ்மண குணத்தோடும், சிலர் க்ஷத்ரிய குணத்தோடும், சிலர் ஶூத்ர குணத்தோடும் பிறந்திருக்கிறூர்கள். இதுபோல, ஶூத்ர குண

வான்களுடைய ஸ்தூல தேகத்தில்நின்று சிலர் ஶூத்ர குணத் தோடும், சிலர் வைஶ்ய குணத்தோடும், சிலர் க்ஷத்ரிய குணத் தோடும், சிலர் ப்ராஹ்மண குணத்தோடும் பிறந்திருக்கின்றார் கள்.

ஸ்வபாவ குணங்கள் மிக அந்தரங்கமாயிருப்பதாலும், அக்குணங்களை உள்ளபடி நிஶ்சயிக்க வருத்தமாயிருப்பதாலும், லோகத்தார் ஸ்தூல தேகத்தில் வர்ணம் ப்ரதிஷ்டை பெற்றி ருக்கின்றது என்று நினைப்பதாலும், மஹான்கள் ப்ராஹ்மண ரென்று உபசாரமாக அழைக்கப்பட்ட ஸ்தூல தேகங்களில் ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஶ்ய ஶூத்ர குணவான்கள் இருக்கின் றார்கள் என்றும், க்ஷத்ரியர் வைஶ்யர் ஶூத்ரர் என்று வழக்கப் ப்ரகாரம் அழைக்கப்பட்ட ஒவ்வொரு ஸ்தூல ஜாதியாரிலும் நான்கு ஸூக்ஷ்ம வர்ணங்களும் உண்டென்றும் ஸமாதான உப தேஶம் செய்தார்கள்.

எனவே, பாமர (ப்ரமாணமற்ற) ஜனங்கள் அறியும் ஸ்தூ லதேக வர்ணம் அவித்யாவின் ஸங்கல்பம் என்றும், பகவானல் ஸ்ருஷ்டிக்கப்படவில்லை என்றும், அறிக.

ஜீவாத்மாக்கள் அவித்யாவின் தன்மையை அறிந்து அத னை விட்டு ஸச்சிதானந்த சொரூபிகளாகும் பொருட்டுப் பக வான் அருளின வர்ணங்கள்—போற்றத்தக்க ஜன்ய குணங் கள்—ஸூக்ஷ்ம ஶரீரத்துக்கே உரியன. இந்த நற்குணங்களை யும் அவற்றால் வரும் ஸுகங்களையும் ஜீவாத்மா மெல்ல மெல்ல அறிந்து அவித்யாவிலுள்ள பற்றை ஒழிக்கும்படி பகவான் ஸ்வபாவ குணங்களுக்கேற்ற கர்மங்களை ஸ்ருஷ்டித்தார்.

இந்த வர்ண கர்மங்கள் தர்ம வ்ருத்திக்கும் ஜீவனார்த்தத் துக்கும் உண்டாக்கப்பட்டன:

ப்ராஹ்மண குணத்துக்குரிய தர்மோபாய கர்மங்கள் வேதம் ஓதுதல், யஜ்ஞம் தானம் தபஸ் செய்தல்; ஜீவனோபா யத்துக்கு வேதம் ஓதிவைத்தல், யஜ்ஞம் செய்வித்தல், தானம் வாங்குதல்.

க்ஷத்ரிய குணத்துக்குரிய தர்மோபாய கர்மங்கள் வேதம் ஓதுதல், யஜ்ஞம் தானம் தபஸ் செய்தல்; ஜீவனோபாய கர்மங்

கள் க்ராம தேஶ அதிகாரம், ஜநபத்த்ராணம் (ஜனங்களை ஆபத்தில்நின்று காத்தல்).

வைஶ்ய குணத்துக்குரிய தர்மோபாய கர்மங்கள் வேத மோதுதல், யஜ்ஞம் தானம் தபஸ் செய்தல்; ஜீவனோபாய கர்மங்கள் வர்த்தகஞ்செய்தல், உழுதல், பசுவைக் காத்தல்.

ஶூத்ர குணத்துக்குரிய தர்மோபாய கர்மங்கள் யஜ்ஞம் தானம் தபஸ் செய்தல்; ஜீவனோபாய கர்மங்கள் ப்ராஹ்மண வர்ணத்தாரில் ஓர் யஜமானனைப் பற்றிய பரிசாரகம். அவர் கிடையாதபோது, மற்ற இருவர்ணத்தாரில் ஓர் யஜமானனைப் பற்றியும் ஜீவிக்கலாம்.

ஜீவாத்மாவின் ஜன்ய குணத்துக்கேற்ற கர்மம் ஸ்வதர்மம். அதன் ஜன்ய குணத்தைப் பழுதாக்கும் கர்மம் பரதர்மம். ஜீவனோபாய ஸ்வதர்மங்களைச் செய்து பிழைக்கக்கூடாத காலங்களில் பரதர்மங்களை அநுஷ்டிக்க விதியுண்டு. ஸ்ம்ருதிகளில் இந்த ஆபத்தர்மம் வர்ணத்தார் ஒவ்வொருவருக்கும் கூறியிருக்கின்றது. கஷ்டகாலம் நீங்கினவுடனே ஜீவனோபாய ஸ்வதர்மத்தை முன்போலச் செய்யவேண்டியது. தர்மோபாய கர்மங்களாகிய யஜ்ஞம் தானம் தபஸை, எவ்வளவு கஷ்டமிருந்தாலும், கைவிடக்கூடாது.

ஸ்வகுணங்களுக்கு இருப்பிடம் ஸூக்ஷ்ம ஶரீரத்தின் ஒரு பாகமாகிய அந்தஃகரணம் (உள்ளம்). இதனிலிருந்து, மனம் புத்தி சித்தம் அஹங்கார தத்வ வழிகளால், கர்மேந்திரியங்களையும் ஞானேந்திரியங்களையும் ஆட்டிவைக்கும்.

(4) தன் ஜன்மகுணத்துக்கேற்ற கர்மங்களை அநுஷ்டித்தால், ஜீவாத்மா ஶ்ரேயஸை (இருந்ததிலும் மேலான நிலையை) அடையும்.

அத். ௬ மந்த்ரம் ௫ இல் மனஸே ஜீவாத்மாவுக்குப் பந்துவும் ஶத்ருவுமாயிருப்பதால் மனஸைக் கெடுக்கக் கூடாதென்றும், மனஸாலேயே ஜீவாத்மாவை உத்தாரணம் (உயரத் தூக்குதல்) செய்யவேண்டுமென்றும் உபதேஶிக்கப்பட்டது. கர்மேந்த்ரியங்களுக்கு உத்தம ஸஹாயமான மனம் புத்தி சித்

தம் அஹங்காரம் என்ற தத்வங்களை பரதர்மத்தில் ஏவினல், அந்தத் தத்வங்கள், பேதித்து, வலிமை பெருமல், நாளுக்குநாள் விஷாத பய துக்கங்களில் அழுந்திக், கெடும். பரதர்மத்தில் ஏவப்பட்ட தத்வங்கள் ஆத்ம உத்தாரண வேலைக்கு உபயோகப்படா. அஃதாவது, பகவான் வகுத்த குண படித்தரங்களொன்றில் நிற்கும் ஜீவாத்மாவை அதற்கு மேற்பட்ட படித்தரத்தில் தூக்கி விடமாட்டா. பரிசாரக ஜீவன் விணிமய ஜீவனுகாது. விணிமய ஜீவன் க்ஷத்ரிய ஜீவனுகாது. க்ஷத்ரிய ஜீவன் ப்ராஹ்மண ஜீவனுகாது. ஜன்ய குணத்துக்கேற்ற கர்மாநுஷ்டானத்தாலேயே ஜீவாத்மா ஶ்ரேயஸை (இருந்ததிலும் மேலான நிலையைப்) பெறலாம் என்பது பகவானுடைய கர்மசக்ர ஸ்ரி

பரதர்மத்தால் பிழைக்கிறவன் அந்த ஜாதியிலும் பதிதனுவான் என்று மநு ஸ்ம்ருதியில் (௰. ௯௭) கூறியிருக்கின்றது.

(5) பிறவியில் அமைந்த வர்ணத்துக்கு ஏற்றபடி மனஸையும் கர்மேந்த்ரியங்களையும் வேலைசெய்யவிட்டு, அந்த வேலையில் மரணம் ஸம்பவித்தால், மனம் பேதலிக்காமல் த்ருப்திபெற்றுத், தான் உபாஸித்து வந்த தெய்வத்தை அண்டி, ஸ்வர்க்க லோகப் ப்ராப்தியையும், மறு ஜனனத்தில் மேலான வர்ணத்தையும், பெறும்.

இந்த வர்ண கர்மத்தின் ஸூக்ஷ்ம கதியைக் கேட்ட அர்ஜுனன் தான் பிறவியில் பெற்ற குணம் ஜனபத்த்ராணம் என்றும், அதுவே தனக்கு ஸ்வதர்மம் என்றும், அதை அநுஷ்டித்தால் மறு ஜன்மத்தில் ப்ராஹ்மணத்வம் தனக்கு அமையும் என்றும் அறிந்தான். அறிந்தபின், பரதர்மமாகிய போர்பண்ணுமையை நான் ஏன் பற்றினேன் என்று யோசித்து, அடுத்த ஶ்லோகத்தில் ஓர் விணவை பகவானிடம் கேட்டான்.

**அர்ஜுனன் கூறினுன்:**

**௩-௰௬. வார்ஷ்ணேய (1), இந்தப் புருஷன் இச்சையற்றவனுயிருந்தாலும் (2), பலாத்காரமாக ஏவப்பட்டவன்போல, எதனுல் ப்ரயோகிக்கப்பட்டுப் பாபத்தைச் செய்கின்றான்? (3)**

(1) க. ௬௰௧.

(2) பரதர்மத்தில் விருப்பமில்லாதவனாய் ஒருவன் இருந்தாலும்.

(3) அவன் ஸ்வதர்மத்தை மறந்து பரதர்மத்தில் பலாத்காரமாக எதனால் சேர்க்கப்படுகின்றான். சேர்க்கப்பட்டு, எதனால் துன்பத்தை விளைவிக்கும் கர்மங்களைச் செய்கின்றான்?

இதற்கு உத்தரம் வரும் ஶ்லோகத்தில் பகவான் அளித்தார். அது என்னவென்றால்: ஸ்வதர்மி பரதர்மத்தில் விருப்பமில்லாதவனாயிருந்தாலும், பரதர்மியாதலுக்குக் காரணம் வேறொரு விருப்பம் என்றதே.

அர்ஜுனன் பரதர்மமாகிய போர்பண்ணுமையில் விருப்பங்கொண்டு ஸ்வதர்மமாகிய போர்பண்ணுதலை விடவில்லை என்றும், போர்புரிதலை விடுதலுக்குக் காரணம் ஸ்வஜனப் பற்று (தேக ஸம்பந்தமாய் வந்த பந்துக்களில் ஆசை) என்றும், மேல்வரும் ௩௰எ—௬௰௧ மந்த்ரங்களில் குறிக்கப்படும்.

பகவான் கூறினார்:—

**௩௰எ. இது (1) ரஜோ குணத்தில்நின்று தோன்றினதும், பெருவயிறு பெற்றதும் (2), மஹா பாபத்தைச் செய்விக்கின்றதுமாகிய காமம் (3). இதுவே கோபம் (4). இதனை (5) இதனிடத்து (6) ஶத்ரு என்று அறிக (7).**

(1) பரதர்மத்தில் ப்ரயோகிக்கும் வஸ்து.

(2) "மஹாஶந" = பெரும் உணவு உடையது = பெருவயிறு பெற்றது.

(3) இச்சை, விருப்பு, ஆசை. இது ரஜஸ் குணத்தின் கார்யம், அளவற்று விஷயங்களைப் புஸிக்கும், விதி விலக்கு ரூபமான தர்மத்தைக் கவனிக்காமல் தான் பற்றினதைப் போகிக்கும்.

(4) இச்சையைத் தடுத்தால் அது கோபமாகும். ஓடுந் தண்ணீரைத் தடுத்தால் அது நுரைத்துச் சீறிப் பாய்வது போல, ஒருவனுடைய ஆசையைத் தடுத்தால், அது அவனில்

பெருமூச்சையும் சிவந்த கண்ணையும் நுரைத்த வாயையும் தடுமாற்றப் பேச்சையும் உண்டுபண்ணும்.

(5) இந்த ஆசையை.

(6) ஜீவாத்மாவுக்கு.

(7) ஆசை ஜீவாத்மாவின் அறிவையும் ஶாந்தியையும் கெடுப்பதால், ஶத்ரு என்றார்.

நெருப்பில் விறகைப் போடப்போட ஓங்கி வளருவது போல, ஆசை விஷயாநுபவங்களால் வளருமேயன்றி தணியாது. இந்த்ரியங்களில் ஏறி, அவற்றால் பெரும் பாபகர்மங்களைச் செய்விக்கும். இதைத் தடுப்பது புத்தியிலுள்ள நற்குணமே.

௩௰அ. எவ்விதம் புகையால் நெருப்பு மறைக்கப்படுகின்றதோ, எவ்விதம் அழுக்கால் முகக்கண்ணாடி மறைக்கப்படுகின்றதோ, எவ்விதம் கர்ப்பப்பையால் ஶிஶு மறைக்கப்படுகின்றதோ, அவ்விதம் அதனால் இது மறைக்கப்பட்டது (1).

(1) ஆசையால் ஜீவாத்மா மறைக்கப்பட்டுத், தன்னைத் தான் அறியாமல், ஆசையே நான் என்ற அறிவோடு இருக்கின்றது.

சேறு தண்ணீரிலிருந்து தண்ணீரின் லக்ஷணத்தை மாற்றித் தன் லக்ஷணத்தையே காட்டுவதுபோல, ஆசை என்ற மலம் ஜீவாத்மாவிலிருந்து அதன் ஸ்வரூபமாகிய அறிவையும் ஶாந்தியையும் கெடுத்துத் தன்மயமாக்கிக் காட்டும்.

௩௰௯. கௌந்தேய, புத்திமானுக்கு நித்ய விரோதியும், (1), தான் பற்றின விஷயத்தை மனஸில் ஆரோபிக்கின்றதும் (2), அக்னி போலத் தன் ஆஶ்ரயத்தை எரிக்கின்றதும் (3), த்ருப்தி செய்ய முடியாததும் (4), ஆகிய இதனால் [அவனது] ஞானம் மறைக்கப்பட்டிருக்கின்றது (5).

(1) நற்குணம் பெற்ற புத்தியோடு தினமும் போர்பண்ணிக்கொண்டிருக்கின்றதும்.

(2) "காமரூபேண" = காமரூபம் பெற்றிருக்கின்றதும் =

தான் பற்றின ஹீன விஷயத்தை மனவில் ஏற்றிக்கொண்டிருக்கின்றதும்.

(3) "அனலேந" = நெருப்பாய் = தான் அண்டின பொருளைக் கெடுக்கும் தன்மை பெற்றதும்.

தான் பற்றிநிற்கும் ஜீவாத்மாவையும் அதன் இந்த்ரியங்களையும் வாட்டிச் சீர்கெடுப்பதால், "அனலேந" என்றார்.

ஆசையின் கொடுமையைத் தீர்ப்பதற்காகவே ஸர்வ உபகாரரூபமான தர்மம் உண்டாக்கப்பட்டது. அறிவிலும் அன்பிலும் தோய்ந்து ஸாத்தப்படாத ஆசைகள் ஸூக்ஷ்ம ஸ்தூல தேகங்களைக் கெடுக்கும், ஜீவாத்மாவையும் மேன்மேலும் அவித்யாவில் அழுத்தும்.

(4) "துஷ்பூரேண" = நிறைக்க வருத்தமானதும் = போதும் என்ற தன்மையைப் பெறாததும்.

(5) ஜீவாத்மாவின் ஸாக்ஷித்வத்தை மங்கப்பண்ணிச் சரியாக ஒன்றையும் அறியவிடாது.

**சமு. இதற்கு (1) இந்த்ரியங்களும் மனஸும் புத்தியும் அதிஷ்டானம் என்று கூறப்படுகின்றது (2). இது இவைகளால் (3) ஞானத்தை மறைத்து (4) தேஹியைப் பலவித மோகத்தில் ஆழ்த்துகின்றது (5).**

(1) ஆசைக்கு.

(2) சேற்றில் விழுந்திருக்கும் ஜலம்போல, ஆசை என்ற மலத்தில் விழுந்திருக்கும் ஜீவாத்மா. இப்படி ஆசையில் அமிழ்ந்தின ஜீவாத்மா, தன்னை அறியாமல் ஆசையே நான் என்று ஆதியில் இருந்தது. இந்த விமூட ஜீவாத்மாவுக்கு பரமேஸ்வரன் மனதி இந்த்ரியங்களை அருளினார். அருளினபின், ஜீவாத்மாவை வ்யாபித்து நிற்கும் ஆசை அவ்விந்த்ரியங்களிற் சென்று, தன் விஷயத்தைப் பற்றும்படி யத்தனித்த அவஸரத்தில் ஜீவாத்மா தனக்கு ஆசையுண்டென்று அறியும். இந்த்ரியங்கள் இல்லாதுபோனால், ஆசையை ஆத்மா அறியாது. தான் வேறு ஆசை வேறு என்று அறியும்படியும், ஆசையில் நின்று முக்தி பெறும்படியும், இந்த்ரியங்கள் அருளப்பட்டன.

*அதிஷ்டானம் = சென்று ஆடுதற்கும் ஆட்டுவிப்பதற்கும் உரிய இடம்; ப்ரவ்ருத்திக்கும் ப்ரவர்த்தனத்துக்கும் உரிய ஸ்தானம்.*

*ஆசைக்கு ஆஶ்ரயம் (இருப்பிடம், வாஸஸ்தானம்) ஜீவாத்மா. ஜீவாத்மாவில் ஆஶ்ரயித்த ஆசை, இந்த்ரியங்களில் ஏறி, அவற்றை ஆட்டுவதால், ஆசைக்கு அதிஷ்டானம் இந்த்ரியங்கள் என்றார்.*

*(3) அந்தஃகரணாதிகளால்.*

*ஜீவாத்மா விஷயங்களை உள்ளபடி அறிதற்கு ஸாதனமாகிய மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற ஞானேந்திரியங்களிலும், உள்ளம் மனம் புத்தி சித்தம் அஹங்காரம் என்ற அந்தஃகரணங்களிலும், ஆசை ஏறி அவற்றின் நிலைகளைக் கலக்கி, அவ்விந்திரியங்களின் வழியால் ஆத்ம அறிவை மறைக்கும்.*

*(4) ஜீவாத்மாவின் அறிவை மயக்கி.*

*(5) ஜீவாத்மாவைப் பலவித விமூடங்களிற் செலுத்துகின்றது.*

*உ. ௩௰௨ க்குரிய உரையில் கூறப்பட்ட மோஹத்தின் லக்ஷணத்தைப் பார்த்தறிக.*

**௪௰௧. ஆதலால், பரதர்ஷப, நீ முதலில் இந்த்ரியங்களை ஒடுக்கிப் (1), பாபத்தைச் செய்விக்கின்றதும், ஞானம் விஞ்ஞானங்களைக் (2) கெடுக்கின்றதுமாகிய இதனைக் கொல்லு (3).**

*(1) தத்தம் விஷயங்களிற் செல்லவிடாமல் அடக்கி.*

*இந்த ரணகளத்தில் கண்ணுக்கும் காதுக்கும் விஷயமாகிய ஸ்வ ஜன தேகங்களை நீ கவனித்தால், ஸ்வ ஜன ஆசைக்கு அடிமைப்பட்டுப் போர்பண்ணும் என்ற பரதர்மத்தை நீ அநுஸரிப்பாய். ஆதலால், முதலில் இந்த்ரியங்களை ஒடுக்கு என்று பகவான் கூறினார்.*

*(2) விஞ்ஞானம் என்றது விவிதஞானம்; வெவ்வேறாயிருக்கும் வஸ்துக்களைப் பற்றிய அறிவு. ஞானம் என்றது நாநாவித கண்டித வஸ்துக்களுக்கு ஆதாரமாயிருக்கின்ற அகண்டித சிதாகாஶ வஸ்துவைப்பற்றிய அறிவு. இந்த இருவித ஞானத்*

தையும் ஆசை கெடுக்கும்.

(3) ஆசையைக் கட்டி அடக்கு, நிக்ரஹம் செய்.

இந்த்ரியங்களில் ஏறும் ஸமயத்தில், ஜாக்ரதையாக இருந்து ஆசையை ஜீவிக்கவிடாதே.

அடுத்த இரண்டு ஶ்லோகங்களில் ஜீவாத்மாவுக்கு மேற்பட்டவஸ்து லோகத்தில் இல்லை என்றும், புத்தியை அந்த வஸ்துவில் ப்ரதிஷ்டை செய்தால் ஆசையின் சேஷ்டை தீரும் என்றும், உபதேசிக்கப்படும்.

சுஉ. [விஷயங்களுக்கு] மேலானவைகளாக இந்த்ரியங்களைக் கூறுகின்றனர் (1). இந்த்ரியங்களிலும் மேலாக மனஸைக் கூறுகின்றனர் (2) மனஸிலும் புத்தி மேலானதாயிருக்கின்றது (3). எவன் புத்திக்கும் மேலானவனோ அவன் [ஆத்மா] (4).

(1) ஶப்த ஸ்பர்ஶ ரூப ரஸ கந்தம் என்ற விஷயங்களை அறியும் ஞானேந்திரியங்கள் அவ்விஷயங்களிலும் மேலானவை.

(2) மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற ஞானேந்த்ரியங்கள் மனஸை அண்டியே தத்தம் தொழில்களைச் செய்வதால், மனஸ் அவைக்கு மேலானது.

(3) புத்திக்கு அடிமைப்பட்டாலன்றி மனஸ் ஜீவாத்மாவுக்கு ஶத்ருவாயிருப்பதால், புத்தி மனஸுக்கு மேலானது.

(4) ஜீவாத்மாவுக்குப் பணி செய்யும்படி புத்தி ஸ்ருஷ்டிக்கப்பட்டதால், ஜீவாத்மா புத்திக்கு மேலானது.

ஆதலால், ஆசையோடு இந்த்ரியங்களையும் மனஸையும் செல்லவிடாமல், அவற்றை புத்திமார்க்கத்தில் நிறுத்தி, ஆத்மாவுக்கு நன்மையைத் தரும் ஸ்வதர்மத்தை நீ அநுஷ்டிக்க வேண்டும், என்பது பகவானுடைய கருத்து.

சுங. மஹாபாஹோ, இவ்விதம் புத்திக்கும் மேலானவனாக [ஆத்மாவை] அறிந்து (1), புத்தியை ஆத்மாவில் நிறுத்தி (2), அறியக் கூடாததும் காம சொரூபமுமாகிய ஶத்ருவைக் கொல்லு (3).

(1) ஸ்தூல தேகத்தில் வஸிக்கும் தத்வங்களில் ஜீவாத்மாவே ப்ரபு என்றறிந்து.

இந்த உண்மையை அறிந்தால் உன்னுடைய ஸ்வதாமமா கிய யுத்தத்தைக் கைவிடமாட்டாய்.

(2) புத்தியை ஆத்ம உத்தாரண முயற்சிகளில் ப்ரதிஷ்டை செய்து.

(3) நேரே அறியக்கூடாது போனாலும், அதன் காரியங்க ளால் ஆத்மாவுக்கு ஶத்ரு என்று அறியத்தக்க ஆசையை ஜீவிக் கவிடாதே.

---

# நாலாவது அத்யாயம்

## ஞானயோகம்.

---

[அஃதாவது, மூன்றும் அத்யாயத்திற் கூறப்பட்ட உத்க்ருஷ்ட கர்மாநுஷ்டானமாகிய நைஷ்கர்ம்யம் ஞானம் (அகண்டாகார அறிவு) என்ற முடிவான பலனைத் தருதற்கு முக்ய ஹேது என்ற உபதேசத்தை அர்ஜுனன் கேட்டுச் சிந்தித்தான் என்று விளக்கும் நாலாம் பாடம்.]

ஸ்ரீ பகவான் கூறினார்:

க. இந்த அழிவற்ற [நைஷ்கர்ம்ய] யோகத்தை (1) நான் விவஸ்வானுக்குச் சொன்னேன் (2). விவஸ்வான் மநுவுக்குச் (3) சொன்னார். மநு இக்ஷ்வாகுவுக்குச் (4) சொன்னார்.

(1) நிஷ்காம கர்மானுஷ்டானம் என்ற யஜ்ஞார்த்த (ஈஸ்வரார்ப்பண) கர்மயோகத்தை. ௩. கூ.

இதுவே ௩-ம் அத்யாயத்தில் ௰கூ, உ௰௫, ௩௰, ௩௰௩-ம் மந்த்ரங்களிற் குறிக்கப்பட்ட நைஷ்கர்ம்யயோகம். பிறவித் துன்பங்களைத் தீர்ப்பதற்கு அதியவஶ்யமான நிஷ்டை.

(2) இந்தப் புத்தியின் நிஷ்டையைப்பற்றி பரமேஶ்வரன் யுகங்கள்தோறும் பக்குவப்பட்ட ஆத்மாக்களுக்கு ஜீவன்முக்தர்கள் மூலமாக உபதேஶித்து வருகின்றார். ஈண்டு, க்ஷத்ரிய வர்ணத்திற் பிறந்த அர்ஜுனன் அபிமானிக்கும்படி பகவான் க்ஷத்ரிய ஞானோபதேஶ பரம்பரையின் சரித்ரத்தைச் சொல்லத் தொடங்கினார். ச. உ இல் முற்கால அரசர்கள் ஞானத்தை உண்டாக்கும் நைஷ்கர்ம்ய மதத்தை அநுஸரித்தே ராஜருஷிகளானார்கள் என்றார்.

ராஜருஷி=க்ஷத்ரிய வம்ஶத்தில் பிறந்து முமுக்ஷுவத்தையாவது ஆத்ம தர்ஶனத்தையாவது பெற்றவன்.

க்ஷத்ரியபுத்திபெற்ற ஜீவாத்மாக்களுக்குத் தலைவனுகிய விவஸ்வத் என்ற ஸூர்ய தேவனுக்கு இந்த நைஷ்கர்ம்ய மதத்தை ஸ்ருஷ்டி ஆரம்பத்தில் மஹேஸ்வரன் ஓர் திருக்கோலங்கொண்டு உபதேசித்து, சித்தஸுத்தியை ஏற்படுத்தினர். பூ புவர் ஸ்வர் லோகங்களுக்கு ஸூர்யபகவானைப் பாதுகாவலனயிருக்கும்படி நியமித்தவரும் மஹேஸ்வரனே.

(3) தற்கால மன்வந்தரத்துக்குரிய மநு வைவஸ்வதமநு. அஃதாவது, விவஸ்வத் என்ற ஸூர்ய பகவானுடைய புத்ரன். இவருக்கு நைஷ்கர்ம்யத்தை ஸூர்யன் உபதேசித்தார்.

(4) வைவஸ்வதமநு தன் புத்ரனுகிய இக்ஷுவாகுவுக்கு அதை உபதேசித்தார். இந்த இக்ஷுவாகு க்ஷத்ரிய தர்மத்தை அநுஷ்டித்து அயோத்யாவில் ஆதி அரசனய் வாழ்ந்தார் என்று மஹா பாரதத்தில் கூறியிருக்கின்றது. (ஆதிபர்வம், ஸம்பவபர்வம், எ௰௫.)

௨. இவ்விதம் பரம்பரையாக (1) வந்த இதனை (2), ஓ பரந்தப (3), ராஜருஷிகள் (4) அறிகின்றனர். அந்த யோகம் வெகுகாலமாக இந்த லோகத்தில் நாஸத்தை அடைந்தது.(5)

(1) ஒரு குரு தன் ஸிஷ்யனுக்கு உபதேசித்து, அந்த ஸிஷ்யன் குருத்வம் பெற்றபின் தன்னுடைய ஸிஷ்யனுக்கு உபதேசித்து, இவ்வாறு ஒருவருக்குப் பின் ஒருவர் வந்து உபதேசிப்பது பரம்பரை உபதேஸம்.

(2) இந்த நைஷ்கர்ம்ய அநுஷ்டானத்தை.

(3) ௨. ௩.

(4) க்ஷத்ரிய தர்மவழியில்நின்று நைஷ்கர்ம்ய யோகம் செய்து ஆத்ம தர்ஸனம் பெற்ற ஜீவன்முக்தர்களான ஸ்ரீ ராமர், ஜனகர், விஸ்வாமித்ரர் முதலிய க்ஷத்திரியர்கள் ராஜருஷிகள். இவர்களும் விஷயஸுகத்தை வெறுத்த பீஷ்மரும் க்ஷத்ரிய வர்ணியான அர்ஜுனனுக்கு ஆன்ற ஸாக்ஷி. இவர்களின் மேன்மையை உணர்ந்து, இவர்கள் அநுஸரித்த நைஷ்கர்ம்யத்தை அர்ஜுனனும் அநுஸரிக்கவேண்டும் என்பது பற்றி "இதனை

ராஜ ருஷிகள் அறிகின்றனர்" (அநுஸரித்து வாழ்கின்றனர்) என்றார்.

(5) தற்காலத்தில் கல்லாதவரும் கற்றோரும் நைஷ்கர்ம்யத்தின் லக்ஷணத்தையும், காம க்ரோத பய துக்க நிவிர்த்திக்கு அவ்வநுஷ்டானம் அவஸ்யமான உபாயம் என்ற உண்மையையும், அறியாமலிருப்பதுபோல, இற்றைக்கு ஐயாயிரத்திருநூறு வருஷத்துக்கு முன்னும் அர்ஜுனனைப்போன்ற ராஜகுமாரர்களும் ஏனையோரும் காமகாமிகளாய் புத்தியின் உத்க்ருஷ்ட நிலைகளை அறியாமற்றிரிந்தபடியால், லோகத்தில் அதர்மம் மிகுந்து, அவதார புருஷனாகிய ஸ்ரீ க்ருஷ்ண பகவான் பூமியிற் பிறந்து, கர்மாநுஷ்டானத்தின் ஸூக்ஷ்ம கதியையும் மெய்ஞ்ஞானத்தின் மகிமையையும் இன்னொருமுறை ப்ரஸ்தாபிக்க வேண்டியதாயிற்று.

எல்லாம் அறிந்த பரமேஸ்வரன் தான் பூலோகத்தில் ஸ்ரீக்ருஷ்ணாவதாரம் பெற வெகுகாலத்துக்குமுன் நிஷ்காம புத்தியோடு செய்யப்பட்ட கர்மாநுஷ்டானம் வழங்கிவரவில்லை என்றார். தற்காலம் நிகழும் ஸாதாரண வருஷம் (1910—1911) கலியுகத்தில் ௫௰௰௰௨ வது வருஷமாகும். கலியுகம் பிறக்குமுன், த்வாபரயுகம் நடைபெற்று வந்தது. அந்த யுகத்தில் க்ஷத்ரியர்கள் நைஷ்கர்ம்ய அநுஷ்டானத்தை மறந்து, அஹந்தை மமதையோடு ஜனங்களை ஹிம்ஸித்தபடியால், ஜமதக்னி ருஷியின் மஹாவல்லப புத்ரனாகிய பரஸுராமர் க்ஷத்ரியர்களை அநேக முறை ஸம்ஹாரம் செய்தார். ஆதலால், "வெகுகாலம்" என்ற பதம் த்வாபர யுகம் முடியப் பல்லாயிரம் வருஷங்களுக்கு முன் என்று பொருள்படும்.

**௩. இப்பொழுது உனக்கு என்னாற் கூறப்பட்ட இந்த [நைஷ்கர்ம்ய] யோகம் புராதனமான அதுவே (1). இது ரஹஸ்யம் (2), உத்தமம் (3). எனக்கு பக்தனாகவும் மித்ரனாகவும் இருக்கின்றாய் என்று [கூறப்பட்டது].**

(1) உனக்கு இப்பொழுது உபதேஸிக்கப்பட்ட நைஷ்கர்ம்ய அநுஷ்டானம் நவீனமன்று. த்ரிலோகங்களையும் இடை

விடாமல் பரிபாலிக்கின்ற க்ஷத்ரிய புத்திமானாகிய ஸூர்ய தேவனுக்கு நான் ஆதிகாலத்தில் உபதேசித்ததும் இதுவே.

(2) பக்வப்பட்ட ஆத்மாக்களன்றி வேறொருவரும் இதை அறியத்தகாது. அபக்விகளுக்குச் சொன்னாலும் இது விளங்காது.

(3) உயர்ந்த நிலையாகிய ஞானத்தைத் தரத்தக்கது. ஆதலால், இது பரம வித்தை.

அர்ஜுனன் கூறினான்:

ச. உனது பிறப்பு (1) இக்காலத்தில் தோன்றினது. ஸூர்யனது பிறப்பு முற்காலத்தில் (2) தோன்றினது. நீ ஆதியில் உபதேசித்தாய் என்றதை நான் எவ்விதம் க்ரஹிப்பேன் (3).

(1) உன்னுடைய தேகம்.

(2) ஸ்ருஷ்டி ஆரம்பத்தில்.

(3) கால விரோத வார்த்தைக்கு ஸமாதானம் அருளவேண்டும் என்பது கருத்து.

ஸ்ரீ பகவான் கூறினார்:

ரு. அர்ஜுன, எனக்கும் உனக்கும் வெகு ஜன்மங்கள் சென்றன. (1) அவையெல்லாம் நான் அறிகிறேன் (2). பரந்தப, நீ அறிகிறாயில்லை. (3)

(1) மஹேஸ்வரனாகிய நான் அநேகநேகமுறை அவஸரத்துக்கேற்றபடி யுகங்கள்தோறும் தேகங்களை என் இச்சைப்படி தரித்தும் வியோகித்தும் இருக்கின்றேன். ஜீவாத்மாவாகிய நீயும், உன் கர்மபலனுக்கேற்றபடி, அநேகமுறை பிறப்பிறப்புக்களைப் பெற்றிருக்கின்றாய்.

(2) நான் கொண்ட திருக்கோலங்கள் எல்லாம் நான் அறிவேன். ஆதலால், ஸூர்ய தேவனுக்குக் குருநாதனாய்த் தோன்றினதும் உபதேசித்ததும் எனக்குத் தெரியும்.

(3) இதற்குமுன் நீ தரித்த தேகங்கள் ஒன்றையும் நீ அறியமாட்டாய்.

அடுத்த மூன்று ஸ்லோகத்தில் திருக்கோலங்கள் ("திவ்ய ஜன்மங்கள்") தோன்றும் முறையும், எதற்காகத் தோன்றும் என்றும், கூறுகின்றார்.

**௬. பிறப்பற்றவனுகவும், அழிவில்லாத ஆத்மாவாகவும், ப்ராணிகளுக்கு ஈஸ்வரனுகவும் இருந்துகொண்டு (1), எனது ப்ரக்ருதியின் மேல் ஏறி (2), தேகாத்மாக்களைச் செய்யும் மாயையினுல் தோன்றுகிறேன். (3)**

*(1) எங்கும் நிறைந்துள்ள அத்ருஸ்யப் பொருளாகிய பரமேஸ்வரன் க்ரியாஸக்தியால் ஒரு தேகத்தைத் தோற்றுவித்து, அதைப் பற்றறத் தரித்ததால் தனக்குரிய பிறவாத இறவாத தன்மைகளாவது, ஸர்வ ஜீவர்களை அடக்கியாளும் தன்மையாவது குறைவுபடாதென்பது பற்றி "பிறப்பற்றவனுகவும்......... இருந்துகொண்டு" என்றார்.*

*(2) எனக்கு அடிமைப்பட்ட ப்ரக்ருதியை உபாதானமாகக் கொண்டு.*

*(3) தோற்றங்களுக்குக் காரணமான மாயா ஸக்தியால் த்ருஸ்யப் பொருளாகின்றேன்.*

*மாயை=ப்ரக்ருதியின் ஸத்வகுணம்.*

*தேகாத்மாக்கள்=தேகங்கள். இவை ஆத்மாவன்றித் தோற்ற ஸக்தியில்லாதபடியால், மஹான்கள் தேகங்களை தேகாத்மக்கள் என்று கூறுவது வழமை.*

**௭. பாரத, எப்பொழுது தர்மத்துக்குத் (1) தேய்வும் அதர்மத்துக்கு (2) வளர்ச்சியும் உண்டாகின்றனவோ, அப்பொழுது நான் [தேக] ஆத்மாவை ஸ்ருஷ்டி [த்துத் தரி] க்கின்றேன் (3).**

*(1) புண்ய கர்மங்களுக்கு.*

*(2) பாப கர்மங்களுக்கு.*

*(3) மஹேஸ்வரன் திருக்கோலங்கள் தரிப்பது தன் இச்சைப்படிக்கேயன்றி, கர்மவிதிப்படிக்கன்று என்பது கருத்து.*

**௮. ஸாதுக்களைக் காப்பதற்காகவும், துஷ்டர்களை அழிப்பதற்காகவும், தர்மத்தைச் செவ்வையாக ஸ்தாபனம் செய்வதற்காகவும் யுகந்தோறும் [ஸரீரங்களைத்தரித்துத்] தோன்றுகின்றேன் (1).**

(1) அவதார வடிவம் கொள்ளவேண்டும் என்ற இச்சைக்குக் காரணம் ஜீவகாருண்யமே. கொடிய பாவிகளை இவ்வுலகத்தில் இல்லாமையாக்குவதற்கும், நல்லவர்களைக் காப்பதற்கும், தர்மம் வழங்கச் செய்வதற்கும் அவதார புருஷர்கள் தோன்றுவார்கள்.

**௯. அர்ஜுன, இவ்விதமான (1) எனது திவ்ய ஜன்மத்தையும் (2) கர்மத்தையும் (3) எவன் உள்ளபடி (4) அறிகின்றனோ, அவன் ஶரீரத்தைவிட்டு மறுபடி பிறப்பை அடைகிறன் இல்லை. என்னை அடைகின்றன் (5).**

(1) ஜீவகாருண்யத்துக்காகத் தரித்த.

(2) பஞ்ச க்ருத்ய ஶக்திகளால் ப்ரகாஶம் பெற்ற திருமேனியையும். திவ்ய=ப்ரகாஶம்பெற்ற.

(3) ஸ்ருஷ்டி திதி லய ஸம்ஹார திரோபவ அநுக்ரஹ கர்மங்களையும்.

(4) யதார்த்தமாக. அஃதாவது, எவர்கள் விசாரித்துத் தெளிந்து, பற்றில்லாமல் தங்கள் கர்மங்களை மஹேஶ்வரனைப் போல நைஷ்கர்ம்ய புத்தியுடன் செய்வார்களோ, அவர்களில் சிலர் பூலோகத்தில் ஆத்மதர்ஶனம்பெற்று ப்ரஹ்ம நிர்வாணம் என்ற விதேக முக்தியை அடைவார்கள்; மற்றவர்கள் பூலோக வாழ்வு தீர்ந்தவுடனே, தேவயான வழியால் ஸூர்ய லோகத்துக்குச் சென்று அதற்கப்பால் ப்ரஹ்மலோகத்தை அடைந்து, அங்கு ஆத்ம தர்ஶனம் பெற்று ப்ரஹ்ம நிர்வாணத்தைப் பெறுவார்கள்.

(5) ஸதேகமுக்திபெற்ற ஞானவான்களுக்குப் புனராவ்ருத்தி (மறுபடியும் திரும்பி வருதல்) இல்லை. பூலோகத்தில் வஸித்தாலும் ப்ரஹ்மலோகத்தில் வஸித்தாலும், தேகம் நழுவினவுடனே (அஃதாவது, விதேகமுக்தியில்) ஞானவான் பரமாத்மாவில் ஐக்யமாதலால், என்னை அடைகின்றான் என்றார்.

௬-ம் மந்த்ரம் தொட்டு ௯-ம் மந்த்ரம் வரையில் தான் மஹேஶ்வரனில் நின்று அவதாரபுருஷனாய் வந்தது துர்யோதனன், துஷ்ஶாஸனன், ஶிஶுபாலன், ஜராஸந்தன், முதலிய

க்ஷத்ரியர்களையும், அவர்களுடைய அதர்மங்களுக்குத் துணை யாக நின்றவர்களையும், ஸம்ஹாரம் செய்வதற்கும், புண்யவான் களை ரக்ஷிப்பதற்கும் என்று குறித்து, மந்த்ரங்கள் ௰ தொட்டு ௰௨ வரையில் எல்லா உபாஸனைகளும் பரமேஶ்வர உபாஸனை யில் முடிவுபெறும் என்று போதிக்கின்றார்.

**௰, ராகம் பயம் க்ரோதம் அற்றவர்களும் (1), என்னை ஆஶ்ரய மாகக் கொண்டவர்களும் (2), ஞானதபஸால் பரிஶுத்தி பெற்றவர் களும் (3) ஆகிய பலர், என்மயமாய் (4), என் பாவனைபெற்றிருக் கின்றார்கள்.(5)**

*(1) ஸமத்வ புத்தியுள்ள ஸத்வ குணவான்களும்.*

*(2) மஹேஶ்வரனை பரம்பொருள் என்றெண்ணி ஜீவிக்கின் றவர்களும்.*

*(3) ஆத்ம ஞானம் என்ற அக்கினியால் பரிஶுத்த நிலையை அடைந்தவர்களும்.*

*(4) அகண்டாகாரமாய்.*

*(5) என்னைப்போலப் பற்றற்று, லோக ஸம்க்ரஹத்துக்கா கக், கர்மங்களைச் செய்கின்றார்கள்.*

**௰௧. பார்த்த, எவர்கள் எவ்விதம் என்னை அடைகின்றார்களோ, அவர்களை அவ்விதமே நான் அநுக்க்ரஹிக்கின்றேன் (1). எல்லாவிதத் தாலும் என் வழியை மனுஷர்கள் பெறுகின்றார்கள்.(2)**

*(1) எந்த ஸமயத்தில்நின்று அதற்குரிய நாம ரூபங்களைக் கருதிப் ப்ரார்த்திக்கின்றார்களோ, அந்த ஸமயத்தில் மஹேஶ் வரனாகிய நானே நின்று அருளுகின்றேன்.*

*(2) தேஶங்கள் தோறும் எந்தத் தேவ மார்க்கத்தைப் பற் றிப் பக்தர்கள் இருந்தாலும், அவர்களுடைய சித்தத்தை நானே தெளிவுசெய்து, எனது பற்றற்ற நிலையாகிய நைஷ்கர்ம் யத்தை அநுக்க்ரஹிக்கின்றேன்.*

*அடுத்த மந்த்திரத்தில் தேவ ஆராதனையால் இஷ்ட காம்ய ஸித்தியும் சித்த ஶுத்தியும் வருமென்றும், சித்த ஶுத்தியால் நைஷ்கர்ம்ய ஸித்தி வருமென்றும், குறிக்கின்றார்.*

**௰௨. மனுஷ்யலோகத்தில் கர்மத்தால் பிறக்கின்ற ஸித்தி ஶீக்ரம் உண்டாகின்றபடியால் (1), இவ்விடத்தில் கர்மங்களுடைய ஸித்தியை ப்ரார்த்திக்கின்றவர்கள் தேவதைகளைக் குறித்து யஜ்ஞம் செய்கின்றவர்களாய் [என் வழியைப் பெறுகின்றார்கள்.](2)**

(1) யஜ்ஞம் தானம் தபஸ் என்ற புண்ய கர்மங்கள் பூ புவர் ஸ்வர் மஹ ஜன தப ஸத்ய லோகங்களில் செய்யப்பட்டாலும், பூலோகத்தில் செய்யப்பட்ட கர்மங்களுக்கு மாத்ரம் அத்ருஶ்ய பீஜம் உண்டென்றும், அந்தக் கர்ம பீஜங்கள் பக்வகாலத்தில் பலன்களாய்ப் பழுக்குமென்றும், ஶாஸ்த்ர கர்த்தாக்கள் கூறுகின்றனர்.

ஈஶ்வரனது ஆக்ஞை இப்படியிருப்பதால் பூலோகம் கர்ம பூமி என்று பெரியோரால் அழைக்கப்பட்டு, ப்ரஹ்மா முதலிய தேவர்கள் தானும் இவ்வுலகத்துக்கு வந்து யாகாதி கர்மங்களை யுகங்கள் தோறும் செய்கின்றனர் என்று புராண இதிகாஸங்கள் நிஶ்சயிக்கின்றன.

(2) புண்ய கர்மத்திலிருந்து ஜனிக்கின்ற அத்ருஶ்ய புண்ய பீஜங்களைக் "கர்மத்தால் பிறக்கின்ற ஸித்தி" என்றார்.

இந்த ஸித்தி பூலோகத்தில் ஶீக்ரம் பிறக்கும் என்றும், தேவர்களை உத்தேஶித்துச் செய்யப்பட்ட புண்ய கர்மங்கள் மெல்ல மெல்லச் சித்தஶுத்தியையும் நைஷ்கர்ம்யத்தையும் ஏற்படுத்தும் என்றும், இந்த மந்த்ரத்தால் விளக்கப்பட்டது

இனி, தேவ நிஶ்சயம் பெற்று, தேவ ஆராதனைகளை ஶ்ரத்தையோடு செய்யத்தக்க, சதுர் வர்ணிகளின் உற்பத்தியை அடுத்த ஶ்லோகத்தில் கூறுகின்றார்.

**௰௩. குணவிபாகத்தாலும் (1), கர்மவிபாகத்தாலும் (2) சதுர் வர்ணம் என்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்டன (3). அவற்றுக்குக் கர்த்தாவாக இருந்தாலும்,(4) என்னை அகர்த்தாவாகவும் (5) அவ்யயனாகவும் (6) அறி.**

(1) ப்ரக்ருதியின் குணங்களைக்கொண்டும், ப்ரக்ருதியின் கர்மங்களைக் கொண்டும், சதுர்வர்ணமாகிய ப்ராஹ்மணத்வம்,

க்ஷத்ரியத்வம், வைஶ்யத்வம் ஶூத்ரத்வம் பரமேஶ்வரனால் வகுக்கப்பட்டன. ௩. ௩௰௦ க்குரிய பாஷ்யத்தை மீளவும் காண்க.

ஓய்வில்லாத சேஷ்டையுள்ளதாயும், இஷ்டம் (attraction, like) அநிஷ்டம் (repulsion, dislike), இருள் ஒளி, முதலிய த்வந்த்வங்களை (இரண்டக வேதனைகளை)ப் பெற்றதும், தன்னுடைய கலங்கின நிலையையும் துன்பசொரூபத்தையும் அறியக்கூடாததும், ஆகிய ப்ரக்ருதியில் பரமேஶ்வரனது சித் ஶக்தி சென்று, ப்ரக்ருதியின் மிக மிஶ்ர (கலப்புள்ள) குணத்தை மூவித குணங்களாகத் தெள்ளி வடியிட்டதுபோலப் பிரித்து, ஸ்ருஷ்டிக்ரமங்களை நடத்திற்று.

தெளிந்த தன்மையையும் ப்ரகாஶிப்பிக்கும் தன்மையையும் பொருந்திய (௰௬. ௪) ஸத்வகுணத்தைப் ப்ராபல்யமாகப் பெற்ற ஜீவாத்மாவுக்கு தேகஶுத்தி, நேர்நடத்தை, பொறுதி, மனமடக்கம், ஆத்மஅநாத்ம விசாரணை, குரு ஶ்ருதி தெய்வம் என்றவற்றில் ஶ்ரத்தை என்ற ப்ராஹ்ம (பரஹ்மத்தைச் சார்ந்த) தர்மங்களைப் பிறவியிலேயே பரமேஶ்வரன் அருளினர் (அத். ௰அ. ௪௰௨). இந்த ஸத்வகுணமும் ப்ராஹ்ம தர்மங்களும் சேர்ந்து ப்ராஹ்மணத்வம் ஆயிற்று.

ராக த்வேஷ சொரூப (௰௪. ௭) ரஜஸ்குணத்துக்குரிய ஸத்வாம்ஶத்தை ப்ராபல்யமாகப் பெற்ற ஜீவாத்மாவுக்கு அஞ்சாமை, பொலிவு, தைர்யம், ஸாமர்த்யம், போரில் ஓடாமல் நிற்றல், ஈகை, நல்லவர்களுக்கு ஸுகபாவனையும் கெட்டவர்களுக்குப் பீம பாவனையும் காட்டுதல் என்ற க்ஷாத்ர (ஆபத்தில் நின்று காப்பவன் தன்மையைச் சார்ந்த) தர்மங்களை ஈஶ்வரன் பிறவியிலேயே அருளினர் (௰அ. ௪௰௩). இந்த ரஜஸின் ஸத்வ குணமும் க்ஷாத்ர தர்மங்களும் சேர்ந்து க்ஷத்திரியத்வம் ஆயிற்று.

ராக த்வேஷ சொரூப ரஜஸ்குணத்தின் தமாம்ஶத்தை ப்ராபல்யமாகப் பெற்ற ஜீவாத்மாவுக்கு உழுதுண்டாக்கப்பட்ட தான்யத்தையும் பூஜா த்ரவ்யத்தைக் கொடுக்கும் பசுக்களையும் காத்தல், வாணிஜ்யப்பொருட்களைக் கொள்ளல் விற்

றல் என்ற பாலன தர்மங்களை ஈஶ்வரன் பிறவியிலேயே அருளினார் (௰அ. ௪௰௪). இந்த ரஜஸின் தமோகுணமும் பாலன தர்மங்களும் சேர்ந்து வைஶ்யத்வம் ஆயிற்று.

அஞ்ஞான சொரூப தமோகுணத்தின் (௰௪. அ) ரஜாம்ஶத்தை ப்ராபல்யமாகப் பெற்ற ஜீவாத்மாவுக்குப் ப்ராஹ்மண ஶிஷ்ருஷை (மநு, ௯. ௩௩௪) அல்லது வேறு புண்ய புருஷ சேவை என்ற உசித பரிசாரக தர்மங்களை ஈஶ்வரன் பிறவியிலேயே அருளினார் (௰அ. ௪௰௪). இந்தத் தமோகுணத்தின் ரஜாம்ஶமும் புண்ய புருஷ பரிசாரக தர்மங்களும் சேர்ந்து ஶூத்ரத்வம் ஆயிற்று.

இவ்விதம் குணத்தையும் கர்மத்தையும் கூட்டி ப்ராஹ்மணத்வம் க்ஷத்ரியத்வம் வைஶ்யத்வம் ஶூத்ரத்வம் என்ற சதுர் வர்ணங்களைப் (போற்றத்தக்க நான்குவித புத்திநிலைகளை) பகவான் உண்டுபண்ணினார். இவை ஸ்வபாவ ஜந்யங்கள் (௰அ. ௪௰௨—௪), பிறவியிலேயே புத்திக்கு அமைக்கப்பட்ட நிஷ்டைகள். மாதாவின் கர்ப்பத்திலேயே புத்தி தரித்த இந்த தாரணைகள் உறுதியாக நின்று, ஜீவாத்மாவைக் காம க்ரோத பய துக்கங்களால் மிகவும் சலனப்பட விடாமற் காக்கும்.

“வர்ணம்” என்ற பதம், “வரண்” (போற்றுதல், புகழ்தல்) என்ற ஸம்ஸ்க்ருத தாதுவில்நின்று ஜனித்து, “போற்றத்தக்கது” என்று அர்த்தமாகும். ஆதலால், சதுர் வர்ணம் என்ற பதங்கள் போற்றத்தக்க நான்குவித மனோதர்மங்கள், புத்தி தாரணைகள், என்று ஸித்திக்கின்றன.

சதுர் வர்ணத்தார் ஏன் யாவராலும் போற்றத் தக்கவர் எனில், தேவ ஶ்ரத்தையிலும் ஸத் கர்மத்திலும் ப்ரதிஷ்டை பெற்ற புத்தியுடையவராதலால் என்றறிக.

ஆரம்பஶக்தியும் கூட்டிமுடிக்கின்ற ஶக்தியும் தனக்கு மிகக் குறைவாயிருக்கின்றன என்று தாழ்மையுடன் ஒப்புக் கொண்ட ஶூத்ர ஜீவன் ஒரு புண்ய புருஷனைப்பற்றி ஏவல் வேலை செய்து, அவர்வழிபடும் தெய்வத்தையும் அவருடைய அன்பையும் நல்லொழுக்கங்களையும் பெறவேண்டும்

என்ற உறுதியான புத்தியோடு வாழ்வான். அங்கிங்கு ஓடாமல், தன் யஜமானனை எதிர்பார்த்தே ஓரிடத்தில் அடங்கி நிற்பான். இப்படி யஜமானனிலும் நல்லொழுக்கத்திலும் ப்ரதிஷ்டைபெற்றவன் புகழுக்குரிய ஶூத்ரன்.

இவனுக்கு மேற்பட்ட புத்தியுடைய வைஶ்யன் பசு தான்யம் முதலிய பொருட்களைப் புண்ய வழியால் வ்ருத்திசெய்து ஜனங்களுடைய நன்மையையும் தன் நன்மையையும் கருதி, வ்யாபாரங்களைத் தர்மமுறையாக நடத்தி, ஶாந்த தேவதைகளை வழிபட்டு வருவதால், இவனும் பெரியோரால் புகழப்படுவான்.

க்ஷத்ரியனும் ப்ராஹ்மணனும் வைஶ்யனுக்கு மேற்பட்ட புத்தியையும் கர்மங்களையும் உடையவர்களாதலால், அவர்கள் அதிக புகழுக்குரியவர்கள்.

இது ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் என்றறிக. அஃதாவது, ப்ரக்ருதி மார்க்கம் ஸுகமென்று வாழ்பவரில் சதுர்வர்ணிகள் போற்றத்தக்க நிலையைப் பெற்றவர்கள். அந்த மார்க்கத்தைப் பற்றியிருக்கின்ற ஏனையோர் எல்லாம் இகழப்பட்ட நிரீஶ்வர நிராத்ம விஷயகாமிகளாதலால் மநு ஸ்ம்ருதியில் "ஐந்தாவது வர்ணம் இல்லை" என்று உபதேஶிக்கப்பட்டது (௰. ௪). இதனர்த்தம் யாதெனில், ப்ரவ்ருத்தி மார்க்கததில் ஜீவிக்கின்றவர்களில் நான்கு வர்ணத்தைத் தவிர ஐந்தாவது "வர்ணம்" (போற்றத்தக்க புத்திநிலை) ஈஶ்வரன் ஸ்ருஷ்டிக்கவில்லை என்பதே

ப்ரவ்ருத்தி மார்க்கத்தாரில் ஆத்ம உத்தாரணத்துக்கு அநுகூலமான குணகர்மங்களைத் தரித்த சதுர் வர்ணிகளுக்கும் மேலான உத்தம புருஷர் இருக்கின்றனர். இவர்கள் ப்ரவ்ருத்தி வாழ்வில் ஸுகபுத்தியில்லாதவர்கள். அத். ஏ, ௰௬ இல் பகவான் இவர்களை ஆர்த்தாக்கள், ஜிஜ்ஞாஸுக்கள், அர்த்தார்த்திகள், ஞானிகள் என்று வகுத்தார். ஆர்த்தாக்களாவார் ஸம்ஸாரம் துக்கம் ("ஆர்த்தி") என்று நிச்சயித்தவர்கள். ஜிஜ்ஞாஸுக்களாவார் ஸம்ஸார துக்கநிவ்ருத்தி மார்க்கத்தை அறியவேண்டுமென்ற ஆவலோடிருக்கின்றவர்கள். அர்த்தார்த்திக

ளாவார் நிவ்ருத்தி மார்க்கத்தை மிக முயற்சியோடு அநுஸரித்து வருகின்றவர்கள். ஞானிகளாவார் துக்கநிவ்ருத்திபெற்ற ஜீவன்முக்தர்கள்.

ப்ராஹ்மணத்வம் க்ஷத்ரியத்வம் வைஶ்யத்வம் ஶூத்ரத்வம் என்ற வர்ணங்கள் (போற்றத்தக்க ப்ரவ்ருத்திமார்க்க புத்திநிலைகள்) ஈஶ்வரனால் அருளப்பட்ட ஸ்வபாவ ஜன்யகுணகர்மங்களாதலால், ஸர்வ தேஶங்களிலும் அவை ப்ரகாஶிக்கின்றன. எங்களது பரத தேஶத்தில் மாத்ரம் சதுர்வர்ணம் காணப்படுகின்றதென்று கூறுவோர், ஸ்தூலபுத்திமான்களாவதுமன்றி, அன்யதேஶங்களிற் சென்று அங்குள்ள ஜனங்களின் மனோதர்மங்களை விசாரித்தறியாதவர்களுமாவர்.

புற தேஶங்களில் சதுர்வர்ணிகள் வாழ்கின்றனரானும், தாங்களாவது தங்கள் தேஶத்தாராவது சதுர்வர்ண ஸ்ருஷ்டியின் மான்மியத்தை அறியமாட்டார்கள். மேலும், ஆங்க்லேய முதலிய அன்யதேஶ பாஷைகளில் ப்ராஹ்மணத்வம் க்ஷத்ரியத்வம் வைஶ்யத்வம் ஶூத்ரத்வம் என்ற புத்திநிலைகளுக்கு ஏகபதங்கள் இல்லை. ஆங்க்லேய பாஷையில், spiritual-mindedness, public spirit, honest commercialism, faithful attendance upon a spiritually-minded person என்ற பலபதங்கள் இருந்தும், அவை சதுர்வர்ணங்களைக் குறிக்கமாட்டா. ஏனெனில், தெய்வம் குரு ஶாஸ்த்ரம் என்றவற்றில் ஶ்ரத்தையும், யஜ்ஞம் தானம் தபஸ் என்ற ஆத்மோபாய கர்மங்களும் அப்பதங்களில் சுட்டப்படாமல் இருப்பதால்.

இதர தேஶங்களில் ப்ராஹ்மணத்வம் முதலிய புத்திநிலைகள் காணப்பட்டாலும், ப்ராஹ்மண குலம், க்ஷத்ரிய குலம், வைஶ்ய குலம், ஶூத்ர குலம் என்று அங்கு ஏற்படவில்லை. பரததேஶத்தில் மாத்ரம் குல வர்ணங்கள் (ஸ்தூல ஸந்ததி வர்ணங்கள்) ஏற்பட்டிருக்கின்றன. ஒரு குடும்பத்தில் தந்தை தாய் தான் தாரம் மக்கள் தமர் என்பவர்களில், ப்ராஹ்மணத்வம் ஒருவனுக்கு அமைந்தும், க்ஷத்ரியத்வம் இன்னொருவனுக்கு அமைந்தும், வைஶ்யத்வம் வேறொருவனுக்கு அமைந்தும், ஶூத்ரத்வம் இன்னொருவனுக்கு அமைந்தும், வேறு நிரீஶ்வர

நிராத்ம அஸாந்த குணங்கள் எஞ்சினவர்களுக்கு அமைந்துமி ருக்க, அவர்களுடைய நாநாவித புத்தி நிலைகளைக் கவனிக் காமல், மூல புருஷனுடைய புத்தி நிலை எதுவோ, அந்தத் தர்மமே அவனுடைய புத்ர பௌத்ராதிகள் யாவர்க்கும் சாட்டப்பட்டு, ஸ்தூலகுல வர்ணங்கள் தோன்றின. இவை முழு மாயா ஸங்கல்பம். இவற்றை ஈஶ்வரன் ஸ்ருஷ்டிக்க வில்லை. இவை ப்ரக்ருதியின் அஞ்ஞானத் திரிபுகள் என்றறிக.

ஸத்வகுணத்தோடு ப்ராஹ்ம கர்மத்தைச் சேர்த்து ஈஶ்வ ரன் ஸ்ருஷ்டித்த ப்ராஹ்மண வர்ணத்தானுடைய ஸ்தூல ஸந் ததியார் ப்ராஹ்மணர்கள் என்றும், ரஜோகுணத்தின் ஸத் வாம்ஸத்தோடு க்ஷாத்ர கர்மம் சேர்ந்து உற்பத்தியான க்ஷத் ரிய வர்ணத்தானுடைய ஸ்தூல சந்ததியார் க்ஷத்ரியர்கள் என்றும், ரஜோ குணத்தின் தமாம்ஸத்தோடு பசு தான்ய தன பரிபாலன கர்மம் சேர்ந்து உற்பத்தியான வைஶ்ய வர்ணத் தானுடைய ஸ்தூல ஸந்ததியார் வைஶ்யர் என்றும், தமோகு ணத்தின் ரஜாம்ஸத்தோடு ப்ராஹ்மண ஶுஶ்ரூஷை (மநு, க. ௯௧) சேர்ந்து உற்பத்தியான ஶூத்ர வர்ணத்தானுடைய ஸ்தூல ஸந்ததியார் ஶூத்ரர் என்றும் பரத தேஶத்தில் யாது காரணத்தால் வெவ்வேறு குலத்தாரானார் என்று விசாரிக்கில், அந்தத் தேஶத்தார் ஶ்ரத்தையோடு ஒப்புக்கொள்ளும் வேதாக மங்களின் ஸூக்ஷ்மார்த்தத்தை அறியாத தன்மையே என்று ஞானிகள் கூறுவார்கள். ஜீவாத்மாக்களைப்பற்றியும் ஈஶ்வரனு டைய பஞ்ச க்ருத்யத்தைப்பற்றியும் வேதாகமங்களும், அவற் றின் வாக்யங்களை அநுபவமுறையாக அறிந்த ஞானவான்க ளும், பலவாறு கூறினதை உள்ளபடி க்ரஹிக்க ஶக்தியற்ற ஜனங்கள் ஸ்தூலகுல வர்ணங்களைத் தாங்களே ஸங்கல்பித்துக் கொண்டு, அவையெல்லாம் ஈஶ்வரனால் ஸ்ருஷ்டிக்கப்பட்டன என்ற வீண் நிஶ்சயத்தோடு வாழ்கின்றனர்.

இவர்களுடைய விமூட ஸங்கல்பம் எவ்வாறு தோன்றின வென்றால், அவ்வாற்றைக் கூறுதும். ஒருவனுடைய பிதாவா னவன் ப்ரஹ்மத்தை தர்ஶித்து யதார்த்த ப்ராஹ்மணனானால்,

அவனுடைய ஸ்திதியைப் பெறாத புத்ர பௌத்ராதிகளை அவன் விலக்கமாட்டான். அவர்களும் அவனை விட்டுப் பிரியார்கள். அவனையே அண்டி அவன் வீட்டிலிருந்து அவர்கள் வாழ்வது இயல்பே (ப்ரக்ருதிக்குரிய தன்மையே). அவர்கள் யாரெனில், அவனுடைய தேகத்தில்நின்று தோன்றின ஸந்ததியார் (வரிசையில் வந்தவர்கள்) என்று சொல்லவேண்டும். ஸந்ததி, வர்க்கம், வம்ஶம், என்ற பதங்கள் ஸ்தூலதேக வரலாற்றைக் குறிக்குமேயன்றி மனோதர்மங்களைக் குறிக்கமாட்டா. மனோதர்மங்கள் ஸூக்ஷ்ம தேகத்துக்கு உரியன என்றும், ஸூக்ஷ்மதேகம் ஒவ்வொரு ஜீவாத்மாவுக்கு ஈஶ்வரனால் அருளப்பட்டது என்றும், இப்படி அருளப்பட்ட ஸூக்ஷ்ம தேகம் ஆதிதொட்டு அந்தந்த ஜீவாத்மாவுக்கே சொந்தம் என்றும், அது பிதாமாதாக்களின் அம்ஶமன்று என்றும், அறியாத ஜனங்கள் ஸ்தூலதேக வரலாற்றையும் ஸ்தூலதேக ஸம்பந்தத்தையும் மாத்ரம் குறிக்கின்ற "ஸந்ததி", "வர்க்கம்", "வம்ஶம்", "குலம்", முதலிய பதங்களில் ப்ராஹ்மணத்வம் முதலிய புத்தி அம்ஶங்களை அடக்கி, ஸூக்ஷ்ம வர்ணங்களை ஸ்தூல குலங்கள் என்றெண்ணினார்கள். இப்படிக் கலக்கமுற்ற ஸ்தூலகுல வர்ணங்கள் யுகங்கள் தோறும் கானல் ஜலம் போலத் தோன்றிக்கொண்டிருக்கின்றன. இதுபற்றி, ஶாஸ்த்ர கர்த்தாக்கள் ஸ்தூலகுல வர்ணங்களை ஒப்புக்கொண்டு, அவையெல்லாம் ஒருவித ப்ரக்ருதி பாவனை என்றும், தொன்றுதொட்டுப் பரத தேஶத்தில் அநுஸரிக்கப்பட்டதால், ஒருவித தர்மம் என்றும், கூறி, ஸ்தூல ஸந்ததி வர்ணத்தாரும் ஸூக்ஷ்ம குண கர்ம வர்ணத்தாரும் அறியும்படி யதார்த்தத்தைப் பலவாறு விளக்கினார்கள். குணத்தாலும் தொழிலாலும் இவன் ப்ராஹ்மணன், இவன் க்ஷத்ரியன், இவன் வைஶ்யன், இவன் ஶூத்ரன் என்பது யதார்த்தம் (மெய்). பிறருடைய ஸ்தூல தேகங்களைப்பற்றிச் சதுர்வர்ணம் உண்டென்பது பொய்.

(2) நான் சதுர் வர்ணத்தை ஸ்ருஷ்டித்து, ஜனங்களை நாள் தோறும் ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி மார்க்கம் என்ற கர்மசக்ரத்தில்

செலுத்தி வந்தாலும், என் பஞ்ச க்ருத்யங்களைப் பற்றில்லாது செய்கின்றேன். ஆதலால், என்னை அழிவற்ற நிஷ்கர்மாவாக அறி. அவ்யயன், உ. ௧௭, உ௧.

௧௪. கர்மங்கள் என்னைப் பற்ற என்றும் (1), எனக்குக் கர்ம பலத்தில் ஸங்கம் இல்லை என்றும் (2), என்னை எவன் அறிகின்றனோ, அவன் கர்மங்களால் வாதிக்கப்படான் (3).

(1) கஶ்மல ரஜஸ் குணத்தில்நின்று விரிக்கப்பட்ட கர்மங்கள் பரமேஶ்வரனது சச்சிதானந்த சொரூபத்தைத் தீண்டிக் கெடுக்கா என்றும்.

(3) பஞ்ச க்ருத்யங்களைச் செய்யும் பரமேஸ்வரனுக்குப் புண்ய பாப பலன்களான ஸ்வர்க்க நரகாதி போகங்களை ஊட்டமாட்டா என்றும்.

(3) பரமேஶ்வரன் நிஷ்காம கர்மாநுஷ்டானி என்றும், ஸ்வர்க்க நரகாதி போக ரஹிதன் என்றும் அறிந்த ஒருவன், நைஷ்கர்ம்ய புத்தியோடு தன் கர்மங்களை லோகோபகாரத்துக் காகச் செய்தால், அவனை அக்கர்மங்கள் தீண்டவும்மாட்டா, அவனுக்குக் கர்மபல துக்கங்களை விளைவிக்கவுமாட்டா.

௧௫. முமுக்ஷுக்களாகிய (1) [உன்] முன்னோர்களாலும் (2) இவ்வாறு அறிந்து கர்மம் செய்யப்பட்டது. ஆதலால், [உன்] முன்னோர்களால் செய்யப்பட்ட அநாதி [அகர்த்த்ருத்வ] கர்மத்தையே நீ செய்.

(1) முமுக்ஷு = மோக்ஷத்தில் மிக விருப்பங்கொண்டவன்; ஸ்வர்க்காதி போகங்கள் எல்லாம் துன்பமென்று நிஶ்சயித்து, துக்க நிவ்ருத்தி மார்க்கத்தில் ஆவலுற்றவன்.

(2) உன் க்ஷத்ரிய மூதாக்களாலும்.

௧௬. எது கர்மம் எது அகர்மம் என்றதில் கவிகளும் மோகத்தை அடைந்திருக்கிறர்கள் (1). எதனை அறிந்து அஶுபத்தில்நின்று விடப்படுவாயோ, அந்தக் கர்மத்தை உனக்கு உபதேஶிக்கப் போகின்றேன் (2).

(1) ஶாஸ்த்ரத்தில் கூறப்பட்ட "கர்மம்" (செய்தல், செ

யல்) யாது, "அகர்மம்" (செய்யாமை "செய்யாமற் செய்தல்") யாது, என்ற விசாரணையில் கவிகள் தானும் மயங்கினார்கள்.

கவி = புத்திமான். கவிக்கு லக்ஷணம் ப்ரதிபை (நூதன சிந்தனை), கோஶாதி ஞானம் (கோஶம், வியாகரணம், நாடகம், அலங்காரம், என்றவையிற் சிறந்த வித்வீம்), தேவ அநுக்ரஹம்.

(2) அந்தக் கர்ம அகர்ம விவேகம், துக்க நிவ்ருத்தியைக் கொடுப்பதால், அதை உனக்கு இன்னும் விரித்து உபதேஶிப்பேன்.

௰எ. கர்மத்தின் [லக்ஷணத்தை] அறிதல் வருத்தமாதலால், கர்மத்தின் [லக்ஷணமும்] (1), விகர்மத்தின் [லக்ஷணமும்] (2), அகர்மத்தின் [லக்ஷணமும்) (3) அறியவேண்டியது.

(1) கர்மம் என்றது மனம் வாக்கு காயம் என்ற கரணங்களால் ஒருவன் வேதவிதிப்படி தன் ஆத்ம உத்தார[illegible]ம்பந்தத் கச் செய்யவேண்டிய செயல்கள் (தொழில்கள்). [illegible]ம்", "வம் ணத்தில் அநேக அரிய பொருட்கள் அடங்கி[illegible]வம் முத தொழில் யாது தொழிலுக்குக் காரணம் (கர்ம கார[illegible]ணங்களை தொழிலாளி யார், ஆத்மா யாது, கரணங்களின் [illegible]கலக்க ஷன்ன, கரணங்களால் செய்யப்பட்ட தொழிலி[illegible]னல் என்ன, அப்பலன்களாகிய இன்ப துன்பம் எவ்வ[illegible]பற்றி, தன, அவற்றைப் புசித்துப் பெற்ற ப்ரயோஜனம் எ[illegible] ஒப்புக் பலன் யாரைப்பற்றும், யாரைப் பற்றுது என்ற துர்[illegible] என் ணைகள் இந்த அத்யாயத்தில் பின் வரும் மந்த்ரங்க[illegible]பட் வேறு அத்யாயங்களிலும், நடக்கும். ரு. அ, கூ; ௰ங. ஙஎ; ௰அ. ௰ங, ௰அ.

(2) விகர்மம் என்றது ஆத்ம உத்தாரணத்துக்கு விபரீத கர்மம் (௰அ. ௰ரு); வேதங்களால் விலக்கப்பட்ட கர்மம்.

(3) அகர்மம் என்றது அகர்த்ருத்வ கர்மம். அஹந்தை மமதையற்றுச் செய்யப்பட்ட கர்மம்; செய்யாமற் செய்தல்; நிஷ்காமியின் கர்மம்; நைஷ்கர்ம்யம். ங. ௪.

அர்ஜுனனைப் போன்றவர்கள் அகர்மத்தைக் கர்மாநுஷ்

டானம இல்லாமை என்று நினைப்பார்கள்.

௰அ. எவன் [இந்த்ரியங்களால்] செய்யப்பட்ட கர்மத்தில் [தன்] அகர்மத்தைப் பார்ப்பானோ (1), எவன் [தன்] அகர்மத்தில் [இந்த்ரியங்களால்] செய்யப்பட்ட கர்மத்தைப் பார்ப்பானோ (2), அவன் மானுடரில் புத்திமான் (3). அவன் யுக்தன் (4), ஸர்வ கர்ம க்ருத் (5).

(1) கர்மங்களைச் செய்கின்றவன் நானன்று, அவை கர்ம காரணங்களால் முடிவுபடுகின்றன, என்று எவன் நிஶ்சயிக்கின்றானோ.

௰அ. ௰௩, ௰௪இல் கர்மத்தை உண்டுபடுத்தும் வஸ்துக் களை (கர்ம ஜனன காரணங்களை)ப் பிரித்துக் காட்டினார். அவை (1) தெய்வம், கர்மேந்திரியம், ஸ்தூல ஶரீரம், ஶரீரத்தினுள் படுத்த ஏதும் ரஜஸ்குணம், கர்த்த்ருத்வ மோஹம் என்றறிக.

யோடிருக்கின்ற நிஷ்கர்மாவாகிய தன்னைப்பற்றி நின்று கர்மகார

(2) இமங்களைச் செய்விக்கின்றன என்று அறிகின்றானோ.

ஸ்[illegible]வன் ஆத்ம அநாத்ம விவேகமுள்ளவன்.

[illegible]அவன் தன் புத்தியைத் தன் வஶமாக்கி வாழும் யோகி.

[illegible]ய ஐம்பொறி வழியிற் செல்லவிடாமல், ஆத்மாவில் ப்ர

அஃதாவது ஞானின ஜீவன்முக்தன்.

[illegible]சய்யவேண்டிய ஸர்வ கர்மங்களையும் கௌஶலமாகச்

உ௰க[illegible]வன்.

கரணத்ன க்ருத் = கர்மங்களைச் செவ்வையாகச் செய்தவன். அஃதாவது, ஆத்ம உத்தாரணம் ஸித்திக்கும்படி கைங்கர்ய புத்தியோடு தன் கர்மங்களை நிறைவேற்றுகின்றவன்.

௰௯. செவ்வையாக ஆரம்பிக்கப்பட்ட எவனது தொழில்கள் எல்லாம் காம ஸங்கல்பங்களால் (1) விடப்பட்டவைகளோ, ஞானாக்னியால் (2) கர்மத்தை எரித்த (3) அவனை அறிவாளிகள் பண்டிதன் (4) என்று கூறுகின்றனர்.

(1) இஷ்ட காம்யங்களால்; இச்சித்த ஐஶ்வர்யாதி போக பலன்களால்.

(2) அகண்டாகார அறிவின் தீபத்தால்.

ஞானாக்னி=ஞானம் என்ற நெருப்பு.

ஞானம் என்றது மெய் உணருதல்; மெய்ப்பொருளாகிய ஆத்மாவைப்பற்றிய அறிவு; மெய்யறிவு.

தோன்றி அழியும் பொய்ப்பொருட்களை மெய் என்று நினைத்து, ஆசைகளால் ஏவப்பட்டு, பொய் விஷயங்களில் அழுந்தின அறிவு (ஸாக்ஷி என்ற ஜீவாத்மா), சேற்றில் விழுந்த ஜலம்போல, தன் ஸ்வரூபமாகிய ஸாக்ஷித்வமும் ஶாந்தமும் மாறுபட்டு, மோஹமயமாயிருக்கும் இந்த ஸ்திதியில் "கிஞ் சிஜ்ஞ" அல்லது சிற்றறிவு என்று அழைக்கப்படும்.

கண்ணில்லாதவன் தன் கைகால்களால் ஸ்பர்ஶித்து அறிவதுபோல, ஸாக்ஷித்வத்தையும் ஶாந்தத்தையும் மிகவும் இழந்த சிற்றறிவு தன் அந்தஃகரணங்களாலும் புறக்கரணங்[illegible] ப்ரக்ருதி விஷயங்களை அறியும். கரணங்களிற் சிற[illegible]ம்பந்தத் தத்வத்தின் விசாரணை விஶாலமாயிருந்தால் வி[illegible]ம்", "வம் சுருக்கமாயிருந்தால் சுருக்கமாயும், அறியும். ப்ரக்ருதி[illegible] யங்களை ஜீவாத்மா அறிதற்கு புத்தி ஒரு தீபமே.

இந்தத் தீபத்தால் அநாத்ம கார்யங்களைப் பார்[illegible] சரித்து அநுபவித்து, இவையெல்லாம் நிலையற்றவை[illegible] துக்க கோலங்கள் என்றும் மெல்ல மெல்ல அறிகின்[illegible] தில் ஸாக்ஷியாகிய ஜீவாத்மாவுக்கு முன்னுள்ள ஸ[illegible] துக்கு மேலான ஆத்ம அநாத்ம விவேகம் என்ற திவ்[illegible] த்வம் பரமேஶ்வரனால் அநுக்ரஹிக்கப்படும்.

இந்த விவேகத்தைப் பெற்று துக்க நிவ்ருத்தி மார்க்கத்திற் செல்ல மிக ஆவலோடிருக்கும் ஞானாதிகாரிக்கு ஞானகுரு தோன்றி, மெய்ப்பொருளுக்கும் பொய்ப்பொருளுக்குமுள்ள லக்ஷணங்களை விளக்குவார். அந்த விளக்கத்தை அன்போடு ஆதரிக்கும் ஶிஷ்யனுடைய அறிவில் தொன்றுதொட்டுச் சார்ந்த வீண் மாயா ஸங்கல்பங்கள், ஒளிக்குமுன் இருள் கெடுவதுபோலக், காணமற்போகும்.

ஞானம் (மெய் அறிவு) ஜ்யோதி சொரூப (ஸூக்ஷ்ம

அக்னி அம்ஸ) மாதலாலும், அவித்யா (அறியாமை) என்ற இருளேயும் அவ்விருளால் உண்டான நினைவுகளேயும், நாம ரூபங்களேயும், அவற்ருல் வந்த பந்தங்களேயும் நாஸமாக்குவ தாலும், ஞானக்னி எரிக்கும் என்ருர்.

(3) கர்மத்துக்குத் தக்கபடி ஏற்பட்ட இகபர பலன்களி லுள்ள விருப்பத்தை தஹித்த.

(4) பண்டை (ஞானம்,மெய்யறிவு)பெற்றவன், பண்டிதன்.

**உ௰.** எக்காலமும் த்ருப்திபெற்றவனும் (1) ஓர் இருப்பிடம் (2) இல்லாதவனுமாகிய ஒருவன் கர்மபலனில் பற்றுதலே நீக்கிக், கர்மத் தில் ப்ரவ்ருத்தி பெற்றவனுயிருந்தாலும் (3), ஒன்றையுஞ் செய்கின்ற னில்லே (4).

(1) விருப்பு வெறுப்புக்களேத் தன் மனவில் ஏறிச் சலனப் படுத்த விடாமல், எது வந்தாலும் சரியென்று, ஸமத்வ புத்தி யோடிருக்கின்றவனும்.

(2) இதுதான் எனக்கு வீடு, இதைப்போல வேருரு ஸ்தானம் எனக்கு ஸுகமில்லே, என்ற க்ருஹப்பற்று.

(3) நித்ய கர்மாநுஷ்டானியாயிருந்தாலும்.

(4) "கிஞ்சித் நகரோதி"=ஒன்றையும் செய்கின்ருனில்லே, அஃதாவது, அவன் அகர்மியே, நிஷ்கர்மாவே.

**உ௰௧.** தன் ப்ரக்ருதியின் ஹிதத்தை விரும்பாதவனும் (1), அந்தஃ கரணத்தை (2) ஒடுக்கினவனும் (3), எல்லாப் பரிக்ரஹங்களே நீக்கின வனுமாகிய (4) ஒருவன் கர்மத்தை (5) மாத்ரம் செய்கின்றவனுய், கில்பிஷத்தைப் (6) பெறுகின்றனில்லே.

(1) "நிராஸி"=தன் ஸ்தூல தேகத்தின் ஸுகங்களேக் கருதாத மனமுடையவன், தன் ப்ரக்ருதியின் ஹிதத்தை விரும்பா தவன், தேக அபிமானமற்றவன், அஹங்கைதயற்றவன்.௩. ௩௰.

(2) இந்த்ரிய விஷயங்களிற் செல்லும் மனதை.

(3) ஆத்மாவைப்பற்றியே நிற்கும்படி செய்கின்றவனும்.

(4) தான்பெற்ற பேறுகள் யாவும் தனதல்ல என்ற மம

தையற்றவனுமாகிய.

(5) தனக்குரிய ஆத்மோபாய ஜீவனோபாய கர்மங்களை.

(6) கில்பிஷம் அல்லது கில்விஷமாவது ஆத்மப் ப்ரகாசத்தையும் ஆத்ம ஸுகத்தையும் கெடுக்கின்ற மலம் (அசுத்தம், அழுக்கு, தீமை).

இந்தக் கில்பிஷமானது அவித்யா (அவித்தை), சேஷ்டை, மாயா (மாயை) என மூவகைப்படும்.

ஜீவாத்மாவின் துக்கத்துக்குக் காரணம் அணுரூபத்தையும், மயக்கி மறைக்கும் இயல்பையும், உடைத்தாகிய அவித்யாவே (அறியாமை என்ற இருளே). ஆதலால், இது ஆணவ மலம் என்ற பெயரைப் பெற்றது. சிலர் அறிவின் மஹத்வத்தை அணுப்போலச் சுருக்குவதால் ஆணவம் என்றழைக்கப்பட்டதென்பார்கள். இந்த ஆணவமலத்திற் சிக்குண்ட ஆத்மா, தன் ஸ்வரூபத்தை அறியாமல், ஆணவகோசத்தை "நான்" (அஹம், ஆத்மா) என்று அபிமானித்துக்கொண்டிருக்குங் காலத்தில் பரமேஸ்வரன், அந்த ஆணவகோச அஹங்காரத்தை நீக்கும் பொருட்டு, தோன்றி விரிந்து அழியும் தன்மையுள்ள மாயா மலத்தைக்கொண்டு ஸூக்ஷ்ம ஸ்தூல தேகங்களையும் புவன போகங்களையும் ஸ்ருஷ்டித்து அருளினார்.

சேஷ்டையாவது துடித்துக்கொண்டும் தூண்டிக்கொண்டும் தொழில்மயமாயிருக்கும் கர்ம மலம். இதற்கு பர்யாய நாமம் ரஜஸ்குணம். இந்த மலத்தைக்கொண்டு ஆத்மோபாய ஜீவனோபாய கர்மங்கள் ஸ்ருஷ்டிக்கப்பட்டன.

விருப்பு வெறுப்பு என்ற ஆசைகளும் ஸ்வர்க்காதி போக வஸ்துக்களும் தனக்கு வேண்டியதில்லையென்று நிஸ்சயித்து நிஷ்காம புத்தியோடு தன் கர்மங்களைச் செய்கின்றவன் அகர்மியாகிறான் என்றும், சேஷ்டை என்ற மல வஸ்துவால் இயற்றப்பட்ட ஆத்மோபாய ஜீவனோபாய கர்மங்களை அநுஷ்டிக்கின்ற அகர்மிக்கு ஒரு தோஷமும் இல்லை என்றும், இந்த மந்த்ரத்திற் கூறி, அடுத்ததில் கர்ம தோஷம் "பந்தனம்" என்றும், அகர்மிக்குக் கர்மத்தால் பந்தனமில்லை என்றும் உபதேசிக்கின்றார்.

உ௱உ. எதிர்பார்க்காமற் கிடைத்ததில் ஸந்தோஷம் பெற்றவனும், த்வந்த்வத்தைத் தாண்டினவனும்(1), மத்ஸரமில்லாதவனும்(2), ஸித்தியிலும் அஸித்தியிலும் ஸமனானவனுமாகிய ஒருவன் (கர்மங்களைச்) செய்தாலும் பந்திக்கப்படுகின்றான் இல்லை (3).

(1) விருப்பு வெறுப்புகளில்நின்று ஜனித்த த்வந்தவமோஹத்தால் வாதிக்கப்படாத புத்தியை உடையவனும். உ. ௰௪, உ. ௫௰உ, எ. உ௰எ, க்குரிய உரைகளைப் பார்க்க.

(2) மத்ஸரம்=என்னிலும் ("மத்") இவன் மேலானவனாசப் போகவா ("ஸர") என்ற பொறாமை, எரிச்சல்.

(3) பந்தம்=கட்டு,பாசம்; பந்திக்கப்படுதல்=கட்டுப்படுதல். கர்மபந்தம் என்றால் என்னை? கர்மம் எவ்விதம் பந்திக்கும்?

அவித்யா என்ற ப்ரக்ருதி மலகோசத்தில் வீழ்ந்து கிடக்கும் ஜீவாத்மாவைத் தூக்கிவிடும்பொருட்டு, பரமேஸ்வரன் ஸூக்ஷ்ம ஸ்தூல தேஹங்களை அருளினார். இந்த தேஹங்களில் வஸித்து, ஜீவனோபாய ஆத்மோபாய கர்மங்கள் நடைபெற்று வருவதை அறியும்பொழுது, ப்ரக்ருதியின் குணங்கள் தேஹியை (ஸூக்ஷ்ம ஸ்தூல தேஹங்களைத் தரித்த ஜீவாத்மாவை) அத்தேஹங்களில் பந்திக்கின்றன (௰௪. ௫). எப்படியென்றால், அந்தத்தேஹங்களே "நான்" (ஆத்மா) என்றும், அவை செய்யும் கர்மங்களை "நான் செய்கினறேன்" என்றும், அறியப்பண்ணும். இப்படி அனாத்ம கார்யங்களை ஆத்ம லக்ஷணங்களாகக் கொண்டு, அவற்றைப் பற்றியிருத்தலே பந்தமாம். இந்த ஸங்கல்பங்கள் ஆத்மாவை தேஹத்திற் கட்டுகின்ற அத்ருஸ்ய மானஸ ஸூத்ரங்கள் (கயிறுகள்) என்றறிக.

அகர்த்ருத்வ புத்தியோடு செய்யப்பட்ட கர்மங்கள் அகர்த்தாவை அவனுடைய தேஹத்தில் பந்திக்கா.

உ௱௩. [தேஹத்தில்] ஸங்கமில்லாதவனும் (1), ஞானத்தில் (2) நிற்கின்ற மனம் பெற்றவனும், யஜ்ஞார்த்தமாகக் (3) கர்மத்தைச் செய்கின்றவனுமாகிய முக்தனுடைய (4) கர்மம் எல்லாம் அழிகின்றது (5).

(1) தேஹமே நான் என்ற மோஹத்தால் ஜனித்த தேஹப் பற்று இல்லாதவனும்.

ஸங்கம்=சேர்க்கை, ஒன்றிப்பு, பற்று.

(2) ஆத்ம ஞானத்தில், ஆத்மாவைப்பற்றிய ஞான ஶாஸ்த்ர விசாரணைகளில்.

(3) "யஜ்ஞாய" = "யஜ்ஞார்த்தாத்" (ங. ௯), யஜ்ஞார்த்தமாக, ப்ரஹ்மார்ப்பணமாக.

ப்ரஹ்ம அர்ப்பணம்=பரமேஶ்வரனுக்கு ஒப்புக்கொடுத்தல். "எல்லாக் கர்மங்களையும் என்னிடம் ந்யாஸி (ஒப்புக கொடு)" என்று ங. ௩௰ இலும், "எதைச் செய்கின்றாயோ அதையெல்லாம் மதர்ப்பணமாகச் செய்" என்று ௯. ௨௰௭ இலும் கூறியிருப்பதால், "யஜ்ஞார்த்தமாகக் கர்மத்தைச் செய்கின்றவன்" என்ற பதங்கள் ப்ரஹ்மத்தினிடம் கர்மத்தை அர்ப்பணம் செய்கின்றவன்" என்று பொருள்படும்.

(4) ப்ரக்ருதி பந்தங்களில்நின்று விடுபட்டவனுடைய.

முக்தனுடைய கர்மம்=ஜீவன்முக்தனுடைய கர்மேந்த்ரியங்கள் செய்யுங் கர்மம்.

(5) ஸகல கர்மங்களும் இல்லாமற்போகின்றன, ஏனெனில், அவனுடைய கர்மம் அகர்மம் ஆதலால்

தன் தேஹத்தில் பந்தமற்ற ஞானியுடைய இந்த்ரியங்கள் செய்யும் கர்மமொன்றும் அவனுடைய கர்மமன்று. அக்கர்மம் அவனுக்கு அகர்மமென்பது பற்றியும், ஸுக துக்க பலன்களைக் கொடாதென்பது பற்றியும், "முக்தனுடைய கர்மம் எல்லாம் அழிகின்றது" என்றார்.

அடுத்த மந்த்ரத்தில், அகர்ம அநுஷ்டானம் செய்து மோக்ஷ ஸித்தியைப் பெற்ற பேரறிவாளிக்கு கர்மகாண்டத்திற் கூறப்பட்ட யஜ்ஞாதி கர்மங்களும், அவற்றிற்குரிய நாநாவித பாவனைகளும், வ்யஷ்டியாக (வெவ்வேறாக)த் தோற்று என்றும், அவையெல்லாம் ஸகுண ப்ரஹ்ம சொரூபங்கள் என்றும், ஸகுண ப்ரஹ்மத்துக்கு அப்பாற்பட்ட ஜீவன்முக்தன் நிர்குண ப்ரஹ்மத்தோடு ஐக்யமாவான் என்றும், உபதேஶிக்கின்றார்.

**உ௰௪. அர்ப்பணமும் ப்ரஹ்மம் (1), அக்னி என்ற ப்ரஹ்மத்தில் [ஹோதா என்ற] ப்ரஹ்மத்தால் ஹோமிக்கப்பட்ட ஹவிஸும் ப்ரஹ்மம். கர்மம் என்ற ப்ரஹ்மத்தில் ஸமாதிபெற்றவனால் அடைய வேண்டியதும் ப்ரஹ்மமே.**

(1) *அர்ப்பணம்=கொடுத்தல், ஈகை, தானம் (தாது, அர்ப்=கொடுத்தல்).*

*கர்மாதிகாரிக்கும் ஞானதிகாரிக்கும் பொதுவான தர்மம் அர்ப்பணம் என்ற கர்மம். அறம் (தர்மம்) என்றது ஈகை ("ஈதல் அறம்") என்று ஔவையார் ஓதினர். அஃதெப்படியெனிற், கூறுதும்.*

*ஆசையால் பந்திக்கப்பட்ட ஜீவாத்மா, தன்னை அறியாமல் தான் ஆசையென்று நினைத்து, ஆசையின் விஷயம் கிடைத்தால், அதைத் தானே புசிக்கும், வேறொருவருக்குக் கொடாது. ஆனல், தன் மனைவிக்கும் பிள்ளைக்கும் கொடுக்கின்றதே யென்று ஆக்ஷேபித்தால், தன்னுடைய மனைவி தன்னுடைய பிள்ளை என்று அஹந்தை மமதை பற்றியே கொடுக்கும். ஆதலால், அவர்களுக்குக் கொடுத்தல் தன் கையில் இருத்தல்போல நினைத்துத், தானே அநுபவிக்கின்றதாய் முடியும்.*

*ஆசையால் ஜனித்த தேஹப்பற்றையும் புறப்பொருட்பற்றையும் தீர்க்கும்படி, பரமேஶ்வரன் தக்க கருவிகளையும் குருமாரையும் தர்மஶாஸ்த்ரங்களையும் ஸ்ருஷ்டித்து, தேவாதிதேவனகிய தமக்கும் தேவர்களுக்கும் பித்ருகளுக்கும் அதிதிகளுக்கும் பூதங் (வேறுப்பிராணி)களுக்கும் விதித்தபடி அன்போடு கொடுக்கவேண்டுமென்று ஆஜ்ஞாபித்தார்.*

*இந்தப் பஞ்ச அர்ப்பணங்கள் பஞ்ச யஜ்ஞங்கள் என்றும் கூறப்படும்.*

*இவற்றுள், ப்ரஹ்ம யஜ்ஞம் (அல்லது அஹுதம்) என்றது ஸாங்க்யயோக அஷ்டாங்கயோக ஸாதனைகள், ஞான ஶாஸ்த்ர படனம், வேத பாராயணம், தேவாரம் திருவாசகம் முதலிய திருமுறைகளோதுதல். இவற்றல் ஞானதிகாரி அன்பைப் பெருக்கி, ஏகபாவனைசெய்து, தனது உடல் என்ற இந்*

த்ரியங்களையும், பொருள் என்ற நல்வினை தீவினைப் பயன்களை யும், ஆவி என்ற ஜீவபோதத்தையும் பரமேஶ்வரனிடம் ஒப்புவிப்பான் (அர்ப்பணம் செய்வான்). எனவே கர்மாதிகாரிக்குரிய ப்ரஹ்ம யஜ்ஞமாவது வேதபாராயணமும், தேவாரம் திருவாசகம் முதலிய திருமுறைகளோதுதலும், இவற்றால் ஈஶ்வரனுக்கும் ஜீவன்முக்தர்களுக்கும் த்ருப்தி செய்தலுமாம்.

தேவ யஜ்ஞம் (அல்லது ஹுதம்) என்றது தேவர்களுக்கு அக்னியில் ஹோமஞ் செய்தல். ஹோமஞ்செய்தல் (அல்லது ஹோமித்தல்) என்பது மந்த்ரத்தைச் சொல்லி அக்னியில் ஹோமிக்கப்பட்ட பொருளை இடுதலாம்.

பித்ரு யஜ்ஞம் என்றது பித்ருக்களைத் த்யானித்துத் தர்ப்பணம் செய்தல், மந்த்ர ஸஹிதமாக எள்ளும் தண்ணீருமிட்டுத் த்ருப்தி செய்தல்.

அதிதி யஜ்ஞம் என்றது தன் ஊரில் வஸிக்காதவனும் நாள்தோறும் வராமல் ஏகதேசத்தில் ஒருவன் வீட்டை நாடி வருகின்றவனுமாகிய ஸாதுவை உபசரித்து அன்னம் படுக்கை முதலியவை கொடுத்தல்.

பூத யஜ்ஞம் என்றது பதிதன் சண்டாளன் தீராப்பிணியாளி, நாய் காகம் கிருமிகள் என்ற ப்ராணிகளுக்கு பலி (உணவு) கொடுத்தல் (மநு, ௩. ௯௨).

இவ்விதம் எவன் தினந்தோறும் ஸகல ப்ராணிகளுக்கும் கொடுக்கவேண்டியதைக் கொடுத்துத் த்ருப்திசெய்கின்றானோ, அவன் தேஜோரூபனாய் மேலான பதவிகளை அடைகிறான் என்று ஶாஸ்த்ரமிருப்பதால், (மநு, ௩ ௯௩), ஆத்மதேஜஸுக்குக் காரணமான கொடை (அர்ப்பணம்) என்ற கர்மம் ப்ரஹ்மமயமே என்று கூறவேண்டியது.

ஈண்டு ப்ரஹ்மமயம் என்றது ஸகுண ப்ரஹ்மமயமெனக் கொள்க. அஃதாவது, ப்ரக்ருதியிலும் ப்ரக்ருதிகார்யங்களிலும் வீற்றிருந்து பஞ்ச க்ருத்யங்களை நடத்திவரும் அந்தர்யாமி ஈஶ்வரனது ஶக்தியே "அர்ப்பணம்" என்ற திவ்ய கர்மமாகி, கர்மாதிகாரியிலும் ஞானாதிகாரியிலும் ப்ரகாஶிக்கின்றது.

(2) அக்னிக்கு மூன்று ரூபங்கள் உண்டு. அப்ரத்யக்ஷமாக எங்கும் வ்யாபித்திருக்கும் ரூபம் ஒன்று. ப்ரத்யக்ஷ சுடர் ரூபமும் தேவரூபமும் இரண்டு. இந்த மூவித ரூபங்களுக்குரிய தத்த்வங்கள் அந்தர்யாமி ஈஶ்வரனது ஶக்தியே.

தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் ஜகத்துக்கும் ஹிதனையும் (அநுகூலனையும்), மந்த்ரங்களுக்கு ஹவனமாயும் (ஹோமித்தலுக்குரிய இடமாயும்), அக்னி நியமிக்கப்பட்டது. (மஹாபாரதம், ஶாந்திபர்வம், அத். ௱௬௪௨, ௰). மந்த்ரஸம்பந்தமாக இடப்பட்ட ஹவிஸை ஏற்று, உத்தேஶித்த தேவர்களுக்குச் செலுத்தும். ஈதெல்லாம் ப்ரஹ்ம ஶக்தியின் அம்ஶங்கள் என்பதுபற்றி, "அக்னி என்ற ப்ரஹ்மத்தில்" என்றார்.

(3) யாகத்தைச் செய்விக்கின்ற யஜமானன்; ஹோமத்தைச் செய்விக்கின்ற கர்த்தா.

வேத க்ருத்யங்களில் ஶ்ரத்தையும், தேவ யஜ்ஞங்களைச் செய்யவேண்டுமென்ற புத்தியும் அந்தர்யாமியின் ஶக்தியாதலால், அக்குணங்களைப்பெற்ற ஹோதாவை ப்ரஹ்மம் என்றார்.

(4) மந்த்ர ஸஹிதமாய் அக்னியில் இடப்பட்ட அன்னம் பால் நெய் முதலியவை.

இந்தப் பூஜாத்ரவ்யங்கள் அந்தர்யாமியின் ஶக்தியாதலால் "ஹவிஸும் ப்ரஹ்மம்" என்றார்.

(5) வேதங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களும் அந்தர்யாமியின் ஶக்தி வடிவங்களாதலால், "கர்மம் என்ற ப்ரஹ்மத்தில்" என்றார்.

(6) ஈண்டு, "ப்ரஹ்மமே" என்றது நிர்க்குண ப்ரஹ்மத்தை. ஏனெனில், ஸத்கர்ம அநுஷ்டானத்துக்குரிய ஸ்வர்க்காதி போகபலன்களில் ஸமத்வபுத்தி பெற்று, நைஷ்கர்ம்யம் என்ற ஸித்தியை அடைந்தவனால் பெறவேண்டிய துக்க நிவ்ருத்தியும் காமரூப வியோகமும் நிர்க்குண ப்ராஹ்மீ ஸ்திதியாதலால்.

"ப்ரஹ்மகர்மஸமாதிநா" (கர்மம் என்ற ப்ரஹ்மத்தில் ஸமாதிபெற்றவனால்) = பஞ்சமஹா யஜ்ஞங்கள் என்ற ப்ரஹ்ம ஶக்தியில் ஸமத்வபுத்தியோடு கூடின ஶ்ரத்தை பெற்றவனால்.

ஸமாதி=த்வந்த்வங்களை ஸமப்படுத்துதல்; விருப்பு வெறுப்புக்களில் ஸமரஸத்வம்.

த்வைதமாயிருக்கும் மனஸும் ப்ராணவாயுவும் ஒடுங்கி ஐக்யமாகுதலைப் ப்ராபல்யமாக ஸமாதி என்பார்கள்.

ஆனால் ஈண்டு, ஸமாதி பெற்றவன்=ஸமத்வ புத்திமான்.

இந்த மந்த்ரத்தில் அர்ப்பணம் முதலிய வேதகர்மங்களும், அக்னியும், ஹோதாவும், ஹவிஸும், ஸமத்வ புத்தியில் நின்று தோன்றும் துக்க நிவ்ருத்தியும், ஸர்வகாம ரூபத் த்யாகமும், "ப்ரஹ்மமே" என்று உபதேசித்த பகவான், அத்யாயங்கள் ஒன்பதிலும் பத்திலும் அநேக மான்மிய வஸ்துக்களை "நானே" என்றார். அஃதாவது "ப்ரக்ருதியுட்புகுந்த எனது ஶக்தி வடிவங்களே" என்று பொருள்படும்.

இனி, மந்த்ரங்கள் உ௰௫ தொட்டு ௩௰ வரையில், யஜ்ஞவித்களின், (ச. ௩௰) [ஶ்ரத்தையுள்ள யஜ்ஞகர்மாநுஷ்டானிகளின்] ஹோமங்களும் (அர்ப்பணங்களும்) ஹவிஸ்களும் (அர்ப்பிக்கப்பட்ட த்ரவ்யங்களும்) தொகுக்கப்படும்.

இந்த ஹோமங்கள்,—தேவயஜ்ஞம் (உ௰௫), ஈஶ்வரார்ப்பணயஜ்ஞம் (உ௰௫), இந்த்ரிய நிக்ரஹம் (உ௰௬), விஷயாநுபவ நியமம் (உ௰௬), ஆத்ம ஸம்யம யஜ்ஞம் (உ௰௭), த்ரவ்ய யஜ்ஞம் (உ௰அ), தபோயஜ்ஞம் (உ௰அ), த்வந்த்வ ஸமத்வ யஜ்ஞம் (உ௰அ), ஆத்ம விசாரம் (உ௰அ), ப்ராணாயாமம் (உ௰௯), நியதாஹார யஜ்ஞம் (உ௰௯), என்றவையாம்.

**உ௰௫. சில கர்மாநுஷ்டானிகள் தேவயஜ்ஞத்தையே செய்கின்றனர். (1). சிலர் (அந்த) யஜ்ஞத்தோடு (கூடின கர்த்த்ருத்வத்தை) ப்ரஹ்மாக்னியில் ஹோமிக்கின்றனர். (2)**

(1) கர்த்த்ருத்வ புத்தியோடு சிலர் தேவர்களை ஆராதித்து, அவ்வாராதனைக்குரிய ஸ்வர்க்காதி பலன்களைப் பெறுகின்றார்கள்.

யஜ்ஞம்=யஜித்தல், பூஜித்தல்.

க்ருஹஸ்தனுக்குத் தன் பஞ்ச ஸூனா நிவ்ருத்திக்காக பஞ்சமஹா யஜ்ஞங்கள் ஏற்பட்டன (மநு, ௩. ௬அ-எ௩). வறு

மையால் மாநுடயஜ்ஞம் செய்யக் கூடாதுபோனால், ப்ரஹ்ம யஜ்ஞமும் தேவயஜ்ஞமும் இடைவிடாமற் செய்யவேண்டும் (மநு. ௩. எ௫.). இவற்றைக் க்ரமமாகச் செய்கின்றவனுக்கு சித்த ஶுத்தி மெல்லமெல்ல அமையுமென்றும், ஹோமங்களைப் பெற்ற ஸ்வாமி அநேக விஷய ஸுகங்களைக் கொடுப்பாரென்றும், அக்னிமய ஸூர்யபகவான் மழையை அநுக்ரஹிப்பாரென்றும், இதனால் ஸ்தாவர ஜங்கமங்களுக்கு வந்த வ்ருத்தியின் பயன் யஜமானனுக்குக் கிடைக்குமென்றும், தர்ம ஶாஸ்த்ரங்கள் கூறுகின்றன.

(2) ஹோமிக்கின்றனர்=அர்ப்பணம் செய்கின்றனர், ஒப்புக்கொடுக்கின்றனர்.

தேவ ஆராதனையைச் செய்யும்பொழுது நான் ஆராதிக்கின்றேன் என்ற அஹம்பாவ சிந்தனையை நீக்கிச், செய்யப்பட்ட க்ருத்யத்தையும் அதன் பலனையும் பரமேஶ்வரனிடம் ஒப்புக் கொடுத்தலே ஈஶ்வரார்ப்பண பூஜை. இந்த நைஷ்கர்ம்ய யஜ்ஞம் ஞானத்துக்கு (அகண்டாகார பரிஶுத்த அறிவுக்கு) அவஶ்யமான ஸாதனம்.

**உ௰௬. சிலர் செவி முதலான இந்த்ரியங்களை ஸம்யமப் (ஒடுக்கப்) என்ற அக்னிகளில் ஹோமிக்கின்றனர் (1). சிலர் இந்த்ரியங்கள் என்ற அக்னியில் ஶப்தம் முதலான விஷயங்களை ஹோமிக்கின்றனர். (2)**

(1) மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற கருவிகளை மெய்யொடுக்கம், வாயொடுக்கம், கண்ணொடுக்கம், மூக்கொடுக்கம், செவியொடுக்கம், என்ற அக்னிகள் வாயிலாக மகேஶ்வரனுக்கு அர்ப்பணம் செய்கின்றனர்.

ஞானேந்திரியங்களைத் தத்தம் விஷயங்களாகிய ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்றவற்றிற் செல்லவிடாமல் நிறுத்துதல் (அடக்குதல்) "ஸம்யமம்" என்ற ஒடுக்கம். இது இந்த்ரிய நிக்ரஹம் என்றும் கூறப்படும். இந்த்ரிய நிக்ரஹங்கள் ஆத்ம தர்ஶனத்திற்கு நேர்வழியாதலாலும், தேவர்களுக்கு ஹவிஸைச் செலுத்தும் அக்னி என்ற ப்ரஹ்மஶக்தி இந்த்ரிய நிக்ரஹ ஶக்

திகளாக விரிந்ததாலும், மெய் வாய் கண் மூக்குச் செவி ஒடுக்கங்களை அக்னிகள் என்றார்.

ஹோமாக்னியில் ஹோமிக்கப்பட்ட வஸ்துக்கள் வேதத்தில் நியமிக்கப்பட்டவையாதலால், இங்கு கூறப்பட்ட இந்த்ரிய விஷயபோகங்கள் விஷயாநுபவ நியமம் எனப் பொருள் படும்.

இந்த்ரியங்களை அடக்க வலிமையுள்ள யஜ்ஞவித்(ச.௩௰.), என்னென்ன ஸத்விஷயங்களை எந்தெந்தக் காலத்தில் எவ்வளவுக்குப் போகிக்க வேண்டும் என்று நியமித்து, அந்த நியமப்படி தெய்வத்தை மறவாது வாழ்வான். இவ்விதமான புண்ய நியமங்களுக்குட்பட்ட இந்த்ரியங்களை "அக்னி" என்றும், அவை ஒப்புக்கொள்ளும் ஸத்விஷயங்களை "ஹவிஸ்" என்றும், உபதேசிக்கின்றார்.

**உயஎ. சிலர் ஸகல இந்த்ரிய கர்மங்களையும் (1) ப்ராணகர்மங்களையும் (2) ஞானத்தால் ப்ரகாசிப்பிக்கப்பட்ட (3) ஆத்ம ஸம்யம யோகம் (4) என்ற அக்னியில் (5) ஹோமிக்கின்றனர். (6)**

(1) ஞானேந்திரியங்களின் தொழில்களாகிய பார்த்தல், கேட்டல், மணத்தல், ருசித்தல், ஸ்பர்சித்தல் என்றவற்றையும், கர்மேந்த்ரியங்களின தொழில்களாகிய பேசுதல் பாடுதல், கொடுக்கல் வாங்கல், நடத்தல் ஓடுதல் முதலியவற்றையும்.

(2) ப்ராணவாயுவின் தொழிலாகிய உச்ச்வாஸ கதியையும், அபானவாயுவின் தொழிலாகிய நிஸ்வாஸ கதியையும்.

ஸ்வாஸம்=மூச்சு. உச்ச்வாஸ கதி=வெளியே செல்லும் மூச்சு. நிஸ்வாஸ கதி=உள்ளே செல்லும் மூச்சு.

(3) அகண்ட புத்தியால் வ்யாபிக்கப்பட்ட. அஃதாவது, தெளிவான விஸால புத்தி தோன்றி விளக்கம் செய்கின்ற.

(4) மன ஆத்ம அடக்க அப்யாஸம், மனோநிக்ரஹப் பழக்கம்.

ஆறும் அத்யாயத்தில் இந்த மனாத்ம ஸம்யம யோகத்தின் லக்ஷணத்தையும் ப்ரயோஜனத்தையும் பகவான் உபதேசிக்கின்றார்.

(5) ஆசைகளால் ஏவப்பட்டு இந்த்ரியாதி ப்ராணாதி கர்மங்களை மிகைபடவிடாமல் சுருக்கவேண்டுமென்று ப்ரயாஸப்படுகின்றவனுடைய மனோ நிக்ரஹ அநுஷ்டானம் ப்ரக்ருதி பந்தங்களைத் தஹித்து, மலஶுத்தி செய்வதால் "அக்னி" என்றார்.

(6) கண் செவி முதலிய ஞானேந்த்ரியங்களும், வாக்குக்கை முதலிய கர்மேந்த்ரியங்களும் பரிஶுத்திக்குத் தடையானவிஷயங்களைப் பற்றாதிருக்கவேண்டும் என்றும், வெளி மூச்சையும் உள் மூச்சையும் நிதானமாகவும் ம்ருதுவாகவும் செலுத்தவேண்டும் என்றும், எண்ணி, இந்த்ரியங்களுக்கு ஆதாரமான மனஸை வீண்முயற்சிகளிற் செல்லவிடாமல் அடக்கிவைத்துக் கொண்டேயிருப்பார்கள். இப்படி அடக்கம் பெற்ற மனஸில் அநாத்ம கர்மங்கள் நாஶமாகும் என்பதுபற்றி, "இந்த்ரிய...ப்ராணாதிகர்மங்களை...ஆத்ம ஸம்யம...அக்னியில் ஹோமிக்கின்றனர்" என்றார்.

உ௰அ. உறுதியான வ்ரதமுடைய யதிகள் ([1]) சிலர் த்ரவ்யத்தையும் ([2]), சிலர் தபஸையும் ([3]), சிலர் [ஸமத்வபுத்தி] யோகத்தையும் ([4]), சிலர் வேதாத்த்யயனத்தையும் ([5]), சிலர் ஆத்ம விசாரத்தையும் ([6]), யஜ்ஞமாகக் கொண்டவர்கள் ([7]).

(1) நியமங்களை அநுஸரிக்கும் அடக்கமுள்ளோர்.

வ்ரதம் (தாது "வ்ரஞ்," கொள்ளுதல்)=நியமம்

யதி (தாது, "யம்," ஒடுங்குதல்)=மனம் வாக்கு காயம் என்ற த்ரிகரணங்களை அடக்கி வாழ்கின்றவன்.

(2) "த்ரவ்யத்தை யஜ்ஞமாகக் கொண்டவர்கள்"=பூமி, தனம், தான்யம் முதலிய ஸம்பத்தை தர்மவழியில்நின்று தேடி, தேவர்கள், பித்ருக்கள், ஸாதுக்கள், சுற்றத்தார் என்பவர்களுக்கு அன்புடன் படைத்து, எஞ்சினதைத் தாம் அநுபவிக்கவேண்டும் என்ற வ்ரதத்தை ஸாதிக்கின்றவர்களும் ப்ரஹ்மயஜ்ஞத்தைக் கைக்கொண்டவர்கள்.

(3) ஸாத்விக தபஸை.

அத். ௰௭, மந். ௰௪ தொட்டு ௰௭ வரையில் தபஸின் விஶே

ஷ லக்ஷணங்கள் விரிக்கப்பட்டன.

தபஸ் ஶரீரத்தாலும், வாக்காலும்,மனஸாலும் செய்யப்படு வதால், ஶரீர தபஸ் என்றும், வாங்மய தபஸ் என்றும், மானஸ தபஸ் என்றும் கூறப்படும்.

ஶரீர தபஸாவது கை கால்களால் ஹிம்ஸை செய்யாமை, தேகஶுத்தி, நேராக நிமிர்ந்து இருத்தல் நிற்றல் ("ஆர்ஜவம்"), தேவர்களையும் குருமாரையும் த்விஜர்களையும் புத்திமான்களை யும் வழிபடுதல்.

வாங்மய தபஸாவது ஆத்மஶாஸ்த்ர படனம், கோபம் பொறாமை முதலிய உத்வேகங்களை உண்டுபடுத்தாத சொற்க ளைப் பேசுதல், ஸத்ய வாக்கு, இனிய வசனம்.

மானஸ தபஸாவது மன அடக்கம், மனத் தெளிவு, சித்த ஶுத்தி, ஸௌம்யகுணம்.

இவ்வித தபஸ்கள் எந்த எண்ணத்தோடு செய்யப்படுமோ, அந்த எண்ணப்படி மூன்று வகையாகும்.

தபஸின் பலனை விரும்பாமல் ஈஶ்வர ஶ்ரத்தையோடு செய் தால், ஸாத்விக தபஸாகும். ௰௭, ௰௭.

பலனை விரும்பி டம்பத்துக்காகச் செய்தால், ராஜஸ தப ஸாகும். ௰௭, ௰௮.

தன்னை வருத்தி, அல்லது பிறரை வருத்துதற்காகச், செய் தால்; தாமஸ தபஸாகும். ௰௭, ௰௯.

இவற்றில், ஸாத்விக தபஸை அநுஸரிக்கின்றவர்கள் மாத் ரம் ப்ரஹ்ம யஜ்ஞத்தைக் கைக்கொண்டவர்கள் என்பது பகவா னது கருத்து.

(4) புத்தியால் விருப்பு வெறுப்பு என்ற த்வந்த்வங்களை ஸமத்வம் செய்துகொண்டு வாழ்கின்றவர்களும் ப்ரஹ்மயஜ்ஞத் தைக் கைக்கொண்டவர்கள்.

(5) "ஸ்வாத்யாய" (ஸ்வ+அத்யாய, தான் என்ற ஆத்மா வுக்குரிய அத்யயனம்) வேதம் ஓதுதல்.

(6) "ஞாந"=ஆத்ம அநாத்ம விசாரணை; ஆத்மா எது, ஆத் மாவுக்கு அன்யமான வஸ்துவாகிய ப்ரக்ருதி எது, என்ற

ஆராய்ச்சி.

(7) ப்ரஹ்மார்ப்பணம் என்ற யஜ்ஞத்தை அநுஸரிக்கின்றனர்.

உ௰௯. சிலர் அபானனில் ப்ராணனையும், அவ்விதமே பிராணனில் அபானனையும், ஹோமிக்கின்றனர் (1). சிலர் பிராணகதியையும் அபானகதியையும் தடுத்துப் ப்ராணாயாமத்தையே மேலாகக் கோள்வர்கள்.

(1) நடராஜப் ப்ரபு என்ற மஹேஸ்வரனுடைய ஶக்தியாகிய ராஜராஜேஶ்வரியின் ப்ரவாகத்தை நடனம் என்று பெரியோர் கூறுவார்கள். இந்த நடன ஶக்தியில்நின்று ப்ராணன் ரயி என்ற மிதுன ஶக்திகள் தோன்றின. ப்ராணன் ஸூர்யனாகவும், ரயி சந்த்ரனாகவும் பிறந்து, இவற்றின் ரேகைகளால் ஸகல ஸூக்ஷ்ம ஸ்தூல ஶரீரங்கள் ஸ்ருஷ்டிக்கப்பட்டன என்று ப்ரஶ்னோபநிஷத்தில் விளக்கப்பட்டது.

ஒவ்வொரு ஸூக்ஷ்ம ஶரீரத்தின் இருபது தத்வங்களில் பிராண அபான வாயுக்கள் இரண்டு. இவற்றுள், ப்ராணன் க்ரஹம் என்றும், அபானன் அதிக்ரஹம் என்றும், அதிக்ரஹமாகிய அபானனால் ப்ராணன் பிடிக்கப்பட்டு, அபானனால் க்ராணேந்த்ரியம் கந்தங்களை மணக்கும் என்றும், ப்ருஹத் ஆரண்யக உபநிஷத் ௩, ௨, ௧. இல் உபதேஶிக்கப்பட்டது. இதன் தாற்பர்யம், ப்ராணகதியும் அபானகதியும் க்ராஹ்ய க்ராஹ ஸம்பந்தத்தால் நடைபெற்றுவரும் உச்ச்வாஸ (மேல்மூச்சு) நிஶ்வாஸ (கீழ்மூச்சு)க்க்ரியைகளால் தோன்றுகின்றன என்றும், அபானகதியற்றால் க்ராணேந்த்ரியம் கந்தங்களை மணக்கா என்றும் அறிக.

ப்ராண அபான ஸம்பந்தத்தை இவ்விதம் அறிந்தால், உ௰௯-ம் மந்த்ரத்திலுள்ள பதங்களின் அர்த்தம் விளங்கும்.

ப்ராணவாயு ஹ்ருதய ஸ்தானத்துக்குக் கீழ்ப்பட்ட அங்கங்கள்தோறும் அதோமுகமாக ஓடுவதை நிஶ்வாஸம் என்றும், மறுபடி ஊர்த்வ முகமாகச் சென்று நாஸிவழியால் ஓடுவதை உச்ச்வாஸம் என்றும், கூறப்படும். இந்த இரண்டு கதிகளும் (ஓட்ட

ஙகளும்) தேகஸம்ரக்ஷணைக்காகவே இயல்பில் நடைபெற்று வருகின்றன

இந்தக்கதிகளை ப்ரயத்தன விசேஷத்தால் தடுத்து,ப்ராணனையும் அபானனையும், ஸித்தி முத்திகளுக்காக, ஐக்யப்படுத்துதல் (ஒன்றுக்குதல்) ப்ராணாயாமம் என்றும், ஹடயோகம் என்றும், அழைக்கப்படும்.

"ப்ராண ஆயாமம்" என்பது ப்ராணனைத் தடுத்தல் என்றும்,"ஹ" என்பது ஸூர்யன் அல்லது ப்ராணன் என்றும்,"ட" என்பது சந்த்ரன் அல்லது அபானன் என்றும், "ஹடயோகம்" என்பது ப்ராண அபான ஐக்யம் என்றும், ஹடயோக ப்ரதீபிகையில் கூறப்பட்டது.

உள்ளிருக்கும் வாயுவை ப்ராணனால் வெளியில் மெல்ல மெல்ல விடுதல் ரேசக ப்ராணாயாமமாகும். வெளியிலுள்ள வாயுவைப் ப்ராணன் (அபானனுற் பிடிக்கப்பட்டு) உள்ளே மெல்ல மெல்ல நாஸித்துவாரத்தால் இழுத்து, நாடிகள்தோறும் பூரித்தல் (நிரம்பச் செய்தல்) பூரக ப்ராணாயாமமாகும். பூரித்த வாயுவை விதிப்படி ஜாலந்தரமுதலிய பந்த பூர்வகமாக ப்ராணனை (கும்பத்தில் நிறைத்த ஜலம் போலத்) தரித்தல் (நிறுத்தல்) கும்பக ப்ராணாயாமமாகும். கும்பித்த வாயுவைத் திரும்பவும் மெல்ல் மெல்ல வெளிவிடவேண்டியது. இவ்வித அப்யாஸங்களை ரேசகம், பூரகம், கும்பகம் என்றும் சுருக்கிச் சொல்வார்கள்.

ப்ராணாயாமங்களைச் செவ்வையாகத் தினமும் செய்து வந்தால், படிப்படியாக அன்னஜீரணமும், தேகவலிமையும், மனோதைர்யமும், சித்தஶுத்தியும் அடக்கமும், தளராமுயற்சியும், நரை திரையின்மையும், நீண்ட ஆயுளும், வேறு அநேகஸித்திகளும், உண்டாகும்.

ப்ரஸித்திபெற்ற ப்ராணாயாமத்தின் லக்ஷணத்தை அறிந்த ஹடயோகிகள் சித்பரநிலையாகிய ஜீவன்முத்தியைக் கருதி வாழ்வதால், அவர்களுடைய அப்யாஸங்களை ஞானயோகத்தில் பகவான் அடக்கிச், சிலர் ப்ராணனை அதன் அதிக்ரஹமாகிய அபானனில் ஹோமித்து (ஒப்புக்கொடுத்து), அபானனை அதன்

க்ரஹமாகிய ப்ராணனில் ஹோமிக்கின்றனர் என்றார். அஃதாவது, ஹடயோகம் ஸித்திக்கும் பொருட்டு, சிலர் பூரக ரேசக ப்ராணாயாமங்களை அநுஸரிக்கின்றனர் என்பதே.

(2) வேறு சிலர் பூரக ரேசக ப்ராணாயாமங்களுக்கு மேற்பட்ட கும்பகப்பழக்கத்தை அப்யாஸம் செய்து வருகின்றனர். இந்தப் பழக்கத்தால் ப்ராணன் என்ற க்ரஹமும் அபானன் என்ற அதிக்ரஹமும் ஐக்யமாகின்றன.

**௩௰-௩௰௧. சிலர் நியமம்பெற்ற ஆஹாரமுடையவர்களாய், (1) ப்ராணுதிகளை (2) ப்ராணுதிகளில் ஹோமிக்கின்றனர். (3) ஓ குருஸத்தம, (4) யஜ்ஞவித்களாகிய (5) [முன்கூறப்பட்ட] இவர்கள் எல்லாம் (6) யஜ்ஞத்தால் [மனஸிலுள்ள] கல்மஷத்தைப் போக்கினவர்களாய், (7) ஸநாதன ப்ரஹ்மத்தைப் பெறுகின்றனர்.**

**யஜ்ஞம் செய்யாதவனுக்கு இந்த லோகம், [ப்ரயோஜனப்பட] இல்லை. (8) வேறு எங்கிருந்து [புண்யகர்மபலன்களைப் பெறலாம்.]**

(1) தங்கள் ஜடராக்னி லெகுவில் ஜீரணிக்கத்தக்க ஆஹாரத்தை மாத்ரம் சிறுக உண்டு.

(2) ப்ராணுதிகளாவன: ப்ராண அபான ஸமான வ்யான உதான வாயுக்கள்.

ப்ராணன், தனக்குரிய ஸ்தானமாகிய ஹ்ருதயத்தைப் பற்றி, நாஸிவழியால் வெளியிலுள்ள ஸ்தூலவாயுவை நாடிகள் தோறும் இழுத்துக்கொண்டுபோய், அங்கங்களைச் சுத்திசெய்து, மீளவும் நாஸிவழியால் வெளியில் விடும்.

அபானன், குதத்தைப் பற்றிநின்று, குடலிலும் இரைப்பையிலும் சென்று ஜடராக்னியை வளர்த்து அன்னபாநுதிகளை ஜீரணிக்கச் செய்யும்.

ஸமானன், நாபிஸ்தானத்தில் நின்று, அன்னரஸமாகிய ரக்தத்தை ஸகலநாடிகள் தோறும் செலுத்திவைக்கும்.

வ்யானன், ஸர்வாங்கமும் வ்யாபித்திருப்பதால், ஒவ்வொரு அங்கத்துக்குரிய நாடிகளிற் செல்லும் பஞ்சபூதங்களை மற்ற அங்கங்களுக்குரிய நாடிகளிற் செல்லும் பஞ்சபூதங்களோடு

ஸம்பந்தப்படுத்தி இயங்கச்செய்யும். உச்ச்வாஸ நிஶ்வாஸக் க்ரியைகள் தடைபெற்ற காலங்களில் ஆபத் வராமற் பொறுத்து, தேகத்தைக் காக்கும். (சாந்தோக்ய உபநிஷத், க.௩. ௩—௫)

உதானன், கண்டஸ்தானத்தைப்பற்றி, மனஸுக்கு வலிமையைக் கொடுத்தும், தூக்கத்திற் சென்ற இந்த்ரியங்களை எழுந்திருக்கச் செய்தும், தடுமாறி விழுந்தேகத்தை நிமிர்ந்த நிலையில் நிறுத்தியும், மரணவாதனையில் ஸூக்ஷ்ம தத்வங்களை இழுத்துக் கொண்டு வெளியே சென்று பரலோகங்களிற் ப்ரவேஶிக்கும்.

(3) இவ்விதம் ஸம்பந்தப்பட்ட ப்ராணாதி வாயுக்களில், ஒன்றை அதற்கு ஸகாயமாயிருக்கும் வேறொன்றில் ஏகாக்ர சித்தத்தால் காய ஸித்திகளுக்காக ஒப்புவிக்கின்றார்கள்.

(4) குரு வம்ஶத்தாரில் மிகச் சிறந்தவனே.

(5) ஸ்வாமியை யஜிக்கும் வகைகளை அறிந்த மஹான்களாகிய.

(6) ஸ்வாமிக்கு ஹோமித்து (படைத்து), ஶ்ரத்தையால் அவருக்குத் த்ருப்தி செய்தபின், அவர் பார்வையிட்டு எஞ்சின ("ஶிஷ்ட") ப்ரஸாதத்தை.

ப்ரஸாதம் என்றது பூஜிக்கப்பட்ட தெய்வத்தின் தெளிவு, ஶாந்தி, தேஜஸ், அநுக்ரஹம். அவர் மனமகிழ்ந்து அருளினது எதுவோ, அது ப்ரஸாதம். இதை "அம்ருதம்" என்றார், ஏனெனில் ஞானயோகங்கள் சாவாநிலையாகிய ப்ராஹ்மீ ஸ்திதிக்கு ஹேதுவாயிருப்பதால்.

(7) கூறப்பட்ட ஞான யஜ்ஞங்கள் எவ்விதம் ப்ராஹ்மீ ஸ்திதியை உண்டாக்கும் என்றால், சித்தத்திலுள்ள கல்மஷங்கள் (மலங்கள்) முற்றாக விட்ட பின்பே உண்டாகும் என்று உபதேஶிக்கின்றார். "சித்த மலமறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட அத்தன்" என்று மாணிக்கவாசக ஸ்வாமி சொன்னதும் அவ்வாறே.

(8) பூலோகத்தில் மாத்ரம் கர்மாநுஷ்டானத்தின் பலன் சீக்ரம் ஸித்திக்கின்றபடியால், இங்கு செய்யவேண்டிய யஜ்ஞம்

தானம் தபஸ் என்ற கர்மங்களை ஶ்ரத்தையோடு செய்யாதுபோனால், மானுடப் பிறவியின் ப்ரயோஜனங்களாகிய ஸ்வர்க்காதி போகங்களும் கல்மஷநீக்கமும் மோக்ஷமும் உண்டாகா.

௩௰௨. இப்படிப்பட்ட பலவித யஜ்ஞங்கள் ப்ரஹ்ம முகத்தில் விரிந்தன. [1] அவை எல்லாம் [புண்ய] கர்மங்களில்நின்று பிறந்தவையாக அறி. [2] இவ்விதம் அறிந்து, [உன்னை வாதிக்கின்ற துக்க பய கல்மஷங்களில்நின்று] நீ விலக்கப்படுவாய் [3]

(1) குறிக்கப்பட்ட ஞான யஜ்ஞங்கள் தேவாத்மபக்தியின் நாநாவித ரூபங்கள்.

(2) இந்த ஞான யஜ்ஞங்கள் புண்ணிய கர்மங்களைப்பற்றி ஸ்ருஷ்டிக்கப்பட்டன. அவை யாரால் அநுசரிக்கத்தக்கவை? பூர்விகத்தில் புண்யகர்மங்களைச் செய்து அவற்றின் பலன்களுக்கேற்றபடி பெற்ற சரீரங்களையுடையவர்களால் என்றறிக.

ஞான யஜ்ஞங்களுக்கு அதிகாரிகள் புண்யாத்மாக்கள் என்பது கருத்து.

(3) இந்த உண்மையை நன்றாய் உணர்ந்து, ஞான யஜ்ஞங்களில் ஒன்றைக் க்ரமமாகவும் ஶ்ரத்தையோடும் நீ ஸாதித்துவந்தால், உன்னுடைய பாஸ்த்ரார்த்த அறியாமை நீங்கி, துக்க பய மோகங்களில்நின்று முக்திபெறுவாய்.

௩௰௩. பரந்தப, த்ரவ்ய யஜ்ஞத்தைப்பார்க்கிலும் ஞான யஜ்ஞம் மிகச்சிறந்தது [1] ஓ பார்த்த, ஸகல [புண்ய] கர்மங்களும் [2] ஞானத்தில் ஸமாப்தியை அடைகின்றன. [3]

(1) தற்காலத்தில் அரசர்களும் ஏனையோரும் இக பர லோக ஸுகங்களைக் கருதி அன்னம் வஸ்த்ரம் ஸ்வர்ணம் (பொன்) முதலிய த்ரவ்யங்களாற் செய்யப்பட்ட தான பூஜைகளினும், சித்தஶுத்தியைக் கொடுக்கும் ஈஶ்வரார்ப்பண தானங்கள், ஞானத்துக்கு நேர்வழியாயிருப்பதால், மிகவும் மேலானவை.

ச. ௨௰அ இல் கூறினபடி த்ரவ்ய யஜ்ஞும் ப்ரஹ்ம யஜ்ஞங்களில் ஒன்றாயிருந்தும், அது ஞானத்தைப் பயப்பதற்கு ஒருவன் ஈஸ்வரார்ப்பண புத்தியோடு த்ரவ்யதானத்தைச் செய்ய வேண்டும். ஆதலால் ஈஸ்வரார்ப்பண புத்தியற்ற த்ரவ்யதானத்திலும் ஞானோபாய ஈஸ்வரார்ப்பணதானம் மிகச்சிறந்தது என்று இந்த மந்த்ரத்தில் விளக்கினார்.

(2) ஹிம்ஸையற்ற ஸகல ஜீவனோபாய ஆத்மோபாய கர்மங்களும்.

(3) அகண்டாகார அறிவில் முடிவுபெறுகின்றன.

கர்மாநுஷ்டானம் என்ற பாதை ஞானம் என்ற அந்தத்துக்கே பரமேஸ்வரனால் ஸருஷ்டிக்கப்பட்டது.

பாப கர்மங்களை நீக்கி யஞ்ஞும் தானம் தபஸ் என்ற புண்ய கர்மங்களை ஒவ்வொரு நாளும் அன்புடன் செய்துவருகின்றவனுக்குச் சித்தஶுத்தி அமையும். அதனால் ஆத்ம அனாத்ம விவேகம் உண்டாகி அகண்டாகார அறிவை முறையாகப் பெறுவான்.

௩௰ச, ௩௰ரு. எதனை (1) அறிந்து நீ இப்போழுது கொண்டாற்போல மறுபடியும் மோஹத்தை (2) அடையமாட்டாயோ, எதனால் (3) எல்லாப் ப்ராணிகளை என்னில் (4) தோன்றிப் பின் என்னிடத்து [ஒடுங்குகின்றனவென்று] அறிவாயோ, அதனை (5) நமஸ்காரத்தாலும் (6) வினவினாலும் (7) ஸேவையாலும் (8) அறி. தத்வதர்ஶிகளான (9) ஞானிகள் உனக்கு ஞானத்தை (10) உபதேஶிப்பார்கள்.

(1) எந்த ப்ரஹ்மத்தை.

(2) பய துக்க ஶோகங்களை.

(3) எந்த அகண்டாகார அறிவால்.

(4) "பூதாநி ஆத்மநி"=ப்ராணிகளை ஆத்மாவில், அஃதாவது, மஹேஶ்வரனாகிய என்னில். அத். கூ. மந். க௩, கரு.

(5) அந்தப் பரப்ரஹ்மத்தை.

(6) வாக்காலும் மனஸாலும் துதித்தும்.

(7) அதன்லக்ஷணத்தை விசாரித்தும்.

(8) ஞான யஜ்ஞங்களால் பூஜித்தும்.

(9) தத்பொருளாகிய நிர்க்குண பர்ஹ்மத்தையும் ஸகுண ப்ரஹ்மத்தையும் அநுபவ முறையாக அறிந்த.

(10) அத்ருஶ்யமாய் தன்னந்தனியாய் எக்காலமுமுள்ள சித்பொருளின் லக்ஷணத்தைப்பற்றியும், அதை யதார்த்தமாக அறியக்கூடிய உபாயங்களைப் பற்றியும்.

இந்த ஶ்லோகத்தில் ஜீவன்முக்தனே தக்க ஞானதேஶிகன் என்றும், ஞானமயமான வஸ்துவை தர்ஶித்தால், பயதுக்க ஶோகங்கள் தீருமென்றும், விளக்கப்பட்டது.

௩௰௬. எல்லாப் பாபிகளிலும் நீ மிகுந்த பாபம் செய்தவனாக இருந்தாலும், ஞானத் தெப்பத்தாலேயே எல்லாப் பாபத்தையும் கடப்பாய். (1)

(1) பிறவிகள்தோறும் காணப்பட்ட பய துக்க ஶோக அலைகளால் அடிபட்ட ஸமுத்ரத்தைத் தாண்டி, ஸ்திரமான மோக்ஷத்தை அடைவதற்குத் தக்க மிதப்பு ("ப்லவ") ஞானமே (மெய்யறிவே).

௩௰௭. அர்ஜுன, ஜ்வலிக்கின்ற நெருப்பு எவ்விதம் விறகுகளைச் சாம்பலாகச் செய்கின்றதோ, அவ்விதம் ஞானாக்னி (1) எல்லாக் கர்மங்களையும் சாம்பலாகச் செய்கின்றது. (2)

(1) ஞானம் என்ற அக்னி. ௪. ௧௯ (2).

(2) கர்ம பந்தங்களையும், அதாவது, கர்த்ருத்வ போக்த்ருத்வ ஸங்கல்பங்களையும், அவற்றின் ஸுகதுக்க பலன்களையும்.

நான் கர்த்தா, நான் போக்தா என்ற சிந்தனையற்றுச் செய்யப்பட்ட கர்மங்கள் அகர்மங்களாகும்.

௩௰௮. இவ்விடத்தில்(1) ஞானத்துக்கு ஸமானமான பவித்ரம்(2) இல்லை. [கர்ம] யோகத்தின் ஸம்ஸித்தி (3) [ஆகிய அகண்ட ஞானத்தைப் பக்வ] காலத்திற் பெற்று, (4) ஸ்வயமான தத்பொருளைத் (5) தனக்குள் அடைகின்றான். (6)

(1) இந்த ப்ரஹ்மாண்டத்தில்.

(2) பரிஶுத்திசெய்யும் வஸ்து; ஜீவாத்மாவிலுள்ள மலங்களைத் தீர்க்கும் பொருள்.

(3) சிறந்த பலன், பேறு
(4) அகண்ட ஞானத்தை=விஶால அறிவை.
(5) "ஸ்வயம் தத்"=ஸ்வயமான தத்பொருள்; ஒருவராலும் ஸ்ருஷ்டிக்கப்படாததும் ஒருபொழுதும் அழிவற்றதுமாகிய சித்சொரூபம்.
(6) "ஆத்மநி விந்ததி"=ஜீவாத்மாவுக்குள் [வீற்றிருக்கும் பரமாத்மாவை] அறிகின்றான்.

௩௰௯. ஶ்ரத்தை [1] பெற்றவனும், தத்பரனானவனும் [2], இந்த்ரியங்களை மிக நிக்ரஹம் செய்தவனும், ஆகியவன் ஞானத்தை [3] பெறுகிறான். ஞானத்தைப்பெற்று, பரம ஶாந்தியை[4] ஶீக்ரம் அடைகின்றான்.

(1) ஶாஸ்த்ரங்களிலும் குருவிலும் உள்ள அன்பு ஶ்ரத்தை எனக் கூறப்படும்.
(2) தத்பரன்=தத்பொருளாகிய ப்ரஹ்மத்தை மேலாக (பரமாக)க் கொண்டவன்.
(3) நாநாவித நாமரூபங்களை அறியும் புத்திக்கு மேற்பட்ட அகண்டாகார அறிவை.
(4) யாவற்றிற்கும் உயர்ந்த (பரம) கைவல்ய நிலையாகிய மோக்ஷத்தை.

௪௰. ஶ்ரத்தையற்றவனும் ஸம்ஶய [1] மனஸ்கனாவனுமாகிய அவிவேகி [2] நாஶத்தை [3] அடைகின்றான். ஸம்ஶயத்தை மனஸிற் கொண்டவனுக்கு இந்த லோகமுமில்லை [4], வேறு லோகமுமில்லை [5], சுகமுமில்லை. [6]

(1) ஆத்மாவில் ப்ரதிஷ்டை பெறாத.
(2) ஆத்ம அனாத்ம விவேகமற்றவன்.
(3) பிறந்தும் பிறவியின் ப்ரயோஜனமில்லாமையை. (நாஶம்=இல்லாமை)
(4) முற்பிறவியின் பலன் இப்பிறவியில் மானுடதேகத்தைக் கொடுத்தும், அந்தத் தேகத்தாற் செய்யவேண்டிய கர்மாநுஷ்டா

னங்களை ஶ்ரத்தையோடு செய்யாதுபோனால், இந்த லோகம் ப்ரயோஜனப்படாது என்பது பற்றி, இந்தலோகமில்லை என்றார்.

(1) இந்தப் பூலோகத்தில் விதிக்கப்பட்ட ஆத்மோபாய கர்மாநுஷ்டானங்களைச் செய்யாதுபோனால், அதன் ப்ரயோஜனமாகிய வேறு புண்ய லோகங்கள் இல்லை.

(6) சுக அநுபவங்கள் இல்லாமல், துக்கம் பெருகும்.

**௪௧. தனஞ்ஜய, யோக ஸந்ந்யஸ்த கர்மாவும், (1) ஞானத்தால் ஸம்ஶயத்தை முறித்தவனும், ஆகிய ஆத்மவானைக் (2) கர்மங்கள் பந்தப்படுத்தா (3).**

(1) யோக ஸந்ந்யஸ்த கர்மா=கர்ம ஸந்ந்யாஸ யோகத்தை அநுஷ்டிக்கின்றவன் தனக்குரிய கர்மங்களை ஈஶ்வரனுடைய கர்மங்கள் என்றெண்ணிப் பற்றில்லாமல் அவற்றைச் செய்கின்றவன்.

இவ்விதம் ஈஶ்வரனிடம் ஒப்புக்கொடுத்துச் செய்யப்பட்ட கர்மம் ஈஶ்வரார்ப்பண கர்மம் என்றும் ஸந்ந்யாஸம் என்றும் கூறப்படும். ஐந்தாவது அத்தியாயத்தைப் பார்த்தறிக.

(2) ஆத்மாவே நான், தேகமன்று நான், என்று வாழ்பவனை.

(3) கர்மாநுஷ்டான தோஷங்களாகிய கர்த்ருத்வ போக்த்ருத்வங்கள் அவனுடைய அறிவை (ஆத்மாவை)ச் சுருக்கமாட்டா.

**௪௨. ஆதலால், பார்த்த, அஞ்ஞானத்தில்நின்று பிறந்ததும் புத்தியிலிருக்கின்றதும் ஆகிய இந்த ஸம்ஶயத்தை (1) [உன்] சொந்த ஞானவாளால் வெட்டி (2) [கர்ம ஸந்ந்யாஸ] யோகத்தைஅநுசரி. (3) [யுத்தத்துக்கு] எழுந்திரு (4)**

(1) இதுவோ அதுவோ, இதுசரியோ அதுசரியோ, என்று புத்தியைச் சலனப்படுத்தும் அஞ்ஞானசொரூபத்தை.

(2) தர்மஶாஸ்த்ரார்த்த அறியாமையால் (த்ருதராஷ்ட்ர மைந்தர்களோடு யுத்தம் செய்வது தர்மமோ அல்லது அதர்மமோ என்று) புத்தியில் தோன்றின ஸம்ஶயங்களை மெய்யறிவு என்ற வாளால் வெட்டி நீக்கி.

(3) யுத்தத்தை ஈச்வரார்ப்பண புத்தியோடு செய்.

(4) பய துக்க சோகங்களை விட்டு மெய்ஞ்ஞான தீரத்தோடு எழுந்திருந்து பாணங்களை ஏவு.

உபநிஷத்கள் என்றும் ப்ரஹ்மவித்யை என்றும் யோக சாஸ்த்ரம் என்றும் கூறப்பட்ட ஸ்ரீக்கிருஷ்ணார்ஜுன ஸம்வாதத்தில் ப்ரஸித்திபெற்ற ஞானயோகம் என்ற நான்காம் அத்யாயம் முற்றிற்று.

---

# ஐந்தாம் அத்யாயம்.

## கர்ம ஸந்ந்யாஸ யோகம்.

[அஃதாவது மஹேஶ்வரனே ஸர்வ லோகங்களுக்குங் கர்த்தா என்றும், அவரே ஸர்வ ஜீவர்களுக்கும் ஸுஹ்ருதன் என்றும், அவரே ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார திரோபவ அநுக்ரக கர்மங்களை நடத்தி வருகிறார் என்றும் நிஶ்சயித்து, ஒருவன் தனக்கு ஏற்பட்ட கர்மங்களை அவரிடம் ஸந்ந்யஸித்து (ஒப்பு வித்து), லோகோபகாரத்துக்காகச் செய்தால், அக் கர்மங்கள் ஈஶ்வரார்ப்பண கர்மங்கள் எனப்படும் என்ற உபதேசத்தை அர்ஜுனன் கேட்டுச் சிந்தித்தான் என்று விளக்கும் ஐந்தாம் பாடம்.

முதல் அத்யாயத்தில், அர்ஜுனன் பய துக்க மோஹங்களைப் பெற்றான் என்றும், இரண்டாவதில், காம க்ரோத பய துக்கங்களை நீக்கத் தக்கது மெய்யறிவு என்ற ஸாங்க்யம் மாத்ரமே என்றும், மூன்றாவதில், மெய்யறிவை அடைவதற்கு தீவந்த்வ ஸமத்வ புத்தி அவஶ்யம் என்றும், அந்த ஸமத்வ புத்தியால் கர்த்ருத்வ போக்த்ருத்வ தோஷங்களற்ற நைஷ்கர்ம்யம் என்ற கர்மயோகம் ஸித்திக்கும் என்றும், நான்காவதில், யஜ்ஞம் தானம் தபஸ் என்ற ஆத்மோபாய கர்மங்கள் ஸகுண சொரூப அர்ப்பணங்கள் (அல்லது ஹோமங்கள்) என்றும், அவற்றால் அகண்டாகார அறிவென்னும் ஞானத்தையும் பரம மாந்தியையும் பெறலாம் என்றும், விளக்கி, ஐந்தாவதில், கர்த்ருத்வ போக்த்ருத்வ தோஷங்களற்ற கர்மாநுஷ்டானமாகிய கர்மயோகத்துக்குப் பரமேஶ்வர நிஶ்சயத்தாலும் அவர்மேலுள்ள பக்தியாலும் செய்யப்பட்ட ஈஶ்வரார்ப்பண கர்மம் என்னும் கர்ம ஸந்ந்யாஸம் மிக அநுகூலமாயிருக்கும் என்று போதிக்கப்பட்டது.

மூன்றும் அத்யாயத்தில் முப்பதாவது மந்த்ரத்தில், "எல்லாக் கர்மங்களையும் என்னிடம் ந்யாஸம் செய்து," அவற்றை அஹங்கை மமதையற்றுச் செய்ய வேண்டும் என்று கூறி, நாலாம் அத்யாயத்தில் நாற்பத்தோராம் மந்த்ரத்தில் "யோக ஸந்ந்யஸ்த கர்மாவாகிய ஆத்மவானைக் கர்மங்கள் பந்தப்படுத்தா" என்ற உண்மையை ஸ்திரப்படுத்தி, இந்த ஐந்தாம் அத்யாயத்தில் அர்ஜுனனுடைய ஸம்ஶயத்தைத் தீர்க்கும்பொருட்டு, கர்மயோகத்துக்கும் கர்மஸந்ந்யாஸத்துக்கும் உள்ள ஸம்பந்தத்தை உபதேசிக்கின்றார்.

---

அர்ஜுனன் கூறினன்,—

க. க்ருஷ்ண, கர்மங்களின் ஸந்ந்யாஸத்தையும், மறுபடி (கர்மங்களின்) யோகத்தையும் கூறுகின்றாய் (1). இவைகளில், எது மேலானதோ, அந்த ஒன்றை உறுதியாகச் சொல்லு (2).

(1) கர்ம ஸந்ந்யாஸத்தைப் பகவான் ரு-ருய இலும், அதற்குப்பின் கூறப்பட்ட மந்த்ரங்களிலும், குறித்தார். கர்மயோகத்தைப்பற்றி மூன்றும் அத்யாயத்திலும் நான்காம் அத்யாயத்திலும் விஸ்தாரமாக விளக்கினர்.

(2) அத். ரு மந். உ இல், ஸம்ஶய வினைக்களைக் கேட்டவாறு, இங்கும் பகவானுடைய லக்ஷ்யார்த்தத்தை க்ரஹிக்காமல், கர்மயோகமும் கர்மஸந்ந்யாஸமும் விரோதம்பெற்றவை என்றெண்ணி மயங்கி "ஒன்றை உறுதியாகச் சொல்லு" என்றான் அர்ஜுனன்.

ஸ்ரீ பகவான் கூறினர்,—

ரு. மஹாபாஹோ, எவன் வெறுக்கிறனில்லையோ, எவன் விரும்புகிறனில்லையோ (1), எவன் த்வந்தவமற்றவனோ (2), அவன் நித்ய ஸந்ந்யாஸி என்று அறியத்தக்கவன் (3), பந்தத்தில்நின்று ஸுகமாக விடுபடுகின்றபடியால் (4).

(1) கர்ம ஸங்நியாஸம் என்றது கர்மத்தை வெறுத்த நிலையுமன்று விரும்பின நிலையுமன்று, என்பது கருத்து. விருப்பு வெ

றுப்புள்ள 'ஸந்நியாஸத்தை மித்யாசார ஸந்ந்யாசம்' என்று ௩ ௬ இல் கண்டித்தார்.

(2) ஸதாசார கர்ம ஸந்ந்யாஸத்துக்கு தவந்த்வ ஸமத்வம் ஆவஶ்யம் என்பது கருத்து. ௩.௭.

(3) இப்படி ராக த்வேஷமற்று ஸமத்வ புத்தியோடு தனக் கேற்பட்ட கர்மங்களை நித்யம் அநுஷ்டிக்கின்றவன் ஸதாகால மும் கர்மங்களை மஹேஶ்வரனிடம் த்யாகம் (ந்யாஸம், அர்ப்ப ணம், கொடை) செய்துகொண்டே இருப்பான்.

(4) இந்த நித்ய ஸந்ந்யாஸிக்கு (ஈஶ்வரார்ப்பண கர்மாநு ஷ்டானிக்கு) ஓயாத ஸுகமுண்டு; ஏனெனில், கர்த்ருத்வ போக்த்ருத்வ பந்தங்கள் அவனுக்கு இல்லாதபடியால்.

அஹந்தை மமதையற்ற கர்மாநுஷ்டானியே நித்ய ஸந் ந்யாஸி என்று போதித்து, அடுத்த ஶ்லோகத்தில் இவனை ஸாங்க்யன் (மெய்யறிவாளி) என்று சுட்டினார். இயல்பிலே நிராசை என்ற ஸத்வகுணம் உள்ளவனுக்கு உரியது ஸாங் க்யம் (௩ ௩) என்னும் மெய்ஞ்ஞானம். (௰அ. ௬.) ஆதலால், ஸாங்க்யம ஸாத்விக ஸந்ந்யாஸம் என்று பெரியோரால் கூறப் படும்.

௪. ஸாங்க்யத்தையும் (1) யோகத்தையும் (2) வெவ்வேறென்று சிற்றறிவாளிகள் (3) கூறுகின்றனர். பண்டிதர் (4) கூறார் (5). அவற்றுள் ஒன்றைச் செவ்வையாகப் பற்றினவன் (6) இரண்டின் பலனையும் பெறுகின்றான் (7).

(1) உ. ௩௰௬ க்குரிய உரையைப் பார்த்தறிக.

(2) அஷ்டாங்க யோகிகளுக்கு உரியது கர்மயோகம் (௩. ௩.)

(3) "பாலா:" = (அறிவில்) பாலர்=முதிர்ந்த அறிவில்லாத வர்கள், சிற்றறிவாளிகள்.

(4) பேரறிவாளிகள், ஞானவான்கள்.

(5) ஸாங்க்யர்களும் கர்மயோகிகளும் ஸமத்வபுத்தியில் ப்ர திஷ்டைபெற்று மோக்ஷமே பரமஸுகம் என்று ஸாதிப்பதால், ஸாங்க்யத்தையும் கர்மயோகத்தையும் வெவ்வேறு மதம் என்று

சொல்லார். எங்ஙனம் புறம்புபோலத் தோற்றுமெனில், நிரா சையை ஜன்ய்குணமாகப்பெற்ற ஸாங்க்யர், "நினைப்பு மறப் பற்று நில்" என்ற உபதேசப்படி, நினைவுகளை நேதிகளைந்து அஞ்ஞான ஸுஷுப்தியை விலக்கி, நிஷ்டை கூடுவார்கள்; யோ கிகள், தங்கள் இயல்புக்குத் தக்கபடி வகுக்கப்பட்ட யமம் நியமம் ஆஸனம், ப்ராணாயாமம் ப்ரத்யாகாரம், தாரணை, ஸவி கல்ப ஸமாதி என்ற அஷ்டாப்ப்யாஸங்களை வலிந்து அநுசரிப் பார்கள்.

(6) ஸாங்க்யருக்கு உரிய நேதிகளைதலேயாவது யோகிக ளுக்கு உரிய அஷ்டாங்க அநுஷ்டானங்களேயாவது ஒருவன் தன் ஶக்திக்கேற்றபடி ஒழுங்காகப் பொருந்தினால்.

(7) இரண்டுக்கும் பொதுவான பலனாகிய மோக்ஷத்தை அடைவான்.

ரு. ஸாங்க்யர்களால்(1) எந்த ஸ்தானம்(2) பெறப்படுகின்றதோ, அது யோகிகளாலும்(3) அடையப்படுகின்றது. ஸாங்க்யத்தையும் யோகத்தையும் ஒன்றாக எவன் அறிகின்றானோ, அவன் அறிகின்றான் (4).

(1) ஸாத்விக ஸந்ந்யாஸிகளால்.

(2) எந்தப் பரம ஶாந்தி, மோக்ஷம்.

(3) அஷ்டாங்க யோகத்தை அநுஸரிக்கின்றவர்களாலும்.

(4) வெவ்வேறல்ல என்று எவன் நிஶ்சயிக்கின்றானோ, அவ ன் அந்தப் பரம ஶாந்தியை அநுபோகிக்கின்றான்.

சு. மஹாபாஹோ, யோகமில்லாமல் ஸந்ந்யாஸம் பெறுவது வருத்தம் (1). யோகயுக்த (2) முனி (3) ப்ரஹ்மத்தை ஶீக்ரம் அடை கின்றான்.

(1) நேதி களைதலால் மாத்ரம் ஸாங்கியர் ஸர்வத் த்யாகமா கிய ஸந்ந்யாஸத்தைப் பெறுதல் வருத்தம். யோகத்துக்குரிய அஷ்டாங்கங்களை முறையாக அப்யஸித்துவந்தால், நேதி களை தல் லகுவாய் ஸித்திக்கும்.

"நேதி" = "ந" + "இதி" (இது அல்ல), நேதி களைதல் = இது ("இதி") அல்ல ("ந") என்று விட்டுவிடுதல்.

நினையாமற் சும்மாவிருந்து ஸுகநிஷ்டையைப் பொருந்தும்படி யத்தனித்தவனுடைய மனவில் ஒருநினைவு தோன்றினால் அவன் "நான் அறிய வேண்டிய நிர்க்குண வஸ்து இந்த ஸகுண வஸ்து அல்ல" என்று தோன்றின நினைவைப் பற்றாமற் சும்மா விருப்பான், த்யாகஞ் செய்திருப்பான். ஸுகநிஷ்டை கூடுவதற்கு இவ்விதம் த்யாகித்த நினைவுகளை நேதி களைதல் என்றும், ஸந்ந்யாஸம் செய்தல், என்றும் ஞானவான்கள் கூறுவார்கள்.

இந்த ஸாங்க்ய ஸுகநிஷ்டையைப் பெறுவதற்கு முயலுங் காலத்தில் தாயுமானஸ்வாமி வெகு கஷ்டப்பட்டார் என்று பலமுறை தன்பாடலில் குறித்தார்.

பரிபூரணானந்தம், ௪-வதில்:

"கண்டனவெல்லாம் அல்லவென்று கண்டனைசெய்து,
கருவி கரணங்கள் ஓயக்
கண்மூடி ஒருகணம் இருக்கவென்றால், பாழ்த்த
கர்மங்கள் போராடுதே,—"

என்றும், பாயப்புலி, ௩௰௪ வதில்

"சும்மாவிருக்கச் சுகம் சுகம் என்று
சுருதி எல்லாம்,
அம்மா, நிரந்தரம் சொல்லவுங் கேட்டு,
அறிவின்றியே
பெம்மான் மவுனி மொழியையுந் தப்பி,
என்பேதைமையால்
வெம் மாயைக் காட்டில் அலைந்தேன்,
அந்தோ, என்விதிவசமே,—"

என்றும் ஓலமிட்டு, உபசாந்த நிலைக்கு நேர்விரோதமான "வெம் மாயை" என்ற லோக விஷயங்களைப் பற்றிய நினைவுகளை ஒடுக்கும் பொருட்டு "வறிய செங்காயேனும், உதிர் சருகு கந்தமூலங்களேனும்" புசித்தார் என்றும், ப்ராணாயாமப் பழக்கங்களை அநுசரித்தார் என்றும் பலபாக்களிற் கூறினார்.

மோக்ஷத்தை மேலாகக் கருதினவர்களுக்கு அநேக தடைகள் இருப்பதால், ஸ்ரீ க்ருஷ்ண பகவான் இந்த ச்லோகத்தில், ஸாங்க்யர்க்குரிய ஸந்ந்யாஸம் நினைவு களைதல் என்றும், அந்த மனோலய அப்பியாஸத்துக்கு ப்ராணாயாமத்தை விசேஷமாகக்கொண்ட அஷ்டாங்க யோகம் அநுகூலமாகவிருக்கும் என்றும், உபதேசித்தார்.

(2) அஷ்டாங்க யோகத்தைப் பொருந்தின (இந்த யோகம் கர்மயோகம் என்றும் கூறப்படும்.)

(3) நிராசி ஆசைகளால் தோன்றும் நினைவுகளை அகற்றினவன். ௬. ௬௰ (3)

எ. யோகயுக்தனும் (1), சுத்தமான அந்தஃகரணம் பெற்றவனும் (2), இந்த்ரியங்களை ஜயித்தவனும் (3), சரீரத்தில் விருப்பமில்லாதவனும் (4), எல்லா ஜீவர்களுக்கும் ஆத்துமாவாயிருக்கின்ற ஆத்மாவையுடையவனும் (5), ஆகியவன் [கர்மங்களைச்] செய்கின்றவனானாலும், பந்திக்கப்படுகின்றானில்லை (6).

(1) அஷ்டாங்க யோகத்தைச் செவ்வையாகப் பொருந்தினவனும்.

(2) சித்த சுத்திபெற்றவனும்.

(3) மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற இந்த்ரியங்களைத் தத்தம் விஷயங்களில் விதியற்றுச் செல்லவிடாமல் அடக்கிவைத்திருக்கின்றவனும்.

(4) ஸ்தூல தேகம் நிலையற்றதென்றும், துன்பங்களுக்கு அது இருப்பிடமென்றும் அறிந்து, அதில் மனதை ஸங்கம் கொள்ளவிடாதவனும் தேகபற்றில்லாதவனும்.

(5) "ஸர்வபூத ஆத்மபூத ஆத்மா"=ஸகல ப்ராணிகளுக்கும் ஆத்மாவாயிருக்கின்ற ஆத்மாவையுடையவன். அறிவுக்கறிவாக ப்ரகாசிக்கும் அகண்ட ஸச்சிதாநந்த ஆத்மசொரூபத்தைப் பெற்றவன், அஃதாவது, ஜீவன்முக்தன்.

(6) தனக்குரிய ஸகல கர்மங்களை அநுஷ்டித்துவந்தாலும், அவன் அகர்த்தாவாதலால், அக்கர்மங்கள் அவனை வாதிக்கமாட்டா. இப்படிப்பட்டவனே கர்ம ஸந்ந்யாஸி.

அ, ௯. பார்க்கின்றவனுயிருந்தாலும் கேட்கின்றவனுயிருந்தாலும் தொடுகிறவனுயிருந்தாலும் மணக்கிறவனுயிருந்தாலும் உண்ணுகிறவனுயிருந்தாலும் (1), நடக்கிறவனுயிருந்தாலும் பேசுகிறவனுயிருந்தாலும் விஸர்க்கம் செய்கிறவனுயிருந்தாலும் [கையால்] ஏற்கின்றவனுயிருந்தாலும் (2), ஸ்வாஸிக்கிறவனுயிருந்தாலும் (3) [கண் இமையைச்] சிமிட்டுகிறவனுயிருந்தாலும் சிமிட்டாதவனுயிருந்தாலும் (4), உறங்குகிறவனுயிருந்தாலும் (5) யுக்தன் என்ற தத்வவித் (6), இந்த்ரியங்கள் இந்த்ரியார்த்தங்களில் இருக்கின்றன என்று எண்ணி (7), ஒன்றையும் நான் செய்யவே இல்லை (8) என்று நினைப்பான்.

(1) *கண் செவி மெய் மூக்கு வாய் என்ற ஞானேந்த்ரியங்கள் தத்தம் கர்மங்களாகிய பார்த்தல் கேட்டல் தொடுதல் மணத்தல் ருசித்தல் என்பனவற்றைச் செய்யும்பொழுது, தாம் ஸாக்ஷியாகநின்று அவற்றை எல்லாம் அறிந்தாலும்.*

(2) *பாதம் வாக்கு பாயு பாணி முதலிய கர்மேந்த்ரியங்கள் தத்தம் கர்மங்களாகிய நடத்தல் பேசுதல் மலங்கழித்தல் கொடுத்தல்வாங்கல் என்றவற்றைச் செய்யும்பொழுது, தாம் ஸாக்ஷியாக அவற்றை எல்லாம் அறிந்தாலும்*

(3) *ப்ராணன் அபானன் என்ற வாயுக்கள் உச்சுவாஸ நிஸ்வாஸ கர்மங்களைச் செய்தாலும்.*

(4) *கூர்மன் என்ற வாயு கண்ணிமையை ஒருபொழுது சிமிட்டியும் இன்னொருபொழுது சிமிட்டாமலும் இருந்தாலும்.*

(5) *ஞானேந்த்ரியங்களும் கர்மேந்த்ரியங்களும் ஸுஷுப்தி (நித்திரை) அவஸ்தையில் ஒடுக்கத்தைப் பெற்றிருந்தாலும்.*

(6) *கர்ம யோகம் என்ற நைஷ்கர்ம்யத்தில் ஸித்திபெற்று மெய்ப்பொருளாகிய தத் சொரூபத்தை அறிந்த ஜீவன்முக்தன்.*

*"தத்வவித்"=தத் என்ற பரப்ரஹ்மத்தை உள்ளபடி அறிந்தவன்.*

(7) *ஞானேந்த்ரியங்களும் கர்மேந்த்ரியங்களும் ஸூக்ஷ்ம வாயுக்களும் தத்தம் கர்மங்களைப்பற்றியே ஜீவிக்கின்றன என்று நிஸ்சயித்து.*

*இந்த்ரியார்த்தம்=இந்த்ரியங்களுடைய அர்த்தம் (பொருள்), அஃதாவது, தொழில் செய்தல், கர்மத்தில் செல்லுதல்.*

(8) நாலாகிய ஆத்மா அகர்த்தா.

ஜீவன்முக்தன் தன்னுடைய இந்த்ரியங்களாகிய அந்தக்கரணங்கள் ஞானேந்த்ரியங்கள் கர்மேந்த்ரியங்கள் பஞ்சவாயுக்கள் என்றவை எல்லாம் ப்ரக்ருதி சொரூபங்களாதலால், தனக்கு அன்யங்கள் என்றும், அவற்றின் தொழில்கள் தனதல்ல என்றும் அறிந்து அழிவற்ற ஸுகத்தோடு வாழ்வான்.

ய. எவன் ஸங்கத் த்யாகம் செய்து (1), ப்ரஹ்மத்தினிடம் கர்மங்களை வைத்துச் (2) செய்கின்றனோ, அவன் ஜலத்தால் [தாமரை] இதழ் [பற்றப்படாதது] போலப் (3), பாபத்தால் தீண்டப்படுகிறானில்லை (4).

(1) எவன் தன் இந்த்ரியங்களோடுள்ள ஒற்றுமையை விட்டு

ஸங்கம்=சேர்க்கை, ஸம்பந்தம், ஒற்றுமை.

ஸங்கத் த்யாகம்=இந்த்ரியங்களின் ஸம்பந்தம் தன் முக்திக்காகவே மஹேஶ்வரன் இயற்றினார் என்றறிந்து, முக்திதசையில் அந்த ஸம்பந்தத்தில்நின்று விலகி, அவரால் அருளப்பட்ட இந்த்ரியங்களை அவரிடம் கொடுத்தல்.

(2) இந்த்ரியங்கள் செய்யும் கர்மங்களைப் பரமேஶ்வரனது ஸந்நிதியில் நைவேத்யமாக வைத்து.

"ப்ரஹ்மணி ஆதாய கர்மணி"=ப்ரஹ்மத்தினிடம் கர்மங்களை வைத்து.

ப்ரஹ்ம ஆதானம்=ப்ரஹ்மாதானம், ப்ரஹ்மார்ப்பணம், மதர்ப்பணம் (யக-உயஎ).

(3) தாமரை இலையில் ஏறின தண்ணீர்த் திவலை அந்த இலையைத் தீண்டாதது போல.

(4) மனம் வாக்கு காயங்களின் தவறுதலால் வரும் பாப பலன்களால் தீண்டப்படான்.

யக. யோகிகள் [இந்த்ரிய] ஸங்கத்தை நீக்கி, சித்தஶுத்திக்காக (1), கேவல (2) மனஸாலும் புத்தியாலும் இந்த்ரியங்களாலும் (3) கர்மத்தைச் செய்கின்றார்கள்.

(1) புண்ய கர்மங்களின் அவர (கீழான) பலன்களாகிய ஸ்வர்க்க பூலோக சிற்றின்பங்களைக் கருதாமல், கர்மாநுஷ்டா

னத்தின் உத்க்ருஷ்ட (மேலான) பலமாகிய சித்தஶுத்திக்காக.

சித்த ஶுத்தி=சித்தத்திலிருக்கும் காம க்ரோத லோப மோஹங்கள் என்ற மலங்களை ஒழித்திருத்தல்.

(2) கைவல்யம் (தனிமை) பெற்று. அஃதாவது, விருப்பு வெறுப்பு என்ற துக்கத்தில்நின்றும், க்ரோதம் லோபம் என்பவைகளில்நின்றும், விலக்கப்பட்ட.

(3) ஶுத்தமனஸால் கர்மங்களை க்ரஹித்து, துல்ய புத்தியால் கர்மாநுஷ்டானம் எவ்விதம் கசடறச் செய்யவேண்டுமென்று விசாரித்து, தர்மவழியில் நிறுத்தப்பட்ட கர்மேந்த்ரியங்களால் கர்மங்களை நடத்திவருவார்கள்.

௰௨. [கர்மயோக] யுக்தன்(1) கர்மபலத்தைவிட்டு, நிஷ்டையில் (2) பிறந்தஶாந்தியைப் (3) பெறுகின்றன். [கர்மயோக] அயுக்தன் (4) காமத்தின் (5) வல்லமையால் [கர்ம] பலத்தில் ஸங்கம் பெற்று பந்திக்கப்படுகிறன் (6).

(1) உத்க்ருஷ்ட கர்மாநுஷ்டானம் என்ற கர்மயோகத்தைப்பொருந்தினவன்.

(2) இந்த நிஷ்காம புத்தியின் நிலையில், ௬. உ, பக்கம் எ௰௫.

(3) ௨. ௬௰௬, எ௰, எ௰௧, எ௰௨.

(4) கர்மயோகம் என்ற நிஷ்காம கர்மாநுஷ்டானத்தைப் பொருந்தாதவன். அஃதாவது ஸகாம புத்தியோடு கர்மங்களைச் செய்கின்றவன்.

(5) விருப்பு வெறுப்பின்.

(6) ஜனனமரண துன்பங்களைக் கொடுக்கும் ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் வைக்கப்படுவான்.

௰௩. [இந்த்ரியங்களை] தன்வஶம் ஆக்கினவன் (1). ஸகல கர்மங்களையும் மனஸால் ஸந்ந்யஸித்து [அவற்றை] தீசெய்யாமலும் (2) செய்விக்காமலும் (3) ஒன்பதுவாயிலுள்ள ஶரீரம் என்ற பட்டணத்தில் (4) ஸுகமாயிருக்கிறன் (5).

(1) "வஶி"=வஶம். (அடிமை) உடையவன். ஈண்டு இந்த்ரி

யங்களை அடிமைகொண்டவன், இந்த்ரியங்களை ஜயித்தவன், ஜிதேந்த்ரியன்:

(2) "நான்" ஆகிய ஆத்மா கர்மங்களைச் செய்கின்றேன் என்று எண்ணாமலும்.

(3) "நான்" ஆகிய ஆத்மா கர்மங்களைக் கர்மேந்த்ரியங்களால் செய்விக்கின்றேன் என்று எண்ணாமலும்.

நான் கர்மங்களைச் செய்கிறேனென்றதும் செய்விக்கிறேனென்றதும் கர்த்ருத்தவ தோஷங்கள். இவற்றை நீக்கவேண்டியது.

(4) நவ த்வாரக்கோட்டை என்ற ஸ்தூலதேகத்தில்.

(5) சலனமற்ற ஆனந்தசொரூபியா யிருக்கிறான்.

ஜீவன்முக்தன் இந்த்ரியங்களை அடிமைகொண்டதுபோலப் பரமேஸ்வரன், ப்ரக்ருதியையும் ப்ரக்ருதி ஜன்யங்களையும் அடிமைகொண்டு, அவற்றின் ஸ்வபாவ குணங்களை முதற்காரணமாக வைத்துத் தன் சச்சிதானந்த ஶக்திகளை நிமித்தகாரணமாக்கி, ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி மார்க்கங்களால் சிறப்புப்பெற்ற கர்மசக்ரத்தை ப்ரதிஷ்டித்து, ஜீவன் பத்தனை ஜீவன் முக்தனாகச் செய்தாரென்பது மேல்வரும் ஶ்லோகங்களில் உபதேஶிக்கப்படும்.

கச. ப்ரபு (1) லோகத்துக்கு (2) கர்த்ருத்வத்தை ஸ்ருஷ்டிக்கவில்லை (3) [அதற்குக்] கர்மங்களையும் கர்மபலச் சேர்க்கையையும் [ஸ்ருஷ்டிக்கவில்லை] (4) ஆனால் ஸ்வபாவம் ப்ரவர்த்திக்கின்றது (5).

(1) ப்ரபு (ப்ர + பு)=உயர்வு பெற்றவன். ப்ரக்ருதிக்கு மேலான சச்சிதானந்த (சத் + சித் + ஆனந்த) ப்ரஹ்மம்.

(2) ப்ரக்ருதி ஜன்யங்களுக்கு. ப்ரக்ருதியில் நின்று தோன்றின தத்துவங்களுக்கு.

மரு. சுல் ப்ரக்ருதியையும் ப்ரக்ருதியில் உற்பத்தியானவையையும் க்ஷேத்திரங்கள் (விகாரம்பெற்ற தேகசொரூபங்கள்) என்றும், நிர்விகாரவஸ்துவை க்ஷேத்ரஜ்ஞன் அல்லது புருஷன் என்றும், எ, சு, ரு ல் க்ஷேத்ரங்களை பர ப்ரக்ருதியாகவும் அபர ப்ரக்ருதியாகவும் வகுத்து பர ப்ரக்ருதிகள் ஜீவசொரூபங்கள்

என்றும், அபர ப்ரக்ருதிகள் அஹங்காரம் புத்தி ஸூக்ஷ்ம பூத ங்களென்றும், அநுகீதையில் க்ஷேத்ரஜ்ஞன் நிர்க்குணப் பரமா த்மா என்றும் உபதேசித்திருக்கின்றது.

இவ்விளக்கப்படி "லோகத்துக்கு" என்ற பதம், ஜீவசொரூ பங்களுக்கும் அவற்றின் அஹங்காரம் புத்தி முதலிய அந்தஃ கரணங்களுக்கும், புறக்கரணங்களாகிய ஞானேந்த்ரியங்களுக் கும், கர்மேந்த்ரியங்களுக்கும் என்று அர்த்தமாகும்.

(3) ப்ரக்ருதி சொரூப ஜீவர்களுக்கும், அவர்களுக்கு ஏற் பட்ட இந்த்ரியங்களுக்கும் "நான் செய்கிறேன்" என்றதன்மை யைப் பரமேஸ்வரன் ஸ்ருஷ்டிக்கவேயில்லை. ஏனெனில் இந்தப் ப்ரக்ருதி சொரூபங்களுக்கு அஹங்கரித்துக்கொண்டிருக்குந் தன்மை இயல்பிலேயே உள்ளதால் என்க.

(4) இந்தப் ப்ரக்ருதி சொரூபங்கள், ரஜஸ் குணஜன்யங்க ளாதலால், அவை தொழில் மயமே. அஃதாவது எப்பொழுதும் சலன துடின கோலங்களோடிருக்கும். தொழில் செய்வதும் அத்தொழிலில் நின்று பிறந்த கார்யத்தைப் பற்றுவதும் அவை கட்கு இயல்பு. ப்ரக்ருதி சொரூபங்களின் கர்மங்களையும் கர்ம பல ஸங்கத்தையும் பரமேஸ்வரன் நூதனமாகப் படைக்கவில்லை.

(5) நான் செய்கிறேனென்ற தன்மையும் (கர்த்ருத்வமும்) செயலும் (கர்மமும்) செயலின் பலனோடு பொருந்தலும் ப்ரக் ருதியின் ஸ்வபாவ நடை என அறிக.

ஸ்வபாவம்=தன்னையே மேன்மேலும் பாவனைசெய்தால் முதற்பாவனை காரணமாய்த் தோன்றிக் கார்யமான இரண்டாம் பாவனையைப்பற்றி யழியும். இப்படிக் காரணம் கார்யமாவது ப்ரக்ருதி லக்ஷணம்.

இப் ப்ரக்ருதி குணங்களின் லக்ஷணத்தை அறிந்த ப்ரபு ஜீவ சொரூபமடைந்த ஆத்மாக்களின் சேஷ்டைகளையும் ஆறுதலில் லாக் கோலங்களையும் மாற்றி, உபஸாந்த நிலையாகிய மோக்ஷத் தை அருளும்பொருட்டு ப்ரக்ருதிகுணங்களை வியாபகஞ்செய்து, அவற்றை முதற்காரணமாகவும், தன்ஸக்திகளை நிமித்தகாரண மாகவும் கொண்டு, ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார திரோபாவ அநு

க்ரஹ க்ருத்தியங்களை அகர்த்தாவாக நடைபெறச் செய்தார்.

ஸ்ருஷ்டி முதலிய கர்மங்களை உபநிஷத்களும் வேதாகமங்களும் மநுஸ்ம்ருதியும் புராணங்களும் இதிகாஸங்களும் ஞானசாரியர்களால் கூறப்பட்ட தத்வ ப்ரகரணங்களும் விளக்கும்.

பகவத்கீதையில் ரு-மச இல் கூறப்பட்ட பதங்களின் அர்த்தத்தை யறியாதவர்கள் பரமேஸ்வரன் விதிவிலக்கான புண்ய பாப கர்மங்களை ஏற்படுத்தவில்லையென்றும், புண்ய பாபகர்மங்களுக்குரிய ஸுகதுக்க பலன்களை ஜீவாத்மாக்களுக்கு அதனதன் கர்மத்திற் கேற்றபடி (அவர்) கூட்டிவைக்கவில்லை யென்றும்,ஜீவர்கள் பரமேஸ்வரனை வழிபடவேண்டியதில்லை யென்றும், "நானே நற்கர்மங்களைச் செய்கிறேன்" "நானே கர்த்தா" என்ற புத்தியோடு வாழ்ந்து மோக்ஷத்தைப் பெறவேண்டு மென்றும் இருப்பார்கள்.

பகவான் கூ. கூ இல் நான் ஸ்ருஷ்டிக்கின்றேன் என்றும், ம. ம இல் எல்லாம் என்னிடமிருந்து ப்ரவ்ருத்திக்கின்றன என்றும், கூ. ம இல் எல்லாஜகத்துக்கும் நானே ப்ரபவன் (தோற்றுவிக்கின்றவன்) நானே ப்ரலயன் (ஒடுக்குகின்றவன்) என்றும், அ. அ. ம இல் யாவற்றுக்கும் தாதாவும் தண்டனைசெய்கின்றவனும் பரம புருஷனேயென்றும், ம-ங இல் லோகங்களுக்கு நான் மஹேஸ்வரன் என்றும், ங. உமஉ. இல் [பஞ்சக்ருத்யம் என்ற] கர்மத்திலேயே நான் இருக்கிறேனென்றும், ங.மரு இல் ஆத்மோபாய கர்மங்கள் ப்ரஹ்மத்தில் நின்று பிறந்தன என்றும், கூ. ம இல் சராசரத்துக்குக் காரணன் நான் என்றும், ம. ஙம இல் நானன்றி சரம் அசரம் என்றபூதம் இல்லையென்றும், ம ச, இல் ஜீவர்களுக்குப் புத்தி, பிறத்தல், இறத்தல், இன்பதுன்பம், த்ருப்தி, கீர்த்தி, ஸத்யம், தபஸ், இந்த்ரிய நிக்கிரஹம், ஞானம் முதலியவை என்னிடம் இருந்தே பிறக்கின்றன என்றும், ம. மக இல் நான் அந்தஃகரணத்துக்குள் இருந்துகொண்டு அதிலுள்ள தமஸை அழிக்கின்றேன் என்றும், ங. ம. ககூ இல் ஸ்ருஷ்டிக்கு ந்யாயம் என்னவென்றும், கூ. அ இல் ஸ்ருஷ்டிக்கு முதற்காரணம் ப்ரக்ருதி என்றும், கூ. ரு. இல் தனது தேவாத்ம

ஶக்தியால் ஸ்ருஷ்டி ஸ்திதிகர்மங்கள் நடத்தப்பட்டன என்றும் உறுதியாக உபதேஶித்திருக்கின்றார்.

பரமேஶ்வரன் சராசரங்களோடுகூடி உயிர்க்குயிராகவும் அறிவுக்கறிவாகவும், நின்று ஸதாகாலமும் ஜீவாத்மாக்களைக் காத்தாலும் அவர் பரிஶுத்தன் என்றும், ஆத்மாக்கள் தங்களைப்பற்றிய அஜ்ஞானத்தால் மோக சொரூபிகளானார்கள் என்றும் அடுத்த ஶ்லோகத்தில் விளக்கப்பட்டது.

மரு. [மஹேஶ்வரனென்னும்] விபு (1) ஒருவனுடைய பாபத்தையும் புண்யத்தையும் பெறுகிறனில்லை. அஜ்ஞானத்தால் ஞானம் மறைக்கப்பட்டிருக்கின்றது (2). அதனால் ஜந்துக்கள் மோஹத்தை அடைகின்றன (3).

(1) "விபு"=வி+பு=பலவிதமாக இருக்கின்றவன்.

விஶ்வரூபன் (விஶ்வ=எல்லாம்) ஸகலஸூக்ஷ்ம ஸ்தூலரூபங்கள்தோறும் அப்ரத்யக்ஷமாக உள்ளே இருந்து அவற்றை அடக்கி ஆளும் ஶக்திமான். அந்தர்யாமி=ஈஶ்வரன்.

ஶுத்தமெய்ப்பொருளாகிய நிர்க்குணப்ரஹ்மத்தில் அடங்கின்ற பராஶக்தி உதயமாகி அதனை வ்யாபித்தபொழுது நிர்க்குணப்ரஹ்மம் சச்சிதானந்த ப்ரஹ்மம் என்றும், ஸதாஶிவம் என்றும் அழைக்கப்படும்.

இது ஞானமும்க்ரியையும் ஸமப்பட்ட அவஸரம். இதற்கு மூலமந்த்ரம் ஈஶானம். க்ருத்யம் அநுக்ரஹம்.

ஞானத்துக்குமேல் க்ரியை அதிகரித்த அவஸரம் மஹேஶ்வரன் என்றும், அந்தர்யாமி ஈஶ்வரன் என்றும் கூறப்படும். இதற்கு மந்த்ரம் தத்புருஷம். க்ருத்யம் திரோபாவம்.

திரோபாவம் யாதெனில், மஹேஶ்வரன் ஒருவனுக்கு அவித்யாவைத் தீர்க்கும்பொருட்டு அவன் செய்த புண்ய பாவ கர்மங்களின் பலன்களாகிய ஸ்வர்க்காதி நரகாதி போக்யப் பொருள்களை, போதகர்கள் மூலமாக அறிவித்து, அறிந்ததை இச்சிக்கவும், இச்சித்ததை வலிந்து தேடவும் ஶக்தியை அருளி, ஸகாமபுத்தியோடு அநுஷ்டிக்கப்பட்ட கர்மங்கள் ப்ரவ்ருத்தி மார்க்கத்தில் கர்மாநுஷ்டானியைச் செலுத்தி ஜனன மரண

துன்பங்களைக் கொடுப்பதால் அந்த மார்க்கத்தை விட்டுத் தப்பவேண்டும் என்றெண்ணிய பரிபக்வத்தை மெல்ல மறைவாக விளைவிப்பதே அவரது திரோபவக்ருத்யம் என்று அறிக.

பரிபக்வகாலம் வந்தபின் "நானே கர்த்தா" "நானே போக்தா" என்ற புத்தியின் ரஜோகுணப்ரவ்ருத்தி குறைந்து ஸத்வ குணங்கள் ப்ரபலப்படும். இப்படிப் பரமேஶ்வரன் மஹேஶ்வரனாய் நின்று ஜீவாத்மாவை அடக்கி அடிமைகொண்டு ஞானமும் க்ரியையும் ஸமப்பட்ட அவஸரத்தில் ஸதாஶிவனாய் நின்று நிஷ்காமபுத்தியையும் முமுக்ஷுத்வத்தையும் பெற்ற ஜீவாத்மாவுக்கு நிவ்ருத்தி மார்க்கத்தில் அழிவற்ற உபஶாந்தம் என்ற மோக்ஷத்தை அநுக்ரஹம் செய்வார்.

தனக்குளிருக்கும் பராஶக்தி *விஜ்ரும்பித்தபின் நிர்க்குணப் ப்ரஹ்மம் ஸதாஶிவ அவஸரத்தில் அநுக்ரஹ க்ருத்யத்தையும், மஹேஶ்வர அவஸரத்தில் த்ரோபாவ க்ருத்யத்தையும் செய்வதுபோல ருத்ரனாய் நின்று ஸம்ஹார க்ருத்யத்தைச் செய்வார் (தோன்றியவைகளை ஒடுக்குவார்). விஷ்ணுவாய் நின்று ஸ்திதிக் க்ருத்யத்தைச் செய்வார் (தோன்றினவைகளைத் தத்தம் நிலைகளில் நிறுத்துவார்). ப்ரஹ்மாவாய் நின்று ஸ்ருஷ்டிப்பார் (ஒடுங்கினவைகளைப் பிறக்கச்செய்வார்).

பரமேஶ்வரனது பஞ்ச க்ருத்யங்களாகிய ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார திரோபாவ அநுக்ரஹங்கள் ஒரேபராஶக்தியின் விவிதநிலைகளால் நடைபெறுகின்றன.

(2) ஜீவாத்மாக்கள் அவித்யா என்ற காரணஶரீரத்திற் சிக்குண்டு அந்தச்சரீரத்தின் தன்மையாகிய இருளில் மூழ்கியிருப்பதால் தங்களுடைய நிஜசொரூபத்தை அறியமாட்டார்கள்.

(3) இப்படி இருளில் ஜனித்தவர்கள் "ஶரீரமே நான்" என்ற மூடத்தைப் பெற்றிருக்கின்றவர்கள்.

**யகூ. எவர்களுடைய அந்த அஜ்ஞானம்(1) ஆத்மஞானத்தால் (2) அழிக்கப்பட்டதோ, அவர்களது ஞானம் (3) தத்பரத்தை (4) ஆதித்யன்போலப் ப்ரகாசிப்பிக்கின்றது (5).**

---

* விஜ்ரும்பித்தல்-விரிதல்.

(1) தேகமே நான் என்ற பொய்யறிவு.

(2) ஆத்மாவே நான் என்ற மெய்யறிவால்.

(3) அவர்களுடைய தெளிந்த அறிவு (விவேகம்).

(4) ப்ரக்ருதிக்கு மேற்பட்ட தத்பொருளாகிய நிர்க்குணப் ப்ரஹ்மத்தை.

(5) ஒருவனுக்கு எப்படி ஸூர்யன் லோகத்திலுள்ள வஸ்துக்களை ப்ரத்யக்ஷமாக்குவானோ அதுபோல மோஹத்தில் நின்று விடுபட்ட அறிவு ஆத்மவானுக்கு நிர்க்குணப் ப்ரஹ்மத்தை ஸ்வாநுபவமாகத் தர்ஸிக்கும்பொருட்டு உற்ற கருவியாயிருக்கும்.

**௱எ. தத் புத்திமான்களாய் [1] ததாத்மாக்களாய் [2] தந்நிஷ்டர்களாய் [3] தத் பராயணர்களாய் [4] மலங்களை ஞானத்தால் களைந்தவர்கள் [5] புநராவ்ருத்தி [6] யைப் பெறமாட்டார்கள்.**

(1) தத்பொருளை (நிர்க்குணவஸ்துவை) ப்பற்றின புத்தி உடையவர்களாய்.

(2) தத்பொருளில் சித்தத்தைவைத்து அன்புபெற்றவர்களாய். ததாத்மாக்கள்=தத்தில் சித்தம்வைத்தவர்கள்.

(3) அந்த அழிவற்றவஸ்துவில் ஸதாகாலமும் ப்ரதிஷ்டை பெற்றவர்களாய்.

(4) அதில் ப்ரதிஷ்டைபெற்று அதுவே மேலானவழி ("பர அயந") என்று நிஸ்சயங்கொண்டவர்களாய். "தத் பராயணர்"= தத்பொருளை மேலான கதியாக (பிரமாணமாக)க் கொண்டவர்கள்.

இவ்வாறு தத்பொருளைப்பற்றி அதன்மேல் அன்புகொண்டு அன்புப்பெருக்கால் அதில் ப்ரதிஷ்டைபெற்று அதுவே மேலானவழி ("பர-அயந") என்று நிஸ்சயங்கொண்டவர்கள்.

(5) அறிவைக்கெடுக்கும் அஹந்தை மமதை முதலிய கல்மலங்களை மெஞ்ஞானத்தால் நீக்கினவர்கள்.

(6) புநராவ்ருத்தி=மீண்டும் ("புநர்"), திரும்புதல் ("ஆவ்ருத்தி",)

கர்ம பூமியாகிய பூலோகத்தில் ஸகாம புத்தியோடு செய்யப்பட்ட கர்மங்களின் பலன்கள், பூலோகத்திலும் ஸ்வர்க்கலோகத்திலும் நரகலோகத்திலும் பரமேஸ்வரனது ஆக்ஞைப்படி அநுபவிக்கப்படுமாதலால், ஸகாம புத்திமான்களுக்கு இந்தத் த்ரிலோக ஸஞ்சாரம் உண்டு. விருப்பு வெறுப்புடன் கர்மங்களையநுஷ்டிக்கின்ற ஜீவாத்மாக்கள் பூலோகத்தில் தரித்த ஸ்தூல தேகத்தை இழந்து வேறொருதேகத்தைப் பெறுவார்கள். நிஷ்காமபுத்தியோடு கர்மங்களைச் செய்கின்றவர்கள் பூலோகத்திலேயே ஜீவன் முக்தர்களாகி, பிறப்பும் இறப்பும் அற்ற ப்ரஹ்மநிர்வாணத்தைப் பெறுவார்கள். இந்த மோக்ஷத்தை இங்கேபெறாத நிஷ்காம கர்மாநுஷ்டானிகள், ஸ்வர்க்கலோகத்திற்கு மேற்பட்ட மஹ ஜன தப ஸத்யலோகங்களுள் ஒன்றிற்சென்று மறுபடி பூலோகத்திற்குத் திரும்பமாட்டார்கள்.

எனவே "புநராவ்ருத்தி" பூலோகத்துக்குத் திரும்பிவருதல் என்றும் "அபுநராவ்ருத்தி" பூலோகத்திற்குத் திரும்பிவராமையென்றும் ஸித்திக்கின்றது.

**௰அ. பண்டிதர் (1) நாயினிடத்திலும் நாயை உண்பவனிடத்திலும் யானையினிடத்திலும் பசுவினிடத்திலும் (2) வித்யாவினால் வணக்கம் என்ற ஸம்பத்தைப்பெற்ற ப்ராஹ்மணனிடத்திலும் (3) ஸமதர்ஸிகள் (4). [என்று அறி.]**

(1) ஆத்மஞானமுள்ளவர்கள்.

(2) மானுடரால் வெறுக்கப்பட்ட நாயிலும் நாயிறைச்சி தின்பவனிடத்திலும், விரும்பப்பட்ட யானையிலும் பசுவிலும்.

(3) வித்யாவினய ஸம்பன்னே ப்ராஹ்மணே=ஶாஸ்த்ரங்களைக் கற்றதால் ஜனங்களின் வணக்கத்தைப்பெற்ற ப்ராஹ்மணனிலும். அஃதாவது கல்வியால் கீர்த்திபெற்ற ப்ராஹ்மணனிலும்.

(4) ஸமத்வபார்வை உள்ளவர்களாயிருப்பார்கள்.

ஆத்ம ஞானமுள்ளவனுக்கு ஆத்ம ஞானமில்லாத தேஹிகள் எல்லாம் ஸமமாய்த் தோன்றும் என்பது கருத்து.

தேகமே நான் என்றிருக்கின்ற தேஹவான்கள் தேஹங்களைத் தங்கள் விருப்பு வெறுப்புக் கேற்றபடி புலவாறு மதிப்பார்கள். சிலர் நாய்த்தேஹத்தையும் நாயிறைச்சிதின்னுந் தேஹத்தையும் இகழுவார்கள். சிலர் யானைத்தேஹத்தையும் பசுத்தேஹத்தையும் புகழுவார்கள். சிலர் கல்வியாலாவது செல்வத்தாலாவது சிறப்புப்பெற்ற தேஹத்தை வணங்குவார்கள்.

ஆத்மவான் ஸ்தூல தேஹங்களில் அபேக்ஷை உபேக்ஷை இல்லாதவனாய் ஆத்மலக்ஷணங்களையே கவனிப்பன். கல்வி அந்தக்கரண ஜன்யமாதலாலும், "கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன் நற்றாள் தொழாஅரெனின்" என்று தத்நிஷ்டைபெறாத கல்விமான்களைக் கண்டனை செய்திருப்பதாலும், ஸ்ரீ க்ருஷ்ணபகவானே எ-வது அத்யாயத்தில் ௰சு. ௰௭. ௰அ-வது மந்த்ரங்களில் சிற்றின்பங்களைத் துக்கமென்று வெறுத்தவர்களும், நிவிர்த்திமார்க்கத்தை விரும்பினவர்களும், அதில் முயன்றவர்களும், அதிற்சித்திபெற்ற ஞானவான்களும், ஆத்மகோடிகளில் மஹான்கள் ("உதாரா:") என்றும், இந்நான்கு வகுப்பினருள் ஞானவான் தன்னில் ப்ரியமுள்ளவனென்றும், தான் ஞானவானில் ப்ரியமுள்ளவனென்றும், ஞானியுந் தானும் ஒன்றேயென்றும் உபதேசித்திருப்பதாலும், கற்றும் மெய்ப்பொருளை அறியாத தேஹவான்களை ப்ராஹ்மணராயிருந்தாலும் நாய் பசு யானை முதலிய தேஹங்களுக்கு ஸமம் என்றும், மெய்ப்பொருளில் ப்ரீதி கொண்ட துறவிகளையும், மெய்ப்பொருளை உள்ளபடி அறிந்த ஞானிகளையும் மற்றும் சகல ஆத்மாக்களுக்கு மேற்பட்டவர்களேயென்றும் ஆத்மவான்கள் நிச்சயிப்பார்கள்.

ஞாபகசக்தி வலிமையால் ஸாஹித்யம் (இலக்கியம்) வ்யாகரணம் (இலக்கணம்) அலங்காரம் தர்க்கம் என்றவற்றையும் வேதாந்த ஸித்தாந்த சாஸ்த்ரங்களையும் கற்று அவற்றின் பரம்பொருளை அறியாதவர்கள் மதயானைபோல அஹந்தை மமதை பற்றித் திரிவார்களென்று தாயுமானஸ்வாமி தம்முன்னிலையாக வைத்து வர்ணித்திருக்கின்றார்.

எவ்விதமெனில்:—

"கல்லாதபேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்
கற்றுமறிவில்லாதவென்
கர்மத்தையென் சொல்வேன், மதியையென் சொல்வேன்
கைவல்யஞான நீதி
நல்லோருரைக்கிலோ கர்மமுக்கியமென்று
நாட்டுவேன் கர்மமொருவன்
நாட்டினுலோபழைய ஞானமுக்கியமென்று
நவிலுவேன் வடமொழியிலே
வல்லானொருத்தன் வரவுந த்ராவிடத்திலே
வந்ததா விவகரிப்பேன்
வல்லதமிழறிஞர்வரி னங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிதுபுகல்வேன்
வெல்லாம லெவரையு மருட்டிவிடவகைவந்த
வித்தையென் முத்திதருமோ
வேதாந்த சித்தாந்தசமர நன்னிலைபெற்ற
வித்தகச் சித்தர்கணமே."

வெல்லாமல் எவரையும் மருட்டிவிடும் வித்தையால் தத் நிஷ்டையில்லாத கல்விமான்கள் பாமர (ப்ரமாணமற்ற) ஜனங் களின் வணக்கத்தைப் பெற்றாலும், ஞானவான்களுடைய மதிப் பைப் பெறார்கள் என்பதுபற்றிப் பகவான் "நாயினிடத்திலும் யானையினிடத்திலும் பசுவினிடத்திலும் வித்யாவினால் வணக் கம் என்ற சம்பத்தைப் பெற்ற ப்ராஹ்மணனிடத்திலும் பண்டி தர் ஸமதர்ஸிகள்" என்று கூறினார்.

ஆகவே "வித்யாவினால் வணக்கம் என்ற ஸம்பத்தைப் பெ ற்ற ப்ராஹ்மணன்" என்ற வாக்யத்தின் அர்த்தம் மெய்யறிவ ற்ற கல்விமான்களின் ஸாமர்த்யத்தில் மோஹங்கொண்டவர்க ளது வணக்கத்தைப் பெற்ற ப்ராஹ்மணன் என்பதே.

**யகூ எவர்களுடைய மனம் சாம்யத்தில் (1) நிற்கின்றதோ, அவ ர்களால் இவ்விடத்திலேயே ஸர்க்கம் (ஜனனம்) ஜயிக்கப்பட்டது (2). ப்ரஹ்ம தோஷமற்றதும் சமமுமாதலால் (3) அவர்கள் ப்ரஹ்மத்தினி டம் நிற்கின்றனர் (4).**

(1) ஸமதர்ஶனத்தில்.

காணுவிதமாய்த் தோற்றும் தேஹங்கள்யாவும் ப்ரக்ருதி சொரூபங்களாதலால் உயர்வு தாழ்வு, பெருமை சிறுமை, முதலிய த்வந்த்வ தோஷங்களைப் பெற்றிருப்பது இவற்றிற்கு இயல்பென்றறிந்து, அவ்வித தோஷங்களைச் சமப்படுத்தி அறிவைக் காப்பாற்றுதல் ஆத்மவானுடைய லக்ஷணம் என்பதுபற்றி, மனம் ஸாம்யத்தில் நிற்கவேண்டுமென்று குறித்தார்.

(2) இப்படிப்பட்ட ஸாம்ய புத்திமான்களால் பூலோகத்திலே ஜனனமரண துன்பங்கள் ஒழிக்கப்படும். எப்படியெனில் முமுக்ஷுக்களாகிய சிலர் இந்த ஜனனத்திலேயே ஜீவன் முக்தர்களாவார்கள். சிலர் ஸ்வர்க்கலோகத்திற்கு அப்பாற்பட்ட மேல் லோகங்கள் ஒன்றிற் சென்று அங்கேயே ஜீவன்முக்தர்களாவார்கள்.

(3) நிர்க்குணப் ப்ரஹ்மம் த்வந்த்வ தோஷங்களற்ற ஏகாந்த பரிபூர்ண வஸ்துவாதலால்.

(4) ஸமதர்ஶனத்தைத் தரித்த புத்திமான்கள் நிர்க்குணப் ப்ரஹ்மத்தில் ப்ரதிஷ்டைபெற்று வாழ்கின்றனர்.

**உ௰. ஸ்திர புத்தியுள்ளவனும் (1) மோகமற்றவனும் (2) ப்ரஹ்மத்தினிடம் ப்ரதிஷ்டைபெற்றவனும் ஆகிய ப்ரஹ்மவித் (3) ப்ரியத்தையடைந்து ஸந்தோஷிக்கான் (4) அப்ரியத்தைப் பெற்றுத் துக்கமடையான் (5).**

(1) நிஶ்சலனபுத்திமானும்; மாறிநின்று மயக்கிடும் வஞ்சப் புலன்களால் இழுபடாத புத்திமானும்.

(2) த்வந்த்வங்களால் வாதிக்கப்படாதவனும்.

(3) நிர்க்குண ப்ரஹ்மத்தை அறிந்தவன். சிவதர்ஶனம் பெற்றவன்.

(4) தன் ப்ரக்ருதிக்கு ஹிதமானவைகளைப் பெற்றுப் பாராட்டிச் சந்தோஷிக்கமாட்டான்.

(5) தன் ப்ரக்ருதிக்கு அஹிதமானவைகளைப் பெற்றுப் பெருக்கித் துக்கமடையான்.

**உ௰௧. எவன் பாஹ்ய [இந்த்ரிய] ஸ்பர்ஶங்களில் சேராதவ**

ஞய் (1). ஆத்மாவில் ஸுகத்தைப்பெறுகின்றனோ (2) ப்ரஹ்மயோக த்தை(3) ப்பெற்ற அவன் அழிவற்ற ஸுகத்தை (4) அடைகின்றன்.

(1) எவன் புறக்கரண இந்த்ரியங்களைத் தன்மனம்பற்று மற் காக்கின்றவனாய்.

(2) இவ்வாறு நிக்ரஹிக்க (அடக்க) ப்பட்ட மனதை ஆத் மாவோடு சேர்த்து ஶாந்தமாயிருக்கின்றனோ.

(3) நிர்க்குணப் ப்ரஹ்ம ஐக்யத்தை.

(4) துக்கவியோகம் என்ற மோக்ஷத்தை.

இனி ஸுகதுக்க போகங்களின் உற்பத்தியையும் தன்மை யையும் குறித்து அவையெல்லாம் துக்கசொரூபங்களேயென்று கூறி, அவைகளில் புத்திமான்கள் விருப்பு வெறுப்பு அற்று இரு ப்பார்களென்று அடுத்த மந்த்ரத்தில் உபதேஶிக்கின்றார்.

உ௰உ. ஓ கௌந்தேய [மாத்ரா] ஸ்பர்ஶங்களினின்று பிறந்த வைகளும் (1) ஆதிஅந்தம் பெற்றவைகளும் (2) ஆகிய போகங்கள் (3) துக்கயோனிகளாகவே இருப்பதால் (4) அவைகளில் புத்திமான் மன ஸைச் செலுத்தான்.

(1) உ. ௮ச. ச்லோக. உ. வது உரையைப் பார்த்தறிக.

(2) தோன்றி அழியுந் தன்மையைப் பெற்றவைகளும்; அநி த்யமானவைகளும்.

(3) சுக துக்க அநுபவங்கள்.

(4) துக்கத்திற்குப் பிறப்பிடமாயிருப்பதால்.

ஆத்மா ஸாக்ஷியாதலால், தன்மனவயில் தோன்றின ஸுக துக்க கோலங்களை அறியும். தான்வேறு தன் மனம்வேறு, தன் மனவயில் ஏறின தன் மாதராக்களும் விருப்பு வெறுப்புக்களும் வெவ்வேறு, என்று அறியாத ஆத்மா, தன்மாத்ராஸ்பர்ஶங்க ளோடு விருப்பு வெறுப்புக்கள்கூடி மனதில் ஜனித்த ஸுகதுக் கங்களைத் தன் சொந்தச் சுகதுக்கங்கள் என்று பாராட்டிச் சலனப்பட்டு நிற்கும். இந்த மூடபுத்தி இல்லாத ஆத்மா தன் மனவயில் ஜனித்த சுகதுக்கங்களைத் தனதல்லவென்று அவை களால் வாட்டப்படாமல் கைவல்யமாய் (தனிமையாய்) நிற்கும்.

இப்படிப்பட்ட ஆத்மவானுக்குப் பாமரஜனங்கள் கொண்டாடும் ஸுகங்கள் எல்லாம் அநித்ய வஸ்துக்களைப் பற்றியிருப்பதால் துக்கசொரூபங்களே யென்றும் நன்றாய் விளங்கும்.

அநித்ய வஸ்துக்களை மனம் பற்றி நித்யவஸ்துக்கள் என்று மோஹித்து இவற்றால் வரும் ஸுகத்திற்கு மேலானஸுகம் இல்லையென்ற தேகவான்களுடைய ஸுகம் தாங்கள் பற்றின அநித்யவஸ்துக்கள் அழிந்தவுடனே துக்கமாய் மாறும். ஆதலால் சிற்றின்பங்கள் யாவும் துக்கங்களென்பதற்கு ஐயமில்லை.

மனஸை ஆத்மாவுக்கு அடிமைப்படுத்தி நித்யவஸ்துக்களில் ப்ரதிஷ்டைசெய்தால் ஆத்மாவுக்குரிய நித்யஸுகம் மனஸில் ப்ரதிபலித்து மனஸை ஸதாகாலமும் ஸந்தோஷிப்பிக்கும்.

உ௯௩. இவ்விடத்திலேயே எவன் சரீரத்தை விடுவதற்குமுன்னே (1) காமம் க்ரோதம் என்றவைகளில் நின்றுபிறந்த வேகத்தை (2) ப்பொறுக்க வல்லவனோ அந்த மனுஷன் யோகி (3) அவன் ஸுகி (4).

(1) பூலோகத்திற் பிறந்து மரணகாலம் வருமுன்.

(2) மண்ணாசை பொன்னாசை பெண்ணாசை என்ற ஈஷணாத்ரயங்களில் உன்னத ஶக்தியையும், அவற்றைத் தடுத்தவர்கள் மேல் உண்டாகும் கோபஶக்தியையும்.

(3) ஸமத்வபுத்தியோடு பொருந்தப் பெற்றவன்.

(4) மோக்ஷத்திற்குரியவன்.

உ௯௪. எவன் உட்சுகம் (1) பெற்றவனோ, உட்க்ரீடை யுடையவனோ (2), அவ்வழியாக எவன் அந்தர்ஜ்யோதி (3) யைப் பெற்றவனோ அந்தயோகி (4). ப்ரஹ்மமயமாகி (5) ப்ரஹ்ம நிர்வாணத்தை (6) யடைகின்றான்.

(1) ஸமத்வபுத்தியில் பிறந்த ஸுகம். இது வெளியிலுள்ள விஷயங்களைப்பற்றாமல் ஹ்ருதயத்திலுள்ள ஆத்மாவைப் பற்றியிருப்பதால் உட்சுகம் ("அந்தஸ் ஸுகம்") என்றார்.

(2) மனம் ஐம்பொறிகளோடும் ஐம்புலன்களோடும் சேராமல் ஆத்மாவைப்பற்றியே நின்று அதில் த்யானம் ("அந்தர் ஆராம:"=உட்க்ரீடை உள்த்யானம்) பெற்றவனோ.

(3) உள்ளே ப்ரகாஶிக்கும் ஞானதீபம்.

(4) ஸமத்வபுத்திமூலமாக அந்தஸ்ஸுகத்தையும் அந்தர் ஆராமத்தையும் அந்தர்ஜ் யோதியையும் பொருந்தினவன்.

(5) நிர்க்குணவானுகி.

(6) நிர்க்குண ஸ்திதிக்குரிய பிறவா இறவா நிலையை.

**உ௰ரு. கல்மஷமற்றவர்களும் (1) த்வந்த்வத்தை முறித்தவர்களும் (2) மனஸை ஒடுக்கினவர்களும் (3) ஸகல ப்ராணிகளுக்கும் ஹிதத்தைச் செய்வதில் விருப்பமுள்ளவர்களு (4) மாகிய இருஷிகள் (5) ப்ரஹ்ம நிர்வாணத்தை அடைகின்றார்கள்.**

(1) சித்தஶுத்தி பெற்றவர்களும்.

(2) த்வந்த்வ ஸமத்வத்தை யடைந்தவர்களும்.

(3) மனஸை ஐம்பொறிகளோடு சேர்ந்து ப்ரக்ருதிவிஷயங்களிற் செல்லவிடாமல் அடக்கி ஆத்மவிஷயங்களிற் செலுத்திக்கொண்டிருக்கிறவர்களும்.

(4) ஜீவகாருண்யத்தைப் பெற்றவர்களும்.

(5) இருஷி என்றபதம் இர் (அறிதல்) என்ற தாதுவில் ஜனித்து மோக்ஷபாதையை அறிந்தவர்களென்றும் அகண்ட அறிவைப் பெற்றவர்களென்றும் பொருள்படும்.

ஈண்டு ப்ரஹ்ம நிர்வாணம் என்னும் பிறவா இறவா நிலையைப் பெறத்தக்க இருஷிகள் சித்தஶுத்தியோடும் த்வந்த்வஸமத்வத்தோடும் மனோநிக்ரஹத்தோடும் ஜீவகாருண்யத்தோடும் கூடி இருப்பார்களென்று குறித்தார்.

இந்த மந்த்ரத்தில் சாங்கியர்களுக்குரிய மனோலய யோகம் விஶேஷிக்கப்பட்டது. உ௰எ. உ௰அ இல் அஷ்டாங்க யோகிகளுக்குரிய ஹடயோகம் விஶேஷிக்கப்படும்.

**உ௰சு. காமம் க்ரோதம் என்றவைகளினின்று நீக்கப்பட்டவர்களும் அந்தஃகரணத்தை அடக்கினவர்களும் (1) ஆத்மாவைத் தர்ஶித்தவர்களும் (2) ஆகிய யதிகளுக்கு (3) ப்ரஹ்மநிர்வாணம் இரண்டு இடங்களிலும் (4) இருக்கின்றது.**

(1) மனம் புத்தி சித்தம் அஹங்காரம் என்ற உட்கருவிக ளின் தொழில்களை முற்றாக ஒடுக்கினவர்களும்.

(2) அந்தஃகரண ஒடுக்கத்தில் துர்யம் என்னும் மெய்ஞ்ஞா ன அவஸ்தையில் உதையமாகும் ஸச்சிதானந்த ஆத்மாவை அறி ந்தவர்களும்.

கைவல்யதசையில் தன்னைத்தானே தர்ஸித்தல் ஆத்மதர் ஸனம் எனப்படும்.

(3) அடக்கம்பெற்றவர்களுக்கு. தாது "யம்"=அடக்கம்.

(4) ஸதேஹ விதேஹ நிலைகளிலும்.

தன்னையறிய விடாமற்றடுத்து மயக்கும் மலங்களாகிய அவித்யாவில் நின்று விலகுதல் மோக்ஷம் எனப்படும். இது பரி பக்வகாலத்தில் இந்த லோகத்தில் இப்பிறவியிலேயே பெறலாம். இப்பிறவியிலே பெற்றமுக்தியை ஸதேஹமுக்தியென்று கூறு வார்கள். ப்ராரத்வகன்மங்கள் ஒழிந்தவுடன் தேஹம் நழுவும். நழுவ ஸதேஹ முக்தனாயிருந்த ஜீவன்முக்தன் விதேஹமுக்தி யிலிருப்பான். எனவே முக்தி ஸதேஹதசையிலும் விதேஹத சையிலும் உண்டு. இதுபற்றியே இரண்டு இடத்திலும் என்றார்.

பூலோகத்திலும் ஸ்வர்க்கலோகத்திற் கப்பாற்பட்ட மேல் லோகங்களிலும் முமுக்ஷுக்களுக்கு ஸதேஹமுக்தியுண்டு. விதேஹமுக்தி இடங்களைப்பற்றி நில்லாது.

**உ௯எ. உ௯அ.** பாஹ்ய [இந்த்ரிய] ஸ்பர்ஸங்களை [மனஸூக்கு] புறம்பாக்கி (1) புருவமத்தியில் நேத்ரத்தைவைத்து (2) இரண்டு நாசி களின்வழியாகச் ஸஞ்சரிக்கும் ப்ராணனையும் அபானனையும் ஸமமா கச் செய்து (3) எவன் இந்த்ரியங்களையும் மனஸையும் புத்தியையும் ஒடுக்கி இச்சை பயம் கோபம் என்றவைகளை நீக்கி மோக்ஷத்தையே மேலானவழியாகக் கொண்டமுனியோ (4) அவனே ஸதாமுக்தன் (5).

(1) ஐம்பொறிகளுக்கு விஷயமான புலன்களை மனம் தீண் டவிடாமல் அப்பாற்படுத்தி.

(2) சக்ஷு என்ற ஓரேஸூக்ஷ்மக்கண் (நேத்ரம்) இரண்டு ஸ்தூல விழிகளில் நின்று பார்க்கும். யோகசாதனையில் இரண்டு

ஸ்தானங்களில் நின்று பார்க்கும் கண்ணைப் புருவமத்தியில் நிறுத்துதல் அவஸ்யமாதலால் "புருவமத்தியில் நேத்ரத்தைவைத்து" என்றார்.

(3) ப்ராணவாயு வலநாஸியாலும் அபானவாயு இடநாஸியாலும் உச்ச்வாஸ நிஸ்வாஸ க்ரியைகளைச் செய்துகொண்டுதிரியும். இந்த இரண்டு வாயுக்களையும் கும்பகம் செய்து ஸுஷும்நாநாடியில் ஒன்றாக்கி ஏற்றுவது ஹடயோக ஸித்திக்கு அவஸ்யம் என்பதுபற்றி "ப்ராணனையும் அபானனையும் ஸமமாகச்செய்து" என்றார்.

(4) விருப்பு வெறுப்பு என்ற த்வந்த்வங்களையும் வெளிவிஷயங்களையும் அவற்றால்வரும் ஸுகதுக்க சிந்தனைகளையும் நீக்கினவனே.

(5) ஸதாகாலமும் துக்கத்தில்நின்று விடுபட்டவன்.

சு-ரு ல் இதற்குக் கீழ்நிலையில் நிற்கின்றவனாகிய யோகாரூக்ஷுவையும் யோகரூடனையும் முனியென்றார்.

**உயசு. யஜ்ஞம் தபஸ் [என்றகர்மங்] களுக்குப் போக்தாவாயும் (1) ஸர்வலோகங்களுக்கு மஹேஸ்வரனுமாயும் (2), ஸர்வ ப்ராணிகளுக்கும் ப்ரதி உபகாரத்தை அபேக்ஷிக்காமல் உபகாரஞ் செய்கின்றவனுமாய், என்னையறிந்து ஸாந்தியை (3) அடைகின்றான்**

(1) ஜீவர்கள் செய்யும் ஸத்கர்மங்களை நானேயறிந்து ஒப்புக்கொள்ளுகிறவனென்றும்.

(2) அண்டாண்டகோடிகள்தோறும் இருக்கின்ற ப்ரக்ருதி ஆத்மசொரூபங்கள் யாவற்றையும் நானே அடக்கி ஆளுகிறவனென்றும்.

(3) ஒழிவை, ஏகாந்தநிலையை, கைவல்யத்தை, இப்பதங்கள் ப்ரக்ருதிக்குரிய சலன துக்க கோலங்களை மறுத்து அழிவற்ற ஸச்சிதானந்த ஆத்மபூரணத்தைக் குறிக்கின்றன.

---

உபநிஷத்கள் என்றும் ப்ரஹ்மவித்தை என்றும், யோகஸாஸ்த்ரம் என்றும், பகவத்கீதைகள் என்றும் கூறப்பட்ட ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதத்தில் ப்ரஸித்திபெற்ற கர்மஸந்யாஸயோகம் என்ற பஞ்சம அத்யாயம் முற்றிற்று.

# ஆறுவது அத்யாயம்.

## ஆத்மஸம்யம யோகம்.

அஃதாவது, மனஸ் என்ற ஆத்மாவை முற்றுக அடக்கஞ் செய்வதைப்பற்றிய உபதேசத்தை அர்ஜுனன் கேட்டுச் சிந்தித்தான் என்று விளக்கும் ஆறும்பாடம்.

சென்ற அத்யாயங்களில் துக்க பய விஷாதங்களை நிவ்ருத்தி செய்வதற்கு யஜ்ஞம் தானம் தபஸ் என்ற ஆத்மோபாய கர்மாநுஷ்டானமும் அவற்றிற்குரிய பலன்களைக்கருதாத நைஷ்கர்ம்யம் என்ற கர்மயோகமும்; ப்ராணாயாமமும், (௫.௨௰௭), மனோலயயோகமும் (௪. ௨௰௭. ௫. ௨௰௫) அவஸ்யம் என்றுகூறி, இந்தப்பாடத்தில் மனோலயயோகத்தை "ஆத்மஸம்யமம்" என்று விரிக்கின்றார்.

ஆத்மஸம்யமம் எவ்விதம் மனஆத்மஸம்யமம் எனப் பொருள்படும் எனில், ஆத்மா என்றபதமும் ஸம்யமம் என்ற பதமும் தொடு கூடும் நிலையாகிய ஸமாஸத்தில் அர்த்தப்படாததால், வாக்யார்த்தத்தைவிலக்கி அதனோடு ஸம்பந்தப்பட்ட லக்ஷ்யார்த்தத்தையே க்ரஹிக்கவேண்டியிருப்பதால்.

ஆத்மாவை வெட்டவும் முறிக்கவும் நனைக்கவும் எரிக்கவும் கூடாதென்றும், ஸ்திரமானதும் விகாரமற்றதும் இந்த்ரியங்களுக்கும் மனஸுக்கும் அதீதமானதென்றும் பகவான் (௨. ௨௰௩, ௨௰௪, ௨௰௫ இல்) உபதேசித்திருக்கின்றார். இவ்வாத்மாவை ஸம்யமம் (அடக்கம்) செய்யலாமென்பது ஒவ்வாது. ஒவ்வாதெனில், ஆத்மஸம்யமம் என்ற ஸமாஸபதத்தின் லக்ஷ்யார்த்தம் ப்ராக்ருதிகத்துவங்களில் ஒன்றென்று குறிக்கின்றது. ௪. ௨௰௭ இலும், ௫. ௨௰௫ இலும், இந்த ஆறாவது அத்யாயத்திலும் உள்ள மந்த்ரங்களிற் சுட்டியபடி. அந்த ப்ராக்ருதிகத்வம் மனஸ் என்றே விளங்கும். ௬. ௰௨ இல் மனஸுக்கே ஏகாக்ரத்தன்மை உள்ளதென்றும், ௬. ௰௪ இல் மனஸையே ஸம்யமம் செய்யவேண்டுமென்றும், ௬. ௨௰௫ இல் "புத்தியால் மனஸை ஆத்மாவி

னிடம் ப்ரதிஷ்டை செய்து ஒன்றையும் நினைக்கக்கூடாது" என்றும் ஸ்பஷ்டமாகப் பகவான் கூறியிருப்பதால், "ஆத்ம ஸம்யமம்" என்ற ஸமாஸ பதத்தின் பொருள் "மனஸ் ஸம்யமம்" என்றே அறியவேண்டியது.

ப்ரக்ருதி தத்வங்களோடு ஆத்மா விருப்பதால் பெரியோரிற்சிலர் அந்தத் தத்வங்களின் நாமங்களை ஆத்மா என்ற பதத்தோடு கூட்டிச் சொல்லியிருப்பார்கள். சிலர் ப்ரக்ருதி தத்வங்களின் நாமங்களைச் சொல்லாமல் ஆத்மா என்ற பதத்தையே ப்ரயோகித்து, பல்வசாமிகளோ அவஸரத்துக்குத்தக்க வியார்த்தங்களை அறியச்செய்வார்கள். ம. ரு, க.

மனோலயம் அல்லது மனஸ் ஸம்யமம் என்பது மனதை லயிக்க (ஒடுங்கச்) செய்தலாம். இதனை சைவஸித்தாந்த நூல்கள் நினைப்புமறப்பு அற்றுநிற்றல் என்றுகூறும். நினைவுகளை மனம் இயற்றாமலும் தூக்கம் என்ற மறப்பில் அகப்படாமலும் ஓய்ந்துநின்றால் "ஆடாமல் ஓய்ந்திட்ட பம்பரம்போல" அறிவாகிய ஆத்மாவின்கண் விழிப்புற்று நிற்கும். இந்த மானஸ அவஸ்தையை ஒழிவிலொடுக்கம் என்பார்கள்.

---

ஸ்ரீ க்ருஷ்ணபகவான் கூறினார்.

௧. எவன் கர்மபலத்தை விரும்பாமல் செய்யவேண்டிய கர்மத்தைச் செய்கின்றானோ அவனே ஸந்யாஸியும் யோகியும் (1) [ஆகிறான்.] அக்னி அற்றவனுமல்ல க்ரியை அற்றவனுமல்ல (2).

(1) லோகத்தில் மூடர்களும் டம்பர்களும் ஸந்யாஸியினதும் யோகியினதும் கோலங்களாகிய காவிவஸ்த்ரம் ஜடை ருத்ராக்ஷம் விபூதிமுதலியவற்றைத் தரித்துக்கொண்டு ஜீவனோபாய கர்மங்களையும் ஆத்மோபாய கர்மங்களையும் விட்டுத் திரிவார்கள். இதைக் கண்டிக்கும்பொருட்டு ஒவ்வொருவனுக்கும் உரிய ஜீவனோபாய ஆத்மோபாய கர்மங்களை நிஷ்காமபுத்தியோடு அநுஷ்டிக்கின்றவனே ஸந்யாஸி அல்லது யோகியென்றார்.

(2) ஒருவன் செய்யவேண்டிய ஜீவனோபாய கர்மங்களையும் யஜ்ஞம் தானம் தபஸ் என்ற ஆத்மோபாய கர்மங்களையும் நிஷ்

காமபுத்தியோடு செய்கின்றவனுக்கே ஸம்யாஸம் ஸித்திக்கும். இந்த நிஷ்காம கர்மாநுஷ்டானத்தை விட்டவன் ஸம்யாஸியு மல்லன் யோகியுமல்லன்.

**உ. பாண்டவ (1) ஸங்கல்பத்தை (2) ஸந்யாஸம் (3) செய்யாத ஒருவன் யோகி ஆகாதபடியால் எதனை (4) ஸந்யாஸம் என்று கூறுகின்றார்களோ அதனை யோகம் என்று அறி (5).**

(1) பாண்டுவின் புத்ரனாகிய அர்ஜுனா.
(2) நான் செய்கிறேனென்ற கர்த்ருத்வ சிந்தனையை.
(3) த்யாகம்.
(4) எந்த ஸங்கல்பத்தை யாகிய கர்த்ருத்வ புத்தியை.
(5) கர்மயோகமாகிய நைஷ்கர்ம்யம் அல்லது கர்மபலத்யாகமும் கர்த்ருத்வம் அற்ற கர்மாநுஷ்டானமாகிய ஸம்யாஸமும் ஒன்றேயென்பது இந்த மந்த்ரத்தின் கருத்து.

**ஈ. யோகாருருக்ஷு (1) ஆகிய முனிக்கு (2) க் கர்மம் காரணமாகக் கூறப்படுகின்றது (3). யோகாரூடனை (4) அவனுக்கே (5) ஶமம் (6). காரணமென்று கூறப்படுகின்றது.**

(1) கர்மயோகத்தில் ப்ரவேசித்து அதன்படிகளில் ஏற விருப்பங்கொண்டவன் "யோக" + "ஆருருக்ஷு" = "யோகாருருக்ஷு" = யோகத்தை ஏற விரும்புகின்றவன்.

"போக்தும்" + "க்ஷு" (சாப்பிட இச்சிக்கிறவன்) "புபுக்ஷு" என்று திரிபு பெற்றதுபோலவும், "மோக்தும்" + "க்ஷு" (விட விரும்புகின்றவன்) "முமுக்ஷு" என்று திரிபுபெற்றதுபோலவும், "ஆரோடும்" + "க்ஷு" (ஏற விரும்புகின்றவன்) "ஆருருக்ஷு" என்று திரிபுபெற்றது.

(2) க. உ௰௭. உ௰அ-ம் ச்லோகங்களின் உரையைப்பார்த்தறிக.

(3) தர்மவழியில் நின்று சாதிக்கப்பட்ட ஆத்மோபாய கர்மாநுஷ்டானமே ஒருவனுக்கு நைஷ்கர்ம்யம் என்ற கர்மயோகத்தில் விருப்பத்தை யுண்டுபடுத்துமாதலால் அந்த யோகத்தில் ஏற விருப்பங்கொண்ட முனிக்கு கர்மம் காரணம் என்றார்.

அழிவுள்ள லோகவிஷயங்களில் விருப்பங்கொண்ட மனம் ஆத்மவிஷயங்களில் எவ்விதம் விருப்பங்கொள்ளுமென்னில் தெய்வத்தைப்பற்றிய யஜ்ஞாதிகர்மங்களைத் தினமும் அன்போடு அநுசரித்துவர, சித்தசுத்தி விளையும். அதுவிளைய, தோன்றி யழியுஞ் சுகங்களாகிய சிற்றின்பங்களிற் பற்றுநீங்கி மனம் கர்மபலன்களை இச்சிக்காமல் தனக்குரிய கர்மங்களைத் தெய்வப் ப்ரீதிக்காகவே செய்யும். இப்படி அனாத்ம விஷயங்களை நீக்கி ஆத்மவிஷயங்களைப் பெறுதல் கர்மாநுஷ்டானத்தின் முக்ய ப்ரயோஜனம் என்றறிக.

(4) "யோகாரூடன்"="யோக"+"ஆரூடன்"=கர்மயோகத்தில் ஏறினவன். அஃதாவது, கர்மயோகத்தில் விருப்பங்கொண்டபின் அதனை க்ரமமாகச் சாதிக்கின்றவன்.

(5) அந்த முனிக்கே.

(6) மனோநிக்ரஹம், உட்கரண அடக்கம்.

(7) கர்மயோகத்தில் ப்ரவேசித்தவனுக்கு நைஷ்கர்ம்யஸித்தி ஶமம் முதலிய ஷட்கஸம்பத் (ஆறு பேறு)கள் அன்றிக் கிட்டாதபடியால் யோக ஆரூடனுக்கு ஶமம் காரணமென்றார்.

கர்மாதிகாரி கர்மாநுஷ்டானத்தால் பெறக்கூடிய பலன் சித்தசுத்தி. இது மெல்ல மெல்ல அடைய ஞானாதிகாரியாவான். இந்த ஞானாதிகாரி ஸாதன சதுஷ்டயஸம்பன்னன்.

ஸாதன சதுஷ்டய (ஞானத்துக்கு ஸாதனமாகிய நான்கு) ஸம்பத்கள் ஆவன:—

1. நித்ய அநித்யவஸ்து விவேகம்=எது அழிவற்ற வஸ்து என்றும், எது அழிவுள்ளவஸ்து என்றும் அறியத்தக்க மேலான புத்தி.

2. விஷயபோகவிராகம்=இந்தலோகத்திலும் ஸ்வர்க்கலோகத்திலும் அநுபவிக்கக்கூடிய அநித்ய சுகங்களில் வெறுப்பு. "வி"+"ராகம்"=இச்சையின்மை.

3. ஶமாதி ஷட்கஸம்பத்தி=நினைப்பு மறப்பு அற்ற நிலையாகிய ஸமாதிக்கு வேண்டிய ஆறு ("ஷட்க") ஸம்பத்கள்.

4 முமுக்ஷுத்வம்.

இவற்றுள், "ஶமாதி ஷட்கஸம்பத்திகள்" ஆவன:—

1. ஶமம் (உட்கரண அடக்கம்) அஃதாவது, மனதை மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற புறக்கரணங்களால் இழு பட்டுத் திரியவிடாமல் அடக்கிவைத்தல்.

2. தமம்=(புறக்கரண அடக்கம்) அஃதாவது, ஐம்பொறி களைத் தத்தம் விஷயங்களில் விதி விலக்கற்றுச் செல்லவிடாமல் அடக்கிவைத்தல்.

3. உபரதி=ஶ்ரவண மனன கர்மங்களால் அறிந்த விஷயங் களுக்கு விரோதமான விஷயங்களை மனம்பற்றுமல் ஆறிநிற்றல்.

4. திதிக்ஷா=ஶீதோஷ்ணம், ஜயம் அபஜயம், செல்வம் வறு மை, சுகம் துக்கம் முதலிய த்வந்த்வங்களை ஸஹிக்கும் (பொ றுக்கும்) தன்மை.

5. ஸமாதானம்=அநாத்ம விஷயங்களினின்று நீக்கப்பட் டமனதை ஆத்மவிஷயங்களில் ஸந்தோஷங்கொள்ளும்படி நிறு த்துதல்.

6. ஶ்ரத்தை=தெய்வத்திலும் குருவிலும் வேதாகமங்களி லும் அன்புவைத்தல், விஶ்வஸித்தல்.

ஞானாதிகாரி நைஷ்கர்ம்யம் என்ற கர்மயோகத்தில் ப்ரீதி பெற்று அதில் ப்ரவேசித்திருப்பதால் அவனை யோகாரூடன் என்றார். இந்த யோகாரூடநிலை ஶமாதிஷட்க ஸம்பத்தி இல் லாமல் உண்டாகாதபடியால் யோகாரூடனுக்கு ஶமம் காரண மென்றார்.

இனி அடுத்தமந்த்ரத்தில் ஒருவனுக்கு யோகாரூடதசை ஸித்திக்கும் காலத்தைக் கூறுவார்.

**ச. எக்காலம் எவன் இந்த்ரியார்த்தங்களிலும் (1) கர்மங்களி லும் (2) அநுஸங்கத்தைப் (3) பெறவில்லையோ (4) அவன் அக்காலம் ஸர்வ ஸங்கல்பஸந்ந்யாஸியாய் (5) யோகாரூடன் என்று கூறப்படு கின்றன்.**

(1) இந்த்ரியங்களின் விஷயங்களாகிய ஶப்த ஸ்பர்ஶ ரூப ரஸ கந்தங்களிலும்.

(2) ஜீவனோபாய கர்மங்களிலும் யஜ்ஞம் தானம் தபஸ்

என்ற ஆத்மோபாய கர்மங்களிலும்.

(3) நெருங்கிய சேர்க்கையை, மிகப் பற்றுவைத்த நிலையை.

(4) ஶப்த ஸ்பர்ஶ ரூப ரஸ கந்தம் என்ற விஷயங்களை தத்தம் ஞானேந்த்ரியங்கள் பற்றும்பொழுது மனதை அவற்றோடு சேரவிடாமலும் வாக் பாணி பாத பாயு உபஸ்தம் என்ற கர்மேந்த்ரியங்களின் கர்மங்களை ஆத்மகர்மங்கள் (தன்கர்மங்கள்) என்று எண்ணுமலும் கர்த்ருத்வம் அற்று எவன் இருப்பானே.

(5) நான் பார்க்கின்றேன் நான் செய்கின்றேனென்ற பல கர்த்ருத்வ சிந்தனைகளைத் த்யாகம் செய்கின்றவனுய்

யோகாருரு..... எப்பொழுது யோகாரூடனுவானெனில் அனுத்ப விஷயங்களிலும் தான் செய்யும் கர்மானுஷ்டானங்களிலும் தன்மனம் போகுறப்பெருமல் ஈஶ்வரப்ரீதியாகச் செய்யவேண்டியவைகள் செய்யப்படுகின்றன என்ற புத்திபிறந்தகாலத்தில் என்று அறி

௫. [மனஸ் பந்து] ஆத்மாவே [ஜீவன் என்ற] ஆத்மாவுக்குப் பந்து (¹) வாயிருப்பதாலும் [மனஸ் என்ற] ஆத்மாவே [ஜீவன் என்ற] ஆத்மாவுக்கு ஶத்ரு (²) வாயிருப்பதாலும் [மனஸ் என்ற] ஆத்மாவைக் கெடுக்கக்கூடாது (³) [மனஸ் என்ற] ஆத்மாவிறல் [ஜீவன் என்ற] ஆத்மாவை உத்தாரணஞ் செய்யவேண்டும் (⁴).

(1) அவித்யையில் விழுந்து துக்கஸாகரத்தில் அவதிப்படும் ஜீவாத்மாவைத் தூக்கி வித்யை என்னும் ஸ்திரபூமியில் வைக்கும்பொருட்டுப் பரமேஶ்வரன் அருளின ஸூக்ஷ்ம தத்வங்களில் அந்தஃகரணங்களே ஜீவாத்மாவுக்கு உற்றதுணையாக இருப்பதால் மனதைப் பந்து (மித்ரன்) என்றார். சில அந்தஃகரணங்களில் மனதைமாத்திரங் குறித்தது யாதுகாரணம் எனில், அந்தஃகரணம் மனம் புத்தி சித்தம் அஹங்காரம் என்ற பஞ்சதத்வங்கள் ஏகஜாதியாதலால்.

(2) மனம் ஜீவாத்மாவின் நன்மையைப்பற்றுமல் காமஜன்யங்களாகிய விருப்பு வெறுப்புக்களுக்கு அடிமைப்பட்டிருந்தால் "கல்லாதகல்வியும் கேளாதகேள்வியுங் கருணைசிறிதேதுமில்லாச் சாட்சியும் பொல்லாத பொய்ம்மொழியும்" புருஷார்த்

தங்கள் என்று எண்ணி, மென்மேலும் கர்மமலங்களில் அழுந்துமாதலால் அதற்கு ஶத்ருவாகவும் வரும்.

(3) மனஸை ஆத்மவழியில்விட்டுப் பழுதுபடுத்தக்கூடாது. விதிவிலக்குகளையறிந்து விதிகளை அன்போடும் செவ்வையாகவும் பற்றி த்யானிக்கும்படி மனஸைச் செய்யவேண்டும். இவ்விதம் கர்மத்தையே அநுசரிக்கின்ற மனம் ஆத்மாவுக்கு எக்காலமும் பந்துவாயிருக்கும்.

(4) மலங்களில் நின்று உயர்த்தவேண்டும்.

ஜீவனோபாய கர்மங்களைச் செய்யும்பொழுது ஒருவருக்கும் தீமை துன்பம் முதலிய தோஷங்களைச் செய்யாமலும் யஜ்ஞம் தானம் தபஸ் என்ற ஆத்மோபாயகர்மங்களை க்ரமமாகச்செய்தும் ஶுத்திபெற்ற அந்தஃகரணங்கள் ஜீவாத்மாவை அவித்யையில் நின்றுநீக்கி ஆத்ம அநாத்மவிஷயங்களைப் பிரித்துக்காட்டும். காட்டினதை ஸாக்ஷியான ஜீவாத்மா அறிந்து தன்னைப்பற்றின மலங்களில்நின்று கைவல்யம் (தனிமை) பெறும்.

**௬. எந்த [மனஸ் என்ற] ஆத்மாவினால் [இந்த்ரியம் என்ற] ஆத்மா ஜயிக்கப்பட்டதோ (1) அந்த [மனஸ் என்ற] ஆத்மாவுக்கு [இந்த்ரியமென்ற] ஆத்மா பந்து (2) ஶத்ருத்வத்தில் (3) [இந்த்ரியம் என்ற] ஆத்மா (4) அநாத்மாவுக்கு (5) ஶத்ருபோல (6) இருக்கும்.**

(1) எவனுடையமனஸ் இந்த்ரியங்களோடு இழுபட்டுப் பராமுகமாகத் திரியாமல் (உ. ௬௰-அ.) இந்த்ரியங்களை உள்ளாக்கியடக்குமோ.

(2) இப்படிப்பட்ட ஜிதேந்த்ரியனுக்கு (இந்த்ரியங்களை ஜயித்தவனுக்கு) இந்த்ரியங்கள் ஆத்மவிசாரணைக்கு உற்ற துணை

(3) இந்த்ரியங்கள் தந்தம்விஷயங்களை விதிக்கு மாறுபட்டு பற்றுத அவஸ்தையில்.

பஞ்சேந்த்ரியங்கள் ஸூக்ஷ்மஶரீரத்தில் பூங்கொத்து. அல்லதுக்ராமம் (கூட்டம்) ஆதலால் பன்மையாகக்கூறாமல் ஒருமையாகப் பாவித்தார். ௫உ. ௪ இல் இந்த்ரியங்களை இந்த்ரியக்ராமம் என்றார். பூங்கொத்துப்போலிருக்கும்.

(4) இந்த்ரியக்கூட்டம் என்ற ஆத்மா.

(5) ப்ரக்ருதிவிஷயங்களாகிய ஶப்த ஸ்பர்ஶ ரூப ரஸ கந்தங்களுக்கு.

(6) வெறுப்புப்பெற்றதுபோல்.

இந்த்ரியங்களுக்கும் இந்த்ரியவிஷயங்களுக்கும் கடும்சிநேகம் இயல்பிலிருப்பதாலும், ஶாஸ்த்ரப்பட்ட மனஸின் வலிமையால் விஷயங்களில் நின்று இந்த்ரியங்கள் பிரிக்கப்பட்டதாலும் இந்த்ரியங்கள் தத்தம்விஷயங்களிற் பாயாமல் அடிமைகொண்டமனஸின் ஏவலைப்பார்த்து இருப்பதாலும், இந்த்ரியங்கள் விஷயங்களுக்கு ஶத்துருபோல இருக்கும்.

**௭. [ஜயிக்கப்பட்ட இந்த்ரியம் என்ற] ஆத்மாவுக்கும் ப்ரஶாந்தி (1) பெற்ற [மன] ஸாக்ஷிக்கும் பரமான (2) [புத்தி என்ற] ஆத்மா ஶீதோஷ்ணம் ஸுகதுக்கம் மானபமானம் (3) என்றவைகளில் ஸமமாக வைக்கப்பட்டிருக்கின்றது (4).**

(1) மிகுந்தஶாந்தி இந்த்ரியச்சேஷ்டையால் சலனப்படாமல் ஓய்ந்துநிற்கும் நிலை.

(2) மேற்பட்ட உயர்வான இந்த்ரியத்திற்கு மேற்பட்டது மனஸ். மனஸிற்கு மேற்பட்டது புத்தி என்று ௩. ௪௰௨. ௪௰௩. இல் கூறப்பட்டது.

(3) தன்னை மதித்துப் பிறர்நடத்தல் மானமாகும். தன்னை மதியாது இருத்தல் அபமானமாகும்.

(4) இப்படிப்பட்ட த்வந்த்வங்கள் ப்ரக்ருதியின் இயல்பான தோஷங்கள் என்று விசாரித்து, இவற்றால் இழுபடாமல், நன்புத்தி துல்யமாக (துலாய், தராசுபோல) நிற்கும்.

**௮. ஜிதேந்த்ரியனும் (1) ஓடு கல் தங்கம் என்றவைகளில் ஸமபார்வைபெற்றவனும் (2) ஞானம் விஞ்ஞானம் என்றவைகளால் த்ருப்த்திபெற்ற ஆத்மாவையுடையவனும் (3) கூடஸ்தனுமாகிய யோகி (4) யுக்தன் (5) என்று கூறப்படுகின்றன்.**

(1) இந்த்ரியங்களை ஜயித்த மனமுடையவனும்.

(2) மண்ணோடும் செம்புமுதலிய லோகங்களாலும் செய்

யப்பட்ட பதார்த்தங்களின் உடைபட்ட ஓட்டையும் கல்லையும் கல்லிலுற்பத்தியான ரத்னங்களையும் தங்கத்தையும் ப்ரக்ருதி சொரூபங்களேயென்று ஏகபாவனைசெய்யும் புத்தியுடையவனும்.

(3) அகண்டமாயிருக்கும் ஆத்மாவைப்பற்றிய வித்யாவிலும், கண்டிதமாயும் நானாவிதமாயும் உள்ள ப்ரக்ருதியைப்பற்றிய வித்யாவிலும், பூரணப்ரீதிபெற்ற விவேகமுடையவனும்.

(4) ப்ரக்ருதிதத்வங்களுக்கு மேற்பட்டுத் தன்னந்தனியே நிற்கும் ஆத்மவான் யோகி.

"கூடஸ்த" என்ற ஸமாஸபதம் "கூட" (பர்வதசிகரம்) "ஸ்த" (அசையாத) என்ற விக்ரஹபதங்கள்சேர்ந்து தோன்றிற்று. இந்த ஸமாஸபதம் மலையின் சிகரம்போல் மேலான நிலையையும் தனித்தநிலையையும் பெற்ற ஆத்மா என்றுபொருள் படும். மஉ. ச. மந்த்ரங்களில் எவர்கள் இந்த்ரியக் க்ராமத்தை முற்றுக அடக்கி யாவற்றிலும் ஸமத்வபுத்தி பெற்றவர்களாய், அழிவற்றவனும் காலதேசநிக்கற்றவனும் அவ்யக்தனும் ஸர்வவ்யாபகனும் மனஸுக்கு எட்டாதவனும் அசைவற்றவனும் நித்யனுமாகிய கூடஸ்தனை உபாஸிக்கின்றார்களோ, அவர்கள் பரமாத்மாவாகிய என்னையே அடைகின்றார்கள் என்று போதித்திருப்பதாலும், ௪-வது அத். ரு-வது மந்த்ரத்தில் ஜீவாத்மாவை ப்ரக்ருதி சொரூபங்களில் பரப்ரக்ருதி என்று போதித்திருப்பதாலும், மலங்களால் பந்தப்பட்டவனை ஜீவன்பத்தன் என்றும், மலங்களில் நின்று விடுபட்டவனை ஜீவன்முக்தனென்றும் வேதாந்திகள் கூறுவதாலும், தன்னந்தனியனாய் நிற்கும் கூடஸ்தனை ஜீவன்முக்தன் என்று அறியவேண்டியது. மேலும், ஜீவன்முக்தியான கூடஸ்தநிலையில் த்ருஷ்டிவைத்து வாழும் உபாஸகர்கள் பரமாத்மாவை அடைவார்களென்றும் அறியவேண்டியது.

இந்தக்கருத்து அமைத்தே மாணிக்கவாசகஸ்வாமி சைவஸித்தாந்தசிகாமணிக்கப்படி "மூர்க்கரொடு முயல்வேனை (முயல்கின்ற என்னை) சித்தமலமறுவித்துச் சிவமாக்கி" என்றுபாடினார்.

மலத்தில் வீழ்ந்த ஆத்மா மூர்க்கனாயிருக்கின்றான் என்பது

பற்றியும், மூர்க்கனுடைய சித்தத்தில் இலகும் மலம் அறுபட்டவுடனே மூர்க்கனுயிருந்தவன் ஶாந்தப்பட்டு சச்சிதானந்த சொரூபி ஆகின்ருன் என்பதுபற்றியும் "என்னைச் சிவமாக்கி" என்ருர்.

இப்படியே ஸ்ரீ க்ருஷ்ணபகவான் சா-வது அத். அ-வது மந்த்ரத்தில் மலஸஹிதன் மலரஹிதனுல் கூடஸ்தனுவானென்றும் ௰உ-வது அத். ௩. ச- மந்த்ரங்களில் கூடஸ்ததசையில் பரமாத்மாவோடு ஐக்யப்படுவானென்றும் உபதேஶித்தார்.

(5) பரமாத்மாவோடு முற்ருக ஐக்யப்பட்டவன்.

கர்மயோகத்தில் விருப்பங்கொண்ட யோகாருருக்ஷு அந்த யோகத்தில் முயன்று அதற்குரிய ஶாதனைகளாகிய இந்த்ரிய நிக்ரஹத்தையும் மனோநிக்ரஹத்தையும் ஸமத்வபுத்தியையும் நித்ய அநித்ய விவேகத்தையும் ப்ராணுயாமத்தையும் ஶாதித்து யோகாரூடன் என்று பெரியோரால் அழைக்கப்பட்டு இந்த நிவ்ருத்திமார்க்கம் அல்லது முக்திநெறி முடிவில் விளங்கும் கூடஸ்த நிலையைப்பெற்றவன் பரமாத்மாவை (பரஶிவத்தை) அடைதலால் யுக்தன் என்று போற்றப்படுவன்.

யோகிஎன்றபதம் யோகாருருக்ஷுவுக்கும் யோகாரூடனுக்கும் பொருந்தி யுக்தனில் முடிவுபெறும்.

**௯. ஸுஹ்ருர் (1) மித்ரன் ஶத்ரு உதாஸீனன் (2) மத்யஸ்தன் (3) த்வேஷ்யன் (4) பந்து (5) ஸாதுக்கள் (6) பாபிகள் (7) என்ற இவர்களிடத்தில் ஸமபுத்தியுள்ளவன் மேன்மையை (8) ப் பெறுகின்றன்.**

(1) ப்ரதியுபகாரத்தைக் கோராமல் உபகாரஞ் செய்கின்றவன்.

(2) வாதி ப்ரதிவாதி என்றவர்களில் கட்சியைப் பெருதவன்; ஒருவிதமான பாரபக்ஷமும் இல்லாதவன்.

(3) விரோதம்பெற்ற இருவர்களின் ஹிதத்தைக் கோருகின்றவன்.

(4) த்வேஷத்தை (வெறுப்பை) அநுஸரிக்கின்றவன்.

(5) ஜனன விவாகவழியால்வந்த உறவினர்.

(6) நல்லவர்கள்; புண்யகர்மங்களைச் செய்கின்றவர்கள்.
(7) பாபகர்மங்களைச் செய்கின்றவர்கள்.
(8) உத்க்ருஷ்ட நிலையாகிய கூடஸ்த்வத்தை.

**ய. தனித்தவனும் (1) சித்தவ்ருத்தியை ஒடுக்கினவனும் (2) தன் ப்ரக்ருதியின் ஹிதத்தை அநுஸரிக்காதவனும் (3) பரிக்ரஹமற்றவனும் (4) ஆகியயோகி ரஹஸ்யத்திலிருந்து (5) ஸதாகாலமும் (6) [மனஸ் என்ற] ஆத்மாவை [பரமாத்மாவோடு] சேர்க்கவேண்டும் (7).**

(1) ஜனஸங்கத்தில் விருப்பமில்லாதவனும்.
(2) மனவில் வீண்ஸங்கல்ப்பங்களை யொழித்தவனும்.
(3) தன் காரணதேஹமாகிய அவித்யாவின் காமங்களையும் அவை ப்ரியப்பட்ட விஷயங்களையும் வெறுத்த புத்தியுள்ளவனும்.
(4) ஒருவனிடம் கைநீட்டிவாங்குதல் என்றதன்மை அற்றவனும். வாங்குதலைவிட்டு கொடுத்தலே (தானமே) நன்றென்று வாழுகின்றவன். பரிக்ரஹம் அற்றவன்.
(5) பிறர் ஸஞ்சரிக்காத இடத்திலிருந்து.
(6) ஒவ்வொருநாளும் நியமித்தகாலங்களில்.
(7) நினைவுகளையொடுக்கி நினைக்கும் கருவியாகிய மனதை ஆத்மாவில் லயிக்கச்செய்யவேண்டும்.

மனோலயயோகத்தை ப்ரஹ்மநிஷ்டை கூடுதல் என்றும் சொல்வார்கள்; ஏனெனில் நினைவுகளை மெல்லமெல்ல விலக்கி ப்ரஹ்மத்தில் மனதை நிறுத்தி ஒடுக்குவதால்.

**யக, யஉ. பரிசுத்தஸ்தலத்தில் அதிக உயர்வில்லாததும் அதிக தாழ்வில்லாததும் தர்ப்பை மான் தோல் வஸ்த்ரம் என்றவைகளை மேற்கொண்டதும் ஆகிய தனது ஆஸனத்தை ஸ்திரமாகஸ்தாபித்து அவ்வாஸனத்திலுட்கார்ந்து மனஸ் இந்த்ரியங்கள் என்றவைகளின் தொழில்களை ஒடுக்கினவனாய் மனதை ஏகாக்ரஞ்செய்து (1) ஆத்மசுத்திக்காக (2) [மனோலய] யோகத்தைச் செய்யவேண்டும்.**

(1) பலவித விஷயங்களைப்பற்றிப் பிரிந்துநிற்கும் மனதை மெல்லமெல்ல ஒடுக்கி மலையின் சிகரம்போல ஓர் நுனிபெறச் செய்து.

"ஏகாக்ரமனஸ்" ஒரு ("ஏக") நுனி ("அக்ர") பெற்ற மனஸ்.

அஃதாவது, மனோலய யோகஸாதனையில் பஞ்சேந்த்ரியச் சேஷ்டைகளையொடுக்கி மனதை லௌகிகவிஷயங்களினின்று பிரித்து ஆத்மிகவிஷயங்களில் செலுத்தி அதன்மேல் பரஞ்சோதியாகிய பரசிவம் என்ற நினைவுமாத்திரத்தோடு நிற்றலே.

இந்த ஏகாக்ரநிலையை மாணிக்கவாசகஸ்வாமி திருவாசகத்தில் கோயிற்றிருப்பதிகத்தில் ௯-வது மந்த்ரத்தில் "ஒன்றும்" அல்லது ஓர்முனைபெற்ற மனஸாம் என்று விளக்கினார்:—

"உள்ளத்து எழுகின்ற ஞாயிறேபோன்று நின்றநின்றன்னை, நினைப்பற, நினைந்தேன், நீயலால் பிறிது மற்றின்மை நினைப்பற (நினைந்தேன்) ஒன்றும்" என்ற ஏகாக்ர (ஓர்முனை) மனஸால் நினைத்தேனென்று கூறி, அந்த ஏகாக்ரநினைவும் ஒழிந்த அவசரத்தில் அநுக்ரஹஸக்தியோடு எல்லையற்ற சிதாகாசத்தில் ப்ரஸன்னமாகும் வஸ்துவைத் "திருப்பெருந்துறையுறை சிவனே" யென்று துதித்து, "ஒன்றும் நீயல்லை" உன்னையன்றி ஒன்றும் இல்லையென்று அதன் நிர்க்குண ஆதார லக்ஷணத்தை ஸ்வாநுபவப்படி உபதேசித்து, "ஆருன்னை யறியகிற்பார்" என்றவினாவால் கூடஸ்தன் ஆகிய ஜீவன்முக்தனே அறிவானென்று குறித்தார்.

அடுத்தமந்த்ரத்தில் யுக்தனுடைய நிலையை பின்வருமாறு கூறுகின்றார்:—

**௰௩. ௰௪. அச்சமற்றவனாய் (1) ப்ரஹ்மசர்யவ்ரதத்தைச் சாதிக்கின்றவனாய் (2) உடல் தலை கழுத்து என்றவைகளை நேராக அசைவறத் தரிக்கின்றவனாய் (3) இந்த்ரியநிலையில் ஸ்திரனாய் (4) திக்குகளைக் கவனிக்காதவனாய் (5) நாஸிநுனியை நோக்கி (6) மனதை ஸம்யமித்து (7) ஶாந்திபெற்ற புத்தியுடையவனாய் (8) மச்சித்தனாய (9) மத்பரனாய் (10) இருப்பவன் யுக்தன்.**

(1) மனோலய அப்யாசங்களைப்பற்றிப் பயமில்லாதவனாய்.

(2) ப்ரஹ்மத்தை நான் அடையவேண்டுமென்ற நியமத்தைப் புத்தியில் ஸதாகாலமும் கொண்டவனாய்.

பாலப்பர்வந்தொட்டு வயோதிகம் வரையில் ப்ரஹ்மசர்ய வ்ரதம் புண்யாத்மாக்களுக்கு உரியதென்றும், இந்த வ்ரதத்தைச் சாதிக்கும் புத்திக்கு நான்கு ஆஶ்ரமங்கள் உள்ளன என்றும், இவற்றுள் ௭. வயஸுதொட்டு ௩௰௨. வயஸுவரைக்கும் ஒருவன் வேதாகமங்களையும் தர்மஶாஸ்த்ரங்களையும் புராண இதிகாஸங்களையும் குருகுலவாசியாயிருந்து வாழும் ஆஶ்ரமத்துக்கு ப்ரஹ்மசர்யம் என்ற விசேஷநாமம் அமைக்கப்பட்டதென்றும் ௩௰௨. வயஸுக்குப்பால் ப்ரஹ்மத்தை யடையவேண்டுமென்ற புத்தியால் ஒருகன்னிகையை விவாகம்பண்ணி கார்ஹஸ்த்யம் (க்ரஹஸ்தனுடைய நிலை) இல்வாழ்வு என்ற ஆஶ்ரமத்தில் வாழ்ந்து அதிமேலிய கைங்கர்ய வழியால் மோக்ஷத்தைப் பெறலாமென்றும், அப்படிப் பெறாதபக்ஷத்தில் தன் பத்னிஸஹிதமாக வனத்திற்சென்று ப்ரஹ்மத்தைப் பெறலாமென்றும், இதிலும் பெறாதபக்ஷத்தில் அவன் ஸந்யாஸி ஆஶ்ரமத்திற்சென்று ப்ரஹ்மத்தைப் பெறலாமென்றும் பெரியோர் கூறுகின்றார்கள். ஆகவே, ப்ரஹ்மசர்யவ்ரதம் சதுர் ஆஶ்ரமங்களுக்கும் ஸாதாரணகர்மம் (பொதுவிதி) என்று அறிக.

(3) பத்மாஸனம் முதலிய ஆஸனங்களிலொன்றைஹித்து, முதுகெலும்பும் கழுத்தெலும்பும் பொருந்திய வீணாதண்டத்தை நேராக்கி அதனோடு ஶிரஸையும் நிமிர்த்திவைக்கின்றவனாய்.

(4) நிமிர்த்திவைத்தபின் ஶிரஸையும் வீணாதண்டத்தையும் சாயாமலும் கூனாமலும் இருக்கும்படி செய்கின்றவனாய்.

(5) கண்ணாலாவது காதாலாவது மனஸாலாவது அஷ்டதிக்குகளில் நடைபெற்றுவரும் விஷயங்களை க்ரஹிக்காதவனாய்.

(6) கண்களை நேரே பார்க்கவிடாமல் மேல்மடல்களைத் தாழ்த்தி அவற்றிற்கும் கீழ்மடல்களுக்கும் இடையில் உள்ள சிறு இடைவெளியால் மூக்கின் நுனியைப் பார்த்துக்கொண்டு.

(7) மனஸின் நினைவுகளை மெல்ல மெல்ல ஒழித்து.

(8) சலனமற்ற புத்தியின் ப்ரகாஸத்தைப் பெற்றவனாய்.
(9) என்னில் சித்தம்வைக்கின்றவனாய்.

"மத்சித்த" என்ற ஸமாஸபதம் "மயி"(என்னில்)"சித்தம்" (சித்தமுடையவன்) என்ற பதங்கள் கூடினதால் தோன்றிற்று.

மயி என்றது "அஹம்" (நான்) என்ற பதத்தின் ஏழாம் வேற்றுமை.

"மயி" (என்னில்) என்றது மஹேஸ்வரனில் என்று பொருள்படும்.

(10) நான் ஸகல வஸ்துக்களுக்கும் மேலான மஹேஸ்வரன் என்று எண்ணமுள்ளவனாய்.

"மத்பர:" என்ற ஸமாஸபதம் "அஹம்" (நான்) "பர:" (மேலானவன்) என்றபதங்கள் கூடினதால் தோன்றிற்று.

அடுத்த மந்த்ரத்தில் மனோலயயோகத்தின் ப்ரயோஜனத்தைக் கூறுகின்றார்.

**௰௫. இவ்வாறு மனஸை ஒடுக்கி எக்காலமும் சித்தத்தை [என்னிடம்] சேர்க்கும்யோகி நிர்வாணத்தை (1) பரமபலனாகக்கொண்டதும் என் சொரூபத்தை (2) ஏற்படுத்துகின்றதும் ஆகிய ஸாந்தியைப் பெறுகின்றான்.**

(1) போக்கு வரவு அற்ற பூரணத்வத்தை.

கிஞ்சித்ஞத்வம் என்ற சிற்றறிவோடு இருந்து ஆத்மா பிறப்பு இறப்புக்களைப் பெற்ற ப்ரவ்ருத்திமார்க்கத்தில் அலைந்து அதன் அநுபவங்கள்யாவும் துன்பமென்று நிதானித்து துக்கவிமோசனத்தைத்தரும் நிவ்ருத்திமார்க்கத்திற் சென்று அகண்டஞானம் (பேரறிவு) என்ற பூரணத்வத்தையடைந்து பிறப்பு இறப்பு என்ற அவஸ்தைகளைப் பெறாதிருத்தலே நிர்வாணம்.

(2) சச்சிதானந்தமாகிய ஸாக்ஷாத்பர்ப்ரஹ்மசொரூபத்தை.

இனி மனோலயயோக அப்யாஸிக்குரிய ஆஹாரமும் நித்ரையும் நியமத்தோடு இருக்கவேண்டுமென்று போதிக்கப்படும்.

**௰௬. அர்ஜுன, அதிகம் உண்பவனுக்கு (1) [மனோலய] யோ**

கம் இல்லை. ஒருவேளையாவது உண்ணாதவனுக்கும் (2) இல்லை. அதிகம் நித்ராஸீலனுக்கும் (3) இல்லை. அதிக ஜாக்ரதையாயிருப்பவனுக்கும் (4) இல்லை.

(1) தாமஸ ராஜஸ் ஸாத்விக குணவான்களுக்கு வெவ்வேறு உணவுகள் உரியன என்று பகவான் ௰எ. அத். அ, சு, ௰ மந்த்ரங்களில் கூறியிருக்கின்றார். ஈண்டு ஸத்வகுணம் மேலிட்டயோகிகளுக்கு ஆகாரம் நியமமாக இருக்கவேண்டுமென்றார். அஃதாவது, இரைப்பையில் இரண்டுபங்கு அன்னமும் ஒருபங்கு ஜலமும் செலுத்தி நாலாம்பங்கை வாயுஸஞ்சாரத்துக்காக விடவேண்டியது.

(2) ஜடராக்னிவேதனையை ஒவ்வொருநாளும் ஒவ்வொரு வேளையாவது அன்னபானாதிகளால் ஸாந்தப்படுத்தாதவனுக்கு.
இப்படிச்செய்யாதவனை ஜடராக்னி பசியினால் கொல்லும். செய்தவனுக்கு அன்னத்தை ஜீரணிக்கப்பண்ணி அதன் ஸாரமாகிய ரத்தத்தை ஸமானவாயுமூலமாக தேஹத்துக்குக் கொடுத்து ரக்ஷிக்கும்.

(3) அதிகதூக்கத்தில் ஸுகங்கொண்டாடினவனுக்கும்.
௰ரு நாழிகைக்கு மேற்பட்ட நித்ரை யோகிக்குத் தடையாகவிருக்கும் பகலில் தூங்கவேகூடாது. இரவில் 10 மணிக்குப் படுக்கையறையிற்சென்று 4 மணிக்கு எழுந்திருக்கவேண்டும்.

(4) ஜாக்ரத அவஸ்தையில் நெடுநேரமிருந்தவனுக்கும்.
ஸ்வப்ந ஸுஷுப்தி அவஸ்தைகளில் ௰ரு நாழிகை (சுா மணி நேரம்) கூறினபடிசென்றால் சரு௰ நாழிகை ஜாக்ரத அவஸ்தைக்குரியதாகும். இதில் கவனத்தைக் கார்யங்களில் எப்பொழுதும் செலுத்தாமல் இடையிடையே ஓய்ந்திருப்பது நன்று. ஓயாமல் சரு௰ நாழிகைதோறும் கர்மங்களில் ப்ரவேசிப்பது அதிஜாக்ரதையாகி யோகிக்கு ஸுகத்தைக் குறைக்கும்.

௰எ. ஒழுங்கான ஆஹாரவிஹாரங்களை (1) யுடையவனும் கர்மங்களிலே ஒழுங்கான ப்ரவ்ருத்தி (2) யுடையவனும் உறக்கத்தையும் விழிப்பையும் ஒழுங்காகக்கொண்டவனுமாகிய அவனது [மனோலய] யோகம் துக்கத்தைத் தொலைக்கின்றது.

(1) ஆஹாரம்=அன்னபானுதி. விஹாரம்=கால்நடை, உலாவுதல்.

(2) தனக்குரிய ஜீவனேபாய ஆத்மோபாய கர்மங்களை க்ரமமாகச் செய்துவருதல்.

**௰அ. எப்பொழுது ஒடுக்கப்பட்டவனுடைய சித்தம் ஆத்மாவிலேயே நிற்கின்றதோ அப்பொழுது அவன் சகலகர்மங்களிலும் பற்றற்று யுக்தன் (1) என்று கூறப்படுகின்றன்.**

(1) விருப்பு வெறுப்புகளுக்கேற்றபடி விரியும் சித்தத்தை ஒடுக்கி அதை ஆத்மாவில் ப்ரதிஷ்டைசெய்தால் ஸகலகர்மங்களும் நிஷ்கர்மங்களாகும். இந்த மனோஹிதசித்தத்தை யுடையவன் யுக்தன். இதுபற்றியே "சித்தமலமறுவித்துச் சிவமாக்கி" என்று திருவாசகத்தில் கூறப்பட்டது.

அடுத்த ஶ்லோகத்தில் மனேலய யோகஸித்தியைப் பெறுகின்றவனுடைய புத்திக்கும் அசைவற்ற தீபத்துக்கும் உவமை கூறுகின்றார்.

**௰௬. எவ்விதம் காற்றில்லாத இடத்திலிருக்கின்ற தீபம் அசைகின்றதில்லையோ இந்தஉவமை (1) சித்தத்தை அடக்கினவனும் (2) மனேலயயோகத்தைப் பொருந்துகின்றவனுமா (3) கிய யோகியின் (4) ஆத்மாவுக்கு (5) கூறப்பட்டது.**

(1) இந்த அசலதீபத்ருஷ்டாந்தம்.

(2) சலனசக்திஉள்ள காற்றைப்போல ஆடிக்கொண்டிருக்கும் மனதை ஒப்படக்கினவனும்.

(3) நினைவுகள் ஓயும் ஸமயத்தில் மனேலய யோகத்தில் ஸித்திபெறுகின்றவனும்.

(4) ஆத்மாவில் ப்ரதிஷ்டைபெற்ற புத்தியானுடைய.

(5) சச்சிதானந்த ஸ்வரூபமான ஆத்மாவுக்கு.

இனி அடுத்தநாலு ஶ்லோகங்களில் யுக்தன் என்ற ஜீவன் முக்தன் யோகமார்க்கத்தால் பெற்றது பரமபதமென்கிற துக்க நிவ்ருத்தி என்று உபதேசிக்கின்றார்.

உ௰. யோகஸேவையால்(1) சித்தம் தடுக்கப்பட்டு (2) எதில் ஒடுங்குகின்றதோ (3), ஆத்மாவால் ஆத்மாவை எப்பொழுது அறிகின்றவனாய் (4) ஆத்மாவில் ஸந்தோஷிக்கின்றானோ (5),

உ௰க. புத்தியால் க்ராஹிக்கத்தக்கதும், (6) இந்த்ரியங்களுக்கு அதீதமானதும் (7) அழிவற்றதும் ஆகிய அந்தஸுகத்தை எதில் அறிகின்றானோ (8) எதில் ப்ரதிஷ்டைபெற்றவனாய் தத்பொருளில்நின்று (9) விலகவில்லையோ,

உ௰உ. எதனைப் (10) பெற்று வேறு லாபத்தை (11) அதனினும் அதிகமாக எண்ணுகின்றான் இல்லையோ, எதனிடத்து நிற்கின்றவனாய், பெருந்துக்கத்தாலும் அசைக்கப்படுகிறான் இல்லையோ,

உ௰௩. அந்த [துக்க ஸம்யோக] வியோகம் (12) யோகம் (13) என்று பெயர் பெற்றதாக அறியவேண்டியது. நிர்வேதத்தில் ப்ரதிஷ்டைபெற்ற (14) சேதஸை (15) உடையவனால் அந்தயோகம் (16) நிஶ்சயமாகப் பொருந்தக்கூடும்.

(1) ப்ராணாயாம முதலிய அப்யாஸங்களால்.

(2) மனவியின் தன்மையாகிய நினைத்தல் முதலியவற்றினின்றும் தடுக்கப்பட்டு.

(3) எந்த ஆத்மாவில் அடங்கி நிற்கின்றதோ.

(4) ஆத்மாவுக்குக் கருவிகளாயிருக்கும் அந்தக்கரணங்களையும் புறக்கரணங்களையும் நீக்கின அவஸரத்தில் தன்னந்தனியாய் நிற்கின்ற தன்னால் தன்னை எக்காலத்தில் அறிகின்றவனாய்.

"ஆத்மநா ஆத்மாநம் பஶ்யந்"—தன்னைத் தன்னால் அறிகின்றவன்.

(5) ப்ரக்ருதியிலும் ப்ரக்ருதி கார்யங்களிலும் ஸந்தோஷங் கொள்ளாமல் தனி முதலாகிய தன்னிலும் தன்னைப்பற்றிய பரமாத்மாவிலும் பரமபக்தியிலும் ஆநந்தம் கொள்ளுகின்றானோ.

(6) விசாரணையால் புத்தி நிதானிக்கக்கூடியதும்.

ஆத்மா "அவாங் மனஸ கோசரம்" (வாக்குக்கும் மனஸுக்கும் விஷயமாகாத பொருள்) ஆதலாலும், மனதைப்போல புத்தி ப்ரக்ருதிஜந்யமாதலாலும், புத்தி ஆத்மாவை நேரே அறியமாட்டாது. புத்திக்கு ஆத்மா ப்ரத்யக்ஷமாகாது போனாலும்

அநுமானப்படும் என்பதுபற்றி "புத்தியால் க்ரஹிக்கத்தக்கது" என்றார். க்ரஹிக்கத்தக்கதும்=அநுமானிக்கத்தக்கதும்.

(7) மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற புறக்கருவிகளுக்கு எட்டாததும்.

(8) பரம சாந்தியை.

(9) எந்த நிர்க்குண வஸ்துவில்.

(10) எந்த நிர்க்குண வஸ்துவை.

(11) பேறை.

(12) துக்க ஸம்யோக வியோகம்=துக்க ஸம்பந்த விமோசனம். அஃதாவது, துக்கத்தோடுகூடி ஜீவிக்கும் அவஸ்த்தையில் நின்று விடுபடுதல்.

(13) உ. ௪௰௮ இல் ஸமத்வ ஸாமர்த்யத்தை யோகம் என்று கூறி, ஈண்டு, துக்க நிவ்ருத்தியை யோகம் என்றார். ஏனெனில்; துக்க நிவ்ருத்திக்குக் காரணமாக ஸமத்வ ஸாமர்த்யம் இருப்பதால்.

புத்தி பூர்வகமாக ஸீதம் உஷ்ணம், வெற்றி தோல்வி, உயர்வு தாழ்வு, இன்பம் துன்பம், முதலிய த்வந்த்வங்கள் ஒன்றுபட்ட நிலையை ஆத்மா பொருந்தல், "யோகம்" எனப்படும். இந்த த்வந்த்வ ஸாம்யத்வத்தினின்று அதிக வேற்றுமை உள்ள ப்ரக்ருதிஸ்வரூபங்கள் யாவும் ஒன்றே என்று அறிந்து ஆத்ம ஸமதர்சன நிலையைப் பொருந்துதலும் யோகம் எனப்படும். ஸமதர்சனநிலையினின்று துக்கத்தைவிட்டு ஆத்ம பரமசாந்தியைப் பொருந்துதலும் யோகம் எனப்படும்.

(14) "நிர்விண்ணா"=நிர்வேதத்தைப்பெற்ற. உ. ௫௰உ. (௫); வேதவாக்யங்கள் வர்ணிக்கக்கூடாத வஸ்துவில் ப்ரதிஷ்டை பெற்ற.

(15) மனதை.

(16) மேற்குறித்த துக்க ஸம்யோக வியோகம்.

**உ௰௪. ஸங்கல்ப்பம் வெளிவிட்ட (1) ஸர்வ கர்மங்களை ஶேஷமில்லாமல் (2) த்யாகம்செய்து (3) மனஸோடுகூடவே, இந்த்ரியக் ராமத்தை முற்றாக ஒடுக்கி (4).**

உ௰௫. மெல்ல மெல்ல உபரதியைப் [5] பெறவேண்டும். தைர்யத்தால் க்ரஹிக்கப்பட்ட [6] புத்தியால் மனஸை ஆத்மாவினிடம் ப்ரதிஷ்டைசெய்து [7] ஒன்றையும் நினைக்கக்கூடாது [8].

(1) "ஸங்கல்ப ப்ரபவ"=ஸங்கல்பம் ப்ரத்யக்ஷமாக்கின. அஃதாவது, நினைத்த ஸமயத்தில் தோன்றின.

ஸங்கல்பம் என்றது மானஸ கர்மம்; மனஸின் தொழிலாகிய நினைத்தல்.

அப்ரத்யக்ஷமான காமம் (ஆசை) மனஸ் நினைத்தபொழுதே மனஸில் ஏறி ஜீவாத்மாவுக்கு ப்ரத்யக்ஷமாகும், என்பதுபற்றி, "ஸங்கல்ப ப்ரபவ காமம்" (ஸங்கல்பம் வெளியிட்ட காமம்) என்றார்.

"ப்ரபவ"=வெளியிட்ட, பிறக்கச்செய்த, தோற்றுவித்த.

ஆசையில் வீழ்ந்து தன் ஸச்சிதானந்த ஸ்வரூபத்தையாவது ஆசையின் மல ஸ்வரூபத்தையாவது அறியமாட்டாத ஜீவாத்மாவுக்குப் பரமேஸ்வரன் மனஸ் முதலிய அதிஸூக்ஷ்ம கரணங்களை அருளினார். மனம் நினைக்க அந்த நினைவுவாயிலாக ஆசை வெளிவந்து ஜீவாத்மாவுக்கு ப்ரத்யக்ஷமாகின்றது. அப்பொழுது "எனக்கு ஓர் ஆசை உண்டு" என்று அவன் சொல்லுவான். மனஸற்றவன் ஆசையை அறியான்.

(2) எச்சமின்றி; சொச்சமில்லாமல், முற்றாக.

(3) என நல்ல ஒன்று விட்டு.

(4) மனஸையும் இந்த்ரியக் கூட்டத்தையும் தத்தம் தொழிலினோர் செய்யவிடாமல் மெல்ல மெல்ல ஸம்பூர்ணமாக அடக்கி.

(5) ஸாந்தியை; ஓழிவை.

(6) தைர்யத்தால் நிறைந்த. தைர்யம் என்றது தீரனுடைய தன்மை. தீரன் என்றது திட புத்திமான். எனவே, தைர்யத்தால் க்ரஹிக்கப்பட்ட புத்தியால் என்ற வாக்யம் ஸ்திரபுத்தியால் என்று பொருள்படும்.

(7) மனம் நினைக்கும். நினைக்கப்பட்ட நினைவுகள் யாவற்றையும் புத்தி விசாரிக்கும். விசாரிக்கும்பொழுது புத்தி சலன

ப்பட்டிருந்தால், காற்றால் அடிபட்ட தீபம்போல, அதன் ப்ர காஶம் குன்றி விசாரிக்கும் ஶக்தியும் குன்றும். த்வந்த்வங்க ளால் இழுபடாமல் ஸ்திரமாக நிற்கும் புத்தி மனஸை முன் னிட்டே, இந்த்ரியங்களோடு சென்று, ப்ராக்ருத விஷயங்களைப் பற்றவிடாமல், உள்முகமாகத்திருப்பி, ஆத்மாவைப்பற்றி நிற் கச்செய்யவேண்டும் என்பதுபற்றி, ஸ்திரப்பட்ட "மனஸை ஆத்மாவினிடம் ப்ரதிஷ்டைசெய்து" என்றார்.

(8) "கிஞ்சித்அபி ந சிந்தயேத்"=ஒன்றையும் சிந்திக்கக்கூடா து; மனஸ் ஒன்றையும் நினையாமல் நிற்கவேண்டும்.

நினையாமல் நிற்றலே மேனிலையாம். இது "மன ஆத்ம ஸம்யமம்" என்று (ஆறாம் அத்யாயத்தின் பெயர் ஆயிற்று.) இதனையே இராஜயோகம் என்பார்கள்.

**௨௰௬. சஞ்சலமுடையதும் ஸ்திரமில்லாததும் ஆகிய மனஸ் எதேதால் (1) வெளியில் செல்லுகின்றதோ (2) அதிலதில் நின்று (3) இதனை ஒடுக்கி (4) ஆத்மாவிலேயே வஶத்தைப் (5) பெறச்செய்ய வேண்டும்.**

(1) எந்த எந்த விஷய வழியால்.

(2) பராமுகமாகத் திரிந்து.

(3) அந்த அந்த விஷயத்தில்நின்று.

(4) மனஸைத் தடுத்துத் திருப்பி. அதாவது, ப்ரத்யா ஹாரம் செய்து.

(5) அடிமைத்தன்மையைப்.

இந்த மந்த்ரத்தில் கூறியபடி, மனஸை உள்முகமாகத் திருப்பி, ஆத்மாவில் ப்ரதிஷ்டை செய்தவனுக்கு உத்தம ஸுக மாகிய யோகஸுகம் ஸித்திக்குமென்று அடுத்த மந்த்ரத்தில் உப தேஶிக்கின்றார்.

**௨௰௭. ப்ரஶாந்த (1) மனஸைப்பெற்றவனும் ஶாந்தமான ரஜஸை (2) யுடையவனும் கல்மஷம் (3) அற்றவனும் ப்ரஹ்மமயமா னவனும் (4) ஆகிய இந்த யோகியை உத்தம (5) ஸுகம் அடைகின் றது.**

(1) விஷயங்களில்நின்று மிகவொழிவுபெற்ற. ௬. ௭.

(2) ஸத்வகுணம் மேலிட்ட ரஜஸ் குணத்தை.

(3) விருப்பு வெறுப்பு என்ற த்வந்த்வ மலம்.

(4) ப்ரக்ருதி ஸ்வபாவத்தைத் தீர்த்ததால், ப்ரஹ்மமயம் ஆனவனும்.

(5) ஸ்வர்க்காதி ஸுகங்களுக்கு மிகமேலான.

**உ௰அ. கல்மஷம் அற்ற யோகி எக்காலங்களிலும் இவ்விதம் ஆத்மயுஞ்சனாய் (1) ப்ரஹ்ம ஸ்பர்ஶமுள்ளதாயும் (2) அத்யந்தமாயும் (3) ஆகிய ஸுகத்தை ஸுகமாக (4) அடைகின்றான்.**

(1) ஆத்மாவைப் பொருந்துகின்றவனாய்.

௬. ௰அ இல் ஆத்மாவைப் பொருந்தினவனை "யுக்த:" என்றார். ஈண்டு, ஆத்மாவைப் பொருந்துகின்றவனுக்கு நிகழ்காலத்தைக் குறிக்கும் "யுஞ்சன்" என்ற பதத்தை அமைத்தார்.

(2) ப்ரஹ்மத்தைப் பற்றினதாயும்.

(3) முடிவை அதிக்ரமித்ததாய், முடிவற்றதாய்.

(4) லகுவாக.

**உ௰௯. யோகயுக்தாத்மாவாயும் (1) யாவற்றிலும் (2) ஸமதர்ஶனம் (3) பெற்றவனும் ஆகிய அவன் ஆத்மாவை ஸகல பூதங்களில் இருக்கின்றதாகவும், (4) ஸகலபூதங்களை ஆத்மாவில் [இருக்கின்றவை களாகவும்] (5) அறிகின்றான்.**

(1) ௬. ௩ இல் நைஷ்கர்ம்யம் என்ற யோகத்தில் ஏறவிரும்புகின்றவன் "யோகாருருக்ஷு" என்றும், ௬. ௩, ௪ இல் அதில் ஏறினவன் "யோகாரூடன்" என்றும், ௬. ௮ இல் அதில் ஏறிக் கூடஸ்தநிலையை அடைந்தவன் "யுக்தன்" என்றும் கூறி, இந்த மந்த்ரத்தில் யுக்தனை யோகயுக்தாத்மா என்று ஸ்பஷ்டமாக அமைத்தார்.

(2) ௬. ௭ இல் கூறப்பட்ட, சீதோஷ்ணம் ஸுகதுக்கம் மானாபமானம் என்ற த்வந்த்வங்களிலும், ௬. ௮ இல் கூறப்பட்ட ஓடு கல் தங்கம் முதலிய பதார்த்தங்களிலும், ௬. ௯ இல் கூறப்

பட்ட ஸுஹ்ருத், மித்ரன், ஶத்ரு, மத்யஸ்தன், பந்து என்று ஸங்கல்பித்த யாவர்களிலும்.

(3) ஸமபார்வை, ஒப்புரவு.

(4) தானடைந்த பரமாத்மாவை ஸகல ஜீவர்களிலும் இருக்கின்றதாகவும்.

(5) ஸகல ஜீவர்களையும் பரமாத்மாவில் இருக்கின்றதாகவும்.

ஸகல ஜீவர்களிலும் பரமாத்மா இரண்டறக் கலந்து இருப்பதாலும், மலத்தினின்று நீக்கப்பட்ட ஜீவர்கள் பரமாத்மஸ்வரூபத்தைப் பெறுவதாலும், ஓர்ஜீவனுக்கும் மற்றும் ஸகல ஜீவர்களுக்கும் ஆத்மத்வத்தால் உவமை ஏற்பட்டது. இது பற்றி, சு. கூ௰உ இல் "ஆத்ம உபமை" என்ற வாக்யம் பிறந்தது.

கூ௰. எவன் என்னை யாவற்றிலும் பார்க்கின்றனோ (1), [எவன்] என்னிடம் யாவற்றையும் பார்க்கின்றனோ (2) அவனுக்கு (3) நான் (4) நாஶத்தை அடையேன் (5) அவனும் எனக்கு நாஶத்தை அடையான் (6).

(1) உ. உ௰சு இல் கூறினபடி.

(2) உ. உ௰க இல் கூறினபடி. பரமாத்மாவும் ஜீவாத்மாவும் சித்பொருள்களாதலால், ஆதார ஆதேய பாவ ஸம்பந்தம் உண்டு. அந்த ஸம்பந்தம் இருந்தும், மலதோஷமுள்ள ஜீவாத்மாக்கள் பரமாத்மாவை அறியமாட்டார்கள். மலவிமோசனமானவுடனே, அறிவார்கள்.

(3) இந்த ஆதார ஆதேய பாவ ஸம்பந்தத்தை நிஶ்சயித்தவனுக்கு.

(4) பரமேஶ்வரனாகிய நான்.

(5) இல்லாமற்போகேன். அஃதாவது, ப்ரத்யக்ஷமாகுவேன்.

(6) ஜீவாத்மாவும் எனக்கில்லாமற் போகான். அஃதாவது, யோகாருருக்ஷுவையும், யோகாரூடனையும் என் க்ருபை பற்றி அவர்களுக்கு என் தர்ஶனத்தை அருளுவேன்.

யோகயுக்தனாகிய தத்வஞானியை எ. ௰அ | இல் நானே

என்றார்.

**௩௰௧. எவன் ஏகத்வத்தில் (1) இருந்துகொண்டு என்னை எல்லாப் பூதங்களிலும் நிற்கின்றவனாகச் சேவிக்கின்றனோ அந்தயோகி எவ்விதமிருந்தாலும் (2) என்னிடம் (3) இருக்கின்றான்.**

(1) தானும் மற்றஜீவர்களும் நானாவித தேஹங்களையும் மனஸ்களையும் பெற்றிருந்தாலும் ஆத்மத்வத்தில் ஒன்றே என்ற புத்தி நிலையில்.

இந்த ஏகத்வபுத்திநிலையே ஸமதர்சனநிலை.

(2) எந்த ஜீவனோபாய கர்மாநுஷ்டானியாயிருந்தாலும் எந்த வர்ணத்திலாவது, எந்த ஆச்ரமத்திலாவது வாழ்ந்தாலும்.

(3) பரமாத்ம ஸம்பந்தமாக.

**௩௰௨ அர்ஜுன, எவன் ஆத்ம உபமையால் (1) ஸர்வஜீவர்களிலும் ஸமமாக ஸுகத்தை அல்லது துக்கத்தை அறிகின்றனோ (2) அவன் பரமயோகி (3) என்று மதிக்கப்பட்டவன்.**

(1) "ஆத்ம ஔபம்யேன" = ஆத்ம ஒற்றுமையால்; தன் த்ருஷ்டாந்தத்தால்.

தானும், மற்றும் ஸகலஜீவர்களும் சித்பொருட்கள் என்றும், தன்னிலும் பிறரிலும் பரமாத்மா வீற்றிருப்பதால், தானும் அவர்களும் ஒன்று என்றும் நிப்சயித்தாலன்றி ஜீவர்களுக்கு ஏகத்வபுத்தி ஏற்படாது.

ஸிம்ஹம், யானை, கரடி, பாம்பு, மனுஷ்யன் என்ற ஸ்தூல தேஹங்களைப்பற்றியாவது அவற்றை ஆட்டுவிக்கும் ஸூக்ஷ்ம தேஹங்களைப்பற்றியாவது ஜீவர்களுக்கு உவமைகூறல் ஆகாது. மனுஷ்ய தேஹங்களையும் அந்தேஹங்களில் உள்ள மனஸ்களையும் ஒத்துப்பார்க்கில், மிகவேற்றுமை பெற்றவைகளாகத் தோன்றும். ஆதலால், ப்ரக்ருதியினின்று ஜனித்த தேஹத்தாலும் மனஸாலும் ஜீவர்களுக்கு ஒற்றுமை கூறவே கூடாது. ஒற்றுமை ஆத்மத்வத்தாலேயே ஸித்திக்கும் என்பதுபற்றி, "ஆத்ம உபமையால்" என்றார்.

(2) ஸகலஜீவர்களின் மனஸில் ஜன்யமான ஸுகத்தையும் துக்கத்தையும் தன் மனஸில் ஜனிக்கும் ஸுகத்துக்கும் துக்கத்துக்கும் ஸமம் என்று அறிகின்றானே.

ஸுகமும் துக்கமும் ப்ராக்ருதிஜன்யங்கள் இவை ப்ராக்ருதி ஜன்யமான மனஸில் எறும். எறினஸமயத்தில் ஜீவாத்மா ஸாக்ஷியாகயிருந்து அறியும். இவ்வாறு அறிதலே அநுபவம் அல்லது அநுபோகம் என்பார்கள். ஸுகதுக்கபோகங்கள் ஆத்மத்வத்தையே பற்றியிருப்பதால், பிறருக்கு ஸம்பவித்த ஸுக துக்கங்களைத் தன்னுடைய ஸுக துக்கங்கள்போல அறியலாம் என்பதுபற்றி, "ஸர்வஜீவர்களிலும் ஸமமாக ஸுகத்தை அல்லது துக்கத்தை அறிகின்றானோ" என்றார்.

(3) உத்தமயோகி, பரமேஶ்வரனோடும் ஸர்வ ஆத்மாக்களோடும் ஒன்றுபட்டவன்.

அர்ஜுனன் கூறினான்.

௩௰௩. மதுஸூதன (1), எந்தயோகம் (2) உன்னால் ஸாம்யத்தால் (3) கூறப்பட்டதோ, அதின் ஸ்திரமான ஸ்திதியை [மனஸ்] சஞ்சலமாதலால் (4) நான் அறிகின்றேன் இல்லை.

(1) மதுஎன்ற அஸுரனைக்கொன்ற பகவானே.

(2) எந்த ஏகத்வயோகம். அபேதானது, ஸர்வ ஜீவர்களோடும் பரமேஶ்வரனோடும் ஒன்றுபட்ட நிலை.

(3) ஸமதிருஷ்டி உபாயத்தால்; ஆத்மாவைப்பற்றிய ஸமதையால்.

(4) என் மனஸ் ஓர் நிலையில் நிற்காமல் பல அர்த்தங்களைப் பற்றிப் பிடிப்பதால்.

அடுத்த ஶ்லோகத்தில் அர்ஜுனன் தன் மனஸின் சஞ்சலத்தை இன்னும் விரிவாகக் குறிக்கின்றான்.

௩௰௪. க்ருஷ்ண, சஞ்சலப்பட்டும், கடைப்பட்டும் (1), பலமுள்ளதும் (2), கடினமாயும் (3) மனஸ் இருப்பதால், அதன் நிக்ரஹத்தை அதிக துஷ்கரமான (4) வாயுவின் நிக்ரஹத்தைப்போல எண்ணுகின்றேன்.

(1) மத்து தயிரைக் கடைவதுபோல, இந்த்ரியங்கள் மனஸைச் சிதறச்செய்யும். என்பதுபற்றி, "கடைபட்டும்" என்றான்.

(2) ஆசையால் ஏவப்பட்ட மனஸ் சிந்தித்துத் தளராமல் கர்மேந்த்ரியங்களைக்கொண்டு வேண்டிய வேலைகளை முயற்சியோடு செய்யும் என்பதுபற்றி, "பலமுள்ளது" என்றான்.

(3) புத்திமான்கள் சொன்னதைக்கேட்டும் அதற்குத்தக்கபடி நிற்காமலும், தான் ஸங்கல்பித்த வழியில்நின்று பற்றினதை விடாமலும், யாதொன்றாலும் அடக்கப்படாமலும் ஒரு நினைவுக்குமேல் இன்னொருநினைவு ஏற்றி ரூபித்துக்கொண்டே இருக்கும் என்பதுபற்றி, "கடினமாயும்" என்றான்.

(4) செய்தற்கு அரிதான.

ஸ்ரீ பகவான் கூறினார்.

௩௰௫. மஹாபாஹோ, மனஸ் சலனமுள்ளதும் நிக்ரஹிக்க வருத்தமானதும் [என்பதில்] ஸம்சயம் இல்லை (1) ஆனால், (2) கௌந்தேய, [அது] அப்யாஸத்தாலும் (3) வைராக்யத்தாலும் (4) நிக்ரஹிக்கப்படுகின்றது (5).

(1) அஜ்ஞானிகளின் மனஸ் ஒன்றை விட்டு மற்றொன்றைப் பற்றிய திரியுந் தன்மைபோலிருப்பதால், அது, ஒரு வஸ்துவை நெடுநேரம் த்யானிக்கமாட்டாது என்பதற்கும், ஓர் வஸ்துவையும் பற்றாமற் றெரிந்து நில்லாது என்பதற்கும் ஆக்ஷேபணையில்லை. ௬. ௩௰௩.

(2) இந்தச் சலனத்தில் ஆசையால் ஏவப்பட்ட மனஸை நிக்ரஹிக்க என்று அறி. எனெனில்,

(3) ப்ராணாயாம, ப்ரத்யாஹார, த்யான, தாரணை அப்யாஸங்களாலும்.

(4) நிராசை [விராகம்] என்ற ஸாங்க்ய அநுஷ்டானத்தாலும்.

(5) பிடித்து நிறுத்தலாம்.

தேஜோமயானந்தமென்ற பதிகத்தில், "தாயுமானஸ்வாமி

அநேக 'வஸித்திகளைப்பெறக் கூடுமானாலும் மனதை அடக்கிச் சும்மாவிருத்தல் அதிதுர்லபம்" என்றாகூறி, பரிபூரானாநந்தம் என்ற பதிசத்தில் "ஒரு ஸாதனம் மனோவாயு நிற்கும்வண்ணம் வாலாயமாகவும் பழகியறியேன்" என்றார். ஸ்ரீ க்ருஷ்ணபகவான் மனோலயத்துக்கு உபாயங்கள் ப்ராணாயாமாதி கர்மங்களும் நிராசை அநுஷ்டானமும் என்று இந்த மந்த்ரத்தில் திருவாய் மலர்ந்தருளினார்.

௩௰௬. அஸம்ய [மன] ஆத்மாவையுடையவனால் யோகம் துர்லபம் என்பது என்னுடைய மதிப்பு. (1) ஆனால், யத்தனித்து உபாயத்தால் வசப்பட்ட மன ஆத்மாவை உடையவனால் [அதைப்] பேறுவதந்துக்கூடும்.

(1) அடங்காத மனதையுடையவன், ஏகத்வயோகத்தைப் பெறுதல் மிக வருத்தம் என்பது நிஸ்சயம்.

[அஸம்ய] அடக்கமில்லாத. விருப்பு வெறுப்புகளாலும் கோபம் பயம் முதலிய தோஷங்களாலும் ஏவப்பட்ட மனஸ் அடங்காத மனஸ்.

அர்ஜுனன் கூறினான்.

௩௰௭. க்ருஷ்ண, யோகத்திலிருந்து சலித்த மனதையுடையவனும் யத்தனமில்லாதவனும், ஸ்ரத்தையுள்ளவனும், ஆகிய [ஒரு] வன் யோகத்தின் ஸம்ஸித்தியைப் பெறாமல் என்ன கதியை அடைகின்றான் (1).

(1) யோகத்தில் அன்பிருந்தும் முயற்சியில்லாதபடியால் யோகஸாதனையிலிருந்து வழுவினவன் யோகத்தின் ப்ரயோசனமாகிய துக்கவிமோசனத்தைப் பெறாதுபோனால் அவன் என்ன கதியைப் பெறுவான்.

௩௰௮. மஹாபாஹோ, ப்ரதிஷ்டையற்றவனும் (1) ப்ரஹ்மமார்க்கத்தில் விமூடனும் (2), இரண்டிலும் (3) நின்று நழுவினவனும் ஆகிய இவன், சிதறப்பட்ட மேகம்போல (4), நாசத்தை அடைகின்றானா இல்லையா (5).

(1) பரமாத்மாவில் ஸ்திரமாக நிறுத்தப்படாத புத்தியை யுடையவனும்.

(2) ப்ரஹ்ம மார்க்கமே ஜீவாத்மாவுக்குத் தக்கமார்க்கம் என்ற உண்மையை மறந்தவனும்.

(3) வைராக்யத்திலும், யோகாப்யாஸங்களிலும்.

(4) காற்றினால் அடிபட்டு அழிந்த மேகம்போல.

(5) இல்லாமற் போகின்றானா, அல்லது இருக்கின்றானா.

**௩௰௯. உன்னிலும் அன்யன் (¹) இந்த ஸம்ஶயத்தைத் தீர்க்கமாட்டான் [அதலால்] இந்த எனது ஸம்ஶயத்தை முற்றிலும் தீர்க்க உரியவனாகின்றாய்.**

(1) உன்னைவிட வேறு குரு.

**ஸ்ரீ பகவான் கூறினார்.**

**௪௰. தாத (¹), கல்யாணக்ருத்யன் (²) ஒருவனும் துர்க்கதியை அடையமாட்டான் அதலால், பார்த்த, இஹத்திலும், பரத்திலும் (³) அவனுக்கு நாஶம் இல்லை (⁴).**

(1) அப்பனே. தகப்பனுடைய அம்ஸமே மகனாயிருப்பதால் அப்பா என்ற பதம் தகப்பனுக்கும் மகனுக்கும் பொருந்தும்.

தமிழில் வரும் வாறே ஸமஸ்க்ருதத்தில் தகப்பன் தன் புத்ரனைப்பார்த்து "தாத", என்று கூறுவது வழமை.

(2) மங்களகர்மங்களைச் செய்கின்றவன்.

(3) இந்த லோகத்திலாவது மேல் லோகங்களிலாவது.

(4) அழிவும் இல்லை. இழிவும் இல்லை.

**௪௰௧. யோகப்ரஷ்டன் (¹) புண்யகர்மாக்களுடைய லோகங்களைப்பெற்று (²) [அவற்றில்] அநேக வருஷங்கள் வஸித்து ஶௌசமுள்ள (³) ஸ்ரீமான்களுடைய வீட்டில் (⁴) பிறக்கின்றான்.**

(1) யோகத்திலின்று வழுவினவன்.

(2) புண்யவான்களுக்குரிய பிதிர்லோகத்தையும் ஸ்வர்க்க

லோகத்தையும் பெற்று.

(3) தேஹஸுத்தி சித்தஸுத்தி உள்ள.

(4) இந்தப் பூலோகத்தில் லக்ஷ்மிவிலாசம்பெற்ற குலத்தில்.

௪௰௨. அல்லது புத்திமான்களான யோகிகளின் குலத்திலேயே பிறக்கின்றார். ஆனால், இவ்வித ஜன்மம் (1) லோகத்தில் மிக அரிது.

(1) யோகிகளின் குலத்தில் பிறத்தல்.

௪௰௩. முன் தேஹத்தில் ஏற்பட்ட அந்தப் புத்தி ஸம்யோகத்தை (1) இதில் அடைகின்றான் (2) குருநந்தன, மறுபடியும் (3) ஸம்ஸித்திக்காக யத்தனிக்கின்றான் (4).

(1) முற்பிறவியில் ஈச்வரனால் அருளப்பட்ட யோகஸம்பந்த புத்தியை.

(2) இந்தப் பிறவியில் அடைகின்றான்.

(3) இந்தப் பிறவியில் யோகஸம்பந்தமான புத்தியைப் பெற்று.

(4) யோகஃபலனுக்கே ப்ரயத்தனம் செய்கின்றான்.

௪௰௪. அவன் வசப்படாதவனாயிருந்தாலும் (1) அந்தப்பூர்வ அப்யாஸத்தாலேயே (2) கொண்டுபோகப்படுகிறான் (3). [நைஷ்கர்ம்ய] யோகஜிஜ்ஞாஸுவும் (4) ஸப்தப்ரஹ்மத்தை அதிக்ரமிக்கின்றான் (5).

(1) அவனுடைய மனஸும் புத்தியும் பரமாத்மாவுக்கு முற்றாக அடிமைப்படாமல் இருந்தாலும்.

(2) முற்பிறவியில் உண்டான ப்ரயத்னத்தாலும் வைராக்யத்தாலும் ப்ராணாயாம முதலிய அப்யாஸங்களாலுமேயே.

(3) பெருந்துறையாகிய யோகத்துக்குக் காற்றினால் ஏவப்பட்ட தோணிபோலக் கொண்டுபோகப்படுவான்.

(4) யோகத்தை அறிய விருப்பமுள்ளவனும். அதாவது, யோகாருருக்ஷுவும்.

(5) ஸகுண ப்ரஹ்மத்துக்கு அப்பாற்பட்டு நிர்க்குண ப்ரஹ்மத்தை அடைகின்றான்.

**சயரு. ஆனல், (1) ப்ரயத்தனத்தால் யத்தனிக்கின்றவனும், கபடில்லாதவனும் ஆகிய [ஜிஜ்ஞாஸு என்ற] யோகி அநேக ஜன்மங்களில் ஸம்ஸித்தியைப் பெற்று மேலானகதியைப் பெறுகின்றன் (2).**

(1) இந்த நிர்குண ஸ்திதியாகிய ப்ரஹ்மநிர்வாணத்தை யோகஜிஜ்ஞாஸு ஒரே பிறவியில் பெறமாட்டான்.

(2) சித்தசுத்தி அதிகரித்தவனுக்கு யோகத்தில் ஏற விருப்பம் வரும். அவனுக்குப் பரமேஶ்வரன வைராக்யத்தையும் யோகஸாதனைக்குரிய ப்ரயத்தனத்தையும் அருளுவார். இந்த ஶக்திகளைக்கொண்டு யோகாருருக்ஷு யோகாரூடனுகி வாழும் காலத்தில், தடைகள் வந்து ஸம்பவிக்கும். அப்பொழுது அவன் யோகத்தினின்று வழுவக்கூடும் இப்படித் தளர்ந்தவனைப் பரமேஶ்வரன் கைவிடாமல் இன்னொரு பிறவியைக் கொடுத்துத் தாங்குவார். இவ்வாறே, இன்னும் அநேக பிறவிகளைக்கொடுத்து, முக்திநெறியில் வளர்த்து, இனிப்பிறவாத பிறவியில் ப்ரஹ்மநிர்வாணத்தைக் கொடுப்பார்.

**சயகா. யோகி (1) கர்மிகளிலும் அதிகன் (2) யோகி தபஸ்விகளிலும் அதிகன் (3) [ஶாஸ்த்ர] ஞானிகளிலும் அதிகன் (4). என்று மதிக்கப்பட்டான். ஆதலால், நீ யோகியாய இரு (5).**

(1) ஸம்யக்திருஷ்டி உபாயத்தால் ஏகத்வம் என்ற உத்தம நிலையைப்பெற்ற யோகயுக்தன். அஃதாவது, ஜீவன்முக்தன்.

(2) யஜ்ஞ கர்மங்களையும் தான கர்மங்களையும் விதிக்கப்பட்ட அவஸரங்களில் செய்கின்றவனுக்கும் மேலானவன்.

(3) இந்த ஜீவன்முக்தன் காயத்தாலும் வாக்காலும் மனஸாலும் செய்யப்பட்ட தபஸ் கர்மங்களை அநுஷ்டிக்கின்றவனுக்கும் மேலானவன்.

(4) வேதாந்தம் முதலிய ஶாஸ்த்ரங்களை நன்ருகக் கற்றும் அவற்றின் உட்பொருளாகிய பரமாத்மாவை ஸ்வாநுபவமாக அறியாத வித்வான்களுக்கும் மேற்பட்டவன்.

(5) யோகயுக்தனுன ஜீவன்முக்தன் துக்கநிவ்ருத்தியாகிய மோக்ஷத்தை ஏகபாவனைசெய்தே பெற்றிருப்பதால், நீ அந்த

உபாயத்தை அநுஸரிக்கவேண்டும்.

யுத்தகளத்தில் நிற்கின்ற தேஹங்களைக்கருதி, துக்கத்தையும் சோர்வையும் அடைந்த அர்ஜுனனுக்கு உபதேசித்தது என்னவென்றால், கர்மபலத்தை விரும்பாமல் செய்யவேண்டிய கர்மங்களைச் செய்கின்றவனே பரமாத்மாவோடு ஐக்யத்தைப் பெறுதற்குத் தக்கயோகி என்றும், இந்தயோக ஸாதனைக்கு ஆத்மலக்ஷணத்தை அறிதல் அவஶ்யம் என்றும், தேஹங்கள் ஜீவர்களுக்கு ஸ்வல்பகாலம் தங்குமிடமென்றும், தேஹங்களை யாவது மனஸ்களையாவது ஜீவர்களாக அறிவது மூடமென்றும், வெவ்வேறு தேஹங்களைப்பற்றியாவது; மனஸ்களைப்பற்றியாவது, ஜீவர்கள் ஏகபாவனை செய்யக்கூடாதென்றும், அவர்களின் ஆத்மதன்மையாலன்றி ஏகத்வம் ஸித்திக்காதென்றும், ஏகத்வஸித்தியில்லாமல், யோகாருருக்ஷு யோகயுக்தனாகமாட்டானென்றும், பகவானது கர்மசக்ரம் இயற்றியிருப்பதால், அர்ஜுனன் ஏகத்வயோகத்தை விரும்புகின்ற யோகாருருக்ஷுவாகி மெல்ல, மெல்ல ஆத்மஉபமையால் யோகயுக்தனாகவேண்டும் என்பதே.

௪௰௭. எவன் ஶ்ரத்தையுடையவனாய் (1), என்னை அடைந்த அந்தஃகரணத்தால் (2) என்னை ஸேவிக்கின்றனோ (3) அவன் ஸர்வயோகிகளுக்குள் (4) மேலான யுக்தன் (5) என்று என்னால் மதிக்கப்பட்டவன்.

(1) என்மேல் அன்புகொண்டவனாய்.

(2) என்னில் ப்ரதிஷ்டைபெற்ற மனஸ் புத்தி சித்தம் என்ற அகக்கருவிகளால்.

(3) என்னை யாவற்றிலும் மேலானபொருள் என்றெண்ணிப் பூஜிக்கின்றானோ.

(4) எந்தெந்த தேவர்களை உத்தேஶித்துச் செய்யப்பட்ட உபாஸனா கர்மாநுஷ்டானிகளுக்குள்ளும் பரமேஶ்வரனோடு ஐக்யம்பெற விரும்புகின்ற யோகாருருக்ஷுகளுக்குள்ளும் அந்த யோகத்தை ஸாதிக்கின்ற யோகாரூடர்களுக்குள்ளும்.

(5) "யுக்ததம:"=மேலானயுக்தன்; யோகயுக்தனுகிய ஜீவ ன்முக்தன்.

---

உபநிஷத்க்கள் என்றும், ப்ரஹ்மவித்தை என்றும், யோக ஶாஸ்த்ரம் என்றும், பகவத்கீதைகள் என்றும், கூறப்பட்ட ஸ்ரீக்ருஷ்ணர்ஜுன ஸம்வாதத்தில் ப்ரஸித்திபெற்ற ஆத்மஸம் யம யோகம் என்ற ஷஷ்ட அத்யாயம் முற்றிற்று.

---

# ஏழாவது அத்யாயம்.

## விஞ்ஞான யோகம்.

அஃதாவது, ப்ரக்ருதியுட் புகுந்த அகண்டாகார வஸ்துவின் விசேஷ நிலைகளை அர்ஜுனன் கேட்டுச் சிந்தித்தான் என்று கூறும் ஏழாவதுபாடம்.

சு. அ. இல், ஞானம் விஞ்ஞானம் என்றவைகளால் த்ருப்திபெற்ற ஆத்மவான் என்ற திருவாக்கை விளக்கும்பொருட்டு, ஏழாம் அத்யாயம் விரிக்கப்பட்டது.

ஞானம் என்றது போறிவு; குணம் குறி அற்ற அகண்ட பரிபூர்ண வஸ்துவை ஸ்வாநுபவமாக அறிதல். விஞ்ஞானம் என்றது, அப்படி அறியப்படும் சச்சிதாநந்த வஸ்து எவ்விதம் குணம் குறியோடுள்ள ப்ரக்ருதியில் ப்ரவேசித்து நாநாவிதரூபமாய்த் தோன்றும் என்று அறிதல். இந்த விஜ்ஞானத்தை எ. உ இல் "ஞான ஸவிஜ்ஞானம்" [விஞ்ஞான ஸஹித, ஞானம் கூ. க.] என்றார்.

---

ஸ்ரீபகவான் கூறினார்:

**க. பார்த்த, என்னிடம் மிகஸங்கம்பெற்ற (1) மனம் உடையவனும் [நைஷ்கர்ம்ய] யோகத்தைப் பொருந்துகின்றவனும் (2), என்னை ஆச்ரயமாகக் (3) கொண்டவனும் ஆகிய நீ ச்ரேஷ்டமாகிய (4) என்னை எவ்விதம் ஸம்சயமில்லாமல் அறிவாயோ (5) அதைக் கேள் (6).**

(1) அதிக அன்புபெற்ற.

(2) "யோக யுஞ்ஜன்" (சு. அத். ௰உ, ௰ரு.)=யோகத்தைப் பொருந்துகின்றவனும். அஃதாவது, நிஷ்காம புத்தியோடு செய்யப்பட்ட கர்மாநுஷ்டானமென்னும் நைஷ்கர்ம்ய யோகத்தைப் பொருந்துகின்றவனும்.

(3) நானே உனக்கு சரணம் என்ற நிச்சயத்தைக்.

(4) "ஸமக்ரம்+மாம்"=யாவற்றிற்கும் நுனி, ("அக்ரம்") அல்லது தலையாகிய என்னை; பரமேஶ்வரனை.

(5) சிற்றறிவாளியாயிருந்தும் எவ்விதம் பேரறிவாகிய பரமேஶ்வரனை ஶ்ரவணத்தாலும், மனனத்தாலும் அறியக்கூடுமோ.

(6) அந்த உபதேஶத்தை ஶ்ரவணம்செய்து மனனி.

**உ. எதை அறிந்து (1), பின் அறியவேண்டிய வேறு [பொருள்] இங்கு ஶேஷமாக (2) வில்லையோ இந்த விஜ்ஞானத்தோடு கூடின ஞானத்தை (3) உனக்கு ஶேஷமற்று (4) கூறப்போகின்றேன்.**

(1) குணம் குறி அற்ற எந்த அகண்டாஹார வஸ்துவை அறிந்து.

(2) எஞ்சி நிற்க.

ஸ்ருஷ்டிக்கப்பட்டவையெல்லாம் ஸம்ஹாரகாலத்தில் அழிய, பரமாத்மாவே (பரஶிவமே) சேடித்து நிற்கும். இந்த நிர்க்குண ஶேஷப்பொருளை மஹேஶயோகம் என்றும் ஸம்ஹார தசையில் தர்ஶிக்கலாம். இவ்வாறு ஸ்வாநுபவமாக அறிந்தபின் வேறொருபொருள் இல்லாதபடியால் அறிவு ஆறுதலைப்பெற்று ஸதாகாலமும் ஆநந்தமயமாய் இருக்கும். என்பதுபற்றி, "எதை அறிந்து பின் அறியவேண்டிய வேறு பொருள் இங்கு ஶேஷமாக வில்லையோ" என்றார்.

இந்த மந்த்ரத்தில் எல்லாம் அழிந்தும் பரமாத்மா அழியாத ஶேஷம் என்றுகூறி, வரும் மந்த்ரங்களில் இந்த மந்த்ரத்தின் விஶேஷ லக்ஷணங்களை (விஞ்ஞான ஞானங்களை விளக்குவார்.)

(3) ("ஸவிஞ்ஞானம்")= விஞ்ஞான ஸஹிதஞானம், (கூ. க)=விஞ்ஞானத்தோடு கூடின ஞானம்.

அகண்டவஸ்துவில் நின்றுகொண்டு புத்தி சகண்டவஸ்துவாகிய ப்ரக்ருதியை அறிதல் விஞ்ஞான ஞானம் எனப்படும். இதை ஈண்டு "ஸவிஞ்ஞானம்" என்றார்.

(4) ஒன்றும் மிஞ்சாமல்; ஸம்பூர்ணமாக.

**ந. அனேக ஆயிரம் மனுஷ்யர்களில் ஒருவன் [விஜ்ஞான ஸஹித**

ஞான] ஸித்திக்காக யத்தனிக்கின்றன் (1). யத்தனிக்கின்ற ஸித்தர்களிலும் ஒருவன் என்னைத் தத்வமாக அறிகின்றன் (2).

(1) இந்தலோகத்தில் அனாத்மவிஷயங்களை மெய்யென்றெண்ணி உண்பதும், உடுப்பதும், சிரித்து விளையாடுவதுமே போதுமானநெறி என்று கோடிக்கணக்கில் மானுடர்கள் அறிவின்றித் திரிவார்கள். வெறுசிலர் பூர்விக புண்யத்தால் ஆத்ம அனாத்ம விவேகம் என்ற ஸம்பத்தைப் பெற்று தத்வ விசாரணையில் ஸ்ரத்தையோடு ப்ரவேசிப்பார்கள், என்பதுபற்றி, "அநேக ஆயிரம் மனுஷ்யர்களில் ஒருவன் விஜ்ஞான ஸஹித ஞான ஸித்திக்காக யத்தனிக்கின்றன்" என்றார்.

(2) ஆத்ம அனாத்ம விவேகஸித்திபெற்ற அபூர்வ ஆத்மாக்களில் ஒருவன் தத்வதர்சி (ஜீவன்முக்தன்) ஆகின்றன்.

இந்த மந்த்ரத்தில் விஞ்ஞான ஞானத்துக்கு அதிகாரியின் அருமையைக்கூறி, அதன் பலன் கோடிஜனங்களில் ஒருவன் பெறத்தக்கது பரமாத்ம தர்சனமே என்று சுட்டினார்.

௪. ஆகாசம், வாயு, அனல், ஜலம், பூமி, மனஸ், புத்தி, அஹங்காரம் என்று எனது ப்ராக்ருதி (1) எட்டுவித வேற்றுமைகள் பெற்றிருக்கின்றது (2).

(1) பரமேசுவரனது பஞ்சக்ருத்யங்களுக்கு ப்ரக்ருதி பூதக்காரணமாகக் கொள்ளப்பட்டு உற்ற துணையாயிருப்பதால் "எனது ப்ராக்ருதி" என்று அன்போடு அழைக்கப்பட்டது.

(2) ப்ரக்ருதி அதிப்ரமாணப்பொருள். அஃதாவது, அதன் காரியங்களால் அறியலாமன்றிக் காரணரூபமாய் அறியக்கூடாது. வேதாந்த, சைவஸித்தாந்த, ஸாங்க்யதர்ம, சாஸ்த்ரங்கள் ப்ரக்ருதியின் காரியங்களைப் பலவிதமாகக் கூறும். ஈண்டு, பகவான் இவற்றை ஞாபகத்தில் ஸ்திரமாகயிருக்கும்படி எண்வகை என்றார். அவையாவன, பஞ்சதன்மாத்ரைகள் (ஸூக்ஷ்ம பூதங்கள்) ஆகிய ஆகாசம் வாயு அக்நி அபஸ் ப்ருதிவியும், அந்தஃகரணங்களாகிய மனஸ் புத்தி அஹங்காரமும், என்றார்.

ஐம்பொறிகளால் அறியக்கூடிய எண்ணிறந்த ஸ்தூல சரீரங்கள் ஸ்தூல பூதங்களிலின்று தோன்றின என்றும், மனஸா

லும் புத்தியாலும் நிதானிக்கக்கூடிய ஸூக்ஷ்ம ஶரீரங்கள் தன் மாத்ரைகளில் நின்று தோன்றின என்றும், தத்வஶாஸ்த்ரங்கள் கூறும். பகவான் தன்மாத்ரைகள் ஐந்தோடு ஸூக்ஷ்ம ஶரீரங்களுக்கு ப்ரதான ஞான ஸாதன தத்வங்களாகிய மனஸ், புத்தி அஹங்காரத்தையும் சேர்த்து எட்டுவிதமாகும் ப்ரக்ருதி என்றார்.

இந்த மந்த்ரத்தில் கூறப்பட்ட விஞ்ஞானஞானம் யாதெனில், பரமாத்மா வேறு அவரது ப்ரக்ருதி வேறு என்பதும் இந்த ப்ரக்ருதி அஷ்டாம்ஶங்களைப் பெற்று இருக்கும் என்பதுமே.

அடுத்த ஶ்லோகத்தில் இவை எட்டும் தனது கீழான (அபர) ப்ரக்ருதியென்றும் இவைக்கு மேற்பட்டது தனது ஜீவனை ப்ரக்ருதியென்றும் உபதேஶிக்கின்றார்.

௫. மஹாபாஹோ, இது அபரம் (1). இதில் வேறானதும் (2) ஜகத்தை (3) தரிக்கின்றதும் ஆகிய எனது ப்ரக்ருதியை ஜீவனை (4) பரம் (5) என்று அறி.

(1) இந்த, விண், கால், அனல், நீர், மண் என்ற தன்மாத்ரைகளும் (ஸூக்ஷ்ம பூதங்களும்) மனஸ், புத்தி அஹங்காரம் என்ற அந்தக்கரணங்களும் ஜீவாத்மாவுக்குக் கருவிகளாயிருப்பதால் ஜீவாத்மாவுக்குக் கீழானவையே. இவை எவ்விதம் ஜீவாத்மாவுக்குக் கருவியெனில், அவனுக்கு இவை ஸூக்ஷ்ம ஶரீரமாயும் ஸ்தூல ஶரீரமாயும் இருப்பதால் என்றறிக.

வேதாந்த தத்வ ஶாஸ்த்ரப்படி உள்ளம், மனஸ், புத்தி, சித்தம், அஹங்காரம் என்ற ஐந்து அந்தக்கரணங்களும் மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற புறக்கரணங்களும் ப்ராண, அபான, வ்யான, ஸமான, உதான வாயுக்களும் வாக்கு பாணி பாத பாயு உபஸ்த்தம் என்ற ஐந்து கர்மேந்த்ரியங்களும் கூடி ஜீவாத்மாவுக்கு ஓர் ஸூக்ஷ்ம ஶரீரம் ஆயிற்று. இனி பஞ்ச தன்மாத்ரைகளில்நின்று ஸ்தூல பூதங்கள் தோன்றின. ஸ்தூல பூதங்களில்நின்று ஸ்தூல ஶரீர தத்வங்கள் தோன்றின. அவற்

யில்நின்று ஸ்தூலஸரீரங்கள் தோன்றின.

(2) இந்தக் கருவிகளுக்கு அன்யம் உள்ளத்தில் நினைவுகள் ஒடுங்கி வாஸனாரூபங்களாய் இருக்கும். மனஸ் நினைக்கும். புத்தி விசாரிக்கும். சித்தம் தீர்மானிக்கும். அஹங்காரம் நான் என்று எழுந்து அந்தந்த அவஸரத்துக்குத் தக்கபடி அகம்பாவம் செய்யும். ஆனால், இவை தத்தம் க்ருத்யங்களைச் செய்துவந்தாலும் தங்களை அறியமாட்டார்கள். ஆதலால், இக்கருவிகளைப் பெரியோர் "ஸதஸத்" என்பார்கள். அஃதாவது, அஸத் ஆயுள்ள ப்ரக்ருதியில் ஸத் ஆகிய தேவாத்ம ஸக்தி ப்ரவேஸித்து மனோதர்மங்களைச் செய்விப்பதால் அக்கருவிகள் ஸத்துமல்ல அஸத்துமல்ல ஸதஸத்தேயாம்.

எனவே, "[illegible]ல் வேறானது" என்ற பதம் [illegible]ந்த ஸதஸத்தில் வேறான ஸத்பொருள் என்று அர்த்தமாகும்.

(3) "ஜகத்" என்ற பதத்தின் தாது அர்த்தம் பிறந்து இறக்கும் பொருள் என்பதே. ஈண்டு, ஸூக்ஷ்ம ஸ்தூல ஸரீரங்கள் என்று அர்த்தம் பண்ணுக.

(4) "ஜீவபூத"=ஜீவனை; பஸுமயமான. அஃதாவது, பாஸம் என்ற மலபந்தத்தால் கட்டுப்பட்டவனை.

"மாத்ரு பூதேஸ்வர" (மாத்ரு+பூத+ஈஸ்வர=மாதா ஆன ஈஸ்வரன்) "மாத்ரு பூதேஸ்வர" என்றது மாதாவான ஈஸ்வரன் என்று பொருள் பட்டதுபோல, "ஜீவபூத" என்ற பதம் ஜீவனை ஆத்மா என்று பொருள்பண்ண வேண்டியது.

"சித்தமலமறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட அத்தன்" என்ற மந்த்ரப்படி பகவான் "ஜீவபூத" என்ற பதத்தால் சச்சிதாநந்தப் பொருளாகிய ஆத்மா அவித்யோபாதியால் தன்னை மறந்து ஜீவப்ரக்ருதியானன் என்று விளக்கினார். இவன் அபரப்ரக்ருதியைப்போன்ற ஸதஸத் அல்லன். ஸத்பொருளானவன் அவித்யோபாதியில் வீழ்ந்து ஜீவனானன் என்று தெளிவாகக் கூறினார் யரு. அ. இல் ஜீவனை ஈஸ்வரன் என்று அழைத்தார்.

(5) இவன் ப்ரக்ருதிசொரூப அவித்யோபாதியில் இருக்கும்வரையில் பரப்ரக்ருதி என்று அழைக்கப்படுவான். அந்த

அவித்யோபாதியிலின்று விலக்கப்பட்ட ஸமயத்தில் சச்சிதாநந்தஸொரூபமாய் விளங்குவான்.

௬. எல்லாப்பூதங்களும் (1) இவைகளை (2) யோனிகளாகக் கொண்டவைகள் என்று அறி. (3) நான் ஸர்வஜகத்துக்கும் (4) ப்ரபவன் (5) அவ்விதமே ப்ரலயன் (6).

(1) ஸ்தூல ஶரீரங்களும்.

(2) ஜீவர்களான பாப்ரக்ருதிகளையும் இவைக்குவேருறுன அஷ்ட அபரப்ரக்ருதிகளையும்.

(3) "யோனி" என்ற பதம் "யூ" (கலத்தல்) மிஶ்ரம்செய்தல். என்ற தாதுவில் ஜனித்து ஶுக்லமும் ஶ்ரோணிதமும் கலக்கப்படுமிடம் என்று பொருள்படும். எனவே. "யோனி"=ஜனனஸ்தானம்; பிறப்பிடம்.

ஐம்பொறிகளால் அறியப்படும் ஸ்தூலதேஹங்கள் யாவும் எங்கிருந்து பிறந்தன எனில், ஜீவர்களும், ஆகாஶம், வாயு, அனல், ஜலம், மண் என்ற தன்மாத்ரைகளும் (ஸூக்ஷ்மபூதங்களும்), மனஸ் புத்தி அஹங்காரம் என்ற அந்தஃகரணங்களும் சேர்ந்த அவஸ்தையில் தோன்றின என்று அறியவேண்டியது.

(4) ஸூக்ஷ்ம ஸ்தூல ஶரீரங்களுக்கும் (ஶா. அத். ௩-ம்).

(5) ஸ்ருஷ்டி. கர்த்தா; பிறப்புக்குக் காரணன்.

(6) ஸம்ஹார கர்த்தா; இறப்புக்குக் காரணன்.

இந்த மந்த்ரத்தில் உபதேஶிக்கப்பட்ட விஞ்ஞான ஞானம் ஆவது, ஜீவர்கள் அஷ்டாமஶ ப்ரக்ருதியோடுகூடி. ஸ்தூலதேஹங்களைப பெற்றூர்களென்பதும், இவர்களுடைய ஸூக்ஷ்ம ஸ்தூலதேஹங்களுக்குப் பரமேஶ்வரனே "ப்ரபவனும் ப்ரலயனும்" என்பதுமே.

எ. தனஞ்ஜய, என்னிலும் (1) மேலான வேறென்றும் இல்லை. நாலில் ரத்னக்கூட்டங்களைப்போல என்னிடம் (2) ஈதெல்லாம் (3) கோக்கப்பட்டது (4).

(1) பரமேஶ்வரனிலும்.

(2) அந்தர்யாமியான பரமேஸ்வரனிடம்.

"அந்தர்யாமி" ப்ரக்ருதி அணுக்கள் ஒவ்வொன்றாக்குள்ளும் இருந்து, அடக்கி ஆளுகின்றவன்.

(3) நீ இப்பொழுது காணும் ரூபங்கள் எல்லாம்.

(4) நவரத்னமணிகள் எவ்விதம் மாலை மாலையாக நூல்களில் கோக்கப்பட்டு முறை பிரளாமல் நிற்குமோ, அவ்விதம் ஸகல ப்ரக்ருதி ஜன்யங்கள் பரமேஸ்வரனது நாநாவித ஶக்திகளால் ஊடுருவப்பட்டு ஒழுங்கு தவறாமல் நிற்கின்றன.

இந்த மந்த்ரத்தில் விளக்கப்பட்ட விஞ்ஞானஞானமாவது, பரமேஸ்வரனுக்கு மேற்பட்ட ஶக்திமான் இல்லையென்பதும், ப்ரக்ருதியில்நின்று விரிக்கப்பட்ட ஸகல ஸூக்ஷ்ம ஸ்தூலரூபங்களின் ஸ்திதிகள் தேவாத்மஶக்திகளால் நிறுத்தப்பட்டன என்பதுமே.

இனி அ. வது மந்த்ரம் தொட்டு, ௰௩-வது மந்த்ரம்வரையில் பரமேஸ்வரனது ஆத்மஶக்தி ப்ரக்ருதியில் புகுந்து நாநாவிதமாய் ப்ரகாஶிக்குமென்றும், அந்த ஆத்மஶக்திகள் அநாத்ம ப்ரக்ருதிகுணங்களுக்கு அன்யமென்றும் விளக்கும்பொருட்டு, சில விஶேஷ ஆத்மஶக்திகளை விவரிக்கின்றார். ௰-வது அத்யாயத்தில் இவற்றை இன்னும் விரித்து தனது "விபூதிகள்" என்றார்.

"என்னிடம் ஈதெல்லாம் கோக்கப்பட்டது" என்று எ-வது மந்த்ரத்தில் கூறின திருவாக்குக்கு அ வது மந்த்ரம் தொட்டு ௰.வது வரையில் கூறப்பட்ட, ஜலம், சந்த்ரன், ஸூர்யன், வேதம், ஆகாஶம், முதலிய ப்ரக்ருதி கார்யங்களை உதாரணமாகக் காட்டி அவையெல்லாம் தனது ஶக்திகளால் ப்ரவேசிக்கப்பட்டு சிறப்புப் பெற்றன என்று உபதேசிக்கின்றார்.

**அ. கௌந்தேய, ஜலத்தில் ரஸம்நான் (1). சந்த்ர ஸூர்யர்களில் ப்ரகாஶம்நான் (2) எல்லா வேதங்களிலும் ப்ரணவம்நான் (3). ஆகாஶத்தில் ஶப்தம்நான் (4). மானுடர்களில் புருஷத்வம் நான் (5).**

(1) கூ-வது மந்த்ரத்தில் தன்னை "ப்ரபவன்" (பிறவிக்குக் காரணன்) என்று கூறியிருப்பதால், ஜலத்திலேயே ஸ்தூலதே

ஹங்கள் உத்பவிக்கின்றபடியாலும் இந்த மந்த்ரத்தில் ஜலத்தை முதல் எடுத்தார்.

ஜலதத்வத்தில் அடங்கிய ஶப்த, ஸ்பர்ஶ, ரூப, ரஸ தன்மாத்ரைகளில் ரஸமே ப்ரபல்யமாகி ஜீவர்களுக்கு உள்ளும் புறம்பும் உபயோகமாகின்றது. எவ்வாறெனில், அன்னபானாதி போக்யப் பொருள்களில் ரஸம் போகத்துக்கு ஸாதனமாக இருக்கின்றது. வாயிலுள்ள ஜலதத்வ அமிர்தத்தில்நின்று இலகும் ரஸ தன்மாத்ரையால் அன்னபானாதிகளின் ருசி அறியப்படுகின்றது. இந்த ரஸம் அறிதலுக்கு (அநுபவத்துக்கு) ஸாதனமாகத் தன்னால் அருளப்பட்டது என்றும், இந்த ஸாதனம் தன்னுடைய ஶித்ஶக்தி என்றும் அர்த்தமாகும்படி, "ஜலத்தில் ரஸம் நான்" என்றார்.

(2) சந்த்ரன் ஸூர்யன் என்ற தேவர்களுடைய லோகங்கள் ப்ரக்ருதி தத்வங்களால் இயற்றப்பட்டாலும் சந்த்ர லோகத்துக்குரிய ஜலஜோதியும், ஸூர்யலோகத்துக்குரிய அக்நிஜோதியும் எனது திவ்ய ஶக்திகளே.

(3) வேத மந்த்ரங்களுக்குப் பீஜமாயிருக்கின்ற ப்ரணவம் எனது திவ்ய ஶக்தி.

(4) ஆகாஶ தத்வத்துக்குரிய விரிவுரூபம் ப்ரக்ருதிகுணம். ஆனால், அதற்கு அருளப்பட்ட ஶப்தம் எனது திவ்யஶக்தியே.

குணம் குறியற்ற ப்ரஹ்மம் ப்ரணவமாகி, ஆகாஶதத்வத்தில் சென்று வேதமந்த்ரங்களும் மற்றும் ஸகல ஸப்தத்வனிகளும் ஆயின என்பதுபற்றி, "ஆகாஶத்தில் ஶப்தம் நான்" என்றார்,

(5) மானுடர்களின் ஸூக்ஷ்ம ஸ்தூல ஶரீரங்கள் ப்ரக்ருதிஜன்யங்கள். ஆனால், தர்ம, அர்த்த, காம, மோக்ஷ என்ற நாலு புருஷார்த்தங்களைக் கருதிநிற்கும் புருஷத்வம் எனது திவ்ய ஶக்தி.

**௯. பூமியில் புண்யகந்தம் நான் (1). அக்நியில் தேஜஸும் நான் (2). எல்லா ப்ராணிகளிலும் ஜீவனம் நான் (3). தபஸ்வீகளில் தபஸும் நான் (4).**

(1) ப்ருதிவி தத்வத்தின் கடினக்குணமும் துர்வாஸனையும் ப்ருதிவியின் இயல்பு. ஆனால், ப்ருதிவியினால் இயற்றப்பட்ட வில்வம், சந்தனம், கற்பூரம், மல்லிகை முதலிய வஸ்துக்களில் விளங்கும் ஸுகவாஸனை எனது திவ்யமக்தி.

(2) அக்நிதத்வத்தின் உஷ்ணம், ப்ரக்ருதிகுணம். ஆனால், அதன் ஜ்யோதி எனது திவ்யமக்தி.

(3) ஜீவர்களின் தேஹங்கள் ப்ரக்ருதி ஸொரூபங்கள். ஆனால், அவர்களது தேஹ ஸம்ரக்ஷணபுத்தி எனது திவ்ய மக்தி.

"தேஹஸம்ரக்ஷணபுத்தி"=தேஹத்துக்கு அபாயமில்லாமல் காப்பாற்றிக்கொள்ளவேண்டுமென்ற அறிவு; நான் ஜீவித்துக் கொண்டிருக்கவேணும் என்ற புத்தி.

(4) தபஸில் ப்ரீதிபெற்றவர்களின் காயிக, வாங்மய, மானஸ, தபோ கர்மங்கள் எனது திவ்யமக்தி அத். ௰எ, மர். ௰ச, ௰௫, ௰சு.

**௰. பார்த்த, எக்காலங்களிலும் இருக்கின்ற என்னை எல்லாப் பூதங்களுக்கும் பீஜமாக அறி (1) புத்தியுள்ளவர்களின் புத்தி நான் (2) தேஜஸ் உள்ளவர்களின் தேஜஸ் நான் (3).**

(1) அழிவற்ற நானே ஸகல ஸூக்ஷ்ம ஸ்தூல மரீரங்களுக்குக் காரணன்.

குடாதிகளுக்குக் குயவன் நிமித்தகாரணன். குயவனுடைய தண்டு துணைக்காரணம். மண் உபாதானகாரணம். அது போல, பரமேம்வரன் மரீரங்களுக்கு நிமித்தகாரணன். பராமக்தி துணைக்காரணம். ப்ரக்ருதி உபாதான காரணம்.

"பீஜம்"=விதை; வித், தோன்றுமிடம், காரணம்.

(2) விசாரிக்கும்புத்தி ப்ரக்ருதிகுணம். ஆனால், நன்முயற்சிகளில் ப்ரவேமித்துப் புண்யவழியில் நிற்கும் புத்திமான்களின் விசாரணைகள் எனது திவ்யமக்தி.

(3) புத்திமான்களின் புத்தி ப்ரகாமமும் கீர்த்தியும் எனது திவ்யமக்தி.

**கக.** பலவான்களின் காமராகம் அற்ற பலம் நான் (1) பாரத ரிஷப, ப்ராணிகளில் தர்மத்துக்கு விரோதமில்லாத காமம் நான் (2).

(1) *பாபகர்மங்களில் செல்லுகின்ற வல்லபம் ப்ரக்ருதியின் குணம். ஆனால், புண்யகர்மங்களில் ப்ரீதிகொண்ட பலவான்களின் வல்லபம் எனது திவ்யஶக்தி.*

*"காமராகம்"=ஆசையின் உத்வேகம்.*

(2) *அதர்மவழியில்நிற்கும் ஆசை ப்ரக்ருதிகுணம். ஆனால், தர்மவழியை நாடியே செல்லும் ஆசை எனது திவ்யஶக்தி.*

**கஉ.** எந்த ஸ்வபாவங்கள் ஸாத்விகங்களோ, எவை ராஜஸங்களோ, எவை தாமஸங்களோ, அவை என்னிடமிருந்தே [வந்தன] என்று அறி (1). அவற்றினிடம் நான் இல்லை (2). என்னிடம் அவை (3).

(1) *மிகக் கலப்புற்று மோஹரூபமாய் இருக்கின்ற ப்ரக்ருதி, எனது ஶக்தியால் த்ரிவித குணவிபாகத்தைப்பெற்று, ஸத்வகுணங்களாகவும் ரஜஸ் குணங்களாகவும் தாமஸ குணங்களாகவும் தோன்றிற்று என்று அறிவாயாக.*

*"பாவா:"=ஸ்வபாவங்கள் (ஙி. கச.); தன்னையே மேன்மேலும் பாவனைசெய்துவரும் ப்ரக்ருதிதத்வங்கள்.*

(2) *இவ்வாறு பிரிக்கப்பட்ட குணங்களுக்கு நான் அடிமைப்படாமல் தனித்து நிற்கின்றேன்.*

(3) *ஆனால், அக்குணங்கள் என்வஶப்பட்டே நிற்கின்றன.*

**கங.** இந்த மூவிதகுணமய ஸ்வபாவங்களால் ஜகத் (1) எல்லாம் மோஹத்தையடைவிக்கப்பட்டு (2) இவைகளுக்கு (3) மேலானவனும் அழிவில்லாதவனும் ஆகிய என்னை அறிகின்றார்கள் இல்லை (4).

(1) *ஸூக்ஷ்ம ஸ்தூல தேஹங்களில் ப்ரதானமான மனஸும் புத்தியும்.*

(2) *மனஸும் புத்தியும் த்ரிகுணங்களால் மயக்கப்பட்டு.*

(3) *த்ரிகுணங்களுக்கு.*

(4) *முக்குணங்களுக்கு அடிமைப்பட்டவர்கள் குணாதீதனாகிய என்னை அறியமாட்டார்கள்.*

நான் நல்லவன் அல்லது கெட்டவன், நான் ஸமர்த்தன் அல்லது சோம்பேறி, நான் ஸுகி அல்லது துக்கி என்ற குணங்களைப் பாராட்டி வரும் ப்ராக்ருதன் (ப்ரக்ருதிஸொரூபி) தேஹவான் ஆத்மதர்ஶனத்துக்கு அதிகாரியல்லன் என்றது இந்த மந்த்ரத்தின் விஞ்ஞான ஞானம்.

**௰௪. திவ்ய குணமயமான (1) எனது (2) மாயையைக் (3) கடக்க வருத்தமாயிருப்பதால் (4), என்னையே எவர்கள் அடைகின்றார்களோ (5), அவர்கள் இந்த மாயையைத் தாண்டுகின்றனர் (6).**

(1) ஒளியுள்ள (ப்ரகாஶிக்கின்ற); ஸத்வாம்ஶமான.

ப்ரக்ருதியின் ஸத்வகுணம் ஸுகவடிவமாயும், வித்யாவடிவமாயும், இருப்பதால் "திவ்யம்", என்றார்.

(2) ௪. வது மந்த்ரத்தில் ப்ரக்ருதியை எனது என்றபடி கண்டு, அதன் ஸத்வகுணத்தை அன்பாகப் பாராட்டுகின்றார்.

(3) தமோகுணத்துக்கும் ரஜோகுணத்துக்கும் மேற்பட்ட ஸத்வகுணம் மனோகாஶமாய் அண்டத்திலும் பிண்டத்திலும் நின்று ஜீவாத்மாக்களுக்கு ஸுகத்திலும் கல்வியிலும் விருப்பத்தை உண்டுபண்ணும்.

(4) விஷயஸுக ஸங்கத்திலும் வித்யாபிமானத்திலும் வெறுப்பு உதயமாகும்வரைக்கும் மாயையைக் கடக்க முடியாதிருப்பதால்.

(5) விஷயஸுகப் பற்றையும் லோகபதார்த்தக் கல்விப்பற்றையும் அறுக்கின்ற மெய்ப்பொருளாகிய என்னையே ஶரணமென்று ஏகாக்ர சித்தத்தோடு இருக்கின்றார்களோ.

(6) அவர்கள் இந்தப் பொய்ப்பொருளாகிய மாயைக்கு அப்பாற்பட்டு என்னோடு வாழ்வார்கள்.

தாமஸகுணத்தைத் தாண்டுவதற்குத் தெப்பம் ராஜஸகுணமென்பதும், ராஜஸகுணத்தைத் தாண்டுவதற்குத் தெப்பம் ஸாத்விககுணமாகிய மாயை என்பதும், மாயையைத் தாண்டுவதற்குத் தெப்பம் பரமாத்மாவே என்பதும் இந்த மந்த்ரத்தின் விஞ்ஞான ஞானம்.

**௧௫. மாயையால் அபஹரிக்கப்பட்ட புத்தியுடையவர்களும் (1) அஸுரத்தன்மையை அண்டினவர்களும் (2) துஷ்டகர்மங்களை யுடையவர்களும் (3) மோஹமடைந்தவர்களும் (4) ஆகிய [நான்குவித] அதம மானுடர்கள் (5), என்னை அடைகின்றார்கள் இல்லை (6).**

(1) *விஷயஸுகமும் கல்வியும் போதுமென்ற புத்தியுடையவர்களும்.*

*கல்வியின் முக்ய ப்ரயோஜனம் வேண்டும் வேண்டாமை என்ற த்வந்த்வபுத்தி அற்ற மோக்ஷநிலையாதலால் பகவான் திருவள்ளுவர் "கற்றதனாலாய பயன் என்கொல் வாலறிவன் நற்றாள் தொழார் எனின்" என்றார். மோக்ஷத்தைத் தரும் நல்லதிருவடியைக் கருதிக் கல்வியைக் கற்றவர்கள் கரையேறுவார்கள் என்பதுபற்றி, "மாயையால் அபஹரிக்கப்பட்ட புத்தியுடையவர்கள்.........என்னை அடைகின்றார்கள் இல்லை" என்றார்.*

(2) *அன்பு என்ற அமிர்தத்தை (ஸுராவை) தினந்தோறும் பானிக்காதவர்களும்.*

*இந்த அன்பற்ற (அஸுர) ஜீவர்களுடைய புத்தியில் தங்களோடிணங்காதவர்களை அடிக்கவேண்டும், உதைக்கவேண்டும், கொல்லவேண்டும் என்ற எண்ணங்கள் தோன்றிக்கொண்டேயிருக்கும் என்று உபதேசிக்கப்பட்டது.*

*இவ்வஸுர குணவான்களுக்கு ஆத்மதர்ஶனம் இல்லை.*

(3) *துஷ்டபுத்திகளுக்கு ஏற்றபடி துஷ்டச்செய்கைகளைச் செய்கின்றவர்களும்.*

(4) *ஆத்ம அநாத்ம விவேகம் இல்லாமையால் விஷயஸுகமே பெரிய ஸுகமென்றும், தோன்றியழியும் பொருள்களே மெய்ப்பொருள்கள் என்றும், அஹந்தை மமதையே லோகவாழ்வின் ஶிரோமணிகள் என்றும் மூடபுத்தியோடு திரிகின்றவர்களும்.*

(5) *அறிவிற்கிழானவர்கள், அவிவேகிகள்.*

(6) *பரமாத்மாவோடு ஐக்யப்படமாட்டார்கள்.*

*இந்த மந்த்ரத்தில் கூறப்பட்ட விஞ்ஞான ஞானமாவது, பரமேஶ்வரனில் ஶ்ரத்தையற்ற தாமஸ, ராஜஸ, ஸாத்விக*

குணங்களைப் பொருந்திய மானுடர்கள் எளியபிறவிகள். (அத மஜாதிகள்) என்பதும், இந்த அஸுபகர்மஜனங்கள் நான்கு வகையினர் என்பதும், இவர்களால் ஆத்மதர்ஸனம் பெறப்படாததும் என்பதே ரு. மஅ ம் அதன் உரையும் பார்த்தறிக.

**மகூ.** அர்ஜுன, [விஷயஸுகத்திலும் கல்வித்திறத்திலும்] ஆர்திபெற்றவன் (1) ஜிஜ்ஞாஸு (2) [மெய்] அர்த்தத்தை அர்த்திக்கின்றவன் (3) ஞானி (4) என்ற நான்குவித ஸுகர்மஜனங்கள் (5) [ப்ரக்ருதிக்கு] மேற்பட்ட என்னைப் பஜிக்கின்றனர் (6). பரதரிஷப.

(1) ("ஆர்த்.") ஆர்தி (துக்கம்) பெற்றவன்.

ஸத்வகுணபந்தங்களாகிய விஷயஸுக விருப்பங்களையும் அனாத்மகல்வி அபிமானத்தையும் துக்கஸ்வரூபங்கள் என்று நிஸ்சயித்தவன். இவையெல்லாம் துக்கத்துக்கு ஹேதுவென்று அறிந்து வெறுத்தவனை ஆர்திபெற்றவன் என்றார்.

(2) அறியவிரும்புகின்றவன்.

கூ. சமசு இல் இவனை "யோகஜிஜ்ஞாஸு" என்றார். லோகத்தாரால் மதிக்கப்பட்ட சிற்றின்பங்களும் சிற்றறிவுகளும் துக்கத்துக்கு ஹேதுவென்று நிதானித்தவன், அவற்றிற்கு மேற்பட்ட ஸுகங்களும் அறிவுகளும் உண்டோ இல்லையோ என்று அறிய விரும்புவான். இப்படிப்பட்ட பக்வசாலிக்குப் பேரின்பமும் பேரறிவும் உண்டென்றும், இவற்றை ஞானஸாஸ்த்ர விசாரணையாலும் ப்ராணலய மனோலய அப்யாஸங்களாலும் பெறலாம் என்று உபதேஸமாகும். இந்த உபதேஸத்துக்கு உரியவன் "யோகஜிஜ்ஞாஸு", அல்லது "யோகாருருக்ஷு" என்றறிக.

(3) அர்தார்தி (அர்த்த+அர்த்தி) மெய் அர்த்தத்தை (மெய்ப்பொருளை) அர்திக்கின்றவன் (அறிய ப்ரயாஸப்படுகின்றவன்.) அஃதாவது, ஞானஸாஸ்த்ர விசாரணையிலும் ப்ராணலய மனோலய அப்யாஸங்களிலும் ப்ரவேஸித்தவன்.

(4) மெய்ப்பொருளாகிய பரமாத்மாவை அறிந்தவன், மெய்ஞானி; ஸிவாநுபூதிமான், தத்வதர்ஸி; ஜீவன்முக்தன்.

(5) மோக்ஷமென்ற பேரின்பத்துக்குரிய கர்மங்களை அநுஷ்டிக்கின்றவர்கள்.

(6) அண்டுகின்றார்கள், அணைகின்றார்கள்.

இந்த மந்த்ரத்தில் உபதேசிக்கப்பட்ட விஞ்ஞான ஞானம் ஆவது, மானுடர்களில் உத்தமஜாதிகள் ஞானவான்களும், ஆத்மவிசாரத்தையும் ப்ராணலய, மனோலய யோகாப்யாஸங்களையும் அநுஷ்டிக்கின்றவர்களும், இந்த அப்யாஸங்களில் விருப்பங்கொண்டவர்களும், சிற்றின்பத்தையும், அநாத்ம கல்வியபிமானத்தையும் கல்மஷங்களென்று நிஸ்சயித்தவர்களும், என்பதுமே. ஏன் இவர்கள் உத்தமஜாதிமான்கள் எனில், ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்ட பரமாத்மாவைப் பற்றியிருப்பதால் என்று அறிக.

இந்த மந்த்ரத்தோடு ரு. உ௰ரு. ம் மந்த்ரத்தில் கூறப்பட்ட ருஷிகளை ஒத்துப்பார்க்க.

**௰எ.** ஞானிக்கு நான் மிகப்ப்ரியனானதாலும் (1) அவனும் எனக்கு மிகப்ரியனானதாலும் (2) நித்ய யுக்தனும் (3) ஏகபக்தியுள்ளவனுமான (4) ஞானி [மேற்கூறிய] அவர்களுக்குள் (5) விஸேஷம் பெறுகிறன்.

(1) ஞானவான் என்னை மிக அரிய பொருளென்று அறிந்து என்னோடு கூடியிருப்பதாலும்.

(2) ஞானவானை நானும் மிக அரியபொருளென்று அறிந்து அவனுக்கு ஸதாகாலமும் பிரத்யக்ஷமாக விருப்பதாலும்.

(3) இப்படி ஸதாகாலமும் என்னோடு கூடியே நிற்கின்றவனும். அஃதாவது, ஞானவானுடைய ஆத்மா பரிஸுத்தப்பட்டதால் பரமாத்மாவோடு ஐக்யப்பட்டு நிற்கும். அவனுடைய மனமும் புத்தியும் பரமாத்மாவைப்பற்றியே நின்று ஜீவகாருண்ய கர்மங்களை நடத்திவரும்.

(4) பரமாத்மாவே மேலானவஸ்துவென்று அனன்ய பக்தியோடு இருக்கின்றவனுமாவன். (அ. உ௰௯).

(5) நான்கு உத்தமஜாதி ஜனங்களுக்குள்.

**௰அ.** [என்னோடு] சேர்க்கப்பட்ட மனமுடையவன் உத்தம கதியான (1) என்னையே அண்டினவனாதலால் [ஸுகர்ம ஜனங்களாகிய] இவர்கள் எல்லாம் மேலோராயினும் ஞானி நானே (2) என்று எனது தீர்மானம்.

(1) முடிவான; அந்தப்பொருளான.

(2) என்னை அறிந்த ஞானி என்னைப்போலச் சச்சிதாநந்த ஸ்வரூபமே.

௰௭.வது மந்த்ரத்திலும் இந்த மந்த்ரத்திலும் உபதேசிக்கப்பட்ட விஞ்ஞான ஞானமாவது மோக்ஷத்துக்குரிய கர்மங்களை அநுஷ்டிக்கின்ற உத்தமஜாதிமான்களான ஞானி ஶ்ரேஷ்டன் என்பதும், பரமாத்மாவைப்போலச் சச்சிதாநந்த ஸ்வரூபி என்பதுமே.

**௰௯. வேத ஜன்மங்களின் முடிவில் (¹) எல்லாம் வாஸுதேவன் (²) என்ற ஞானம் பெற்றவன் (³) என்னை அடைகின்றன். அந்த மஹாத்மா (⁴) மிக அரிது.**

(1) இனிப் பிறவாத பிறவியில்.

(2) ஸகல வஸ்துக்களிலும் வஸித்து, ப்ரகாஶிக்கின்றவன். விஷ்ணுபுராணம் ௬. ரு.

"எல்லாம் வாஸுதேவன்"=தோற்றப்பட்ட ப்ரக்ருதி ஸொரூபங்கள் யாவும் சச்சிதாநந்த மகேஶ்வரனுக்கு இருப்பிடமே.

"ஞானம்பெற்றவன்"=புத்திபெற்றவன். அஃதாவது, ப்ரக்ருதியால் இயற்றப்பட்டுத் தனித்தனியாய்த் தோன்றும் ஸகல ஸ்தூலஶரீரங்கள் அந்தர்யாமி ஈஶ்வரனது ஸமஷ்டி ஸ்தூல ஶரீரம் என்றும், ஸகல ஸூக்ஷ்மஶரீரங்கள் அந்தர்யாமி ஈஶ்வரனது ஸமஷ்டி ஸூக்ஷ்ம ஶரீரமென்றும் புத்தியால் நிதானித்தவன்.

(4) இப்படிப்பட்ட பேரறிவாளி, விசால புத்திமான்.

இந்த மந்த்ரத்தில் உபதேசிக்கப்பட்ட விஞ்ஞான ஞானமாவது, உத்தமஜாதிமான்கள் ஆகிய ஆர்திபெற்றவர்களும், யோகஜிஜ்ஞாஸுக்களும், மெய் அர்த்தத்தை அர்த்திக்கின்றவர்களும் ஸமத்வ புத்தியால் நாநாவித நாமரூபங்களை ஏகபாவனைசெய்து ஜீவன்முக்தர்களாவார்கள் என்பதே.

**௨௰. அந்தந்தக் காமங்களால் புத்தி கொண்டுபோகப்பட்டு (¹) தங்களைச் சார்ந்த ப்ரக்ருதியால் செலுத்தப்பட்டவர்களாய், அந்தந்த நியமத்தை அண்டி (²) வேறு தேவதைகளை அடைகின்றனர் (³).**

(1) எந்தெந்தக் காமங்கள் மனஸில் உதயமாயினவோ, அந்தந்தக் காமங்களால் புத்தி அபஹரிக்கப்பட்டு.

(2) எந்தெந்த ப்ரக்ருதிகுணங்கள் ஆத்மாவில் ப்ரபலப்ப ட்டுப் புத்தியை ஏவுமோ அந்தந்த நியமங்களைப் புத்தி வகுத்து.

(3) ப்ரக்ருதி குணங்களுக்கு அப்பாற்பட்ட என்னை அறி யாமல் அதமஜனங்கள் வேறு தேவதைகளை உபாஸிக்கின்றனர்.

உத்தம புருஷர்கள் உபாஸிக்கும் பரமேச்வரனை யாது காரணத்தால் அதம புருஷர்கள் உபாஸிக்கின்றார்கள் இல்லை எனில், அவர்களது புத்தி த்வந்தவ மோஹங்களுக்கு அடிமைப் பட்டிருப்பதால் என்று விளக்கப்பட்டது.

இந்த மந்த்ரத்தின் விஞ்ஞான ஞானமாவது, தோன்றியழி யும் விஷயங்களைப்பற்றிய விருப்பு வெறுப்புக்களில் புத்திசென் றால் அது த்வந்த்வப்பட்டு அவ்வாசைகள் நிறைவேறும்பொரு ட்டு, பரமேச்வரனுக்குக் கீழ்ப்பட்ட மூர்த்திகளை வழிபடும் என்பதே.

**உயக. எந்தெந்த பக்தன் எந்தெந்த ரூபத்தை ச்ரத்தையால் அர்ச்சிக்க விரும்புகின்றனோ, அவனவனது ச்ரத்தையையே நான் ஸ்திரப்படுத்துகின்றேன் (1).**

(1) எவன் தனது ப்ரக்ருதியால் ஏவப்பட்டு, எந்த மூர் த்தியில் பக்தி விஸ்வாஸத்தை வைக்கின்றானோ, அந்தப் பக்தி விஸ்வாஸத்துக்கு அந்தர்யாமி ஈச்வரனே வலிமையைக் கொடுக் கின்றார் என்பது இந்த மந்த்ரத்தின் விஞ்ஞான ஞானம்.

தேவர்களில் வைக்கப்பட்ட பக்தி விஸ்வாஸத்தின் முக்ய பலன் சித்தசுத்தி என்றும், சித்தத்தில் நின்றிலகும் மலங் கள் மெல்ல மெல்ல நீங்க ஆத்ம அனாத்ம விவேகம் உண்டுபடு மென்றும், இந்த விவேகத்தால் விஷயஸுகத்தில் வெறுப்புண் டாகுமென்றும் முன் அத்யாயங்களில் உபதேசித்து, இந்த அத்யாயத்தில் இவ்வித வைராகிகள் (விராகம்பெற்றவர்கள்) படிப்படியாக ஆர்திபெற்றவர்களாயும், யோகஜிஜ்ஞாஸுக்களா யும், அர்த்தத்தை அர்த்திக்கின்றவர்களாயும், ஞானிகளாயும்

வருவார்களென்று விளக்கினார். இந்த உத்தமஜாதிமான்களுக்குக் காரணமாகத் தேவ உபாஸனையைப் பரமேஸ்வரன் தன் கர்மசக்ரத்தில் ஸ்ருஷ்டித்திருப்பதால், அவரே தேவர்களில் வைக்கப்பட்ட பக்தி விஸ்வாஸத்தைச் சித்தஸுத்திக்காக ஸ்திரப்படுத்துவார்.

**உ௰உ. அவன் அந்த ஸ்ரத்தையோடுகூடி, அதன் ஆராதனையைச் செய்ய முயலுகின்றன் (1). பிறகு என்னாலேயே ஏற்படுத்தப்பட்ட இஷ்டகாம்யார்த்தங்களைப் பெறுகின்றன் (2).**

(1) அந்தர்யாமி ஈஸ்வரன் ஸ்திரப்படுத்தின பக்தி விஸ்வாஸத்தோடு கருதப்பட்ட மூர்த்தியை ஆராதிக்க யத்தனிக்கின்றான்.

(2) அந்த மூர்த்தியை ஆராதித்து அதன் வழியால் அந்தர்யாமி ஈஸ்வரனே நியமித்த பலன்களைப் பெறுகின்றான்.

"ஹிதான் காமாம்ஸ்ச"=இஷ்டகாம்யார்த்தங்களை; ஸுகமென்று விரும்பப்பட்ட பொருளை.

இந்த மந்த்ரத்தின் விஞ்ஞான ஞானமாவது, எந்தத் தேவதையை எந்தத் தேஸத்தில் எவன் இஷ்டகாம்யங்களை உத்தேஸித்து, உபாஸித்தாலும் அந்தந்த தேவதைகளின் ஆத்மாவிலிருந்து தன்னால் வகுக்கப்பட்ட பலன்களை அருள்கின்றார் என்பதே.

இவ்வாறே, சிவஞானபோதத்தின் உ. வது ஸூத்ரத்தை விரிகின்ற சிவஞானசித்தியாரிலும் (உ. உ௰௫.) காண்க.

"யாதொருதெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே
மாதொரு பாகனார்தாம் வருவர் மற்றத் தெய்வங்கள்
வேதனைப்படும் இறக்கும் பிறக்கும் மேல்வினையுஞ் செய்யும்
ஆதலால்இவைஇலாதான் அறிந்து அருள் செய்வன் அன்றே.

**உ௰௩. அற்ப அறிவாளிக்கு (1) அழிவுள்ள பயன் (2) உண்டாகின்றது (3). தேவர்களை யஜித்தவர்கள் தேவர்களை அடைகின்றனர் (4). எனது பக்தர்கள் என்னை (5) அடைகின்றனர் (6).**

(1) தோன்றியழியும் விஷயங்களை மதித்துக் கர்மங்களைச் செய்யும் சிற்றறிவாளிக்கு.

(2) ஸ்வர்க்கத்திலும் பூலோகத்திலும் தோன்றியழியும் பலன்.

(3) காம்யகர்மத்துக்கேற்றபடி கொடுக்கப்படுகின்றது.

(4) எந்தெந்தத் தேவதையை ஒருவன் பூஜிக்கின்றானோ, அந்தந்தத் தேவதையின் அன்பைப் பெறுகின்றான்.

(5) தேவாதிதேவனாகிய பரமேஸ்வரனை; அழிவற்ற ப்ரஹ்ம நிர்வாணத்தை.

உ௰௪. அழிவற்றதும் நிகரில்லாததும் ஆகிய மேலான எனது நிலையை அறியாமல் அறிவீனர்கள் (1) என்னைப் (2) பிறந்தவனாக வும் (3) ப்ரகாஶமற்றவனாகவும் (4) நினைக்கின்றனர்.

(1) துர்யோதனனைப் போன்றவர்கள்.

(2) அவதார புருஷனாகிய ஸ்ரீ க்ருஷ்ணபகவானைப்.

(3) பிறப்பு இறப்பு என்ற த்வந்த்வங்களுக்கு அடிமைப் பட்டவனாகவும்.

(4) மண்ணாசை, பொன்னாசை, பெண்ணாசைகளால் அறிவு கெட்டவனாகவும்.

உ௰௫. யான் யாவர்க்கும் ப்ரகாசன் அல்லன் (1). மாயா யோகத் தால் மறைக்கப்பட்டு (2) இந்த மூடலோகம் (3) என்னைப் பிறப்பற்ற வனாகவும் அழிவற்றவனாகவும் அறிகின்றதில்லை (4).

(1) சிற்றறிவாளிகள் என்னுடைய ஸ்வரூபத்தை அறியமாட்டார்கள். விஷயஸுகம் துன்பமென்று நிஸ்சயித்த புத்திமான் களுக்கு எனது சச்சிதாநந்த ஸ்வரூபம் விளங்கும்.

(2) பொய்ப்பொருளை மெய் என்று நினைக்கும் மனமாகிய மாயையின் ஸம்பந்தத்தால் அறிவின் ப்ரகாஶம் கெட்டு.

(3) இந்த யுத்தகளத்தில் கூடிச் சத்துருக்களாய் நிற்கும் மூடர்கள்.

(4) பிறப்பும், இறப்பும் அற்ற ஞானியென்றும் அறியமாட்

டார்கள், அவதாரபுருஷனென்றும் அறியமாட்டார்கள்.

உ௰சு. அர்ஜுன, சென்ற பூதங்களையும், நிகழ் பூதங்களையும், வரும் பூதங்களையும் நான் அறிகின்றேன் (1). என்னையோ ஒருவனும் அறிகிறன் இல்லை (2).

(1) த்ரிகாலத்திலும் ஜீவாத்மாக்கள் எடுக்குந் தேகங்களையும் அவற்றின் சரித்ரங்களையும் நான் அறிவேன்.

(2) க்ஷத்ரியர்களின் அதர்மங்களை அடக்கும்பொருட்டு, அந்தர்யாமி ஈஶ்வரனே அவதாரபுருஷனாக ஸ்ரீ க்ருஷ்ணன் என்றழைக்கப்பட்ட இந்த ரூபத்தில் ப்ரகாஶிக்கின்றார் என்ற சரித்ரத்தை, ஒரு மூடனும் அறியமாட்டான். அடுத்த மந்த்ரத்தில் மூடர்கள் ஞானவான்களை அறியாமல் இருப்பதற்குக் காரணம் யாதென்று கூறப்படும்.

உ௰எ. பாரத, இச்சை த்வேஷம் என்றவைகளில்நின்று பிறந்த த்வந்த்வ மோஹத்தால் (1), பரந்தப, எல்லாப் பூதங்களும் (2) உற்பத்திகாலத்தில் (3) ஸம்மோஹத்தை (4) அடைகின்றன.

(1) உ. ௬௰உ. க்குரிய ௬. ம் உரையைப் பார்த்தறிக.

(2) ஸ்தூலதேஹத்தைத் தரிக்கும்படி வந்த ஸசரீர ஸசித ஜீவர்களும்.

(3) மாதாவின் கர்ப்பத்தில் தோன்றின காலத்தில்.

(4) கடும் மூடத்தை (௩. உ௰சு.)

இந்த மந்த்ரத்தில் அடங்கிய விஞ்ஞானமாவது, ஒரு தேஹத்தில் உள்ள ஆத்மாவை அந்த ஆத்மாவானது மேலொரு தேஹத்தில் உள்ள ஆத்மாவாவது அறியாமலிருப்பதற்குக் காரணம் மலம் (உ. உ.) அல்லது கலிலம் (உ. ௬௰உ.) என்ற, அதிஸூக்ஷ்ம கெடுதிப்பொருள் என்பதும், அதன் அதிர்ஶிய ரூபம் ஆசை என்பதும், அவ்வாசை மனதில் எறினவுடனே விருப்பாகவும், வெறுப்பாகவும் தோன்றுமென்பதும், இந்த விருப்பு வெறுப்பு த்வந்த்வகாரணம் அல்லது த்வந்த்வமோஹம் அல்லது அறிவைப்பேதிக்கின்ற மூடம் என்றழைக்கப்படும் என்

பதும், இந்தக் காரண மூடத்தால் ஸ்தூலதேஹத்தைத் தரிக்க வந்த ஜீவர்கள் ஸம்மோஹமென்று கூறப்பட்ட கார்யமூடத்தைப் பொருந்துகின்றார்களென்பதும், பிறந்தபின், இந்த ஸ்தூலதேஹ ஸம்பந்த மோஹத்தால் மனம் பற்றின விஷயங்களெல்லாம் இஷ்டம் அநுஷ்டமாயும், ஸுகதுக்கமாயும், நன்று தீதாயும் தோற்றமென்பதுமே.

உ௪௮. புண்யகர்மம்பெற்ற எந்த ஜனங்களின் பாபம் நாஶமடைந்ததோ (1) அவர்கள் த்வந்த்வமோஹத்தால் விடப்பட்டு (2) உறுதியான வ்ரதங்கொண்டவர்களாய் (3) என்னை அடைகின்றனர் (4).

(1) நிஷ்காமபுத்தியோடு செய்யப்பட்ட உத்க்ருஷ்டகர்மங்களால் அவர்கள் பாபங்களில்நின்று விலகுவார்களோ.

(2) அவர்கள் விருப்பு வெறுப்பு என்ற த்வந்த்வங்களுக்குரிய ஸுகதுக்கம், ஶீதோஷ்ணம் முதலிய மூடபந்தனங்களில் நின்று தப்பி.

(3) சலைமற்ற புத்திமான்களாய் ப்ரதிஷ்டைபெற்று.

(4) க்ரமமாகச் சச்சிதாநந்த ஸ்வரூபிகளாகிறார்கள்.

உ௪௯. ஜரை மரணம் என்றவைகளின் நிவ்ருத்திக்காக (1) எவர்கள் என்னை அடைய முயல்கின்றார்களோ, அவர்கள் எல்லா அத்யாத்மத்தையும் (2) எல்லாக் கர்மத்தையும் (3) தத் ப்ரஹ்மமாக (4) அறிகின்றனர்.

(1) ஶரீரத்தின் தளர்ச்சியையும் அவித்யாவையும் விடுவதற்காக.

'ஜரா''=ஜீரணத்தன்மை; ஶரீரத்தளர்ச்சி; ஶரீரந்தோறும் முள்ள நாடி நரம்புகளின்கட்டு அவிழ்ந்த நிலை.

''மரணம்'' மரணத்தின் ஸாதாரண அர்த்தம் தேஹவியோகம்; ஸூக்ஷ்மஶரீர ஸம்பந்தமாக இருக்கின்ற ஜீவாத்மா ஸ்தூலஶரீரத்தில்நின்று பிரிதல். ஆனால், இங்கு அந்த அர்த்தம் பொருந்தாது. ஏனெனில், தேஹத்தோடு வாழும் ஜீவன்முக்தன் தானும் ப்ராரப்த கர்மமுடிவில் ஸ்தூலதேஹத்தையும் ஸூக்ஷ்

மதேஹத்தையும் விட்டு விதேகமுக்தியை அடைவதால், ஈண்டு, மரணம் என்றது அவித்யாவே; தன்னையறியாத அவஸ்தையே.

ஆத்மதர்ஶனம்பெறுதற்கு ப்ராணலயயோகமும் மனோலய யோகமும் பழகி வருகின்றவர்களுக்கு ஜனனமுமில்லை அறியாமை என்ற மூடமுமில்லை.

(2) ப்ரக்ருதிசொரூபம் முழுவதையும். அஃதாவது, ஐம்பொறிகளால் அறியப்படும் எண்ணிறந்த ஶப்த ஸபர்ஶ ரூப ரஸ கந்த கோலங்கள் அனைத்தும்.

"அத்யாத்ம" (அதி=இல்+ஆத்ம=ஆத்மா.) என்ற பதம் ஆத்மாவில்உள்ளது என்று பொருள்பட்டு ப்ரக்ருதியைக்குறிக்கும். ஏனெனில் ப்ரகிருதி ஆத்மாவுக்கு அப்பாற்படாத பொருள் ஆதலால்.

"அத்யாத்ம க்ருத்ஸ்நம்"=ப்ரக்ருதி முழுவதையும்.

(3) ப்ரக்ருதிகுணங்களில்நின்று பிறந்ததொழில்கள் யாவற்றையும். அஃதாவது, தோன்றல், அசைதல், இருத்தல், நிற்றல், விழுதல், மறைதல், வீசுதல், உண்ணுதல், உறங்குதல் முதலிய தொழில்களையும் புண்யகர்மங்களையும் என்றறிக. எ. ௰௧-இல் "பலவான்களின் காமராகம் அற்ற பலம்நான்" என்றும், "ப்ராணிகளில் தர்மத்துக்கு விரோதமில்லாத காமம்நான்" என்றும் உபதேஶித்திருப்பதால் ஈண்டு, பாபகர்மங்களை ப்ரஹ்மமாக அறியக்கூடாது.

(4) "தத்ப்ரஹ்மம்"=தத்பொருளாகிய ப்ரஹ்மம்.

அனாத்மாவாகிய ப்ரக்ருதியும் மிக விரிவுபெற்றிருப்பதால் அதனையும் பெரியோர் ப்ரஹ்மமென்று கூறியிருக்கின்றனர். (௰௪-௩.) ஈண்டு, ப்ரயோகிக்கப்பட்ட அதத்ப்ரஹ்மத்தை தத்ப்ரஹ்மவாக்யம் நிஷேதிக்கின்றது.

எல்லா அத்யாத்மமும் எல்லாக் கர்மமும் "தத் ப்ரஹ்மம்" என்று நிஶ்சயிப்பர், என்ற பதங்கள் அனாத்ம ப்ரக்ருதியும் பரமாத்மாவும் ஒன்றே என்ற பொருளைப் பெறு. மலரூபமாகிய ப்ரக்ருதியின் கர்மங்களும் அந்தர்யாமி ஈஸ்வரனது அமலரூப பஞ்சக்ருத்யங்களும் அபேதமே என்ற பொருளையும் பெறு.

யதார்த்தம் எவ்வாறெனில், அந்தர்யாமி ஈஶ்வரனே கூறப்பட்ட ப்ரக்ருதியையும் அதன் தொழில்களையும் விரித்து நடத்திவைக்கின்றார் என்பதே. இந்த மந்த்ரத்தில் உபதேஶிக்கப்பட்டது உபநிஷத்தில் உபதேஶிக்கப்பட்ட மஹாவாக்கியமாகிய "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" என்றதே.

"ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம"=இது எல்லாம் ப்ரஹ்மம் அல்லவா.

மனஸால் நினைக்கப்பட்டவையும் ஐம்பொறிகளால் க்ரஹிக்கப்பட்டவையும் ப்ரஹ்மமல்லவா என்று கூறினால், கள், சாராயம், தேஹத்துக்குரிய மலஶக்திகள் நாற்றம்பெற்ற விஸர்க்க வஸ்துக்கள் முதலியவையெல்லாம் ப்ரஹ்மமென்று முடியும். இதற்கு ஞானஶாஸ்த்ரங்கள் இடங்கொடா. எனெனில், "நேதி, நேதி, (இதல்ல, இதல்ல) என்ற வேதவாக்யம் இருப்பதால். இதுபற்றியே, பக்வான் "தர்மத்துக்கு விரோதமில்லாத காமம் நான்" என்ற முதலிய உபதேஶங்களை அருளினார்.

௩௰. அதிபூதஸஹிதனுகவும் (1), அதிதைவஸகிதனுகவும் (2) அதியஜ்ஞஸஹிதனுகவும் (3) என்னை எவர்கள் அறிகிறர்களோ (4), அந்த ப்ரதிஷ்டைபெற்ற புத்திமான்கள் (5) என்னை ப்ரயாணகாலத்திலும் (6) அறிகின்றர்கள்.

(1) ஸகல ஸூக்ஷ்ம ஸ்தூலஶரீரங்களோடு கூடினவனுகவும்.

"அதிபூதஸஹிதன்"=அதிபூதத்தோடு கூடினவன்.

"அதி" (இல்) என்ற பதமும், "பூத" (தன்மாத்ரை அல்லது ஸூக்ஷ்மபூதம்) என்ற பதமும் சேர்ந்து "அதிபூதம்" ஆயிற்று. தன்மாத்ரைகளில் உள்ளது என்று பொருள்பட்டு, தன்மாத்திரைகளில் உற்பத்தியான ஸூக்ஷ்மஶரீர, ஸ்தூலஶரீரங்களைக் குறிக்கும். (அ. அ).

(2) ஸகல ஜீவாத்மாக்களோடு கூடினவனுகவும்.

"அதில்" (இல்) என்ற பதமும் "தைவம்" (ஈஶ்வரனைச் சார்ந்தது) என்ற பதமும் கூடி "அதிதைவம்" ஆயிற்று. இது

ஈஸ்வரனைச் சார்ந்த ஜீவன் என்று பொருள்படும். (ரு. அ. இல்) ஜீவனை ஈஸ்வரன் என்றார். அ. ஈ. இல் அதிதைவம் என்றதை தேஹத்திலுள்ள "புருஷன்" என்றார்.

(3) மகேஸ்வரனோடு கூடினவனுகவும்.

"அதி" (இல்) என்ற பதமும் "யஜ்ஞம்" (யாகம், பூஜை) என்ற பதமும் சேர்ந்து "அதியஜ்ஞம்" ஆயிற்று. இது யாகத்தில் உள்ளது என்று பொருள்பட்டு, ஸகல யஜ்ஞங்களையும் அநுஸரிக்கின்ற மகேஸ்வரனைக் குறிக்கும். (அ. ஈ).

உயிகூம் மந்த்ரத்தில் வரும் அத்யாத்ம என்ற பதம் எவ்விதம் அதி என்ற பதத்தோடும் ஆத்மா என்ற பதத்தோடும் கூடிப் பிறந்ததோ, அவ்விதமே அதிபூதம், அதிதைவம், அதியஜ்ஞம் என்ற பதங்கள் அதி என்ற பதத்தோடு பூதம், தைவம், யஜ்ஞம் என்ற பதங்கள் கூடிப் பிறந்தன.

(4) பரமாத்மாவாகிய என்னை ஸ்வாநுபவமாக அறிகின்றார்களோ.

(5) "யுக்த சேதஸ."=அந்தப்புத்தியோடு வாழ்கின்ற யுக்தர்கள் (ரு. யிஅ, உயிகூ).

(6) விதேகமுக்தி தசையிலும்

ஜீவதேகமுக்தி தசையில் ஞானிகள் பரமாத்மாவை தர்ஸித்துக்கொண்டிருப்பதுபோல, விதேகமுக்தியிலும் தர்ஸித்துக் கொண்டிருப்பார்கள் என்பதுபற்றி, "ப்ரயாணகாலத்திலும் என்னை அறிகிறார்கள்" என்றார்.

---

உபநிஷத்துக்கள் என்றும், ப்ரஹ்மவித்தை என்றும், யோக சாஸ்திரம் என்றும், பகவத்கீதைகள் என்றும் கூறப்பட்ட ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன ஸம்வாதத்தில் பிரசித்திபெற்ற விஞ்ஞானயோகம் என்ற சப்தாத்யாயம் முற்றிற்று.

---

# எட்டாவது அத்யாயம்.

## அக்ஷர பரப்ரஹ்ம யோகம்.

அஃதாவது, ப்ரக்ருதிக்கும் ப்ரக்ருதிஜன்யங்களுக்கும் மேற்பட்ட வஸ்து அழிவற்ற பரப்ரஹ்மம் அல்லது பரமாத்மா என்ற உபதேசத்தை அர்ஜுனன் கேட்டுச் சிந்தித்தான் என்று விளக்கும் எட்டாவது பாடம்.

---

**அர்ஜுனன் கூறினன்.**

**க. புருஷோத்தம (1) தத்ப்ரஹ்மம் யாது (2) அத்யாத்மம் யாது (3) கர்மம் யாது (4) அதிபூதம் யாது (5) அதிதைவம் யாது (6) என்று கூறப்படுகின்றது.**

(1) உத்தமபுருஷனே, அறிவாளிகளில் மிகமேன்மை பெற்றவனே.

(2) எ. உ௰க (3).
(3) எ. உ௰அ (2); அ. ௩.
(4) எ. உ௰க (4); அ ௩.
(5) எ. ௩௰ (1); அ. ௪.
(6) எ. ௩௰ (2); அ. ௪.

**உ. இந்தத் தேஹத்தில் அதியஜ்ஞன் யார் (1). இதில் எப்படி [இருக்கின்றன்]. மதுஸூதன, மனதை ஒடுக்கினவர்களால் (2) ப்ரயாணகாலத்திலும் எவ்விதம் நீ அறியப்படுகின்றய் (3).**

(1) எ. ௩௰ (3); அ. ௪.
(2) "நியதாத்மா"=நியத ஆத்மாவை உடையவர்களால், ஒடுக்கப்பட்ட மனதை உடையவர்களால், மனதை ஒடுக்கினவர்களால்.

(3) எ. ௩௰ இல் "ப்ரயாணகாலத்திலும் என்னை அறிகிறார்கள்," என்று பகவான் கூறினதால், ஈண்டு, எப்படி உன்னை அறிவார்கள் என்று அர்ஜுனன் வினவினான்.

அர்ஜுனன் கேட்ட வினாக்களுக்கு வரும் மந்த்ரங்களில் பகவான் உத்தரங்களை அருளுவார்.

**ஸ்ரீ பகவான் கூறினார்.**

**௩. ப்ரஹ்மம் அக்ஷரமாயும் பரமமுமாயும் [உள்ளது] (1). ஸ்வபாவம் அத்யாத்மம் (2) என்று கூறப்படுகின்றது. பூதபாவங்களின் உத்பவத்தைச் செய்யும் விஸர்க்கம் கர்மம் (3) என்று பெயர்பெற்றது.**

(1) எது அழிவற்ற வஸ்துவோ, எது அழிவுள்ள வஸ்துக்களுக்கு மேலானதுவோ, அதனை ப்ரஹ்மம் என்று அறி.

„ப்ரஹ்ம", என்ற பதம் "ப்ருஹ" (வ்ருத்தி) என்ற தாதுவில் ஜனித்து மிக விரிவுபெற்ற வஸ்து என்று பொருள்படும். எ. உ௰௩ க்குரிய ச. ம் உரையைப் பார்த்தறிக.

மெய்ப்பொருளாகிய "தத்ப்ரஹ்மம்" எக்காலமும் உள்ள வஸ்துவாதலால் "ஸத்" என்றும், பேரறிவு சொரூபமாதலால் "சித்" என்றும், துக்க நிவ்ருத்திபெற்றிருப்பதால் ஆநந்தம் என்றும் கூறப்படும். இம் மூன்று தன்மைகளும் அந்த ஒரே பொருளில் விளங்குவதால், சச்சிதானந்தமென்ற ஸமாஸ பதத்தால் குறிக்கப்படும். இந்த அகண்ட பரிபூரணவஸ்துவில் கோடாகோடி மலரஹித ஶக்திகள் உண்டு. ஆதலால், இந்தப் பரமாத்மாவை ஶக்திமான் என்று அறிவாளிகள் போற்றுவார்கள்.

"அக்ஷரம்", என்ற பதம் "அ" (இல்லை), "க்ஷர" (அழியும் பொருள்) என்ற பதங்கள் கூடித் தோன்றிற்று. அழிவற்ற வஸ்து என்று பொருள்படும்.

"பரமம்" (மேலானவஸ்து). எதற்கு மேலானதெனில், ப்ரக்ருதிக்கும் ப்ரக்ருதி கார்யங்களுக்கும் மேலானது என்று அறியவேண்டியது.

(2) அத்யாத்ம (எ. உ௰௩) உ இல் ப்ரக்ருதி என்று விளக்

கப்பட்டது. இது தன்னையே பாவனை செய்துகொண்டிருப்ப தால் "ஸ்வபாவம்" என்று அழைக்கப்படும்.

"ஸ்வபாவம்", என்ற ஸமாஸபதம் "ஸ்வ" (தன்னை) "பாவ" (பாவனை) என்ற பதமும் கூடித் தோன்றிற்று.

ப்ரக்ருதி தன்னையே பாவனைசெய்யும் என்பதற்கு தேஹமே உதாகரணம். ப்ரக்ருதியால் இயற்றப்பட்ட ஐம்பொறிகள் தத்தம் விஷயங்களை க்ரஹித்துக்கொண்டேயிருக்கும். மனஸும் நினைத்துக்கொண்டேயிருக்கும். கர்மேந்த்ரியங்களும் தத்தம் கர்மங்களைச் செய்துகொண்டேயிருக்கும். செய்யப்பட்ட கர்மங்களையும் மனஸில் தோன்றின நினைவுகளையும் ஐம்பொறிகளால் கண்ட விஷயங்களையும் வாக்குப் பேசிக்கொண்டேயிருக்கும். நல்லாடைகளைத் தரித்த ஸமயத்தில் மற்றவர்கள் பார்க்கும்படி தேஹம் நெளித்து நிற்கும். இவை முதலிய பாவனைகள் யாவும் ஸ்வபாவங்கள்.

ப்ரஹ்மம் என்ற ஆத்மா மெய்ப்பொருள். அனாத்மாவாகிய ப்ரக்ருதி பொய்ப்பொருள். இந்த ப்ரக்ருதிக்குத் தோற்றமும் ஒடுக்கமும் உண்டு. தோற்றத்தைப் பெற்றகாலத்தில் மெய்போல நிற்றலை "இருத்தல்" என்று கூறுவார்கள். ஆனால், இந்தப் பதம் அதற்குப் பொருந்தாது. ஏனெனில், காணப்படும் அவஸ்தையில் அது வளர்தல், தேய்தல், மாறுதல், என்ற விஹாரங்களைப் பெற்றே நிற்குமாதலால். ஒடுக்கத்தில் காணமற்போகும், எனவே, ப்ரக்ருதி ஷட்பாகங்களாகிய பொய்யான இருத்தலையும், பிறத்தலையும், வளர்தலையும், தேய்தலையும், மாறுதலையும், அழிதலையும் உடையது. இவையெல்லாம் க்ஷரகோலங்கள்; (அழிவுள்ள பாவனைகள்). இவற்றைப் பெறாத வஸ்து அக்ஷர (அழிவற்ற) ஆத்மா. இந்த ஆத்மா ப்ரக்ருதிக்கு அன்யமான சித்பொருள். இதனை ௩. சு௨ இல் "ஞானேந்த்ரியங்களுக்கும் மனஸுக்கும் புத்திக்கும் பரமமான வஸ்து" என்றார்.

(3) "கர்மம்" என்றது பூதபாவங்களின் உத்பவத்தைச் செய்யும் விஸர்க்கம்.

"கர்மம்" என்ற பதம் "க்ரு" (செய்தல்) என்ற தாதுவில்

ஜனித்து அவித்யாவில் கட்டுண்ட ஜீவாத்மாவுக்கு ஸ்தூல தேஹங்களைக் கொடுத்து புவனங்களில் வெளிவிடும் செயலாகிய விஸர்க்கம் என்ற விசேஷ அர்த்தத்தைப் பெற்று நிற்கும்.

"கர்மம்" என்ற பதம் அநாத்ம சேஷ்டைகளாகிய கண் இமைத்தல், தலையசைதல், கைதட்டுதல், உளறுதல், சிரித்தல் முதலியவற்றைக் குறிக்காது. ஜீவாத்மாக்களின் பலிதத்துக்காகப் பரமேஸ்வரன் வகுத்த யஞ்ஞம், தானம், தபஸ் என்ற செயல்களே கர்மமாகும்.

கர்மங்களுக்கு (மாறானவை, விபரீதமானவை, விரோதமானவை) ௪. ய இல் "விகர்மங்கள்" என்று கூறப்பட்டன.

இந்த மந்த்ரத்தில் ஸகாமபுத்தியோடு செய்யப்பட்ட யஞ்ஞம், தானம் தபஸ் என்ற தொழில்கள் ஸ்தூலதேஹ ப்ரவிருத்திகளைத் தருவதால், அவற்றைக் கர்மங்களென்றும், (ஸ்தூல தேஹ) விஸர்க்கங்களென்றும் கூறினார். நிஷ்காமபுத்தியோடு செய்யப்பட்ட யஜ்ஞம், தானம், தபஸ் என்ற தொழில்கள் நிவ்ருத்திகளைத் தருவதால் அவற்றை "அகர்மம்" என்று ௪. ய இல் குறித்தார்.

"விஸர்க்கம்" (வெளிவிடுதல்) என்ற பதம் "ஸ்ருஜ" (வெளிவிடுதல், வெளியேதள்ளுதல்) என்ற தாதுவினின்று ஜனித்தது. பாணினி தன தாதுபாடத்தில் "ஸ்ருஜவிஸர்க்கே" என்று கூறினதால், விஸர்க்கமும், ஸ்ருஷ்டியும், வெளிப்படுதலும் அபேதமென்று அறிக

௩. ய இல் கர்மகர்த்தாக்களாகிய ஜீவாத்மாக்களைப் பார்த்து ப்ரஹ்மதேவன் நீங்கள் விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்து அவித்யாவில் கட்டுண்ட ஜீவாத்மாவை வெளிவிடுங்கள் என்று கூறினாரென்று பகவான் உபதேசித்திருக்கின்றார். அந்த ஸமயத்தில் உபயோகிக்கப்பட்ட வார்த்தை "அநேந ப்ரஸவிஷ்யத்வம்"=இதனால் ப்ரஸவியுங்கள் என்பதே.

"ப்ரஸவம்" (வெளிவிடுதல்) "ஷூ" என்ற தாதுவிலிருந்து ஜனித்தது. "ஷூ ப்ராணிகர்ப விமோசனே"=ஷூ என்ற தாது ப்ராணியைக் கர்ப்பத்திலிருந்து வெளிவிடுதல் என்ற பொருளைக்

குறிக்கும் என்று விளக்கினார். ௩, ௰க்குரிய ௬.ம் உரையைப் பார்த்துத் தெளிக.

இனி விஸர்க்கம் என்றபதம் மேற்கூறிய அர்த்தத்தைப் பொருந்தும்படி, "பூதபாவங்களின் உத்பவத்தைச் செய்யும் விஸர்க்கம்" என்று பகவான் அருளினார்.

கர்மம் எப்படிப்பட்ட விஸர்க்கம் எனில், "பூதபாவ உத்பவகர விஸர்க்கமே" (ஸ்தூல தத்வ ஜன்ய ஸ்தூலஶரீரப் பிறப்பைச் செய்யும் விஸர்க்கமே) என்று பகவான் ஸ்பஷ்டமாக விளக்கினார்.

மலமூத்ராதி கழிதலுக்கும் விஸர்க்கம் என்ற பதம் அமையுமாதலால், ஸ்தூலஶரீர உத்பவத்தைச் செய்யும் விஸர்க்கமாகிய கர்மம் என்றார். "பூதபாவ உத்பவகர"=ஸ்தூல தத்வங்களினின்று ஜனித்த ஸ்தூலஶரீரங்களின் பிறப்பைச் செய்யும், என்பதே.

அன்றி, கர்மம் என்றது ஸாதாரணசெயல் அன்று என்றும், ஸ்தூலஶரீர உத்பவத்தைச் செய்யும் ("உத்பவகர") செயல் என்றும் விஶேஷிக்கப்பட்டது.

ஸ்தூல தத்வங்களாவன:— "மஜ்ஜா" (மூளை) "ஹஸ்தி" (எலும்பு) "மாம்ஸம்" (இறைச்சி) "ருதிரம்" (இரத்தம்) "மேதஸ்" (கொழுப்பு) "சர்ம" (தோல்). இவற்றில்நின்று உற்பத்தியானது ஸ்தூலதேஹம்.

௪. தேஹத்தைத் தரித்தவர்களில் சிறந்தவனே (1) க்ஷரபாவம் என்பது அதிபூதம் (2) புருஷன் என்பது அதிதைவம் (3). இந்தத் தேஹத்தில் (4) அதியஜ்ஞன் (5) நானே.

(1) பூர்வீக புண்ய கர்மத்தால் மிக்க பலத்தையும், சுந்தர ரூபத்தையும் பெற்ற தேஹவானே.

(2) அதிபூதம் என்றது அழியும் வஸ்துக்களாகிய ஸூக்ஷ்ம ஸ்தூல ஶரீரங்கள் எ. ௩௰. (1).

(3) அதிதைவம் என்றது ஆத்மா. எ. ௩௰க்குரிய உவது இரையில் அதிதைவம் விளக்கப்பட்டது. தேஹத்தில் ஶயனம்

செய்கின்றவன் ("சாய்ந்திருக்கின்றவன்"). "புருஷன்" என்று உபநிஷத்களில் கூறியிருக்கின்றது. "புருஷன்"=தேஹி:

(4) இந்தத் தேஹத்தில் என்ற பதம் ஸ்ரீ க்ருஷ்ணபகவானுடைய தேஹத்தில் என்று பொருள் பண்ணவேண்டியது. அதில் ஜீவபுருஷன் இல்லை. அவதாரபுருஷனாகிய மகேஶ்வரன் உண்டு என்பதுபற்றி, இந்தத் தேஹத்தில் நானே "அதியஜ்ஞன்" என்றார்.

(5) எ:௩௰ (௪) க்குரிய உரையைப்பார்க்க.

ரு. அந்த்ய காலத்திலும் (1) என்னையே நினைத்துச் (2) சரீரத்தைக் களைந்து எவன் செல்லுகின்றானோ, அவன் மத்பாவத்தைப் (3) பெறுகின்றான். இதில் ஸம்ஶயமில்லை.

(1) ஜீவனகாலத்தில் பழகின பழக்கப்படி தேஹம் நழுவுகிறகாலத்திலும்.

(2) பரமேஶ்வரனில் மனதை ஒடுக்கி.

(3) எனது சச்சிதாநந்த ஸ்வரூபத்தைப்.

சு. கௌந்தேய, எந்த வஸ்துவை (1) ஸதாகாலமும் பாவனை செய்து முடிவுகாலத்திலும் அதையே நினைத்துக்கொண்டு சரீரத்தை விடுகின்றவன் [மறுஜன்மத்தில்] அதையே பெறுகின்றான் (2).

(1) மஹேஶ்வர உபாஸனைக்குக் கீழ்ப்பட்ட எந்த மூர்த்தியை.

(2) அந்த மூர்த்தியின் உபாஸனையையே அநுஷ்டித்து வாழ்வான்.

எ. ஆதலால் (1) எல்லாக் காலங்களிலும் மனதையும் புத்தியையும் என்னிடம் அர்ப்பணம் (2) செய்து என்னை ஸ்மரி (3) யுத்தத்தையும் செய் (4). என்னையே நீ அடைவாய் ஸம்ஶயமே இல்லை.

(1) உபாஸனைக்ரமம் இவ்வாறு வகுத்திருப்பதால்.

(2) த்யாகம்.

(3) என்னை நீ பரமகுருவென்று நிஶ்சயித்திருப்பதால் என்

னயே த்யானி ("ஸ்மரி") த்யானித்து, உன் உடல், பொருள், ஆவி மூன்றையும் என்னிடம் ஒப்புக்கொடுப்பாயாக.

(4) ஈஸ்வரார்ப்பண த்யானம் செய்வதுமன்றி யுத்தத்தை யும் ஈஸ்வரார்ப்பணமாகவே செய்.

அ, கூ, ய பார்த்த, [ப்ராணயாம] அப்யாஸம் [கர்ம] யோகம் என்றவைகளைச் சேர்ந்ததும் வேறென்றில் செல்லாததுமாகிய மனஸா ல் திவ்ய பரமபுருஷனைச் சிந்தித்துக்கொண்டு எவன் [தேஹத்தில்நின்று] புறப்படுகின்றனே, எவன் ஸர்வஜ்ஞனும் (1), புராணனும் (2) தண்டிக் கின்றவனும் (3) அணுவிலும் அணீயானும் (4) யாவற்றிற்கும் தாதா வும் (5) நினைவுக்கு எட்டாதவனும் (6) ஆதித்யவர்ணனும் (7) தமஸ்ஸு க்கு மேலானவனும் (8) ஆகியவனைத் தொடர்ந்து சிந்திப்பானே, அவன் யோகபலத்தாலேயே (9) ப்ரயாணகாலத்திலும் அசல மனஸ் (அசல) பக்தி (10) என்றவைகளோடு கூடிப், புருவமத்தியில் ப்ராணனைச் செவ்வையாக ப்ரவேஸிக்கச் செய்து (11) திவ்ய பரமபுருஷனைப் பெறுகின்றன் (12).

(1) எல்லாம் அறிகின்றவனும், ஸர்வசாக்ஷியும

(2) பழையவனும, அனுதிவஸ்துவும்

(3) யாவற்றையும அடக்கி ஆளுகின்றவனும்.

(4) ஓடுக்கத்தில் அணுவிலும சிறியவனும, விரிவில் மறைத் திலும் பெரியவனும

(5) ரக்ஷகனும், போஷிக்கின்றவனும, வளர்க்கின்றவனும்.

(6) மனஸால் அறியக்கூடாதவனும.

(7) பரஞ்சோதியானவனும்

(8) இருளாகிய அவித்யாவின் உபாதிக்கும, ஒளியாகிய மாயையின் உபாதிக்கும் அதீதன் ஆனவனும்.

(9) தனது ப்ராணலய, மனோலய, யோகஸ்க்தியாலேயே.

(10) அசைவற்ற மனஸோடும், ப்ரதிஷ்டைபெற்ற அன்போ டும்.

(11) புருவங்களின் மத்தியிலுள்ள லலாடஸ்தான வழியால் ப்ராணவாயுவை ப்ரஹ்மரந்தரத்தில் செலுத்தி.

(12) தேவாதி தேவனுகிய பரமாத்மாவை அடைகின்றன்.

௰௧. எதை வேதவித்துக்கள் (1) அக்ஷரமென்று (2) கூறுகின்றனரோ, எதை ராகமற்ற (3) யதிகள் (4) போய்ச் சேர்கின்றனரோ, எதைவிரும்பி ப்ரஹ்மசர்யத்தை (5) அநுஷ்டிக்கின்றனரோ அந்தப் பதத்தை (6) உனக்குச் சுருக்கமாகக் கூறப்போகின்றேன்.

(1) *வேதத்தின் பொருளை அறிந்தவர்கள்.*
(2) *அழிவற்ற வஸ்துவென்று.*
(3) *விருப்பு வெறுப்பு அற்ற.*
(4) *இந்த்ரிய நிக்ரஹிகள்*
(5) *நிவ்ருத்தி மார்க்கத்தை.*
(6) *அந்த அக்ஷர ப்ரஹ்ம நிர்வாணத்தை.*

௰௨, ௰௩. எல்லா த்வாரங்களையும் அடைத்து (1) ஹ்ருதயத்தில் மனஸைத்தடுத்து (2), தனது ப்ராணனை உச்சியில்வைத்து (3), யோக தாரணைபெற்று (4) ஓம் என்ற ஏகாக்ஷர ப்ரஹ்மத்தை ஜபித்து (5) [அதன் பொருளாகிய] என்னை நினைத்துக்கொண்டு (6), எவன் சரீரத்தைவிட்டுச் செல்லுகின்றனோ, அவன் ப்ரஹ்மகதியைப் (7) பெறுகின்றன்.

(1) *பஞ்சப்புலன்கள் வழிகளாகிய பொறிகளை அடைத்து.*
*பஞ்ச விஷயங்களைப்பற்றும, மெய், வாய், கண், மூக்குச் செவி என்ற இந்த்ரியங்களை "த்வாரங்கள்" என்றார். இவற்றை மாணிக்கவாசகஸ்வாமி "புலன்வழி" என்றார். "மாறிநின்றென்னை மயக்கிடும் வஞ்சபபுலனைந்தின் வழியடைத்த அமுதே" என்ற மந்த்ரத்தில் காண்க.*
*ஐம்பொறிகள் தத்தம் த்வாரங்களில் நின்று தத்தம் விஷயங்களைப் பற்றிவிடாமல் உள்ளேயிழுத்து மனஸோடு கண்டஸ்தானத்தில் வைப்பதே ஐம்பொறியடக்கம்; ஞானேந்த்ரிய நிக்ரஹம்.*
(2) *கண்டஸ்தானத்தில் வீற்றிருக்கும் மனதை ஹ்ருதயஸ்தானத்திலுள்ள புத்தியோடு ஸம்பந்தப்படுத்தி, அதன் சொற்படியே நிறுத்தி.*
(3) *ப்ராணவாயுவை இடை, பிங்கலை நாடிகளில் சஞ்சரிக்கவிடாமல், லலாடஸ்தானவழியால் உச்சியில் உள்ள ப்ரஹ்ம*

ரந்த்ரத்தில் செலுத்தி.

"மூர்த்த"=உச்சி.

(4) அஷ்டாங்க யோகத்தில் ஓர் அங்கமாகிய தாரணை என்ற அவஸ்தையில் மனதையும் புத்தியையும் ப்ரதிஷ்டை செய்து.

(5) ஓர் சொல்லாகிய ப்ரணவ மந்த்ரத்தைத் தன் காதுக்கே ளாமல் ஜபித்து.

"ஏகாக்ஷர ப்ரஹ்மம"=ஒரு அக்ஷர (ஒலி) ("ஓம") வடிவ மாகித் தொனிக்கும் ஸகுண ப்ரஹ்மம்.

(6) வாக்கென்ற கருவி ஓம என்ற ப்ரணவத்தை ஜபிக்கும் பொழுது மனஸ் என்ற கருவி அங்கிங்கு ஓடாமல், ஓம என்ற பதத்தின் பொருளாகிய சச்சிதாநந்தத்தை த்யானித்து.

(7) முடிவான ப்ரஹ்மநிர்வாணத்தைப.

**௧௪. வேறென்றில் மனதை வைக்காமல் எக்காலங்களிலும் நித்யனாகிய என்னை எவன் நினைக்கின்றானோ, அந்த நித்ய யுக்தனான யோகியால் நான் லதுவாகப் பெறக்கூடியவன் (1).**

(1) அக்ஷரவஸ்துவாகிய நிர்க்குண ப்ரஹ்மத்தைப் பெறத் தக்கவனுடைய லக்ஷணம் இந்த மந்த்ரத்தில் கூறப்பட்டது.

எவன் அறிவுள்ள வஸ்துக்களைப் பற்றிப்பிடிக்காமல் அறிவற்ற வஸ்துவாகிய சச்சிதாநந்த பரமேஸ்வரனே பரமபொருளென்று பற்றிப்பிடித்து, அதனையே எவ்விதமுயற்சியிலும் தர்ஸித்து அதனோடே எக்காலமும் ஸம்பந்தப்பட்டு வாழ்வானோ, அவன் ப்ரஹ்ம நிர்வாணத்துக்கு உரியவன் இவனுக்கு நிர்க்குண ப்ரஹ்மம் ஸமீபம், ஏனையோர்க்குத் தூரம்.

**௧௫. பரம ஸம்ஸித்தி (1) பெற்ற மஹாத்மாக்கள் (2) என்னை அடைந்து, அஶாஸ்வதமான (3) துக்க ஆலயமாயிருக்கின்ற (4) புனர் ஜன்மத்தை (5) அடைகின்றார்கள் இல்லை.**

(1) ஸகல ஸித்திகளிலும் மேலான ஸித்தியாகிய நித்ய யுக்தத்வம், ஸகஜநிஷ்டை.

(2) பேரறிவாளிகள். அழிவுள்ள கிஞ்சித் கார்யங்களைப் பற்றாமல் பரமாத்மாவையே பற்றிநிற்கின்ற ஞானவான்கள்.

(3) எக்காலமும் உள்ள.

(4) துக்கத்துக்கு இருப்பிடமாயிருக்கின்ற.

அழிவுள்ள கார்யங்களைப் பற்றியிருக்கும் மனஸுக்கு உரியது சிற்றின்பமும் துக்கமும். சிற்றின்பம் தோன்றியழிவதாலும், அழியுங்காலத்தில் துன்பரூபமாய் ப்ரத்யக்ஷப்படுவதாலும், அவ்வின்பம் துன்பமே என்று நிஶ்சயிக்கவேண்டியது. தேஹத்தோடு கூடியிருக்கும் காலமெல்லாம் துக்கம் சிற்றின்பமாயும், நேர்துக்கமாயும் அநுபவிக்கப்படும் என்பதுபற்றி, ஜன்மத்தை (எடுத்த தேஹத்னித) த "துக்காலயம்" என்றார்.

(5) வேறு தேஹத்தை, இனனொரு பிறவியை.

யசு, கஎ. குந்திபுத்ரனாகிய அர்ஜுந, இரவு பகல் அறிகின்ற ஜனங்கள் (1) ப்ரஹ்மாவுடைய பகலை (2) சகஸ்ரயுக பர்யந்தமாகவும் (3) இரவை (4) சகஸ்ரயுக அந்தமாகவும் (5) அறிகின்றபடியால் ப்ரஹ்மலோகந்தொட்டு உள்ள லோகங்கள் (6) [எல்லாம்] புநராவர்த்தனம் (7) பெற்றவைகள். ஆனால், உன்னைப்பெற்றால் புனர்ஜன்மம் (8) இல்லை.

(1) இரவு பகல் வடிவமான காலத்தின் நிர்ணயத்தை அறிந்த பெரியோர்கள்.

(2) ஸ்ருஷ்டி கர்த்தாவாகிய ப்ரஹ்மதேவனுடைய பகலை. "பகலை"=ஜாக்ர தசையை.

(3) ஆயிரம் தேவயுகங்களை எல்லையாகக் கொண்டதென்றும்.

(4) ஸுஷுப்தி தசையை; ஸ்ருஷ்டி கர்மங்களை ஒழித்து, தூக்கத்திற்செல்லும் காலத்தை.

(5) ஆயிரம் தேவயுகங்களை எல்லையாகக் கொண்டதென்றும்.

"அந்தம்"=பர்யந்தம்; எல்லை.

(6) இவை யச, லோகங்கள் ஆகிய ப்ரஹ்ம அல்லது,

(ஸத்ய) தப, ஜன, மஹ, ஸ்வர், புவர், பூலோகங்களும், கீழ்லோகங்களாகிய ஏழு பாதாளங்களும் ஆகிய இந்தப் பதினாலு லோகங்களும் ஓர் ப்ரஹ்மாண்டத்தில் உள்ளன.

(7) இறந்தபின் பிறத்தலையும், பிறந்தபின் இறத்தலையும்.

(8) மறுபிறப்பு.

இறப்புப் பிறப்பற்ற நிலையாகிய நிர்வாணத்தைப் பெறுவார்கள்.

**௧அ பகலின் வரவில் (1) எல்லா வ்யக்திகளும் (2) அவ்யக்தத்தில் நின்று (3) பிறக்கின்றன. ராத்திரியின் வரவில் (4) அந்த அவ்யக்தம் என்று பெயர்பெற்றதிலேயே ஒடுங்குகின்றன (5).**

(1) ப்ரஹ்மதேவன் ஜாக்ரதசையில் நின்று ஸ்ருஷ்டி கர்மங்களை நடத்திவரும் ஓர் பகற்காலத்தில்.

ப்ரஹ்மதேவனுடைய ஓர் பகல் மனுஷ்யருடைய சதுர்யுகமாகும். அத்யாயம் ௯ மந்திரம் எ-க்கு உரிய க-வது உரையைப் பார்க்க.

(2) ஸர்வ தோற்றங்களும்; எல்லா ஸூக்ஷ்ம ஸ்தூலப்பிறவிகளும்.

(3) தோன்றாத மூலப்ரக்ருதியிலிருந்து; ஒடுக்கப்பட்ட நிலையில்நின்று.

(4) அவருடைய ஸ்ருஷ்டி காமங்களை ஒழித்து உறங்கும் காலத்தில்.

ப்ரஹ்மாவின் ஓர் ராத்திரியும் மனுஷ்யருடைய சதுர்யுகமாகும் (௯-எ-க பார்க்க.)

(5) தோன்றாமை என்ற தசையில் அடங்குகின்றன. அஃதாவது, மூலப்ரக்ருதியில் என்றறிக.

**௧௯. பார்த்த, பூதக்ராமம் அதுவே (1). அவசமான் (2) இது (3) தோன்றித் தோன்றி மறைகின்றது (4). பகலின் வரவில் (5) பிறக்கின்றது. இரவின் வரவில் (6) ஒடுங்குகின்றது.**

(1) வ்யக்தங்கள் என்று கூறப்பட்ட தோற்றும் வஸ்துக்களெல்லாம், அவ்யக்தம் என்று கூறப்பட்ட வஸ்துவின் அம்சமே.

ஏ. சு இல் ஜீவனையும் தன்மாத்ரைகளாகிய ஆகாஶம், வாயு, அக்நி, ஜலம், ப்ருதிவியையும், மனம் புத்தி அஹங்காரம் என்ற அந்தஃகரணங்களேயும் சார்ந்தே "பூதங்கள்" (தோற்றங்கள்) தோன்றின என்று கூறி, இந்த மந்த்ரத்தில் வ்யக்தங்கள் (ப்ரத்யக்ஷமானவைகள்) என்றும் பூதக்ராமங்கள் என்றும், இந்தப் பூதக்ராமம் அவ்யக்த மூலப்ரக்ருதியின் கார்யமே என்றும் விளக்கினர்.

(2) ஸ்வாதீனமற்ற, ஒருநிலேயில் நிற்காத, துடிணக் கோலங்களே இயல்பாக உடைய.

(3) இந்தப் பூதக்கூட்டம்.

(4) இறப்பையும் பிறப்பையும் அநேகமுறை பெற்றே வருகின்றது.

(5) ப்ரஹ்மாவின் பகலாகிய சதுர்யுக ஆரம்பத்தில்.

(6) ப்ரஹ்மாவின் ராத்திரியாகிய சதுர்யுக ஆரமபத்தில.

பிறவி அல்லது ஸ்ருஷ்டிக்குக் காரணகர்த்தா ப்ரஹ்மா. இறப்பு அல்லது மைத்துக்குக் காரணகர்த்தா ருத்ரன். ப்ரஹ்மா ஸ்ருஷ்டிக்க, ருத்ரன் பூதங்களே ஸம்ஹரிப்பார்.

உ0. அந்த [அவஶமான] அவ்யக்தத்தில் நின்று (1) வேறயும், அவ்யக்தமாயும், ஸநாதனமாயும், பரமமாயும் எந்த வஸ்து உள்ளதோ, அது, பூதங்கள் எல்லாம் நாஶத்தை அடையும்போதும், நாஶத்தை அடைகின்றதில்லை (2).

(1) அ. 0அ, (3).

(2) ப்ரக்ருதி கார்யங்கள் மூலப்ரக்ருதியில் அடங்குமென்றும், அந்த மூலப்ரக்ருதிக்கு வேருன வஸ்து பரமாத்மாவென்றும், ஸர்வ ஸம்ஹார காலத்துக்கு அப்பால் இந்தப் பரமாத்மா ஶேஷமாயும் ஸநாதனமாயும் நிற்குமென்றும் இநத மந்த்ரத்தில் உபதேஶித்தார்.

உ0க. அவ்யக்தம் அக்ஷரம் என்று கூறப்பட்ட அதை பரமகதி என்று கூறுகின்றனர். (1) எதைப் பெற்று [ஜீவர்கள்] நிவர்த்தனத்தை (2) அடைகின்றர்கள் இல்லேயோ, அது எனது மேலான ஸ்தானம் (3).

(1) பரமாத்மாவே பரமகதி. அஃதாவது, ஸகல வஸ்துக்களுக்கும் மேலான பதம்.

(2) திரும்புதலை; இறந்த அவஸ்த்தையில் நின்று பிறந்த அவஸ்த்தையை.

(3) இனிப்பிறவா இறவாநிலையே ஸகல நிலைகளினும் உயர்ந்த நிலை.

உ௰௨ பூதங்கள் எவனுள் நிற்கின்றனவோ (1), எவனால் ஈதெல்லாம் வ்யாபிக்கப்பட்டதோ (2), அந்தப் பரமபுருஷன் அனன்ய பக்தியால் பெறத்தக்கவன் (3).

(1) ப்ரக்ருதி கார்யங்கள் யாவும் பரமாத்மாவைத் தீண்டாமல் அதனிடத்து இருக்கின்றன என்று குறித்தார்.

(2) அவற்றை (ப்ரக்ருதி கார்யங்களை) பரமாத்மா பற்றாது வ்யாபித்து நிற்கின்றது என்று குறித்தார்.

(3) ஒவ்வொன்றிலும் ப்ரவேஶித்திருக்கும் பரமாத்மாவை எவ்விதம் ஒருவன் தர்ஶிப்பானோ (அறிவானோ) வென்றால், பரமாத்மாவுக்கு அன்யமாயிருக்கும் ப்ரக்ருதிகார்யங்களில் பக்தி (ஶ்ரத்தை) வைக்காமல் பரமாத்மாவிலேயே பக்தியைச் செலுத்துதலால் என்றறிக.

"அனன்யபக்தி"=அன்யபக்தி இல்லாமை; மற்றுப் பற்று இன்மை. அஃதாவது, தோன்றியழியும் வஸ்துக்களைப் பற்றவிடாமல், மனஸைத் திருப்பியும், அழிவற்ற வஸ்துவாகிய பரமாத்மாவைப் பற்றி நிற்கவும் செய்கின்ற பெரும் ஶ்ரத்தை அல்லது பேரன்பு.

> "மற்றுப்பற்று எனக்கின்றி நின்திருப்பாதமே
> மனம் பாவித்தேன்
> ....................... இனிப்பிறவாத தன்மை
> வந்தெய்தினேன்."

என்று ஸ்ரீ சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் நமச்சிவாயப் பதிகத்தில் பாடினது அனன்ய பக்தியையே.

இதைப் பக்தியோகமென்று வேதாந்திகள் கூறுவார்கள்.

இதை ஸ்ரீ மாணிக்கவாசகஸ்வாமிகள் "பத்திநெறி" என்றும், இதுவே முக்திக்கு அத்யாவஶ்யமென்றும் அச்சோப்பதிகத்தில் மேல்வருமாறு உபதேஶித்திருக்கின்றார்:

"முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்து ........................
....................சிவமாக்கி எனையாண்ட
அத்தன்.................................."

இந்தப் பக்திமார்க்கம் ஞானயோகத்துக்கும் அஷ்டாங்கயோகத்துக்கும் வேறன்று. சிலர் இம்மூன்றும் வெவ்வேறென்று ஸங்கிப்பார்கள்.

இந்தப் பக்தியை ஸ்ரீ க்ருஷ்ணபகவான் ச. ௩௰௯ இல் "ஶ்ரத்தை", என்றும், ஶ்ரத்தையால் ஒருவன் ஆத்மாவை மேலான வஸ்து என்று அறிகின்றபடியால், "தத்பரன்" என்று அழைக்கப்படுவானென்றும், ஶ்ரத்தையோடு இந்த்ரிய நிக்ரஹமுங் கூடினால் ஞானம் (அகண்டஅறிவு) உதயமாகும் என்றும், இந்த அகண்ட அறிவால் பரமஶாந்தியாகிய மோக்ஷத்தைப் பெறுவானென்றும் விளக்கியிருக்கின்றார். மேலும், ச. ௪௰ இல் ஆத்மா உண்டோ இல்லையோ என்ற ஸம்ஶயம் பெற்றவனுக்கு ஶ்ரத்தை (பக்தி) வராதென்றும், ஸம்ஶயம் அஞ்ஞானத்தில்நின்று பிறந்தது என்றும், ஶ்ரத்தையற்ற அவிவேகி நாஶத்தை அடைகின்றான் என்றும், ஸம்ஶய மனமுடையவனுக்கு இந்த லோகத்திலும் மேல்லோகத்திலும் ஸுகம் இல்லையென்றும் விளக்கப்பட்டது.

எனவே, "பரமபுருஷன் அனன்ய பக்தியால் பெறத்தக்கவன்" என்ற வாக்யம் வேறொரு பற்றில்லாத ஶ்ரத்தையுள்ளவன் ஞானமயமாகிப் பரமாத்மாவைப் பெறுவான் என்று பொருள்படும்.

மேலும், ௩. ௩ இல் ப்ரஹ்மநிஷ்டை இருவிதப்படும் என்றும், ஸாங்க்யர்களுக்குரிய ஞானயோகம் ஆகவும் கர்மாநுஷ்டானிகளுக்குரிய அஷ்டாங்கயோகம் ஆகவும் இருக்குமென்றும், ச. ௫ இல் ஞானயோகமும் அஷ்டாங்கயோகமும் ஸமத்வபுத்தி

யை ஆதாரமாகக் கொண்டும், ஓரே பலனாகிய மோக்ஷத்தைக் கருதியும் இருப்பதால் வேறல்ல என்றும், கூறியிருக்கின்றார். ஞானஶாஸ்த்ர விசாரணையும் ஞானயோக அப்யாஸங்களும் கர்மாநுஷ்டானங்களும் அஷ்டாங்கயோக அப்யாஸங்களும் பக்தியில் வேறொன்றி நின்றால் மாத்ரம் வளர்ந்து, ப்ரயோஜனத்தை ஶீக்ரமாகக் கொடுக்கும். ஆதலால், பக்தியோகத்தையும் அஷ்டாங்கயோகத்தையும் ஞானயோகத்தையும் பேதித்துப் பேசுவதற்கு ந்யாயமில்லை.

துக்க நிவ்ருத்தி என்ற மோக்ஷம், ஞானயோகத்துக்கு ஸாக்ஷாத்பலனாகவும், பக்தியோகத்துக்கும் அஷ்டாங்கயோகத்துக்கும் பரம்பராபலன் ஆகவும் இருக்கின்றது.

இவ்வாறு அகண்டாஹார ஸாயுஜ்ய மோக்ஷபதவியைக் கூறி, அடுத்த மந்த்ரத்தில் இதற்கு அநுகூலமான அர்ச்சிராதி யையும் ப்ரதிகூலமான ஆவ்ருத்தியையும் விளக்கி, அதன்மேல் அநாவ்ருத்தி மார்க்கத்தை ஶுக்லகதி என்றும் ஆவ்ருத்திமார்க்கத்தை க்ருஷ்ணகதி என்றும், இந்த இரண்டு கதிகளும் பூலோகத்திலுள்ளவர்களுக்கு ஶாஶ்வதமாக நியமிக்கப்பட்டன என்றும், இவற்றின் லக்ஷணங்களை அறியாத கர்மாநுஷ்டானி ஸகல பதவிகளுக்கும் பரமமான மோக்ஷத்தைப் பெறமாட்டானென்றும் பகவான் உயசு, உயஎ, உயஅ ம் மந்த்ரங்களில் அருளினார்.

**உயக.** யோகிகள் (1) எந்தக்காலத்தில் (2) புறப்பட்டு (3) அநாவ்ருத்தியையும் (4) ஆவ்ருத்தியையும் (5) பெறுகின்றார்களோ, அந்தக் காலத்தைக் (6) கூறப்போகின்றேன்.

(1) ஸகாமபுத்திமான்களும் நிஷ்காமபுத்திமான்களும் ஆகிய இருபக்ஷ கர்மாநுஷ்டானிகள்.

(2) கதியில், மார்க்கத்தில்.

(3) தன்னுடைய ஸ்தூலதேஹம் நழுவினபின் சென்று.

(4) இந்த லோகத்துக்குத் திரும்பாமல் மகர்லோகம், ஜனலோகம், தபலோகம், ஸத்யலோகம் என்ற மேல் லோகங்களுக்குச் செல்லுதலையும்.

"அநாவ்ருத்தி"=திரும்பிவருதல் இல்லாமை.

(5) பித்ரு லோகத்தையும் ஸ்வர்க்க லோகத்தையும் பெற்றபின் இந்தப் பூலோகத்துக்குத் திரும்பிவருதலையும்.

"ஆவ்ருத்தி"=திரும்பிவருதல்.

(6) அந்த ஶுக்ல கதியையும், க்ருஷ்ண கதியையும்.

**உ௰௪. ப்ரஹ்மவித் ஜனங்கள் (1) புறப்பட்டு, அக்நி, ஜ்யோதிஸ், அஹஸ், ஶுக்லம், ஆறுமாத உத்தராயணம் என்றவைகளில் ப்ரஹ்மத்தைப் பெறுகின்றனர் (2).**

(1) ப்ரஹ்மத்தை அறியவிரும்புகின்ற ஜீவாத்மாக்கள் அதாவது, நிஷ்காம கர்மானுஷ்டானிகள்.

(2) இதில் கூறிய விஷயம் சாந்தோக்ய உபநிஷத்தில், ரு வது அத்யாயம் ௰ வது கண்டம் முதல், இரண்டு மந்த்ரங்களில் மேல் வருமாறு விரித்து உரைக்கப்பட்டது:

"எவர்கள் ஶ்ரத்தையே தபஸ் என்று வனத்தில் உபாஸிக்கின்றனரோ, அவர்கள் அர்ச்சிஸை அடைகின்றனர். அர்ச்சிஸில் (அக்நியில்) நின்று அஹஸை, அஹஸில் (பகலில்) நின்று பூர்ணபக்ஷத்தை, பூர்ணபக்ஷத்தில் (ஶுக்லபக்ஷத்தில்) நின்று உத்தராயணத்தை, உத்தராயணத்தில் (வடயணத்தில்) நின்று ஸம்வத்ஸரத்தை, ஸம்வத்ஸரத்தில் (௰உ மாசகதியில்) நின்று ஆதித்யனை, ஆதித்யனில் நின்று சந்த்ரனை, சந்த்ரனில் நின்று வித்யுத்தை, வித்யுத்தில் (மின்னலில்) நின்று இந்தத் தேவயானம் (திவ்யமார்க்கம்) பெறச்செய்கின்றது."

**உ௰௫. தூமம் ராத்ரி அவ்விதமே க்ருஷ்ணம் ஆறுமாத தக்ஷிணாயனம் என்றவைகளில் புறப்பட்ட யோகி சந்த்ரனைச் சார்ந்த ஜ்யோதிஸைப் பெற்றுத் திரும்புகின்றான் (1).**

(1) இதிற்குறித்த விஷயம் சாந்தோக்ய உபநிஷத்தில் ரு வது அத்யாயம் ௰ வது கண்டம் ௩, ௪ மந்த்ரங்களில் மேல் வருமாறு விளக்கப்பட்டது:—

"எவர்கள் தங்கள் க்ராமத்தில் இஷ்டம் (யாகம்), பூர்த்தம் (வாபி, கூப தடாகாதிகள்) தானங்களையும் தபஸ் என்று உபா

வஸிக்கின்றனரோ, அவர்கள் தூமத்தை (புகையை) அடைகின்ற னர். தூமத்தில் நின்று ராத்ரியை, ராத்ரியில் நின்று அபரபக்ஷ த்தை (அஃதாவது க்ருஷ்ணபக்ஷத்தை), அதில் நின்று தக்ஷிணா யனத்தை (தென்பயணத்தை)ப் பெறுகின்றனர். இவர்கள் ஸம் வத்ஸரத்தை அடையமாட்டார்கள்.

"தக்ஷிணாயனத்தில் நின்று பித்ருலோகம், பித்ருலோகத்தில் நின்று ஆகாஸம், ஆகாஸத்தில்நின்று சந்த்ரனைப் [பெறுகின்ற னர்.]"

"இந்த ஸோமராஜா தேவர்களுக்கு அன்னம். அவனைத் தேவர்கள் பக்ஷிக்கின்றனர். அதில் [கர்மபலன்] அழியும்வரை யில் வஸித்து இந்த வழியே மறுபடியும் திரும்புகின்றனர். எப் படியெனில், ஆகாஸத்தைப் பெறுகின்றான். ஆகாஸத்தில்நின்று வாயுவைப் பெறுகின்றான். வாயுவாகி, தூமமாகின்றான. தூம மாகி, மேஹமாகின்றான் மேஹமாகி, வருஷிக்கின்றான். இவ் விடத்தில் இவர்கள் நெல்லு, யவை, ஓஷதி (புல்லு, பூண்டு) விருக்ஷம், எள்ளு, உழுந்து என்றெல்லாமாகப் பிறக்கின்றனர். எவன் அன்னத்தைப் பக்ஷிக்கின்றானோ, எவன் ரேதஸை (வீர்யத்தை)த் தெளிக்கின்றானோ, அது மறுபடியும் உண்டா கின்றது."

"ஸம்வத்ஸரமே ப்ரஜாபதி. அதனுடைய அயனங்கள் தக்ஷி ணம், உத்தரம். எவர்கள் இதில் இஷ்டாபூர்த்தங்களை உபாஸி க்கின்றனரோ, அவர்கள் சந்த்ரனுடைய லோகத்தை ஜயிக்கின் றனர். அவர்களே திரும்பி ஆவர்த்திக்கின்றனர். ஆதலால், இந்த ருஷிகள் (பலனைக் கருதி இஷ்டாபூர்த்தங்களைச் செய்யும் க்ருஹஸ்தர்கள்) ப்ரஜா காமர்களாய்த் தக்ஷிணத்தைப் பெறு கின்றனர். இது பித்ருயானம். உத்தரமாக தபஸினாலும், ப்ர ஹ்மசர்யத்தாலும், ஸ்ரத்தையாலும், வித்தையாலும், ஆத்மா வைத் தேடி ஆதித்யனை ஜயிக்கின்றனர். இதுதான் ப்ராணங்க ளின் இருப்பிடம். இது அம்ருதம். இதுவே அபயம். இதுவே பராயணம். இதில் நின்று புனர் ஆவர்த்தியைப் பெறமாட்டார் கள். இது, புனராவ்ருத்தி நிரோதம்."

உ௰௬. இந்த ஶுக்ல க்ருஷ்ண என்ற கதிகள் (1) லோகத்தாருக்கு (2) ஶாஶ்வதம் (3) என்று ஒப்புக்கொள்ளப்பட்டன (4). ஒன்றினால் (5) அனாவ்ருத்தியைப் பெறுகின்றான் (6). மற்றொன்றினால் (7) ஆவ்ருத்திக்கின்றான் (8).

(1) இந்த தேவயானமும், பித்ருயானமும்.

(2) பூலோகத்தில் வாழ்கின்றவர்களுக்கு

(3) எக்காலமும் உள்ளன; ஸநாதனவிதிகள்.

(4) த்ரிகால உணர்ச்சியுள்ள மஹான்கள் அறிவார்கள்.

(5) தேவயானத்தால்.

(6) மகர்லோக முதலிய மேல் லோகங்களிற் சென்று, பூலோகத்துக்குத் திரும்பாமல் ஜீவன்முக்தன் ஆகின்றான்.

(7) பித்ருயானத்தால்.

(8) பித்ரு லோகத்துக்கும் ஸ்வர்க்க லோகத்துக்கும் சென்று, விஷயஸுகங்களை அநுபவித்து மீளவும் பூலோகத்தில் வந்து பிறக்கின்றான்.

தேவயானம், பித்ருயானம் என்ற ஶுக்ல, க்ருஷ்ணகதிகளைப்பற்றி ப்ரகதாரண்யக உபநிஷத்துள் ௬. ௨ இலும், ப்ரஶ்னோபநிஷத்துள் ௧. ௯ இலும் பேசும்.

உ௰௭. பார்த்த, இந்த இரண்டு வழிகளையும் அறிகின்றவன் யோகி (1). எவனும் மோஹத்தை அடைகின்றான் இல்லை. ஆதலால், அர்ஜுன, எல்லாக் காலங்களிலும் யோகம் பெற்றவனாய் இரு (2).

(1) ஸகாம புத்தியோடு கர்மாநுஷ்டானங்களைச் சாதிக்கின்றவன் க்ருஷ்ணகதியால் த்ரிலோக ஸம்ஸாரத்தில் உழன்று, துக்கத்தையே அநுபவிப்பானென்றும், நிஷ்காம புத்தியோடு கர்மாநுஷ்டானங்களை நடத்துகின்றவன் ஶுக்லகதியால் மகர் முதலிய மேல் லோகங்களிற்சென்று, துக்கநிவ்ருத்தி பெறுவானென்றும், இந்தப் பூலோகத்திலும் நிஷ்காம புத்திமானுக்கு துக்கநிவ்ருத்தி உண்டென்றும் அறிந்து தனக்குரிய கர்மங்களை நிஷ்காம புத்தியோடு செய்யவேண்டுமென்று ஜாக்ரதையாக ஜீவிக்கின்றவன் "யோகி" என்று அழைக்கத்தக்கவன். மற்ற

*வர்களெல்லாம் தங்களுடைய நன்மைகளை அறியாமல் தட்டழிந்து போகிகளாயும் ரோகிகளாயும் திரிவார்கள்.*

*(2) நிஷ்காம கர்மானுஷ்டானியாய் உனக்குரிய க்ஷத்ரிய தர்மங்களை விருப்பு வெறுப்பு அற்றும், பயம் ஸந்தோஷம் அற்றும், செய்.*

**உ௬அ.** யஜ்ஞங்களிலும் தபஸ்களிலும் தானங்களிலும் எந்தப் புண்ய பலன் (1) வேதங்களில் காண்பிக்கப்பட்டதோ, அதனையெல்லாம் யோகியானவன் (2), இதனை அறிந்து (3), கடக்கின்றான் (4). ஆத்யமும் (5) பரமுமாகிய (6) ஸ்தானத்தையும் (7) பெறுகின்றான்.

*(1) அழிவுள்ள இக பர ஸுகங்கள்.*

*(2) நிஷ்காம கர்மாநுஷ்டானி.*

*(3) ஶுக்ல கதியின் நன்மையையும், க்ருஷ்ண கதியின் தீமையையும், அறிந்து.*

*(4) ஸம்ஸார ஸமுத்ரத்தைத் தாண்டுகின்றான்.*

*(5) அநாதியும்; இறப்புப் பிறப்பு அற்றதும்.*

*(6) ப்ரக்ருதி கார்யங்கள் யாவுக்கும் மேலானதும் ஆகிய.*

*(7) ப்ரஹ்ம நிர்வாணத்தை; மோக்ஷத்தை.*

உபநிஷத்கள் என்றும், ப்ரஹ்மவித்தை என்றும், யோகஶாஸ்த்ரம் என்றும், பகவத்கீதைகள் என்றும் கூறப்பட்ட ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதத்தில் ப்ரஸித்திபெற்ற அக்ஷரபரப்ரஹ்மயோகம் என்ற எட்டாம் அத்யாயம் முற்றிற்று.

---

# ஒன்பதாவது அத்யாயம்.

## ராஜவித்யா ராஜகுஹ்ய யோகம்.

---

[அஃதாவது, ஸகல கல்விகளினும் மிக மேலான கல்வியையும், ஸகல ரஹஸ்யங்களிலும் அதிநுட்ப ரஹஸ்யத்தையும், அர்ஜுனன் கேட்டுச் சிந்தித்தான் என்று விளக்கும் ஒன்பதாம் பாடம்.

---

ப்ரக்ருதி மல ஸ்வரூபமாயிருப்பதால், ப்ரக்ருதிகார்யங்களைப்பற்றிய கல்வி மலநீக்கத்துக்கு ஹேதுவாயிருக்காது. ஆத்மாவைப்பற்றிய கல்வியே மலநீக்கத்தைத் தருவதாலும், ஸகல வித்தைகளுக்கும் ப்ரஹ்மவித்தை மகுடமாயிருப்பதாலும், ஆத்மவித்தையை "ராஜவித்தை" என்றார்.

ப்ரக்ருதியில்நின்று ஜனித்த ஸூக்ஷ்ம ஸ்தூல தேஹங்கள் ஆத்மாவை மறைத்து நிற்பதால், அந்தப் போர்வைகளைக் கிழித்து அவற்றிற்கப்பால் விளங்கும் ஆத்மாவைக் காண்பிக்கும் வித்தை மிகக் காம்பீரமாய் (ஆழமாய்) இருப்பதாலும், அபக்விகளுக்கு எட்டாத தூரத்தில் இருப்பதாலும், அந்த மறைவான வித்தையை "ராஜகுஹ்யம்" என்றார்.

"குஹ்யம்" என்பது உள்ளறை, மறைவான இடம். அவ்விடத்தில் மறைவாக இருக்கும் பொருளையும் இந்தப்பதம் குறிக்கும்.

"ராஜகுஹ்யம்" என்பது மறைவான பொருள்களில் அதிநுட்ப அறிவால் ப்ரயாஸப்பட்டு அறியத்தக்கபொருள்.]

**ஸ்ரீ பகவான் கூறினர்:**

**க. எந்த விஞ்ஞான ஸஹித ஞானத்தை (1) அறிந்து அசுபத்தில் (2) நின்று விடுபடுவாயோ, அந்த மிக்க ரஹஸ்யத்தைப் பொறாமையற்ற (3) உனக்குக் கூறப்போகின்றேன்.**

(1) எ. உ,(௩). மெய்ப்பொருளாகிய சச்சிதாநந்தமே ஸகல ப்ரக்ருதி ஸ்வரூபங்களுக்கு ஆதாரமாய் இருக்கின்றது என்ற அறிவுடன் அறியும் அறிவு "விஞ்ஞானஸஹித ஞானம்" ஆகும்.

பரமாத்மாவுக்கும் ப்ரக்ருதிக்கும் ஆதார ஆதேய ஸம்பந்தம் உண்டென்பதை அறியாதவர்கள், ப்ரக்ருதியை மெய்ப்பொருளொன்று பாராட்டி, தேஹத்தையும் தேஹஸுகங்களையுமன்றி வேறு ஸுகங்கள் இல்லையென்று நிஸ்சயித்து, வாழ்நாளை வீழ்நாளாக்கித் துன்பப்படுவார்கள்.

(2) துன்பத்தில்; துக்க பய ஸோகங்களில்.

(3) பொறுமையால் சிறப்புப்பெற்ற; வரும் துக்க பய ஸோகங்களின் காரணங்களை விசாரித்துத் தெளியத்தக்க புத்தியுடைய.

உ. இது (1) ராஜ வித்தை(2), ராஜ ரஹஸ்யம் (3), பவித்ரம்(4), உத்தமம், (5) இது அநுபவமுறையாக அறியத்தக்கது (6), கர்மகௌஸலத்துக்குரியது (7), ஸுலபம், (8) மாறாதது (9).

(1) இந்த விஞ்ஞானஸஹித ஞானமாகிய மெய்ப்பொருளைப் பற்றிய ப்ராக்ருத வித்தை.

(2) அடிமைகளுக்கு ஆண்டவன் எவ்வளவு ஸ்ரேஷ்டனோ, அவ்வளவு ப்ரக்ருதி வித்தைகளுக்கு பரமாத்மாவில் ப்ரதிஷ்டைபெற்ற ஜீவப் பரக்ருதி பூதப் ப்ரக்ருதி கல்வி ஸ்ரேஷ்டம்.

(3) பரமாத்மாவைப்பற்றிய அறிவில் விளங்கும் உண்மைகள்; அதிமேலான, மிக அந்தரங்கமான, ஹ்ருதயகுஹையில் அறியத்தக்க பொருள்கள்; பரமார்த்தங்கள்.

(4) பரிஸுத்தப்படுத்தும் வஸ்து; அந்தஃகரணங்களிலும் ஜீவாத்மாக்களிலும் உள்ள மலங்களை நீக்கத்தக்க வஸ்து.

(5) ஸர்வ வித்தைகளிலும் உசிதம்; மிக்க உயர்வுபெற்றது.

(6) காதாற் கேட்டு மாத்ரமாவது, மனஸால் ரூபிகரம் செய்துமாத்ரமாவது, அறியத்தக்கதல்ல. ஸாக்ஷாத்காரமாகவே அறியவேண்டியது.

ஶ்ரவணமும் மனனமும் ஆனபின், ஆத்மா வேறு ப்ரக்ருதி வேறு என்று நிஶ்சயித்து, ஆத்மா ப்ரக்ருதி தத்வங்களில் நின்று நீங்கித் தனித்த அவஸரத்தில் தன்னை தர்ஶிக்க வேண்டும் என்று முயன்று, அந்த ஆத்மதர்ஶனத்துக்குரிய ப்ராணலய மனோலய அப்யாஸங்களை ஶ்ரத்தையோடு அநுஸரித்தால், கைவல்யதஶையில் ஸாக்ஷியாக ஆத்மா விளங்கும்.

இந்த ஸ்வாநுபவிக்கே விஞ்ஞானஸஹித ஞானத்தின் உண்மைகள் பூர்த்தியாகத் தெரியும் என்பதுபற்றி "இது அநுபவமுறையாக அறியத்தக்கது" என்றார்.

(7) யஜ்ஞம் தானம் தபஸ் என்ற கர்மாநுஷ்டானங்களைப் பூர்த்திசெய்யத்தக்கது.

கௌஶலம்=குஶலனுடைய தன்மை, ஸாமர்த்யம், ஸித்தி. உ. ருஉ, (உ).

"கர்மகௌஶலம்"=கர்மாநுஷ்டானஸித்தி; ஆத்மலக்ஷணங்களை விரித்து, ஆத்மாவுக்கும் ப்ரக்ருதிக்கும் உள்ள ஆதார ஆதேய நிலைகளை விளக்கும் ஞான ஶாஸ்த்ரங்களைக் கற்றால், யஜ்ஞம் தானம் தபஸ் என்ற கர்மங்களைச் சாதுர்யமாக நிறைவேற்றலாம் என்பதுபற்றியும், அவற்றின் ஸ்வர்க்காதி பலன்களிற் சிக்காமல் லகுவில் நிஷ்கர்மாவாகலாம் என்பதுபற்றியும், ப்ரஹ்மவித்தையை "கர்மகௌஶலத்துக்குரியது" என்றார்.

(8) பக்விக்கு லகுவாயிருக்கும், அபக்விக்குப் பாரமாயிருக்கும்.

(9) ப்ரக்ருதி ஸ்வரூபங்களாகிய தேஹங்கள் கால தேச திக்குகளுக்கு ஏற்றபடி மாறிமாறியே வரும். ஆனால், ப்ரஹ்மவித்தை மாறாதவஸ்துவாகிய ஆத்மாவைப் பற்றியிருப்பதால், ஸதாகாலமும் வேறுபாடின்றி இருக்கும். இதுபற்றி, கல்வி பூர்வபக்ஷம் என்றும், ஸித்தாந்தபக்ஷம் என்றும் இருவகைப்படும். பூர்வபக்ஷக் கல்வி ப்ரக்ருதியைச் சார்ந்த கல்வி, அழிவுள்ள வஸ்துக்களைப்பற்றிய வித்தை. ஸித்தாந்தபக்ஷக் கல்வி நிலையுள்ள ஆத்மாவைப்பற்றிய ஸநாதனவித்தை.

௩. பரந்தப, இந்தத் தர்மத்தில் (1) ஶ்ரத்தையில்லாத புருஷர்

கள் என்னைப் பெறாமல் ம்ருத்யுவோடு (2) கூடின ஸம்ஸாரவழியில் (3) இருக்கின்றனர்.

(1) விஞ்ஞான ஞான அநுஷ்டானத்தில்; பரமாத்மாவை ஆதாரமாகக்கொண்ட ஸூக்ஷ்ம ஸ்தூலதேஹங்களைப் பற்றிய விசாரணையில்.

(2) மரணத்தோடு.

(3) புனர் ஆவ்ருத்தி மார்க்கத்தில்; பூ, புவர், ஸ்வர் என்ற த்ரிலோக ஸஞ்சாரவாழ்வில்.

௪. அவ்யக்த (1) மூர்த்தியான (2) என்னால் இந்தலோகம் எல்லாம் வியாபிக்கப்பட்டிருக்கின்றன.' எல்லாப் பூதங்களும் (3) என்னிடம் ப்ரதிஷ்டை பெற்றிருக்கின்றன (4). நான் அவற்றில் ப்ரதிஷ்டை பெறவில்லை (5).

(1) ஐம்பொறிகளுக்கும் அந்தஃகரணங்களுக்கும் எட்டாத.

(2) ஸ்வரூபியான.

மூர்த்தி=ரூபத்தை உடையவன்.

அவ்யக்தமூர்த்தி=கண் மனஸ் முதலிய கருவிகளால் அறியக்கூடாத அமூர்த்தியாகிய மஹேஶ்வரன்; ஆத்ம ஸ்வரூபி.

(3) ஸூக்ஷ்ம ஸ்தூலதேஹங்களும்.

(4) என்னையே ஆதாரமாகக் கொண்டும், எனது பராஶக்தியாலேயே நாநா வ்ருத்திகளைப் பெற்றும், நிற்கின்றன.

(5) பரமாத்மாவாகிய நான் ப்ரக்ருதியால் இயற்றப்பட்ட சரீரங்களை ஆதாரமாகக்கொண்டு இருக்கவில்லை.

௫. பூதங்கள் என்னிடத்து நிற்கின்றவை அல்ல (1). ஐஶ்வரியோகத்தைப் பார் (2). எனது ஆத்மா (3) பூதங்களைச் சுமக்கின்றதாயிருந்தாலும், பூதங்களைத் தோற்றுவிக்கின்றதாயிருந்தாலும், பூதங்களில் ஸங்கம் (4) பெற்று இருக்கவில்லை.

(1) ப்ரக்ருதி சொரூபங்கள் ப்ரக்ருதி வஸ்துவாகிய மாயா விரிவில் தோன்றி அழிகின்றன. இவை எனக்கு அன்யம். என்னில் இருக்கின்றவையல்ல. மாயா ஆகாஶத்தில் உள்ளன.

(2) ஐஸ்வரயோகம்=ஈஸ்வரனும் ப்ரக்ருதியும் கூடி நிற்கின்ற நிலை.

"ஐஸ்வரயோகத்தைப் பார்"=பரமேஸ்வரன் எவ்விதம் ஜீவர்களோடும் ஜகத்தோடும் கூடியிருக்கின்றார் என்று யோசித்து அறி.

ஜீவாத்மாக்களைப் பரிபக்குவப்படுத்தும் பொருட்டு, ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் திரோபவம் அநுக்ரஹம் என்ற பஞ்சக்ருத்யங்களை நடத்தும் பரமாத்மா எவ்விதம் ப்ரக்ருதியுட் புகுந்து மஹேஸ்வரனானர் என்ற விநோத அவஸ்தையை உனக்கு அறிவிக்கின்றேம்; அதை உற்றுக் கேட்பாயாக.

இந்த ஐஸ்வரயோகத்தில் பரமேஸ்வரன் ப்ரக்ருதியைப் பற்றியும் பற்றுமலும் இருப்பார்.

(3) எனது தேவாத்ம ஶக்தி.

ஶக்திமானுகிய பரமாத்மாவுள் அடங்கியிருக்கும் பராஶக்தியைத் தனது "ஆத்மா" (தேவாத்மஶக்தி) என்றார்.

(4) பிரிக்கக்கூடாத சேர்க்கை; கடும்பற்று.

௬. எங்கும் ஸஞ்சரிக்கின்ற வலிய வாயு நித்யம் எவ்விதம் ஆகாஶத்தில் [அதனை ஸ்பர்ஶிக்காமல் இருக்கின்றதோ], அவ்விதம் எல்லாப் பூதங்களும் என்னிடம் இருக்கின்றன (1) என்று அறி.

(1) பரமாத்மாவாகிய என்னை ப்ரக்ருதி மாயாவஸ்துக்கள் ஒன்றும் தீண்டவுமாட்டாது, வாதனைசெய்யவுமாட்டாது.

௭. கௌந்தேய, கல்பகால (1) முடிவில் எல்லாப் பூதங்களும் என்னுடைய ப்ரக்ருதியை அடைகின்றன (2). அவைகளை மறுபடியும் கல்பத்தின் ஆதியில் நான் விஸர்க்கம் செய்கின்றேன் (3).

(1) ஆத்மகோடிகளை மலத்தினின்று உத்தாரணம் செய்வதற்காக மஹேஸ்வரன் பரமாணுவாகிய மூலப்ரக்ருதியினின்று விகாரசொரூபமான ப்ரக்ருதியை விரித்து, கால தேச திக் என்ற பரிச்சின்னங்களை வகுத்து, ப்ரஹ்மாவை உண்டுபடுத்தி ஸ்ருஷ்டிகர்த்தாவாக நியமித்தார். இவருக்கு விதிக்கப்பட்ட

ஒரு பகற்காலம் "கல்பம்" எனப்படும். இவருடைய நூறு வயசும் ஏகதேஸத்தில் "கல்பம்" எனப்படும்.

இந்தக் கல்பத்தின் எல்லை அதிக விஸ்தாரமாயிருப்பதால், அதைப் படிப்படியாக ப்ரயாஸப்பட்டே க்ரஹிக்கவேண்டும்.

பூலோகத்தில் வசிக்கும் மானுடர்களுக்குரிய வருஷங்களை ஆதாரமாகக்கொண்டு, புவர் ஸ்வர் மகர் ஜன தப லோகங்களில் வசிக்கும் தேவர்களுக்குரிய வருஷங்களை நிதானித்து, அவ்வுலகங்கட்கு மேற்பட்ட ஸத்யலோகத்தில் வீற்றிருக்கும் ஈஸ்வரனுகிய ப்ரஹ்மாவுக்குரிய ப்ராஹ்ம காலமாகிய கல்பத்தைக் கணக்கிடவேண்டும்.

மானுடருக்கு நூறுவயது விதிக்கப்பட்டதுபோல, தேவர்களுககும், அவர்களை ஸ்ருஷ்டித்த ப்ரஹ்மாவுக்கும், நூறுவயது விதிக்கப்பட்டது. ஆனல், மானுடரின் காலாந்தரமும் தேவர்களின் காலாந்தரமும் ப்ரஹ்மாவின் காலாந்தரமும் வெவ்வேறு அளவை பெற்றிருக்கும். (அந்தரம்=இரண்டு எல்லைகட்கு உட்பட்ட விஸ்தாரம்.)

ஆங்கிலேய பாஷையில் 'எர்த்' (Earth) என்று கூறப்பட்ட ஜம்பு த்வீபத்தில் வாழும் மானுடர்களுக்கு ஸூர்யனது உதயத்தாலும் அஸ்தமனத்தாலும் அறுபது நாழிகைகொண்ட ஒரு தினம் ஏற்படுகின்றது. இப்படி 360 நாள்கொண்டது ஒருவருஷமாகும். ஜம்பு த்வீபத்திற்கு அதிகதூரத்திலிருக்கும் ஸ்வர்க்காதி லோகங்களில் வசிக்கும் தேவர்களுக்கு ஸூர்யனது உத்தராயணம் ஓர் பகலாகியும் தக்ஷிணையனம் ஓர் இரவாகியும் இருப்பதால், மானுடர்களின் வருஷம் ஒன்று தேவர்களின் நாள் ஒன்றுகும்.

அநேகநேக வருஷங்கள் கொண்டது ஒரு யுகமாகும். ஸூர்ய சந்த்ராதி நவக்ரஹங்களின் விசேஷ சேர்க்கைகளால் யுகங்கள் பிரிக்கப்பட்டன. இந்த நக்ஷத்ரங்கள், சக்ரம் செல்வதுபோல, க்ரமமாகக் காலத்திற்குக்காலம் விசேஷ ஸம்பந்தங்களைப் பெற்று நிற்கும். இவ்வித விசேஷ ஸம்பந்தங்களைப் பற்றி யுகங்களின் காலாந்தரங்கள் கணக்கிடப்பட்டன.

கலியுகத்தின் காலாந்தரம் 432,000 மானுட வருஷங்கள்.
த்வாபரயுக காலாந்தரம் 864,000 மானுட வருஷங்கள்.
த்ரேதாயுக காலாந்தரம் 1,296,000 மானுட வருஷங்கள்.
க்ருதயுக காலாந்தரம் 1,728,000 மானுட வருஷங்கள்.

இந்த சதுர்யுக சக்ரத்தை "மஹாயுகம்" என்பர் பெரியோர். இதற்குத் தொகுதி, மனுஷ்யகாலக் கணக்கின்படி, 4,320,000 வருஷங்கள்; தேவகாலக் கணக்கின்படி 12,000 வருஷங்கள்.

இப்படி ஆயிரஞ் சதுர்யுகங்கள் கொண்ட 4,320,000,000 மானுடவருஷங்கள் ப்ரஹ்மாவுக்கு ஒரு பகலாம். இப்படியே அவருக்கு 4,320,000,000 மானுடவருஷங்கள் ஓர் இரவாம். ஆகவே, இவருக்கு ஒருநாள் 8,640,000,000 மானுட வருஷங்கள் கொண்டதாகும்.

இவருடைய 360 நாளாகிய ஒருவருஷம் 3,110,400,000,000 மானுட வருஷங்கள் கொள்ளும்.

இவருடைய ஜீவிய காலமாகிய நூறு ப்ராஹ்ம வருஷங்கள் 311,040,000,000,000 மானுட வருஷங்களாம். இப்படி இருப்பதால் ப்ரஹ்மாவினுடைய ஒரு (second) நொடிப் பொழுது 100,000 மானுட வருஷத்திற்கு ஸமமாகும்.

ஏழு கீழ்லோகங்களையும் ஏழு மேல்லோகங்களையும் உள்ளடக்கிநிற்கும் ப்ரஹ்மாண்டத்தில் வாழும் ஸ்ருஷ்டிகர்த்தாவாகிய ப்ரஹ்மாவுக்கு மஹேஶ்வரன் கல்பித்த பகலே ப்ரஹ்மாண்டத்தில் மிக நீடிய பகலாயிருப்பதால், அக்காலத்தைக் "கல்பம்" என்று பெரியோர் கூறுவர்.

எனவே, கல்பம் என்ற பதம் ப்ரஹ்மாவுக்குக் கற்பித்த ஒரு பகல் என்று ஸாதாரண பொருள்படும். ஏகதேஶத்தில் அவருடைய நூறு வயசையும் குறிக்கும்.

(2) மஹேஶ்வரன் ப்ரஹ்மாவுக்கு ஆஞ்ஞாபித்த ஒரு பகலாகிய 4,320,000,000 மானுட வருடங்கள் முடியுங்காலத்தில், நைமித்திக ப்ரலயம் உண்டுபடும்.

ப்ரலயம் என்றது தோன்றினவை அழிதல், ஒடுங்குதல். இது நித்யம் நைமித்திகம் ப்ராக்ருதம் என மூவகைப்படும்.

தோன்றிய வஸ்துக்களின் அணுக்கள் வளர்தல் குன்றுதல் அழிதல் என்ற வேற்றுமைகளை இடையின்றிப் பெற்றிருப்ப தால், இந்த நிமிஷாந்தர மாறுதலை "நித்யப் ப்ரலயம்" என்பார் கள்.

ப்ரஹ்மாவின் பகலாகிய கல்பகால முடிவில் ஸம்பவிக்கும் அழிவு "நைமித்திக ப்ரலயம்" எனப்படும். இவருடைய ஜீவ கால முடிவில் ஸம்பவிக்கும் அழிவு "ப்ராக்ருத்திக ப்ரலயம்" எனப்படும்.

விஷ்ணுபுராணம் ௬. ௩ இல், பராஸரமுனிவர் ப்ரலயங்க ளைப்பற்றிக் கூறும்பொழுது, ப்ரஹ்மாவுடைய ஒரு பகற்கால மாகிய கல்பமுடிவில் பூமியின் ப்ரஸவஸக்திக் குறைவினால் ஜனங் கள் பலவீனப்பட்டு இறப்பார்கள் என்றும், அதன்பின், ருத் ரன் ஸூர்ய ரேகைகளிற் சென்று, எங்கு நீர் உண்டோ அதை யெல்லாம் உறுஞ்சி, கீழேழு லோகங்களையும் பூ புவர் ஸ்வர் லோகங்களையும் அக்கினியால் தஹித்து, மேகங்களை ஓயாமல் இடி முழக்கத்தோடு அநேக வருஷகாலம் வர்ஷிக்கச்செய்து, அந்த தமலோகங்கள் தோறும் எரிந்துகொண்டிருந்த அக்னி யை அணைத்து, எல்லையற்ற ஸமுத்ரத்தைப் பாதாலந்தொட்டு ஸவர்க்கலோக முடிவிலுள்ள ஸப்தருஷி லோகங்கள் வரையில் விரிப்பார் என்றும், அதன்பின், ப்ரஹ்மா வாயுக்களால் மேகங் களைச் சிதறச்செய்து, ஆதிஶேஷ ஸர்பமீது ஶயனம் செய்வார் என்றும், அவர் ஶயனம் செய்கின்ற காலத்திலே தம லோகங் கள் இருந்த இடமெல்லாம் இருளால் மூடப்பட்டிருக்கும் என் றும், அவரது ராத்ரி முடிந்தபின் அவர் விஜயமாகி தமலோகங் களை மீளவும் ஸ்ருஷ்டிப்பார் என்றும், தமலோகங்களுக்கு மேற்பட்ட மஹர் ஜன தப ஸத்ய லோகங்கள் இவரது ஸுஷு ப்தி காலத்தில் அழியாமல் தனது நூறு வருஷமுடிவு காலத்தி லே அழியும் என்றும், விளக்கினார்.

ப்ரஹ்மாவின் அந்தியகாலத்தில்—அதாவது, தான் பிற ந்து 311,040,000,000,000 வருஷங்கள் சென்றபின்—"ப்ராக் ருத்திக் ப்ரலயம்" ஸம்பவிக்கும். இதில் மஹர் ஜன தப ஸத்ய

லோகங்களும், அவற்றிலுள்ள ஸகல ஸூக்ஷ்ம ஸ்தூலதேஹங்களும் ஸம்ஹாரகர்த்தாவாகிய ருத்ரனால் தஹிக்கப்படும். அதன்மேல், பஞ்ச தன்மாத்ரைகள் என்னும் ஸூக்ஷ்மப்ருதிவியும், ஸூக்ஷ்மஅபஸும், ஸூக்ஷ்மஅக்நியும், ஸூக்ஷ்மவாயுவும் க்ரமமாய் ஒன்றுக்குள் ஒன்று அடக்கப்பட்டு, கடையில் நின்ற ஸூக்ஷ்ம ஆகாஶமும் பரம அணுவாகிய மூலப்ரக்ருதியில் செலுத்தப்பட்டு ஒடுங்கும்.

"மன்னுடைய ப்ரக்ருதி"=மன்னுடைய பஞ்சக்ருத்யத்திற்கு உபயோகிக்கப்பட்ட ப்ரக்ருதி.

ஈண்டு "ப்ரக்ருதி" என்றது அதன் முக்குண ஸாம்ய அவஸ்தையை.

(3) "விஸர்க்கம்"=வெளிப்பிய விடுதல், ஸ்ருஷ்டித்தல்.

**அ. எனது ப்ரக்ருதியை முக்ய காரணமாகக்கொண்டு (1) அந்த ப்ரக்ருதிக்கு அடிமைப்பட்டதால் ஸ்வதந்த்ரத்தன்மையற்ற (2) இந்தப் பூதக்ராமம் (3) யாவற்றையும் மேலுமேலும் நான் விஸர்க்கம் செய்கின்றேன்.**

(1) "ப்ரக்ருதிம் அவஷ்டப்ய:"=ப்ரக்ருதியை அவஷ்டப்யமாக ஏற்படுத்தி=ப்ரக்ருதியை முக்ய காரணமாகக் கொண்டு.

ஸ்ருஷ்டிக்கு முக்ய காரணம் (முதற்காரணம்) ப்ரக்ருதி; உபாதான காரணம் (துணைக்காரணம்) தேவாத்ம ஶக்தி; நிமித்த காரணம் மஹேஶ்வரன்.

(2) ஸகல ஸூக்ஷ்ம ஸ்தூல ஶரீரங்கள் ப்ரக்ருதியின் தாமஸ ராஜஸ ஸாத்விக குணங்களால் வலைப்பட்டும் பந்திக்கப்பட்டும் இருப்பதால், அச்ஶரீரங்களுக்கு ஸ்வதந்த்ரம் (தாமாகவே இயங்கும் வலிமை) இல்லாத.

(3) ஸூக்ஷ்ம ஸ்தூல ஶரீரக்கூட்டம்; சர அசர ரூபமாயிருக்கும் ஜகத்; ஸ்தாவர ஜங்கமங்கள்.

க்ராமம்=கூட்டம்.

**கூ. தனஞ்சேய, அந்தக் கர்மங்களில் (1) உதாஸீனன்போல (2) ஸங்கமற்று இருக்கின்றவனாகிய என்னை அந்தக் கர்மங்கள் பந்திக்கின்றவையல்ல (3).**

(1) அந்த விஸர்க்க ஸம்ஹார க்ருத்யங்களில்.

(2) விலகி நிற்கின்றவன்போல, அன்யன்போல.

"உத்"+"ஆஸ" (விலகி இருத்தல்) என்ற தாதுக்களி னின்று ஜனித்த பதம் "உதாஸீனன்".

(3) என்னுடைய பஞ்சக்ருத்யங்களால் எனக்கு ஸுக துக்க வேதனைகளில்லை.

**௰ நாயகனுகிய (1) என்னல் ப்ராக்ருதி [என்றவஸ்து] சரம் (2) அசரம் (3) என்றவைகளோடு கூடிய [ஜகத்]தை ப்ரஸவிக்கின் றது (4). கௌந்தேய, இந்தக் காரணத்தால் (5) ஜகத் மேலுமேலும் தோன்றுகின்றது (6).**

(1) அந்தர்யாமி ஈஶ்வரனுகிய; ஜகந்நாதனுகிய.

(2) ஜங்கமங்கள்; ஊர்வன நடப்பன பறப்பன முதலியவை.

(3) ஸ்தாவரங்கள்; இயக்கமற்ற பர்வத வ்ருக்ஷாதிகள்.

(4) வெளிப்படுத்துகின்றது, பிறக்கச் செய்கின்றது.

(5) நான் நாயகனுக நின்று என் ஶக்தியை ப்ரக்ருதியிற் செலுத்தி, அதனை ப்ரஸவஞ் செய்யும்படி ஆஞ்ஞாபித்தலால்.

(6) எவ்வெப்போது நான் ப்ரக்ருதியோடு கூடினேனே, அவ்வப்போது ப்ரக்ருதி ஜகத்தைப் பெற்றுவிட்டாள்.

**௰க—௰உ. பயனற்ற (1) ஆசை யுடையவர்களும், பயனற்ற கர் மத்தைப் பொருந்தினவர்களும் (2), பயனற்ற கல்வி பெற்றவர்க ளும் (3), விபரீதபுத்தி யுள்ளவர்களு ம்(4) ஆகிய அஸுர ராக்ஷஸ மோகினி ப்ராக்ருதியை அநுசரித்த மூடர்கள் (5) ப்ராணிகளுக்கெல் லாம் மஹேஶ்வரனை எனது மேலான நிலையை(6) அறியாமல், என்னை மானுட ஶரீரத்தைப் பெற்றவனுக எண்ணி (7), இகழ்கின்றனர் (8).**

(1) மோக்ஷ பலனைக் கருதாத.

(2) ஸகாம புத்தியோடு கர்மங்களை அநுஷ்டிக்கின்றவர்க ளும்.

(3) தோன்றி அழியும் வஸ்துக்களை நித்ய வஸ்துக்களென் றெண்ணி, அவற்றைப் பெறும்பொருட்டு அவற்றைப்பற்றிய வித்தைகளைக் கற்றுக்கொள்ளுகின்றவர்களும்.

(4) இதுதான் ஸரியோ அதுதான் ஸரியோ என்று ஸம் ஶயப்பட்டு ஒரு நல்லவழியிலும் ப்ரதிஷ்டைபெறுத புத்தியோடு காலத்தைப் போக்குகின்றவர்களும்.

(5) முன்கூறிய நான்கு வகையாரையும் மூடத்தைப் பொருந்தினவர் என்று குறித்து, அந்த மூடத்திற்குக் காரணம் அஸுர ராக்ஷஸ ப்ரக்ருதியும் மோஹினி ப்ரக்ருதியும் என்று உபதேஶிக்கின்றார்.

ஈண்டு "அஸுர ராக்ஷஸ் ப்ரக்ருதி" என்று கூறினதை பதினாறுவது அத்யாயத்தில் "அஸுரஸம்பத்" என்று கூறி, அதன் லக்ஷணங்கள் டம்பம், செருக்கு, அதியபிமானம், கோபம், அகோரவசனம், அவிவேகம், விஷயபோகம், அனுசாரம், அஸத்யம், என்று விளங்கினார்.

"மோஹினி ப்ரக்ருதி" என்றது மோஹத்தை உண்டுபடுத்துங் குணம்.

(6) மேலான அவதாரபுருஷ நிலையை.

(7) தங்களைப் போலவே மானுடஶரீரம் தரித்ததால் நான் அவதார புருஷன் அல்லன் என்று நினைத்து.

(8) அவதாரபுருஷனைப்பற்றி மூடர்களுடைய எண்ணம் எவ்விதமிருந்தாலும், அறிவாளிகளுக்கு அப்புருஷனுடைய உண்மைலக்ஷணம் விளங்கும். துஷ்ட நிக்கிரஹத்திற்கும் ஶிஷ்டபரிபாலனத்திற்குமே மஹேஶ்வரன் லோகங்கள்தோறும் அவ்வவ் அவஸரத்திற்கேற்றபடி திருக்கோலங் கொள்ளுவார். தேவனுகவும், நரஸிம்ஹமாகவும், நரனுகவும், விலங்குருபமாகவும் வந்திருக்கின்றார். ஸத்வகுணம் பொருந்தின ஜனங்கள் அவருடைய திருக்கோலத்தின் குணுதிஶயங்களைக் கண்டு, அவரை வழிபட்டே நிற்பார்கள்.

**யகூ. பார்த்த, தேவ ப்ரக்ருதியை (1) அண்டின மஹாத்மாக்கள் (2) என்னைப் பூதங்களுக்குக் காரணன் (3) ஆகவும் அழிவற்றவனுகவும் அறிந்து, அநன்ய சித்தர்களாய் (4), [என்னையே] உபாஸிக்கின்றார்கள் (5).**

(1) பதினாறும் அத்யாயத்தில் தேவப்ராக்ருதியை "தைவ

ஸம்பத்" என்றார். இதன் லக்ஷணங்கள் சித்தஶுத்தி, நேர்நடத்தை, ஸத்யவாக்கு, அந்தக்கரண அடக்கம், ம்ருதுவான தன்மை, பொறுமை, தைர்யம், வேதாத்யயனம் முதலிய குணங்களென்று ஆங்கு விளக்கப்பட்டன.

(2) விஶாலபுத்தி பெற்றவர்கள்.

(3) நிமித்தகாரணன்.

குடத்துக்கு மண் முக்யகாரணமும், குயவனது தண்ட சக்கரங்கள் துணைக்காரணமும், குயவன் நிமித்தகாரணனும் ஆவதுபோல, ஜகத்துக்கு ப்ரக்ருதி முக்கியகாரணம், ஈஶ்வரனது ஶக்தி துணைக்காரணம், ஈஶ்வரன் நிமித்தகாரணன் என்று அறியவேண்டியது.

(4) பரமாத்மாவுக்கு அன்யமான ப்ரக்ருதி கார்யங்களில் மனதை வீணாகச் செல்லவிடாமல், ஆத்மவிசாரணையிலும் நைஷ்கர்ம்ய அநுஷ்டானத்திலும் ஸமாதிபழக்கங்களிலும் விஶேஷ நோக்கமுள்ளவர்களாய்.

(5) குணதோஷங்களைப் பெற்ற தேவதைகளை அண்டாமல், சிதாகாஶ சொரூபியான என்னிலேயே ப்ரதிஷ்டை பெற்றிருக்கின்றார்கள்.

"சென்று நாம் சிறுதெய்வம் சேர்வோமல்லோம், சிவனடியே சிந்திக்கப் பெற்றோம்" என்று திருநாவுக்கரசு ஸ்வாமிகளும் திருவாய்மலர்ந்தருளினார்.

**யச. எக்காலமும் என்னைத் துதித்தும் (1) நமஸ்கரித்தும் (2) த்ருட வ்ரதங் கொண்டும் (3) முயன்றுவருகின்ற நித்ய யுக்தர்கள் (4) என்னைப் பக்த்யால் உபாஸிக்கின்றனர் (5).**

(1) வாக்கால் ஸ்தோத்ரம் செய்தும்.

(2) மனஸாலும் புத்தியாலும் ஸேவைசெய்தும், பணிந்தும்.

(3) என்னையே சாரவேண்டும் என்ற உறுதியான சித்தத்தைப் பெற்றும். (சு, உயரு).

(4) ஓயாது என்னைப் பொருந்தினவர்கள்; ஸஹஜ நிஷ்டர்கள்.

(5) இந்த மந்த்ரத்தில் பக்திமார்க்கத்தின் லக்ஷணம் கூறப்பட்டது. எவன் ஓயாமுயற்சியுடன் பகவானை வாயால் போற்றியும் மனஸாலும் புத்தியாலும் "அவரே பரம்பொருள், அவருக்கே நான் அடிமை" என்று பணிந்தும், "அவர் திருவடியையே நான் சாரவேண்டும்" என்ற தீர்மானத்தோடு உபதேசிக்கப்பட்ட அப்யாஸங்களைச் சாதித்து வருகின்றானோ, அவன் பக்தி நெறியில் நிற்பவன்.

**மரு. விஸ்வதோமுகனை (1) என்னை ஞான யஜ்ஞத்தால் (2) பஜிக்கும் சிலர் (3) ஏகத்வத்தால் (4) உபாஸிக்கின்றனர். [சிலர்] ப்ரதக்த்வத்தால் (5) [உபாஸிக்கின்றனர்], [சிலர்] பஹுத்வத்தால் (6) [உபாஸிக்கின்றனர்].**

(1) விஸ்வதோமுகன்=எங்கும் ("விஸ்வதோ") முகமுற்றவன், ஸகல ரூபங்களிலும் ப்ரவேசித்து நிற்பதால். ("விஸ்"= ப்ரவேசித்தல்; "விஸ்வதஸ்"=எல்லாவிடங்களிலும்.)

மஹேஸ்வரன் ப்ரக்ருதியுட் புகுந்து, அதைக்கொண்டு நாநாவித ஸூக்ஷ்ம ஸ்தூல ரூபங்களை உண்டுபடுத்திக், தான் அவற்றுள் வீற்றிருப்பதால், அந்த ரூபங்கள் யாவும் அவரது "முகங்கள்" எனக் கூறப்படும்.

மஹேஸ்வரன் தரித்திருக்கின்ற கோடாகோடி ரூபங்களை அவரது "முகங்கள்" என்று கூறினும், அந்தர்யாமியாகிய அவரை அந்த முகங்களுக்கு அந்யமென்றே அறியவேண்டியது.

(2) ச. உமச-கூமஉ இல், யஜ்ஞம் பலவிதம் என்று விளக்கி, ச. கூமச-கூமரு இல், ஞானயஜ்ஞங்களை மஹேஸ்வரசேவை என்றார்.

(3) "ஞானயஜ்ஞத்தால் பஜிக்கும் சிலர்" என்ற பதங்களை ஞானயஜ்ஞத்தால் மஹேஸ்வரனை பஜிக்கின்றவர்களில் சிலர், என்று பொருள் பண்ணுக. எனவே, இந்த மந்த்ரம், ஞானயஜ்ஞத்தால் என்னை பஜிக்கின்றவர்களில் சிலர் ஏகத்வத்தாலும், சிலர் ப்ரதக்த்வத்தாலும், சிலர் பஹுத்வத்தாலும் என்னை உபாஸிக்கின்றனர், என்று வரும்.

(4) ஏகத்வம்=ஒன்று என்ற புத்தி.

அந்தர்யாமி ஈஸ்வரனும் ப்ரக்ருதி சொரூபங்களும் பிரிக்கப்படாவென்று எண்ணி மஹேஸ்வரனை சில பக்திமான்கள் உபாஸிக்கின்றனர்.

(5) ப்ரதக்த்வம்=வெவ்வேறு என்ற புத்தி.

அமலவஸ்துவாகிய பரமாத்மா மலவஸ்துவாகிய ப்ரக்ருதியுட் புகுந்து, அதைச் சுத்தப்படுத்தித் தன் பஞ்சக்ருத்யங்களை நடத்துவதால், அந்தர்யாமி ஈஸ்வரன் வேறு, ப்ரக்ருதி வேறுமென்றெண்ணி, மஹேஸ்வரனைச் சில பக்திமான்கள் உபாஸிக்கின்றனர்.

(6) பஹுதாத்வம்—வெகுவிதமானது என்ற புத்தி.

ஒன்றாயிருக்கும் பரமாத்மா ப்ரக்ருதியுட் புகுந்த அவஸரத்தில் பலரூபங்களோடு தோற்றுவதால், அவற்றில் ஒன்றைத் த்யானிக்கலாமென்றெண்ணி, சில பக்திமான்கள் அவரை வழிபடுவார்கள்.

மஹேஸ்வர பூஜைக்காரரின் மதம் இப்படி மூவகைப்பட்டிருக்கும். பரமாத்மாவைப்பற்றி வேதம் "க்ருத்ஸ்நம் ப்ரஹ்ம" (முழுப்பொருளாம் ப்ரஹ்மம்) என்றும், "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" (இதெல்லாம் ப்ரஹ்மம்) என்றும் கூறியிருக்கின்றது. இந்த வாக்யங்களுக்கு மஹேஸ்வர உபாஸகர் மூவித அர்த்தம் பண்ணுகின்றார்கள் என்றும், அவ்வர்த்தங்களும் அவற்றில் ப்ரதிஷ்டை பெற்ற அநுஷ்டானங்களும் தன்னையே பற்றி நிற்பதால், அவையெல்லாம் ஞானயஜ்ஞங்கள் என்றும், அவையாவும் மஹேஸ்வரனுக்குச் ஸம்மதமென்றும் இந்த மந்த்ரத்தால் விளக்கப்பட்டது.

அடுத்த மந்த்ரத்தில் ஞானயஜ்ஞம் ஸித்திக்கும் பொருட்டு பலவாய்த் தோன்றும் வஸ்துக்களில் சிலவற்றை ஆத்மபாவனை செய்கின்றார்.

**யசு. க்ரதுவும் நானே (1), யஜ்ஞமும் நானே (2); ஸ்வதாவும் நானே (3), ஔஷதமும் நானே (4), மந்த்ரமும் நானே (5), பசுவின் நெய்யும் நானே (6), அக்நியும் நானே (7), ஹுதமும் நானே (8).**

(1) ஶ்ரௌத கர்மங்களும் (அஃதாவது, ஶ்ருதியில் கூறப்பட்ட யாகாதி கர்மங்களும்) எனது ஶக்தியே.

(2) ஸ்மார்த்த கர்மங்களும் (அஃதாவது, வேத விதிவிலக்குக்களை விளக்கும் நூல்களாகிய ஸ்ம்ருதிகளில் கூறப்பட்ட ஜாதக ஔபாஸன முதலிய கர்மங்களும்) எனது ஶக்தியே.

(3) பிதுர்களுக்கு எள்ளும் தண்ணீரும் விட்டுத் தர்ப்பணம் (திருப்தி) செய்யும்பொழுது "ஸ்வதா" என்ற பதத்தை உச்சரிப்பார்கள். பிதுர்க்ருத்யத்திற்கு ஜீவனையுள்ள இந்த மந்த்ரம் எனது ஶக்தியே.

(4) நெல் முதலிய தான்யாதி ரூபங்களிலும், புல் பூடு வ்ருக்ஷம் முதலிய ரூபங்களிலும் உள்ள ஸூக்ஷ்மபலம் எனது ஶக்தியே.

ஓஷதி (கொடி செடி) யில் பிறந்தது ஔஷதம் (மருந்து) "ஓஷம்" (தாது "உஷ்"=எரிதல்) என்பது சூடு; "தி" என்பது குடித்தல். எனவே, "ஓஷதி" என்ற பதம் உஷ்ணத்தை வாங்கும் வஸ்து என்று பொருள்படும். ஓஷதி=கொடி செடி மரம்.

(5) மந்த்ரங்களின் தொகுதியாகிய வேதமும் நானே; வேதவாக்கிய ரூபங்களாய்த் தோன்றினவையெல்லாம் எனது ஶக்தியே.

(6) யாகாதி கர்மங்களுக்குரிய பசுவின் நெய்யில் உள்ள ஸூக்ஷ்மபலம் எனது ஶக்தியே.

(7) தீப ரூபமாய் ப்ரகாஶிக்கின்ற வஸ்துவில் உள்ள ஸூக்ஷ்மபலமும் எனது ஶக்தியே.

(8) மந்த்ரபூர்வமாக அக்நியில் ஸமித் நெய் முதலிய பதார்த்தங்களை இடுதல், "ஹூதம்" அல்லது "ஹோமம்." இந்தத் தான கர்மத்திலுள்ள ஸூக்ஷ்மபலம் எனது ஶக்தியே.

**௰எ. இவ்வுலகத்திற்குத் தந்தையும் நானே[1] தாயும் நானே[2], தாதாவும் நானே [3], பாட்டனும் நானே [4], அறியத் தக்கதும் நானே [5], பவித்ரமும் நானே [6], ஓங்காரமும் நானே [7], ருக்கும் நானே [8], ஸாமமும் நானே [9], யஜுஸும் நானே [10].**

(1) ஜகத்துக்கும் அதில் உள்ள ஸகல ஸூக்ஷ்ம ஸ்தூல ரூபங்களுக்கும் நிமித்தகாரணன் நானே.

(2) தோன்றினவைகளை அன்போடு வளர்க்கின்றவனும் நானே.

(3) லோகத்தாருக்கு ஸகல நன்மைகளையும் கொடுக்கின்றவனும் நானே.

(4) ஸ்ருஷ்டி கர்த்தாவாகிய ப்ரஹ்மாவைப் படைத்தவனும் நானே.

ஆதலால், ஜனங்களுக்குத் தான் பாட்டனாகின்றார்.

(5) ஸகலஸாஸ்த்ரங்களுக்கும் மேலான வேதங்களின் ஞானகாண்டமாகிய வேதாந்தத்தின் பொருளும் நானே; ப்ரஹ்ம வித்தைக்குரிய ஸ்ரேஷ்டப் பொருளும் நானே.

"வேத்யம்"=அறியத்தக்க பொருள்; அவஸ்யமாக அறிய வேண்டிய பொருள்.

(6) மலரஹித வஸ்துவும் நானே; பரிஸுத்தமும் நானே.

(7) ப்ரணவ நாதமும் நானே.

(8) வேதத்தின் ருக் நடையும் எனது ஶக்தியே.

(9) வேதத்தின் ஸாம நடையும் எனது ஶக்தியே.

(10) வேதத்தின் யஜுர் நடையும் எனது ஶக்தியே.

௰அ. கதியும் நானே (1), பர்த்தாவும் நானே (2), ப்ரபுவும் நானே (3), ஸாக்ஷியும் நானே (4), நிவாஸமும் நானே (5), ஶரணமும் நானே (6), ஸுஹிர்த்தும் நானே (7), ப்ரபவனும் நானே (8), ப்ரலயனும் நானே (9), ஸ்தானமும் நானே (10), நிதானமும் நானே (11), அவ்யயமான பீஜமும் (12) நானே.

(1) விஷய ஸுகத்தை விரும்பினவர்கள் அநுஸரிக்கின்ற ப்ரவ்ருத்தி மார்க்கமும், விஷய ஸுகத்தை வெறுத்து மோக்ஷ ஸுகத்தை விரும்பினவர்கள் அநுஸரிக்கின்ற நிவ்ருத்தி மார்க்கமும், எனது ஶக்தியே.

"கம்" (செல்லுதல்) என்ற தாதுவினின்று பிறந்த "கதி" என்ற பதம், வழி, மார்க்கம், என்று பொருள்படும்.

(2) சராசரங்களைத் தாங்கிக்கொண்டிருக்கின்றவனும் நானே, ஸர்வ ஜீவாத்மாக்களையும் உத்தாரணஞ் செய்கின்றவனும் நானே.

(3) ஸகல வஸ்துக்களையும் அடக்கி ஆளுகின்றவனும் நானே.

(4) ஸங்கமற்று ஸர்வத்தையும் அறிகின்றவனும் நானே. தன்னைவிட வேறொருவனுக்கு ஸர்வ ஸாக்ஷித்வம் இல்லை, என்பது கருத்து.

(5) சராசரங்களுக்கு இருப்பிடம் நானே.

(6) துன்பங்களை நீக்குகின்றவனும் நானே.

(7) ப்ரத்யுபகாரத்தை விரும்பாமல் உபகாரஞ் செய்கின்றவனும் நானே.

(8) ஸ்ருஷ்டிக்குக் காரணனும் நானே.

(9) லயத்துக்குக் காரணனும் நானே.

(10) ஜீவாத்மாக்களுக்குத் தக்க ஸ்தானமும் நானே.

(11) சராசரப்பொருள்களில் புதையல்போல மறைவாக இருக்கும் நிதி நானே.

(12) வித்தானது நிலத்தில் வீழ்ந்து வ்ருக்ஷமாவது போல என்னுடைய திவ்யஶக்தியே ப்ரக்ருதியுட்புகுந்து நாநாவித ஸூக்ஷ தோற்றங்களுக்குக் காரணமாயிருக்கின்றது.

அவ்யய பீஜம்=மாறுதலற்ற வித்து. அஃதாவது, பேரறிவிலும் பேரன்பிலும் நின்று ஒருபொழுதும் விலகாத தனது ஶக்தி.

௰௯. அர்ஜுந, நான் தபிக்கின்றேன் (1), நான் மழையை விடவும் நிறுத்தவும் செய்கின்றேன். நானே அம்ருதமும் ம்ருத்யுவும் (2) ஸதஸத்தும் (3).

(1) என்னுடைய ஶக்தியே, ஜனங்களின் கர்மத்திற்கு ஏற்றபடி, உஷ்ணத்தால் வாட்டுகின்றது.

(2) நானே ஜனங்களுக்கு சாவாமையையும் சாதலையும் கொடுக்கின்றேன்.

(3) அகண்ட மஹாகாஸமாகிய மாயையும் கண்டித மஹதி அந்தக்கரணங்களும் எனது ஸக்திகளே.

ஸதஸத்=ஸத் (உள்ளது) + அஸத் (இல்லது). எந்த இல்லாத வஸ்து உள்ள வஸ்துப்போல் தோன்றிநிற்குமோ, அது ஸதஸத். மானவதர்ம ஸாஸ்த்ரத்தில் (2-14) 'ஸதஸத்' மனஸ் என்று விளக்கப்பட்டது. மஹாகாஸம் என்ற மாயையும் ஸதஸத்.

உ0. ஸோமபநகநும் (1) பாபம் நீங்கினவநும் (2) ஆகிய த்ரிவேதங்களின் [கர்ம காண்டங்களைக்] கற்றவர்கள் (3) என்னைக் கர்ம யஜ்ஞங்களால் பூஜித்து ஸ்வர்க்க கமனத்தைப் பிரார்த்திக்கின்றனர் (4). அவர்கள் புண்யநுப ஸுரேந்த்ர (5) லோகத்தை அடைந்து ஸ்வர்க்கத்தில் சிறந்த தேவபோகங்களை அநுபவிக்கின்றனர்.

(1) யாக க்ருத்யங்களைச்செய்து ஸோமக்கொடி ரஸத்தைப் பானம் செய்கின்றவர்களும்.

(2) பாபகர்மங்களை அஞ்சிப் புண்யவழியில் நிற்கின்றவர்களும்.

(3) ருக் ஸாம யஜுர் வேதங்களைக்கற்று அவற்றில் கூறிய யாகாதி புண்யகர்மங்களை ஸ்ரத்தையோடு செய்து வருகின்றவர்கள்.

(4) மஹேஸ்வர உபாஸகர் ஞானயஜ்ஞத்தால் பூஜித்து ஞானசொரூபிகளாவதுபோல, கர்மயஜ்ஞத்தால் என்னை உபாஸிக்கின்றவர்கள் போகசொரூபிகளாய் ஸ்வர்க்காதி லோக ப்ராப்தியைப் பெறுகின்றனர்.

(5) தேவேந்த்ர.

உ0க. அவர்கள் விஸாலமான ஸ்வர்க்கலோகத்தை அனுபவித்துப் புண்யம் நஸித்தபின் மானுடலோகத்தைப் பெறுகின்றார்கள். இவ்விதம் த்ரயீதர்மத்தை (1) அடைந்த காமகர்மர்கள் (2) பிறப்பிறப்பைப் பெறுகின்றனர்.

(1) ருக் ஸாம யஜுர் வேதங்களில் விதிக்கப்பட்ட யாகாதி கர்மங்களை.

(2) விஷயஸுக காமிகள், புண்யகர்மபலனை இச்சிக்கின்றவர்கள்.

**உ௰உ. எந்த ஜனங்கள் அநன்யர்களாக (1) என்னைச் சிந்தித்து உபாஸிக்கின்றனரோ, நித்யம் முயற்சிபெற்ற (2) அவர்களின் யோகத்தையும் (3) க்ஷேமத்தையும் (4) நான் வஹிக்கின்றேன் (5).**

(1) வேறொன்றிலும் பற்றில்லாதவர்களாக.
(2) அநன்யபக்தியில் ஓயாமுயற்சிகொண்ட.
(3) யோகம்=இதுவரையிலும் பெறாததைப் பெறுதல்.
(4) க்ஷேமம்=பெற்றதைக் காத்தல்.
(5) பொறுப்பெடுக்கின்றேன்.

மஹேஸ்வரனே பரம்பொருளென்றும், அவரே லோகக்ருத்யங்களை நடத்திவைக்கின்றார் என்றும், "எனக்கேது ஸக்தி, அவரே ஸக்திமான், சிந்திக்கும் மனமும், விசாரிக்கும் புத்தியும், தீர்மானிக்கும் சித்தமும், கர்மங்களைச் செய்யும் இந்த்ரியங்களும் அவருடையவையே" யென்றும், "நான் அவர் ஸமீபமாயிருந்தால் போதும், அவர் பார்த்துக் கொடுத்ததே எனக்குப் பெரும்பாக்யம்" என்றும் வாழ்கின்றவனுடைய யோகக்ஷேமத்தை அவரே கூட்டிவைப்பார் என்பது இந்த மந்த்ரத்தின் கருத்து.

**உ௰௩. கௌந்தேய, எவர்கள் இதரதேவர்களிடம் பக்திபெற்றவர்களாய் [அவர்களை] ஶ்ரத்தையுடன் பூஜிக்கின்றனரோ அவர்களும் நேர்வழியை முன்னிடாமல் என்னையே பூஜிக்கின்றார்கள்.**

இந்த மந்த்ரத்தில் குறிக்கப்பட்டது எவன் எந்த பூஜை செய்தாலும் அன்போடு செய்யவேண்டுமென்பதும், எந்தெந்தத் தேவதையை எந்தெந்தத் தேசத்தில் எந்தெந்தப் பாஷையில் உபாஸித்தாலும் மஹேஸ்வரனே அந்தத் தேவதைக்குள்ளிருந்து அருளத்தக்க பலனைக் கொடுப்பார் என்பதுமாம்.

**உ௰ச. நானே ஸர்வ யஜ்ஞங்களுக்கும் போக்தா (1), ப்ரபு, என்று என்னை உள்ளவாறு அறியாதபடியால், அவர்கள் இதனில் (2) நின்றும் நழுவுகின்றனர்.**

(1) ஸகல உபாஸனைகளுக்கும் நானே ஸாக்ஷி.

'போக்தா' என்ற பதம் 'புஜ்' (உண்ணுதல், அறிதல்) என்ற தாதுவினின்றும் ஜனித்து, அறிகின்றவர், ஸாக்ஷி, என்று பொருள்படும். ஆனால், மஹேஸ்வரன் ஸாக்ஷிமாத்ரமோ? அன்று. "ஸுஹ்ருத்தும் நானே" என்று 18 வது மந்த்ரத்தில் உபதேசிக்கப்பட்டது. நிறைந்த அறிவாளியானவன், ஒருவனுடைய இஷ்டகாம்யங்களை அறிந்த மாத்ரத்தில், அவனுடைய குறைகுணங்களுக்குத் தக்கபடியும் தன்னுடைய வல்லபத்திற்கு ஏற்றபடியும் உபகரிப்பான். நல்ல மானுடர்களுடைய ஸாக்ஷித்வம் நற்க்ரியையோடு ஸம்பந்தப்பட்டே இருக்கும். இந்த இயல்பு ஈஸ்வரனது அநுக்ரஹத்தால் பெறப்பட்டது. அறிதலும் அருட்டொழிலும் பிரிவற்றிருப்பது ஈஸ்வர ஸ்வபாவம்.

(2) நேர்வழியான மஹேஸ்வர அநன்ய உபாஸனையில்.

உ௯௫. தேவவ்ரதம் (1) பெற்றவர்கள் தேவர்களை அடைகின்றனர் (2). பித்ரு வ்ரதம் பெற்றவர்கள் பித்ருக்களை அடைகின்றனர் (3) பூதங்களைப் பூஜிக்கின்றவர்கள் பூதங்களை அடைகின்றனர் (4). என்னைப் பூஜிக்கின்றவர்கள் என்னை அடைகின்றனர் (5).

(1) 'வ்ரதம்' என்ற பதம் "வ்ருஞ்" (வரித்தல், கட்டுதல்) என்ற தாதுவில் ஜனித்து, கட்டுப்பாடு, நியமம் என்று பொருள்படும்.

தேவவ்ரதம்=தேவபந்தனம். ஒருதேவதையை ஒருவன் நினைந்து வழிபட்டால் அதனோடு அவன் பந்தப்படுகிறான். இந்த உபாஸனா ஸம்பந்தமே வ்ரதம்.

(2) எந்தெந்தத்தேவன் உபாஸிக்கப்பட்டானோ அந்தத் தேவனோடு ஸம்பந்தப்பட்டு அவனிருக்கும் ஸ்தானத்தை அடைவார்கள். இப்படிக் கூடிவஸிக்குதலைச் 'சாலோகபதவி' என்பர்.

(3) ஸ்ராத்தம் முதலிய கர்மங்களை ஸ்ரத்தையோடு செய்கின்றவர்கள் பிதுர்த்தேவதைகளின் லோகங்களை அடைந்து அவற்றிற்குரிய போகங்களை அநுபவிப்பார்கள்.

(4) பூத ப்ரேத பிஸாச டாகினி மோகினி முதலியவைக

ளில் யாதொன்றை, எவன் உபாஸிக்கின்றானோ, அவன் அதற்குரிய லோகத்தைச் சார்வான்.

பதினேழாம் அத்யாயம் நான்காவது ச்லோகத்தில் ஸத்வகுணம் பெற்றவர்கள் தேவர்களை உபாஸிப்பார்களென்றும், ரஜஸ்குணம் பெற்றவர்கள் யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும் உபாஸிப்பார்களென்றும், தமஸ்குணம் பெற்றவர்கள் பூதங்களையும் ப்ரேதங்களையும் உபாஸிப்பார்களென்றும் விளக்கப்பட்டுள்ளது.

(5) எங்கும் நிறைந்துள்ள பரமேச்வரனாகிய என்னை உபாஸிக்கின்றவர்கள் அங்கங்கெனுதபடி அகண்டாகாரமாயுள்ள ஸாயுஜ்யபதவி யென்னும் மோக்ஷத்தை அடைவார்கள்.

**உ௰௬. எவன் எனக்கு இலையையாவது புஷ்பத்தையாவது பழத்தையாவது ஜலத்தையாவது அன்புடன் கொடுக்கின்றனோ, சாந்திபெற்ற மனமுடைய அவனது பக்தியால் கொடுக்கப்பட்ட அதை நான் பெறுகின்றேன் (1).**

(1) புஷ்பம், பத்ரம், பழம், தீர்த்தம் முதலியவை மஹேச்வர ஸ்தூல பூஜைக்குரியன. மானஸபூஜையில் ஒருவனது அன்பு அபிஷேகநீராகவும், உயிர் நைவேத்யமாகவும், ப்ராணவாயு தூபமாகவும், மனஸும் புத்தியும் தீபமாகவும் ஒப்புவிக்கப்படும்.

மஹேச்வர ஸ்தூலபூஜை ஸ்வார்த்தம் பரார்த்தம் என இருவகைப்படும். ஸ்வார்த்த பூஜையாவது தன் நன்மைக்காகவே செய்யப்படுகிற தினபூஜை. பரார்த்த பூஜையாவது பிறர் நன்மைக்காக சிவாலயங்கள்தோறும் பூஜகர்களால் செய்யப்படுவது. இந்த ஸ்வார்த்த பரார்த்த பூஜைகட்குரிய மூர்த்தி மஹாலிங்கம், ஸோமாஸ்கந்த சந்த்ரசேகர நடராஜா முதலிய மஹேச்வர வடிவங்கள்.

'லிங்கம்' என்ற பதம் 'லிம்' (ஸ்ருஷ்டி) 'க' (லயம்) என்ற தாதுக்களினின்று ஜனித்து, ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார திரோபவ அநுக்ரஹ க்ருத்யங்களை உடைய மஹேச்வரன் என்று

அர்த்தப்படும். அவர் எல்லையற்ற மூர்த்தியாதலால் அந்த லிங்கம், மஹாலிங்கம் எனச் சிறப்பிக்கப்பட்டது.

ஜீவாத்மாக்கள் உய்யும்பொருட்டு மஹேஶ்வரன் ஒவ்வொரு ப்ரஹ்மாண்டத்திலும் ருத்ர விஷ்ணு ப்ரஹ்மாவாக அமைந்தார். ப்ரஹ்மா படைத்ததை (விரித்ததை) விஷ்ணு காப்பார், ருத்ரன் அழிப்பார் (ஒடுக்குவார்)

ப்ரஹ்மாண்டம் என்றது மிக விரிவுபெற்ற அண்டம். 'ப்ரஹ்ம' என்ற பேர் பரமாத்மாவுக்கும் ப்ரக்ருதிக்கும் பொருந்தும், ஏனெனில் இரண்டுவஸ்துவும் மிக விரிவுபெற்றிருப்பதால்.

ப்ரஹ்மாண்டத்தின் ஒவ்வோரணுவிலும் ருத்ரன் விஷ்ணு ப்ரஹ்மா ஸூக்ஷ்மமாக இருப்பினும், ஸ்தூலரூபமாகக் கைலாஸத்தில் ருத்ரன் இருப்பார், வைகுண்டத்தில் விஷ்ணு இருப்பார், ஸத்யலோகத்தில் ப்ரஹ்மா இருப்பார்.

ஒரு மாங்கனியானது வ்ருக்ஷத்திலிருந்து காம்பு வழியால் வருவதுபோல, மஹேஶ்வரனது ஒரு ரேகையிலிருந்து ருத்ராதி த்ரிமூர்த்திகள் ஸூக்ஷ்மமாகத் தோன்றினபின், ப்ரஹ்மாண்டங்கள் உண்டாயின.

ஆகவே, மஹேஶ்வரன் த்ரிமூர்த்திகளைத் தன்னில் நின்று தோற்றுவித்த அவஸரமே "மஹாலிங்கம்" எனப்படும். இந்த எல்லையற்ற ஸூக்ஷ்ம மாஹாலிங்கம் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார திரோபவ அநுக்ரஹங்களை ஜீவாத்மாக்களுக்கு ஜெகத்தில் செய்து வருவதால், அதைச் சிறிய ஸ்தூலவடிவமாகப் பாவனைசெய்து வேதாகம மந்த்ரயுக்தமாக ஶிவாலயங்களில் ப்ரதிஷ்டைசெய்து பூஜிப்பார்கள்.

இந்த அகண்டாகார அவ்யக்த மஹாலிங்கத்தின் நின்றும் புராணகாலத்தில் ஜனித்த உமாபதி ஸோமாஸ்கந்த முதலிய வ்யக்த மூர்த்திகளையும் பாவனைசெய்து பக்தர்கள் பூஜிப்பார்கள்.

ஸ்தூலபூஜையில் அபிஷேகம் நைவேத்யம் தீபாராதனை என்ற உபசாரகர்மங்களை அன்புடன் நிறைவேற்றிப் பிரார்த்திப்

பார்கள்.

மானஸபூஜையில் இக்கர்மங்களெல்லாம் அந்தர் த்ரவ்யத்தால் முடிக்கப்படும்.

ஸ்தூல மானஸ பூஜைகளுக்கு மேற்பட்ட த்ரிகரண அடக்கப் பூஜையாகிய மௌனத்தில் ஆத்மதர்ஸனம் ஸித்தித்து ப்ரஹ்மநிர்வாணத்தில் ஸதாகாலமும் வாழலாம்.

இந்த மூவித பூஜைகளுக்கும் தான் போக்தா, தான் ஸாக்ஷித் என்பதுபற்றி, அவற்றை "நான் பெறுகின்றேன்" என்றார்.

**உ௰எ. கௌந்தேய, எதைக் செய்கின்றயோ, எதை உண்ணுகின்றயோ, எதை ஹோமிக்கின்றயோ, எதைக் கொடுக்கின்றயோ, எதைக்குறித்துத் தவம்புரிகின்றயோ. அதை மதர்ப்பணமாகச் (1) செய்.**

(1) நீ செய்யவேண்டிய கர்மங்களெல்லாம் மஹேஸ்வரனுடைய க்ருத்யங்களென்று எண்ணி அவற்றைச் செய்வதே, அர்ஜுன, உத்க்ருஷ்ட (அதிமேன்மைப்பட்ட) கர்மாநுஷ்டானம் என்றறி.

ஒருவன் தனது கர்மத்தை ஈஸ்வரகர்மமாக்கினல், சித்தஸுத்தியையும் ஈஸ்வரபக்தியையும் ஆத்மஞானத்தையும் பெறுவான்; அதுவுமன்றி, பாபபுண்ய கர்மபலங்களினின்றும் விடுபடுவான். இதுபற்றி, "மதர்ப்பணமாகச் செய்" என்றார்.

'மதர்ப்பணம்' (மத் + அர்ப்பணம்) = என்னிடத்தில் அர்ப்பணம், எனக்குக் கொடுத்தல், மஹேஸ்வரனுக்கு ஒப்புவித்தல்.

**உ௰அ. ஸுபம் அஸுபம் என்றவைகளைப் (1) பலனாகக்கொண்ட கர்மபந்தங்களினின்றும் (2) இவ்விதம் (3) நீ விடப்படுவோய்; விடப்பட்டு ஸன்யாஸயோகத்தோடு கூடின புத்தி பெற்றவனாகி (4) நீ என்னையே அடைவாய் (5).**

(1) விஷயஸுகத்தையும் துக்கத்தையும்.

(2) வித்து விருக்ஷமாகிப் பழங்களைக் கொடுப்பதுபோல, பாபபுண்ணியங்கள் பாபபீஜத்தையும் புண்யபீஜத்தையும் உண்

டாக்கி, அவற்றினின்றும் ஈஸ்வராஞ்ஞையால் ஸுகதுக்க பலங்களைக் கொடுக்கும். இந்த இன்பமும் துன்பமும் அறிவைப் பந்தித்து அற்பமாக்கும்.

எனவே, கர்மபந்தனம்=கர்மத்தினின்று ஜனித்து அறிவைச் சுருக்கி மயக்கும் ஸுகதுக்க அநுபவங்கள்.

(3) ஈஸ்வரார்ப்பண வழியால்.

(4) நான் செய்யவேண்டிய கர்மம் எனதல்ல, மஹேஸ்வரனதே என்று எண்ணி, அதைச் செய்து வருகின்றவனுடைய புத்தியில் மேலான ஸ்திதியாகிய ஸந்யாஸத்வம் விளையும்.

ஸந்யாஸம்=அகந்தை மமதை என்ற மலதோஷங்களைத் தியாகஞ் செய்தல், விடுதல்.

(5) அகந்தை மமதையை நீ முற்றும் விட்டகாலத்தில் பரமாத்மதர்ஶனம் ஸித்திக்கும்.

**உயகூ.** நான் எல்லாப் பூதங்களிடமும் ஸமனுயிருக்கின்றேன் (1). எனக்கு [ஒருவனும்] அப்பிரியனுமில்லை ப்ரியனுமில்லை (2). ஆனால், எவர்கள் என்னை பக்தியால் பஜிக்கின்றார்களோ, அவர்கள் என்னில், நான் அவர்களில் (3).

(1) ஸகல ப்ராணிகளிலும் பாரபக்ஷமின்றி அவர்களுக்குரிய ஶக்திகளையும் அநுபோகங்களையும் அருளிக்கொண்டே இருக்கின்றேன்.

(2) எனக்கு ஒருவனும் ஶத்ருவுமல்லன் மித்ரனுமல்லன்.

(3) ஆனால், பக்திமார்க்கத்தை அறிந்து எவர்கள் என்னை வழிபடுகின்றார்களோ, அவர்களுக்கு நான் ஸமீபமாகிப் பரிபக்வகாலத்தில் அவர்களும் நானும் ஒன்றுவோம்.

இனிப் பின்வரும் இரண்டு மந்த்ரங்களில் தேஹஸௌசமே முக்கியமென்றும், அதை அவமதிக்கின்றவர்களுக்கு ஸ்வர்க்கலோக ப்ராப்தியும் மோக்ஷஸுகமும் இல்லை என்றும் ஸங்கல்பிக்கும் மூடத்தைக் கண்டிக்கின்றார்.

**௩ம.** அதிதுராசாரம் பெற்றவனுயிருந்தாலும் (1) [எனக்கு] அந்யமான பொருளைப் பஜிக்காமல் (2) என்னை எவன் பஜிக்கின்றனோ (3)

**அவன் ஸாது என்றே எண்ணத்தக்கவன் (4), அவன் உண்மையான நிஶ்சயம் பெற்றிருப்பதால்.**

(1) ஒருவன் எந்த ஹீனஜாதியிற் பிறந்து அந்த ஜாதியின் சிறப்பற்ற நடையுடைபாவனைகளை அநுஸரித்தாலும்.

(2) எனக்குப் புறம்பான அநாத்ம விஷயங்களில் மனதைச்செலுத்தாமல்.

(3) நானே பரம்பொருள், நானே அறியத்தக்க வஸ்து, என்ற ஸ்திர புத்தியோடு வாழ்கின்றவன் எவனோ.

(4) அவனை ஸதாசாரன் என்றே மதிக்க வேண்டும்.

பெரியபுராணத்தில் கண்ணப்பநாயனார் திருநாளைப்போவார் முதலியோரது சரித்திரங்களைப் பார்த்தறிக.

ஸத்புருஷனுடைய (மெய்ப்பொருளை லக்ஷ்யமாகக் கொண்டவனுடைய) ஆசாரம் பெற்றவன், ஸதாசாரன்.

**௩௰௧. கௌந்தேய, [துராசாரனாயிருந்தாலும்] ஶீக்ரமாகத் தர்மாத்மாவாகின்றான் (1); எக்காலங்களிலும் ஶாந்தியைப் பெறுகின்றான் (2). எனது பக்தன் கெடான் (3) என்று உறுதியாக நம்பு.**

(1) அன்பிலும் அறிவிலும் பூர்ணத்வம் பெறுகின்றான்.

(2) ப்ரக்ருதியின் சலனகுணத்தினின்றும் ஒழிவுபெற்று நிற்பான்; அதாவது, கைவல்யதஶையில் வாழ்வான்.

(3) லோகத்தாருக்கு அநாசாரனென்று தோன்றினும், அவன் கெட்டவனல்லன். அநாத்ம விஷயத்தை வெறுத்து, ஸச்சிதாநந்த சொரூபியாகிய என்னைப் பற்றிப் பிடித்திருக்கின்றதால், அவன் மலத்தில் மாளான்; மோக்ஷஸுகத்தைப் பெறுவான்.

**௩௰௨. பார்த்த, பாபயோனிகளான ஸ்த்ரீகளும் வைஶ்யர்களும் அவ்விதமே ஶூத்ரர்களும் என்னை அண்டி மேலான கதியைப் பெறுகின்றனர் (1).**

(1) பாபகர்மகாரணத்தால் ஸ்த்ரீதேஹம் பெற்ற ஜீவாத்மாக்களும், வைஶ்யகுலத்திலும் ஶூத்ரகுலத்திலும் பிறந்த ஜீவாத்

மாக்களும், மஹேஸ்வர உபாஸனையால் மோக்ஷஸுகத்தைப் பெறுகின்றனர்.

ப்ராஹ்மணகுலத்தில் பிறந்தவர்களிலும் க்ஷத்ரியகுலத்தில் பிறந்தவர்களிலும் அநேகர் தேஹமே நானென்றும் தேஹ சௌசமே முக்ய ஆசாரமென்றும் எண்ணி, ஸ்த்ரீகளையும் வைஸ்ய ஸூத்ர குலங்களிற் பிறந்தவர்களையும், இக்காலத்திற் போலவே, தம்காலத்திலும் அவமதித்து அஹம்பாவமாக நடந்ததைக் கண்ட பகவான், அவர்களது அறியாமையை நீக்கும்பொருட்டு, ௩௰௨-வது மந்த்ரத்தையும் இந்தமந்த்ரத்தையும் உபதேஸித்தார். எப்படியெனில் தேஹசௌசம் மாத்ரம் ஸ்வர்க்கலோக ப்ராப்திக்காவது மோக்ஷஸித்திக்காவது போதாதென்றும், சித்தசௌசமும் அன்பும் முக்யமென்றும், அதனுடன் ஈஸ்வரபக்தி கூடினல், தேஹஸௌசம் எப்படிக் குறைவுபட்டிருந்தாலும், மோக்ஷஸுகம் அருளப்படும் என்றும் விளக்கினார்.

ஆடவர்களுக்குப் போலப் பெண்களுக்குச் சில ப்ரதான ஸக்திகளும் அநுபோகங்களும் அமையாததற்குக் காரணம் பூர்வீகத்தில் செய்யப்பட்ட பாபகர்மம் என்பதுபற்றிப் பெண்களைப் "பாபயோனிகள்" என்றார். ஒருபெண் தனக்குரிய வீட்டை விட்டுத் தனியே சென்றால், அவளை அபகரிக்கத் துஷ்டர்கள் முயலுவார்கள். புருஷர் அல்லது வளர்ந்த புத்ரர் இல்லாவிடத்து, தன்வீட்டில் வேலைக்காரர்களை அடக்கியாளுதலும், பந்துமித்ரர்களால் தனக்கு ஒரு தாழ்வும் வாராதபடி காத்துக் கொள்ளுதலும் அவளுக்குத் துர்லபம். வேளாண்மை வர்த்தகம் ராஜஸேவை முதலிய உத்யோகங்கள் அவளுக்கு ஒவ்வா. செல்வம் கீர்த்தி முதலிய ஸம்பத்துக்களை ப்ரயாஸப்பட்டுத் தேடுவதற்கும் இடமில்லை. பூப்பு, ப்ரஸவம் முதலிய காலங்களில் விலக்கப்பட்டிருப்பாள். தன் மானத்தையும் ஸுகத்தையும் காப்பாற்றிக்கொள்ளும்படி தனக்கு நெருங்கிய ஆண்பந்துக்களில் ஒருவன் பின்னே நிற்பாள். இப்படிச் சில ப்ரதான ஸக்திகளிலும் அநுபவங்களிலும் பெண்கள் மிகக் குறைவு பெற்றவர்கள். இந்தத் தாழ்வான நிலை பாபகர்மங்களால் அமைக்கப்பட்டது.

பாபகர்ம காரணத்தால் பெண்தேஹம் அமையப்பெற்றாலும், அவர்களில் சிலர்க்குப் புத்தியும் அன்பும் விசாலமாயும் ஈஸ்வரனிடத்தில் ஸ்ரத்தை அதிகமாயும் இருக்கும். இவற்றால் ஞானாதிகாரிகளாகி மோக்ஷத்தைப் பெறுவார்கள்.

இனி, க்ருஷி வர்த்தகம் கோரக்ஷணை என்ற தொழில்களை ஜீவனோபாயமாக நடத்திவருகின்ற பூ வைஸ்ய கோ வைஸ்ய தன வைஸ்ய குலத்திற் பிறந்தவர்களுக்கும் பாபகர்மங்கள் பலவழியாலும் ஸம்பவிக்கும். கலப்பையால் உழும்பொழுது அநேக ஜெந்துக்கள் நெரிபட்டிறக்கும் கலப்பையிற் கட்டப்பட்ட மாடுகளை அடித்துத் துன்பப்படுத்தவும் நேரிடும். தான்யாதி பீஜங்களைக் குத்துவதாலும் அரைப்பதாலும் அவற்றிலுள்ள ஜீவர்கள் நாஸப்படுவார்கள். மற்றும் வர்த்தக வ்ருத்திக்காகத் தர்மத்துக்கு விரோதமான நினைவுகளையும் வார்த்தைகளையும் செயல்களையும் அநுஷ்டிக்கும்படி வரும். மேலும் ஆடு மாடுகளை விற்றுப் பொருள் தேடாமலிருப்பதும் கஷ்டம். இவ்வாறு வைஸ்யகுலத்தினர்க்குரிய ஜீவனோபாயங்கள் பாபத்தை விளைவிப்பதால், அவர்களும் "பாபயோனிகள்."

இப்படி ஜீவனோபாய விஷயத்தில் பாபகர்மங்களைத் தெரிந்துந் தெரியாமலும் செய்தாலும், அவர்களில் சிலர்க்குப் புத்தியும் அன்பும் விஸாலமாயும் ஈஸ்வரனிடத்தில் ஸ்ரத்தை அதிகமாயும் இருக்கும். இவற்றால் முமுக்ஷுக்களாகி, முக்தி பெறுவார்கள்.

ஸேவகஞ் செய்து பிழைக்கும் ஸூத்ர குலத்திற்பிறந்தவன் வறுமையால் ஸ்வதந்த்ரஹீனனாய், தன் எஜமானன் ஏவிய வேலைகளை, எப்படியிருக்கினும், செய்வான். செய்யாதிருந்தால் எஜமானனுக்கஞ்சிப் பொய் சொல்லுவான். இந்த நிலையைப் பொருந்தின ஸூத்ரர்கள் பாபயோனிகளே எனினும், ஸூத்ரகுலத்திற் பிறந்தவர்களிலுஞ் சிலர் விஸால புத்தியையும் அன்பையும் ஈஸ்வர ஸ்ரத்தையையும் பெற்றிருப்பதால் மோக்ஷத்தைப் பெறுவார்கள்.

பெண்களையும் வைஸ்ய ஸூத்ர குலங்களிற் பிறந்தவர்களையும் தாழ்வான நிலைமையை உடையவர்களென்று சிலர் எண்ணி

ளும், மேற்குறித்த மூவகையாரில் விசால அறிவையும் அன்பையும் ஈஸ்வர ஶ்ரத்தையையும் பெற்றவர் அநேகர் உண்டு. இவர்கட்கு மஹேஸ்வரபூஜை ஸித்தித்து மோக்ஷப்ரஸாதம் அருளப்படும்.

௩௰௩ புண்ய கர்மத்தைச் செய்கின்றவர்களும் [என்னில்] பக்தி பெற்றவர்களும் ஆகிய ப்ராஹ்மணர்களும் (1) க்ஷத்ரிய ருஷிகளும் (2) அவ்விதமே [மோக்ஷத்தைப் பெறுவார்களென்று] மீளவும் [விரித்துரைப்பதால் பயன்] என்ன (3). அநித்யமும் அஸுகமுமான இந்த லோகத்தைப் பெற்று, [அதில் பற்றுவைக்காமல்] என்னை அடைவார்கள்.

(1) ப்ராஹ்மண குலத்திற் பிறந்தவர்களில், அகம்பாவமற்ற அநுஷ்டானத்தாலும் ஈஸ்வரபக்தியாலும் சிறப்புப்பெற்ற ப்ராஹ்மண புத்திமான்களும்.

(2) அப்படியே க்ஷத்ரிய குலத்திற் பிறந்தவர்களில், சிறப்புப்பெற்ற க்ஷத்ரிய புத்திமான்களும்.

(3) அன்பாலும் ஈஸ்வர பக்தியாலும் பெண்களும் வைஶ்ய ஶூத்ர குலத்தாரும் மோக்ஷ ஸுகத்தைப் பெறுவார்கள் எனில், அக்குணங்களைப் பொருந்தின ப்ராஹ்மணர்களும் க்ஷத்ரியர்களும் அந்த மேலான ஸுகத்தைப் பெறுவார்கள் என்பதற்கு ஐயம் என்ன?

௩௰௪. என்னில் மனமுடையவனாகவும், எனது பக்தனாகவும், என்னைப் பூஜிக்கின்றவனாகவும் இரு. என்னையே நமஸ்கரி. இவ்விதம் என்னையே மேலான வழியாகக்கொண்டு, உன் சித்தத்தை [என்னோடு] சேர்த்து என்னையே அடைவாயாக (1).

(1) உனது அந்தஃகரணத்தாலும் கர்மேந்த்ரியங்களாலும் பரமாத்மாவாகிய என்னைத் தழுவி அநன்யபக்தியோடிரு என்பது கருத்து.

இந்த ஒன்பதாம அத்யாயத்தில் உத்தமக்கல்வி ["ராஜவித்யா"] என்றும், பரமரஹஸ்யம் ["ராஜகுஹ்யம்"] என்றுங் கூறப்பட்ட வித்தையில் அடங்கிய உண்மைகளைத் தெளிவாக

அறியும்பொருட்டு, ஒவ்வொரு மந்த்ரத்தின் ஸாரத்தையும் ஸ்பஷ்டமாகத் தருகின்றோம்,—

1. பய துக்க விஷாத நிவ்ருத்திக்கு விஞ்ஞானஸஹிதஞானம் அவஸ்யம்.

2. விஞ்ஞானஸஹிதஞானத்தைக் கற்றாலன்றிக் கர்மகௌஸலம் ஸித்திக்காது. இது உத்தம புருஷர்களுக்கே விளங்கும். ஏனையோர்க்கு மிக ரஹஸ்யமாய் இருக்கும்.

3. இந்த ரஹஸ்யத்தை அறியத்தகாதவர்கள் ஜனன மரண ஸம்ஸாரத்திற்கே ஆளாவார்கள்.

4 லோகங்கள் யாவற்றிலும் பரமேஶ்வரன் வ்யாபித்திருப்பார். ஆனால், ஐம்பொறிகள் அவரைக்காணா.

5. பரமேஶ்வரன் ப்ரக்ருதியைப் பற்றியும் பற்றாமலும் இருக்கின்ற நிலை "ஐஶ்வரயோகம்" என்று கூறப்படும்.

6. ஆகாசத்தில் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கும் வாயு எவ்விதம் ஆகாசத்தைப் பற்றாதோ, அவ்விதமே பரமேஶ்வரனைத் தீண்டாமல் ப்ரக்ருதி தேஹங்கள் அவரில் இருக்கும்.

7. ப்ரக்ருதிரூபங்களை ப்ரக்ருதியில் நின்று விரிக்கின்றவரும் ஒடுக்குகின்றவரும் பரமேஶ்வரனே.

8. ஸ்ருஷ்டிக்கு முக்யகாரணம் ப்ரக்ருதி. ஒடுங்கினதை மீளவும் தோற்றுவிப்பார். தோற்றுவித்ததை மீளவும் ஒடுக்குவார்.

9. பஞ்ச க்ருத்யங்களை நடத்தும்பொழுது பரமேஶ்வரனுக்கு அவற்றால் ஸுகதுக்க வாதனைகள் வாரா.

10. ஜகத்தின் தோற்றத்திற்குக் காரணம் பரமேஶ்வரன் நாயகனாக நின்று ப்ரக்ருதியோடு சேருதலே.

11—12. பரமேஶ்வரன் அவதாரபுருஷனாகி, ப்ரக்ருதியாலியற்றப்பட்டதும் ஸ்ரீ க்ருஷ்ணன் என்று அழைக்கப்பட்டதுமான மானுட தேஹத்தைத் தரித்தார். மூடர்கள் அந்த மானுடதேஹம் திருமேனி என்று அறியாது, அதை அவமதிக்கின்றனர்.

13. பரமாத்மாவுக்கு ப்ரக்ருதி அங்கமென்று நிதானித்து, அறிவாளிகள் பரமாத்மாவையே பற்றி நிற்பர்.

14. பரமாத்மாவில் அநந்யபக்திக்கு லக்ஷணம் அதனில் த்ருடவ்ரதமும், அதற்கு அளவில்லாத ஸேவையும், அதனை ஸ்தோத்ரஞ் செய்தலும்.

15. மஹேஶ்வர உபாஸனையை பக்தர்கள் ஏகத்வ புத்தியோடாவது, ப்ருதக்த்வ புத்தியோடாவது, பஹுத்வ புத்தியோடாவது செய்வார்கள். இவையெல்லாம் ஞான யஜ்ஞமாகும். இவற்றிற்கு ஆதாரம் அநந்யபக்தியாதலால், மஹேஶ்வரன் இவற்றை ஸமமாக ஏற்றுக்கொள்ளுவார்.

16—19ம் ஶ்லோகங்களில் வேத்ய (அவஶ்யமாக அறியத்தக்க)ப் பொருளாகிய பரமாத்மாவின் லக்ஷணங்களும், அதனை அடைவதற்குக் கதிகளான ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி மார்க்கங்களின் லக்ஷணங்களும் குறிக்கப்பட்டன.

பரமாத்மாவைப்பற்றிக் குறிக்கப்பட்ட லக்ஷணங்கள் பின்வருமாறு:—

*a*. பவித்ரம் (ம௭)—மலரஹிதப்பொருள்.

*b*. ஓங்காரம் (ம௭)—ப்ரணவநாத சொரூபமாகி வெளிப்படும் பொருள்.

*c*. தாதா (ம௭) — போகங்களைக் கொடுக்கின்றவர்.

*d*. பிதாமஹன் (ம௭) — தமது ஸ்ருஷ்டி கர்மத்தை நடத்திவரும் ப்ரஹ்மாவைத் தாம் ஸ்ருஷ்டித்ததால், அவர்க்குப் பிதாவாகவும், அவர் படைத்த தேவர் மானுடர் முதலியோருக்குப் பாட்டனாராகவும் இருப்பார்.

*e*. பிதா (ம௭) — ப்ரபஞ்சத்திற்கு நிமித்தகாரணன்.

*f*. மாதா (ம௭)—தோன்றியவைகளை அன்போடு வளர்க்கின்றவன்.

*g*. நிதானம் (ம௮)—சராசரப் பொருள்களில் புதையல் ("நிதி") போல மறைந்து நிற்கும் அரிய பொருள்.

*h*. அவ்யயபீஜம் (ம௮)—ஒருக்காலும் மாறாத மூலப்பொருள். வித்தில் நின்றும் வ்ருக்ஷம் வந்ததுபோல, இதனில் நின்று ப்ரபஞ்சம் விரிந்தது.

*i*. ஸாக்ஷி (ம௮)— ஸர்வத்தையும் ஒரேமுறையில் அறியும் பொருள்.

*j*. ப்ரபு (௰அ)—ஸகல வஸ்துக்களையும் அடக்கியாளுகின்ற பரமேஶ்வரன்.

*k*. ஸுஹ்ரித் (௰அ) — ப்ரதியுபகாரத்தை விரும்பாமல் ஜீவாத்மாக்களுக்கு இன்பங்களைக் கொடுக்கின்றவன்.

*l*. ஶரணம் (௰அ)— ஜீவாத்மாக்களுடைய துன்பங்களை நீக்குகின்றவன்.

*m*. ஸ்தானம் (௰அ)—பேரறிவாலும் பேரன்பாலும் சிறப்பிக்கப்பட்ட அதிமேலான பதம்.

*n*. நிவாஸம் (௰அ)—சராசரங்களுக்கு நல்ல இருப்பிடம்.

*o*. பர்த்தா (௰அ) — சராசரங்களைத் தாங்கிக்கொண்டிருப்பவர்.

*p*. ப்ரபவன் (௰அ) — ஸ்ருஷ்டி கர்த்தா.

*q*. ப்ரலயன் (௰அ) —தோன்றியவைகளை ஒடுக்குகின்றவன்; ஸம்ஹாரகர்த்தா.

*r*. அம்ருதம் (௰கூ)—அழியாதபொருள்.

*s*. உஷ்ணத்தால் வாட்டுகின்றவன் (௰கூ)— ஜீவாத்மாக்களின் கர்மத்திற் கேற்றபடி உஷ்ணத்தால் பஞ்சம் முதலிய வாதனைகளை உண்டுபடுத்துகின்றவன்.

*t*. மழையை விடவும் நிறுத்தவும் செய்கின்றவன் (௰கூ) — ஜீவர்களின் கர்மத்திற்கேற்றபடி அதிவ்ருஷ்டி அநாவ்ருஷ்டிகளைக் கொடுத்தும் தடுத்தும் வருகின்றவர்.

இனிப் பரமாத்மாவை அடைதற்குக் கதி (வழி) களான ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி மார்க்கங்களைப் பற்றி ௰சு-௰கூ மந்த்ரங்களிலும் குறிக்கப்பட்ட தேவாத்ம ஶக்திகள் பின்வருமாறு:—

(1) மந்த்ரம் (௰சு) — ஈஶ்வராதி தேவர்களின் க்ருபையைப் பெறும்படி வேதங்களில் இயற்றப்பட்ட உபாஸனாவாக்யங்கள்.

(2—4) ருக், ஸாம, யஜுர் (௰சு) — வேதங்களின் ருக், ஸாம யஜுர் நடைகள்.

(5) அக்நி (கசு) — கர்மாநுஷ்டானத்துக்குரிய அக்நி.

(6) ஹுதம் (௰சு) — அக்னியால் ஹோமித்தல்.

7. க்ரது (௰௬) — ஶ்ரௌத கர்மம்.

8. யஜ்ஞம் (௰௬) — ஸ்மார்த்த கர்மம்.

9. ஸ்வதா (௰௬) — பித்ரு கர்ம மந்த்ரம்.

10. ஆஜ்யம் (௰௬) — அக்நிகார்யத்திற்குரிய பசுநெய்.

11. ஔஷதம் (௰௬) — தான்யாதிகள்.

12. ம்ருத்யு (௰௯)—ஐம்புல வெறுப்புக்குக் காரணமாகிய வியாதி.

13. ஸதஸத் (௰௯) — மாயையும் மனஸும்.

20. ஸ்வர்க்க லோக ப்ராப்திக்கு வேதங்களின் கர்ம காண்டங்களிற் கூறப்பட்ட க்ரியைகள் அவஸ்யம்.

21. தேவலோக அநுபவங்கள் தீர்ந்தால் ஸகாம புத்திமான்கள் பூலோகத்தில் பிறப்பார்கள்.

22. அநன்யபக்தியோடு விஷய ஸுகங்களை மறுத்துப் பரமேஶ்வரனை ஸகல லௌகிக வைதிக கர்மாநுஷ்டானங்களிலும் த்யானிக்கின்றவர்களுடைய யோகக்ஷேமங்களைப் பரமேஶ்வரனே நடத்திவைப்பார்.

23. யாதொரு தெய்வத்தைப் பூஜித்தாலும் பரமேஶ்வரனே அதனுள்நின்று அநுக்ரஹிப்பார்.

24. இந்த உண்மையை அறியாதபடியால், தேவாதிதேவனை க்ரஹியாது அவருக்கடிமைப்பட்ட தேவர்களைப் பலர் உபாஸிக்கின்றனர்.

25. தேவ பித்ரு பூத உபாஸனைகளாற் பெறப்பட்ட போகங்கள் வெவ்வேறு. பரமேஶ்வர உபாஸனையாற் பெறப்பட்டது அகண்டாகார மோக்ஷம்.

26. பக்தியோடு செய்யப்பட்ட பூஜையையே மஹேஶ்வரன் அங்கீகரிப்பார். ஶ்ரத்தையற்ற பூஜைக்குப் பலனில்லை.

27. லௌகிக கர்மங்களை ஈஶ்வரார்ப்பணமாகச் செய்தலே மஹேஶ்வர உபாஸனை.

28. ஈஶ்வரார்ப்பண பூஜைக்குப் பலன் கர்மபந்த நிவாரணையும் ப்ரஹ்ம நிர்வாணமும்.

29. யாவர்க்கும் பொதுவானதெய்வமாய் பரமேஶ்வரன்

இருந்தாலும், பக்தியால் மாத்ரம் அவரை ஸமீபித்து அவரோடு ஐக்யப்படலாம்.

30—31. தேஹாசாரம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் ஆத்ம விஷயத்தை மறந்த அநன்யபக்தியால் பரமேஶ்வரனைப் பெறலாம்.

32. மஹேஶ்வரபூஜையும் அதன் பலனாகிய மோக்ஷமும் நிஷ்காமபுத்தியுள்ள ஸ்திரீகளுக்கும் வைஶ்ய ஶூத்ர குலங்களிற் பிறந்தவர்களுக்கும் உரியன.

33. அப்படியே அந்த ஸ்திதி புண்யகர்மங்களையும் ஈஶ்வர பக்தியையும் ஸாதிக்கின்ற ப்ராஹ்மணகுலத்தாருக்கும் க்ஷத்ரிய குலத்தாருக்கும் உண்டு.

34. ஒருவன் அந்தஃகரணங்களாலும் கர்மேந்த்ரியங்களாலும் தனக்குத் தோன்றிய ஞானகுருவைத் தழுவி அநன்ய பக்தியோடிருக்கவேண்டும்

---

உபநிஷத்கள் என்றும் ப்ரஹ்மவித்தை என்றும் யோக ஶாஸ்த்ரம் என்றும் பகவத்கீதைகள் என்றும் கூறப்பட்ட ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுன ஸம்வாதத்தில் ப்ரஸித்திபெற்ற ராஜவித்யா ராஜகுஹ்யயோகம் என்ற ஒன்பதாம் அத்யாயம் முற்றிற்று.

---

# பத்தாவது அத்யாயம்.

## விபூதியோகம்.

[அஃதாவது, பரமாத்மா ப்ரக்ருதியுட் புகுந்து மஹேஶ்வரனாகித், தனது தேவாத்ம ஶக்தியால் ப்ரக்ருதியை விரித்துக், கோடாகோடி ரூபங்களை உண்டாக்கினரென்றும், அவற்றில் விஶேஷம்பெற்ற ரூபங்கள் "விபூதிகள்" எனப்படுமென்றும், அவ்விபூதிகளில் பகவான் கூறின சிலவற்றை அர்ஜுநன் கேட்டுச் சிந்தித்தான் என்றும், விளக்கும் பத்தாம் பாடம்.

பரமேஶ்வரனுடைய விஶேஷ ஶக்தி ரூபங்களாகிய விபூதிகளை மேலும் விரிக்கவேண்டுமென்று அர்ஜுநன் (௧௬, ௧௮ம் ஶ்லோகங்களில்) ப்ரார்த்தித்ததால், இந்த அத்யாயம் விஸ்தரிக்கப்பட்டது. தமது விபூதிகளில் சிலவற்றை பகவான் கருணையோடு கூறி, ௪௧ம் மந்த்ரத்தில் இந்த விபூதிகளெல்லாம் தம்முடைய ஒரு ஸச்சிதாநந்த ரேகையில் உள்ளன என்றும், அவற்றை முற்றும் ஶ்ரவணஞ் செய்தாலும் அர்ஜுநனுடைய பய துக்க விஷாதங்கள் தீராவென்றும் விளக்கினர்.]

ஸ்ரீ பகவான் கூறினர்:

௧. மஹாபாஹோ, அன்புள்ள உனக்கு ஹிதத்தை (1) விரும்பி எதனைக் கூறப்போகின்றேனே, அந்தப் பரம வசனத்தை (2) மறுபடியுங் (3) கேள்.

(1) உனது பய துக்க விஷாத நீக்கத்தை.

(2) பரம வஸ்துவைப் பற்றிய வசனம் "பரம வசனம்."

(3) முன்கூறிய அத்யாயங்கள் ஒவ்வொன்றிலும் பரமவசனங்கள் நிறைந்திருக்கின்றபடியால், "மறுபடியும்" என்று இந்த அத்யாயத்தைத் தொடங்கினர்.

௨. நான் எல்லாத் தேவர்களுக்கும் எல்லா மஹர்ஷிகளுக்கும்

ஆதியானதால் (1), தேவக்கூட்டங்களும் மஹர்ஷிகளும் எனது ப்ரப வத்தை (2) அறிகிறர்களில்லை.

(1) ப்ரஹ்மாவின் ஓர்பகலாகிய கல்பகாலம் கூ. எ க் குரிய உரையில் விளக்கப்பட்டது. இந்தக் கல்ப்பகாலமாகிய 4,320, 000,000 மானுடவருஷங்களில் பதினன்கு மனுச்சக்ரவர்த்திகள் பிறந்து இறப்பார்கள். ஒவ்வொரு மனு அரசுசெய்யுங் காலமாகிய 308,571,428 4/7 மானுட வருஷங்கள் ஒரு மன்வந்தரம் எனப்படும். ஒவ்வொரு மன்வந்தரத்துக்கு ஒரு ராஜேந்த்ரனும் ஒரு ஸப்தரிஷிக்கூட்டமும் அநேககோடி தேவர்களும் உளர். ஸப்தரிஷகளை ("மஹர்ஷிகள்" "மஹாருஷிகள்") என்றும் சொல்லுவார்கள். இப்போது நடைபெற்றுவரும் ஏழாவது மன்வந்தரமாகிய வைவஸ்வத மன்வந்தரத்திற்குரிய ஸப்தருஷிகள் வஸிஷ்டர் கஶ்யபர் அத்ரி ஜமதாக்நி கௌதமர் விஶ்வாமித்ரர் பரத்வாஜர் என்பவர்களாம்.

"தேவர்கள்" என்றது ப்ரஹ்மா இந்த்ரன் முதலான தேவர்களை.

ப்ரஹ்மாதி தேவர்களாவது மஹர்ஷிகளாவது மஹேஶ்வரனுடைய ப்ரபவத்தை கேள்வியாலன்றி நேரே அறியார்கள். ஏனெனில், இவர்கள் தோன்றுவதற்கு முன்னமே அவர் இருத்தலால்.

ப்ரஹ்மாவின் புத்ரர்களில் ஒருவராகிய ப்ருகு மஹர்ஷியால் உரைக்கப்பட்ட பார்க்கவ புராணத்தில் ப்ரஹ்மாவுக்கும் விஷ்ணுவுக்கும் தங்கள் உற்பத்தியின் காரணம் தெரியாமையால் அவர்கள் த்யானத்தில் இருந்தார்களென்றும், பரமாத்மா விக்னேஶ்வர ரூபந்தரித்து அவர்களுக்கு மாயா விஶ்வரூப தர்ஶனம் அருளி ஸம்ஶயங்களைத் தீர்த்தார் என்றும், கூறியிருக்கின்றது.

"ஆதியானதால்"=காரணமாதலால்.

"ப்ரபவத்தை"=ப்ரபுத்தன்மைகளில் உற்பத்தி காரணத்வத்தை. அஃதாவது, மஹேஶ்வரனே ஸகல ஜீவாத்மாக்களின் பிறப்புக்கு (தேகமெடுத்தலுக்கு) காரணனாயிருக்குந் தன்மையை.

**௩. எவன் என்னைப் (1), பிறப்பற்றவனாகவும் (2) அநாதியாக வும் (3), லோகங்களுக்கு மஹேஶ்வரனாகவும் (4) அறிகின்றானோ, மானு டர்களுக்குள் அவன் மோகமற்றவனாய் (5) எல்லாப் பாபங்களினாலும் விடப்படுகின்றான் (6).**

(1) பரமாத்மாவாகிய என்னை.

(2) தேவர்கள் மஹர்ஷிகள் முதலியவைகளைப்போல, ஒரு காலத்திலும் பிறப்பில்லாதவனாகவும்; ப்ரக்ருதிக்கு அப்பாற் பட்டவனாகவும்.

(3) என்னை ஓர் காரணம் இல்லாதவனாகவும்; என்னை வேறொரு ஶக்திமான் உண்டுபடுத்தாதவனாகவும்.

(4) ஜீவகாருண்யத்தால் எனது ஶக்தியின் ஒரு ரேகை யைப் ப்ரக்ருதியிற் செலுத்தி, அதனை விரித்துச் சிதறவிடாமல் அடக்கி, லோகங்களைக் க்ரமமாக ஸ்ருஷ்டித்து, ஜீவர்களுக்கு ஸுகதுக்க போகங்களை ஊட்டி, அறிவை வ்ருத்திசெய்து, மோக்ஷ ஸ்திதியை அருளும் அந்தர்யாமி ஈஶ்வரனாகவும்.

இந்த மந்த்ரத்தில் பரமாத்மாவுக்கும் அந்தர்யாமியாகிய மஹேஶ்வரனுக்கும் உள்ள விஶேஷ நிலைகள் விளக்கப்பட்டன. ஸ்ருஷ்டிக்கு முன் பரமாத்மா ப்ரக்ருதியை உபயோகிக்காமலே நின்றது. அந்த அவஸரத்தில் பிறப்பு இறப்பு என்ற சொற்கள் பரமாத்மாவுக்கு ஒவ்வா. அதன் ஶக்தியின் ஓர் அம்ஶத்தை எப்பொழுது ப்ரக்ருதியிற் புகுவித்துச் சராசர ப்ரபஞ்சத்தை (விரிவை) இயற்றிற்றோ, அப்பொழுது அந்தர்யாமிக்கு (உள் நின்று அடக்குகின்றவனுக்கு) நாநாவித ரூபங்கொண்ட ஜகத் ஸமஷ்டி தேஹமாயிற்று.

ஜீவகோடிகளுக்குத் தனித்தனி வ்யஷ்டி தேஹங்களுண்டு. ஸகல ஜீவர்களுடைய வ்யஷ்டி தேஹங்களும் மற்று முள்ள ரூபங்களும் மஹேஶ்வரனுக்கு ஸமஷ்டி தேஹமாகும்.

ஜீவர்கள் பிறந்தார்கள் என்ற வசனம் அவர்கள் தத்தம் வ்யஷ்டி தேஹத்தைத் தரித்தார்கள் என்று பொருள்படும்; அவர்கள் இறந்தார்கள் என்ற வசனம் வ்யஷ்டி தேஹத்தை விட்டார்களென்று பொருள்படும்.

இப்படியே, மஹேஸ்வரன் ஸமஷ்டி தேஹத்தைத் தரிப்பது அவருக்குப் பிறப்பெனலாம்; ஸமஷ்டிதேஹத்தை விடுவது அவருக்கு இறப்பெனலாம். ஆனால், பரமாத்மாவுக்குப் பிறப்பும் இறப்பும் இல்லவே இல்லை.

(5) ஆத்மா எது, அனாத்மா எது, ஸதஸத் எது, என்ற விசாரணைகளைப்பற்றி ஸம்ஶயமில்லாதவனாகித் தனது கர்மங்களை ஈஸ்வரார்ப்பண புத்தியோடு செய்கின்றவனாய்.

(6) துக்க காரணமான அதர்ம வழியினின்று நீங்குகின்றான்.

இனி, ஜீவர்களுக்கு மஹேஸ்வரனால் அருளப்பட்ட சில விசேஷ மனோதர்மங்களும் தேஹநிலைகளும் ௪ வது ௫ வது மந்த்ரங்களில் கூறப்படும்.

௪. ஜீவபூதங்களுக்கு புத்தி ([1]), ஞானம் ([2]), அஸம்மோஹம் ([3]), க்ஷமா ([4]), ஸத்யம் ([5]), தமம் ([6]), ஶமம் ([7]), ஸுகம், துக்கம், பவம் ([8]), அபாவம் ([9]), பயம், அபயம்,

௫. அஹிம்ஸை ([10]), ஸமதா ([11]), துஷ்டி ([12]), தபஸ் ([13]), தானம் ([14]), யஶஸ் ([15]), அயஶஸ் ([16]), என்ற பற்பலவித பாவங்கள் ([1 ]) என்னிடம் இருந்தே பிறக்கின்றன ([18]).

(1) லோகவிவேகம், அஃதாவது, லோக விஷயங்களைப் பகுத்தறியும் அறிவு.

(2) ஆத்ம அனாத்ம விவேகம்.

(3) மோஹமில்லாமை (ஸம்மோஹம்=மோஹம், அ=இல்லாமை).

ஒன்றனிடத்தில் இல்லாத பிறிதொரு தன்மையை அதனிடத்து உள்ளதாக அறிதல் மோகம். பாம்புத்தன்மையற்ற பழுதை (கயிறு) பாம்புத்தன்மை பெற்றது என்றறிதல் மோஹம்.

"அமோஹம்" அல்லது "அஸம்மோஹம்"=எத்தன்மையை ஒருவஸ்து பெற்று நிற்கின்றதோ, அது அத்தன்மையைப் பெற்றதென்ற புத்தி.

(4) ஸஹித்திருத்தல். இழுக்கப்பட்டாலும் அடிக்கப்பட்டாலும் விகாரமற்ற மனஸுடன் இருத்தல்.

(5) கண்டதைக் கண்டபடியும், கேட்டதைக் கேட்டபடியும், நினைத்ததை நினைத்தபடியும், கூறுதல். இது ஸத்யவாக்கு.

(6) பாஹ்யேந்த்ரிய நிக்ரஹம், புறக்கரண ஒடுக்கம்.

(7) அந்தர் இந்த்ரிய நிக்ரஹம்.

(8) பிறப்பு, தோற்றம்.

(9) மறைதல்.

(10) ப்ராணிகளை உபத்ரவஞ் செய்யாதிருத்தல்.

(11) ஸுகதுக்கங்களில் ஸமமான மனம் பெற்றிருத்தல்.

(12) த்ருப்தி, போதும் என்ற புத்தி.

(13) இந்த்ரியங்களை ஒடுக்கி சரீரத்தை வாட்டுதல்.

(14) தனது வல்லபத்துக்கேற்றபடி பிறருக்குக் கொடுத்தல்.

(15) தர்மத்தினால் பிறந்த கீர்த்தி.

கீர்த்தி=சொல்லுதலைக், கூறுதலைச், செய்விக்குங் குணம்.

(16) அதர்மத்தினால் வந்த அபகீர்த்தி.

(17) பாவனைகள், நற்குணங்கள்.

(18) அவனவன் கர்மத்துக்குத் தக்கபடி நான் கொடுக்கிறேன்.

௬. லோகத்திலுள்ள ப்ரஜைகள் எவர்களுடையனவோ (1), [அந்த] என் சொருபம் (2) பெற்றவர்களாகிய ஏழு மஹர்ஷிகளும் (3), அப்படியே பூர்வ நான்கு மனுக்களும் (4), மானஸர்களாகப் பிறந்தவர்கள் (5).

(1) லோகங்கள்தோறும் வாழ்கின்ற ஜீவர்களுடைய தேஹங்கள் எந்தப் ப்ரஜாபதிகளுடைய பொருட்களோ.

(2) என் ஸச்சிதானந்தசொரூபம்.

(3) ௰. ௨. (1).

ப்ரஜாபதி=ப்ரஜைகளுக்குப் பதி.

ப்ரஜை=ஜனனம் பெற்றவர்கள், தேகத்தைத் தரித்தவர்

கள். பதி=கர்த்தர்.

ஜகத்திலுள்ள தேகங்கள் எல்லாம் ப்ரஜாபதிகளால் ஸ்ருஷ்டிக்கப்பட்டன.

ப்ரஜாபதிகள் ப்ரஹ்மாவின் த்யானத்தால் அவரது சொரூபங்கொண்டு தோன்றி, ப்ரஹ்மாக்கள் என்றும், ப்ரஹ்ம மானஸ புத்ரர்கள் என்றும், ப்ரஹ்மருஷிகள் என்றும், மஹர்ஷிகள் என்றும் அழைக்கப்பட்டார்கள்.

இவர்களுடைய நாமங்கள் மரீசி, புலஸ்த்யர், புலஹர், க்ரது, அங்கிரஸ், அத்ரி, வஸிஷ்டர் என்பனவாம்.

தேவ அஸுர மானுட தேகங்களுக்கு இவர்கள் ப்ரஜாபதியானதால் இவர்களுடைய பிதாவாகிய ப்ரஹ்மா ப்ரஜைகளுக்கு பிதாமஹன் (பாட்டா) ஆனார்.

(4) இப்பொழுது நடைபெற்று வரும் மன்வந்தரத்திற்குரிய வைவஸ்வதமனு ஏழாவது மனு. இந்த ஏழு மனுக்களில் முதல் நால்வருமாகிய ஸ்வயம்புவ, ஸ்வாரோசிஸ், ஔத்தமி, தாமஸ மனுக்கள் ஈண்டுக் குறிக்கப்பட்டார்கள்.

(5) ஸப்த ப்ரஜாபதிகளும் முதல்நான்கு மனுக்களும் ஸூக்ஷ்ம ரூபிகள். தங்களிஷ்டப்படி ஸ்தூலதேஹத்தை ஸ்ருஷ்டித்துத் தரித்துக்கொள்ளவும் ஏனையோர்க்கு அருளவும் வல்லபமுண்டு.

**எ. இந்த எனது விபூதியையும் (1) [ஐஶ்வர] யோகத்தையும் (2) உள்ளபடி எவன் அறிகின்றனோ, அவன் (3) அசைவற்ற [ஞான] யோகத்தோடு சேர்கின்றன் (4). இதில் ஸம்ஶயம் இல்லை (5).**

(1) ஒன்ருனது பலவாகிய தன்மையையும், பலவாய்த் தோன்றினவற்றில் மஹாவிஶேஷ குணங்களோடு ப்ரகாஶிக்கின்ற வைகளையும்.

(2) இந்த விபூதிகளும் வேறு நாநாவித தோற்றங்களும் பரமேஶ்வரன் ப்ரக்ருதியோடு சேர்ந்ததால் வந்தனவென்ற உண்மையையும், அந்தச் சேர்க்கை பற்றுமற்பற்றிநிற்கும் சேர்க்கை என்ற உண்மையையும்.

(3) அந்த ஞானவான்.

(4) அந்தச் சலனமற்றிருக்கும் பற்றற்ற நிலையைப் பெறுகின்றான்.

(5) இப்படிப் பரமேஶ்வரனது மோக்ஷ ஸ்திதியை இவன் பெறுவான் என்பது நிஶ்சயம்.

அ. நான் ஸர்வத்தின் பிறப்புக்குக் காரணமென்றும், ஸர்வமும் என்னால் ப்ரவ்ருத்திக்கிறதென்றும், எண்ணி அறிவாளிகள் தங்கள் மனோபாவனைகளால் என்னையே பின்பற்றி அண்டுவார்கள் (1).

(1) பரமேஶ்வரனே பஞ்சக்ருத்யன் என்றறிந்த ஞானி அவனையே பற்றிநிற்பான். மனுஷர்களில் சக்ரவர்த்தியையும் பற்றிநில்லான்.

கூ. என்னிடம் சித்தத்தை வைத்தவர்களும் (1), என்னிடம் ப்ராணன்களை வைத்தவர்களும் (2), [மெய்ப்பொருளாகிய என்னை] அறிவிக்கின்றவர்களும் (3), ஒருவரோடொருவர் என்னைப்பற்றி நித்யம் ஸம்வாதிக்கின்றவர்களும் (4), ஸந்தோஷத்தைப் பெறுகின்றனர் (5). [பெற்று, மேன்மேலும் என்னில்] ரமிக்கின்றனர் (6).

(1) என்னைப் பெறுதற்குரிய ஸாதனைகளாகிய ஈஶ்வரார்ப்பணத்தையும் மனோலய யோகத்தையும் அப்யாஸிக்கின்றவர்களும்.

(2) அப்படியே ப்ராணாயாம யோகத்தை அநுஷ்டிக்கின்றவர்களும்.

இந்த யோகம் ஸித்திக்கும்பொருட்டு ப்ராண அபானவாயுக்கள் தடுக்கப்படுவதால், "ப்ராணன்கள்" என்றார்.

(3) ஆத்ம அநாத்ம விஷயங்களைப் பிரித்துக்காட்டி மெய்ப்பொருளைப்பற்றிப் போதனை செய்கின்றவர்களும்.

(4) ஶ்ரவணஞ் செய்த ஞானபாடங்களை ஒருவரோடொருவர் தினமும் ஸம்பாஷித்து, அவற்றைப்பற்றி உதயமாகும் ஸம்ஶயங்களை வெளிப்படுத்தி, ஸமாதானம்பெற முயலுகின்ற மாணுக்கர்களும்.

(5) சலனமற்ற மனஸைப் பெற்று ஶாந்தமாயிருக்கின்றனர்.

(6) அந்த ஶாந்தத்திலேயே நின்று மேன்மேலும் ஆனந்திப்பார்கள்.

**௰. ஸதாகாலமும் என்னைப் பொருந்தினவர்களும் (1), ப்ரீதியோடு என்னைச் சேவிக்கின்றவர்களும் (2), ஆகிய அவர்களுக்கு எதனால் (3) அவர்கள் என்னைப் பெறுகின்றனரோ, அந்தப் புத்தி யோகத்தைக் (4) கொடுக்கின்றேன்.**

(1) *நானே பரம்பொருள் என்று நிஶ்சயித்து, எக்காலமும் மனசை என்னில் வைத்திருக்கின்றவர்களும்.*

(2) *ஶ்ரத்தையோடு தங்கள் கர்மங்களை எனது கர்மங்கள் என்று செய்கின்றவர்களும்.*

(3) *எந்த ஸமத்வத்தால்.*

(4) *அந்த ஸமத்வபுத்தி யோகமென்னும் விருப்புவெறுப்பு ஸமரஸ சேர்க்கையை.*

*ஈஶ்வரார்ப்பணத்திற்கும் ப்ராணாயாமத்திற்கும் மனோலயத்திற்கும் ஆதாரமும் உற்றதுணையுமானது ஸமத்வபுத்தி. இது பெருகப்பெருக, அவை லகுவாய் ஸித்திக்கும்.*

**௰௧. அவர்களை ரக்ஷிப்பதற்காகவே அஞ்ஞானத்தால் பிறந்த தமஸை (1), ப்ரகாஶிக்கின்ற ஞானதீபத்தால். நான் அந்தஃகரணத்தில் இருந்துகொண்டு (2) கெடுக்கின்றேன்.**

(1) *அறியாமையில்நின்று தோன்றின துக்கம் பயம் மோஹம் முதலிய தாமஸ குணங்களை.*

(2) *நான் உள்ளம் என்ற அந்தஃகரணத்தில் விஜயமாகி.*

*ப்ரக்ருதி சொரூபங்கள் தோறும் பரமேஶ்வரன் இருந்தாலும், அவருடைய அநுக்ரஹ ஶக்தி தேவ மானுட தேகங்களைப் பெற்ற ஜீவாத்மாக்களுக்கு உதவும் இடம் உள்ளம் என்ற அந்தஃகரணமே.*

*பரமேஶ்வரனது அன்பைப் பெறாத ஜீவாத்மாவின் மலம் உள்ளத்தில் ஏறி, மனஸைக் க்ரஹித்து, கர்மேந்த்ரியங்களால் பாபகர்மங்களைச் செய்யும். ஆனால், அவர் தமது அன்பைப் பெற்ற ஜீவாத்மாவின் மலம் உள்ளத்தில் ஏறின மாத்ரத்தில்*

அதை, மனவிற் சென்று வாதனைசெய்ய விடாமல், உள்ளத்திலேயே நாஶமாக்குவார்.

அர்ஜுநன் கூறினன்:

௰உ—௰௩. [என்னில்] ப்ரகாஶிக்கின்ற நீ பரம ஒளியும் பரம பவித்ரமுமாகிய (1) பரப்ரஹ்மம் [என்றது நிஶ்சயம்]. எல்லா [மானுட] ருஷிகளும் தேவருஷியான நாரதரும் அவ்விதமே அஸிததேவலநும் (2) வ்யாஸநும் உன்னை ஶாஸ்வத புருஷனாகவும் திவ்விய னாகவும் ஆதிதேவனாகவும் அஜனாகவும் (3) விபுவாகவும் (4) கூறு கின்றனர். [ப்ரத்யக்ஷமாகவே] நீயுங் கூறுகின்றாய்.

(1) பரிசுத்தமுமாகிய.
(2) அஸிததேவலன் நாரதரோடு ஸம்வாதஞ்செய்தவன். கருமை நிறம்பொருந்திய ஓர் வித்வ ப்ராஹ்மணன். அவனைப் பற்றி மஹாபாரத ஶாந்திபர்வத்திற் காண்க.
(3) பிறப்பற்றவன்.
(4) வ்யாபகன்.

௰௪. ஓ பகவன், தேவர்களும் தானவர்களும் (1) உனது [மஹேஶ்வர] ஸ்வரூபத்தை அறியார்கள். என்னிடம் எதைக் கூறுகின்றயோ அதையெல்லாம் உண்மையாக எண்ணுகின்றேன், ஓ கேஶவ.

(1) "தேவர்கள்" ப்ரஹ்மாவின் புத்ரர்களிலொருவராகிய மரீசியின் புத்ரனாகிய காஶ்யபருக்குத் தக்ஷன்மகள் அதிதி வயிற்றிற் பிறந்தோர். "தானவர்" காஶ்யபருக்குத் தநுவினிடத்துப் பிறந்த புத்ரர்.

௰௫. பூதபாவன (1), பூதேஶா (2), தேவதேவா (3), ஜகத்பதே (4), புருஷோத்தமா (5), நீ ஸ்வதந்த்ரத்தாலேயே உன்னை உன்னால் அறிகின்றாய் (6).

(1) ஜீவாத்மாக்களைப் பிறப்பிக்கின்றவனே.
(2) அவைகளை அடக்கி ஆளுகின்றவனே.
(3) தேவர்களால் போற்றப்படும் தேவா.
(4) ஸர்வலோகங்களையும் ரக்ஷிக்கும் பதியே.

(5) உத்தம புருஷனே.

(6) "ஸ்வயமேவ ஆத்மநா ஆத்மானம் வேத:"=ஸ்வதந்த்ரத்தாலேயே ஆத்மாவைக் கொண்டு ஆத்மாவை அறிகின்றாய்= வேறொருவர் உனக்குச் சொல்லாமல், நீயே உன்னை உன்னால் தர்ஶிக்கின்றாய்.

ஶுத்தாத்மாவை அறிவதற்கு ப்ரக்ருதி தத்வங்கள் யாவற்றையும் நீக்கி, ஆத்மா கைவல்யமாக (தன்னந்தனியாக) நின்றே, தன்னை அறியவேண்டும் என்பதுபற்றி, "நீயே உன்னை உன்னால் அறிகின்றாய்" என்றான் அர்ஜுநன்.

**யசு. இவ்வுலகங்களை நீ வ்யாபித்து எந்த விபூதிகளால் நிற்கின்றயோ, உனது அந்த விபூதிகள் சிறந்தவைகள் ஆனதால், அவைகளை நீ முற்றுங் கூறவேண்டும் (1).**

(1) சிறந்த விபூதிகளை ஶ்ரவணம் செய்தால், அவைகளை மனம் த்யானித்து வேறு விஷயங்களைப் பற்றாது நிற்கும். இவ்வித மனோபாவனை ஈஶ்வரோபாஸனையாகும். "நினைப்பு மறப்பற்று நில்" என்ற உபதேஶத்தை அநுஸரிக்கத் தகாதவர்களுக்கு இந்த மனோபாவனை விருப்பு வெறுப்புக்களை ஒடுக்கும், அந்தஃகரணங்களை ஶுத்திசெய்யும், அறிவைப் விஶாலமாக்கும்.

**யஎ. யோகியே, எக்காலங்களிலும் எவ்விதம் உன்னை நினைந்து அறிவேன் (1)? பகவன், எந்தெந்த வஸ்துக்களில் என்னால் நீ நினைக்கத் தக்கவனாயிருக்கின்றாய்?**

(1) விருப்பு வெறுப்புக்களால் வாதிக்கப்படாத மனோலய யோகிகளாகிய ஸாங்க்யர்கள் நினையாமலும் நித்திரையிற் சிக்காமலும் அறிவு (ஆத்ம) மயமாய் நின்று, பரமாத்மாவை அறிவார்கள் என்றும், லோகப்பற்றுக்கள் உள்ள தனக்குக் கர்மயோகமே உரியது என்றும், சர்மதேக ஸித்திக்கு ஈஶ்வரனைப் பற்றி மனஸ் ஏராளமாக நினைக்கவேண்டும் என்றும், நிஶ்சயத்தைப் பெற்ற அர்ஜுநன் "எவ்விதம் உன்னை நினைந்து அறிவேன்" என்றான்.

**௰அ.** உனது அம்ருதம் போன்ற வாக்கைக் கேட்கின்ற எனக்கு, போதும் என்ற புத்தியில்லாததால், ஜநார்த்தன, ஆத்மயோகத்தை யும் (1) ஆத்ம விபூதியையும் (2) மறுபடியும் விரிவாகக் கூறு.

(1) *பரமாத்மா ப்ரக்ருதியோடு சேர்ந்து நிற்கும் நிலையை யும்.*

(2) *இந்த ஐஸ்வர யோகத்தில் தோன்றிநிற்கும் நாநாவித விஶேஷ கோலங்களையும்.*

ஸ்ரீ பகவான் கூறுகின்றார்:

**௰௯.** ஸந்தோஷம், குரு ஶ்ரேஷ்ட (1). ஆத்ம விபூதிகள் திவ்யங் களாய் இருப்பதால் (2), [அவைகளுள்] ப்ரதானங்களைக் கூறப்போ கின்றேன். எனது [விபூதிகளின்] விஸ்தாரத்திற்கு முடிவில்லை.

(1) *உனது ஸ்தோத்ரத்தைக் கேட்டு மகிட்சி பெற்றேன், குரு வம்ஶத்தில் மேன்மை அடைந்த அர்ஜுநா.*

(2) *மிக ப்ரஸித்தி பெற்றவைகளா யிருப்பதால்.*

**உ௰.** குடாகேஶ, எல்லாப் பூதங்களின் ஆஶயமாய் (1) இருக் கின்ற ஆத்மாவும் நானே. பூதங்களின் ஆதியும் மத்யமும் அந்தமும் நானே (2).

(1) *ஆஶயம்=ஶயனிக்குமிடம், நித்ரையில் ஒடுங்குமிடம.*

(2) *ஜீவர்களின் ஸ்தூல ஶரீரங்களின் அக்ரிஸ்ய ஆரம்ப மும், க்ரிஸ்ய ஸ்திதியும், அக்ரிஸ்ய அழிவும் எனது ஶக்தி கோலங்களே.*

**உ௰௧.** ஆதித்யர்களுக்குள் விஷ்ணு [என்ற ஆதித்யன்] நானே (1). ஜ்யோதிப் பொருள்களுக்குள் கிரணங்கள் பெற்ற ஸூர்யனும் நா னே (2). மருத் [தேவதை] களுக்குள் மரீசி [என்ற மருத்தும்] நா னே (3). நக்ஷத்ரங்களுக்குள் [அவர்கள் நாயகனாகிய] சந்த்ரனும் நா னே (4).

(1) *"அதிதி" என்ற தேவியின் புத்ரர்கள் "ஆதித்யர்". இவ ர்களின் பேர் விஷ்ணு, ஶக்ரன் (இந்த்ரன்), ஆர்யமன், தாத்ரி,*

த்வஷ்த்ரி, பூஷன், விவஸ்வத் (ஸூர்யன்), ஸவித்ரி, மித்ரன், வருணன், ஆம்ஸன், பகன், என்பனவாம்.

இவர்களில் விஷ்ணு என்பவர் ஆக இளையவராயினும் மற்றவர்களிலும் குணாதீதன் என்று மகாபாரதத்திலும் புராணங்களிலும் கூறி இருக்கின்றது.

அதிதி என்றதேவி, ப்ரஹ்மாவின் புத்ரனாகிய மரீசியின் புத்ரனாகிய கஶ்யபரை விவாகம்செய்து, ஆதித்தியர்களைப் பெற்றாள்.

(2) வெளிச்சத்தைக் கொடுக்கும் சோதிசொரூபங்களில் ஸப்தகிரணங்களையுடைய ஸூர்யலோகமும் எனது ஶக்தியே.

"ஸூர்ய" என்ற பதம் ஸூர்ய பகவானையும் ஸூர்ய லோகத்தையும் குறிக்கும்.

ஸூர்யபகவானுக்குப் பர்யாய நாமம் விவஸ்வத். இவர் ஆதித்தியர்களில் ஒருவர். இவருக்கு எழுவித கிரணங்கள் உண்டு. அவை ஸுஷும்நா, ஹரிகேஶ, விஶ்வகர்மன், விஶ்வகார்யன், ஸம்பத்வஸு, அர்வவஸு, ஸ்வராஜன் என்பனவாம். ப்ரலயகாலத்தில் இந்தக் கிரணங்கள் ஏழு ஸூர்யர்களாகி லோகங்களை வாட்டி எரிக்கும்.

ஸூர்ய பகவானுடைய குணவிஶேஷங்கள் ஸூரியலோகத்திற்கும் அமைந்தன. ஸூர்ய பகவானை மானுடர் காணாதிருந்தாலும், அவருடைய லோகத்தைத் தினமும் கண்டு அநேக நன்மைகளைப் பெறுகின்றனர்.

இந்தலோகம் அவரது "ரதம்" என்றும், இந்த ரதம் காயத்ரி ப்ருஹதி உஷ்ணி ஜகதீ த்ருஷ்டுப் அநுஷ்டுப் பங்தி என்ற வேதமாத்ரா அஶ்வங்களால் இழுக்கப்பட்டு உத்தராயண தக்ஷிணாயன மார்க்கங்களில் செல்லுகின்றது என்றும், இந்த ரதத்தில் ஒருவருஷத்துக்குரிய ஒவ்வொருமாசமும் வெவ்வேறு ஆதித்யர்களும் ருஷிகளும் கந்தர்வர்களும் க்ராமணிகளும் நாகர்களும் ராக்ஷஸர்களும் உத்யோகம் செய்வார்கள் என்றும், ஶாஸ்த்ரங்கள் கூறுகின்றன.

ஸூர்ய லோகம் நவக் க்ரஹங்களில் முக்கியமானது. இத

ன் தேஜஸ் ஸகல தேஜஸ்களுக்குள்ளும் விசேஷமாதலால்,' "ஸூர்யனும் நானே" என்றார்.

ஶிவாலயங்களில் ஆகமவிதிப்படி ஸூர்ய பகவானை "கமோல்காய ஶிவஸூர்ய மூர்த்தி" என்று அழைத்து, "ஶிவயாகம் ஸித்திக்கும்பொருட்டு அந்தகாரத்தை (அஞ்ஞான இருளை) நிரோதிப்பாயாக" என்று வேண்டி, நித்ய உத்ஸவக் க்ரமத்தில் முதற் பூஜை செய்வார்கள்.

(3) மருத் தேவதைகளை, கஶ்யபர், திதி என்ற தேவியோடு சேர்ந்து, புத்ரர்களாகப் பெற்றார். இவர்கள் நாற்பத்தொன்பது பேரும் தேவர்களுக்கு அரசனாகிய இந்திரனுக்கு அடிமைப் பட்டு, அவருடைய மின்னல் இடி மழை மேகங்கள் என்ற கணங்களோடு சேர்ந்து, வாயுரூபங்களாய்ச் சஞ்சரிப்பார்கள். மருத்களில் ப்ரதான ஶக்திபெற்றவர் மரீசி.

(4) சந்த்ரனுக்குப் பர்யாயநாமம் ஸோமன். இவர் ப்ரஹ்மாவின் புத்ரனாகிய அத்ரி என்பவரின் புத்ரன். இவருக்கு உரிய இடம் சந்திர லோகம். அஶ்வினி பரணி கார்த்திகை முதலிய உ௭ நக்ஷத்ரங்களோடு கூடி ஒவ்வொருமாஸமும் அநேக சுகங்களைக் கொடுப்பார். இவர் அஷ்ட லோகபாலர்களில் ஒருவர். மற்ற லோகபாலர்கள் இந்த்ரன் யமன் வருணன் குபேரன் விவஸ்வத் (ஸூர்யன்) அக்நி வாயு என்பவர்களாம்.

**உ௰உ. வேதங்களுக்குள் ஸாமவேதமும் நானே (1). தேவர்களுக்குள் வாஸவனும்(2) நானே. இந்த்ரியங்களுக்குள் மனஸும் நானே(3). ப்ராணிகளின் சேதனையும் (4) நானே.**

(1) ஆதியில் ஒன்றாய் இருந்த வேதத்தை த்வாபர யுக அந்தத்தில் வ்யாஸ பகவான் நான்கு பாகமாகப் பிரித்தார்.

அத்வர்யு ஓதுவார் ஓதும் ப்ரார்த்தனைகளை "யஜுஸ்" என்றும், ஹோத்ரி ஓதுவார் ஓதும் ப்ரார்த்தனைகளை "ரிசஸ்" என்றும், உத்காத்ரி ஓதும் ஸ்தோத்ரங்களை "ஸாமன்" என்றும், ப்ராஹ்மணம் ஓதுவார் ஓதும் மந்த்ரங்களை "அதர்வண" என்றும், வேதம் பிரிக்கப்பட்டது.

வியாஸருடைய ஶிஷ்யன் பைலமுனிவர் ருக்வேதத்தையும், வைஸம்பாயனர் யஜுர் வேதத்தையும், ஜைமினி ஸாம வேதத்தையும், ஸுமந்து அதர்வண வேதத்தையும்; தங்கள் தங்கள் ஶிஷ்யர்களுக்கு ஓதுவித்தார்கள்.

ஸாமவேதம் மிக இனிமையான நடையைப் பெற்று தேவ பக்தியை உண்டுபடுத்துவதால், "ஸாமவேதமும் நானே" என்றார்.

(2) வேதங்கள் போற்றும் தேவர்களில், தேவராஜனுகிய இந்த்ரனுக்குப் பர்யாய நாமம் வாஸவன்.

(3) தேவர்களைப் பற்றிப்பிடித்து த்யானிக்கும் கருவி மனஸ் ஆதலாலும், அது பரமேஶ்வரனுல் ஜீவர்களை உத்தாரணம் செய்யும்பொருட்டு ஸ்ருஷ்டிக்கப்பட்டதாலும், அது அவரது ஶக்தியே என்று விஶேஷிக்கப்பட்டது.

(4) ஜீவாத்மாக்களின் புத்தியும் எனது ஶக்தியே.

௨௰௩. ருத்ரர்களுக்குள் ஶங்கரனும் நானே (1). யக்ஷர் ராக்ஷஸர்களுக்குள் வித்தேஶனும் (2) நானே. வஸுக்களுக்குள் பாவகனும் நானே (3). மலைகளுக்குள் மேருவும் (4) நானே.

(1) தனது ஸ்ருஷ்டி கர்மத்தை நிறைவேற்றுவதற்காக ப்ரஹ்மா பரமேஸ்வரனை த்யானித்தபோது, ப்ரஹ்மாவின் நெற்றியிலிருந்து ஏகாதஶ (௰க) ருத்ரர்கள் தோன்றினுர்கள். இவர்களை மகாதேவன் ஹரன் ருத்ரன் ஶங்கரன் நீலலோகிதன் ஈஶானன் விஜயன் பீமன் தேவதேவன் பவோத்பவன் கபாலீஶன் என்று ஶிவாகமங்கள் கூறும்.

ஶிவாலயங்களில் ஶத்துரு ஜயத்துக்கும் ரோக நிவாரணைக்கும் மற்றும் இஷ்ட காம்ய ஸித்திகளுக்கும் ஏகாதஶ ருத்ரர்களைப் பக்தர் அபிஷேகாதி உபஸாரணைகளால் வழிபடுவார்கள். இவர்களில் விஶேஷ ஶக்தி பெற்றவர் ஶங்கரன்.

(2) ப்ரஹ்மாவின் தமோகுண ப்ரவிருத்தியில் நின்று தோன்றினவர்கள் யக்ஷரும் ராக்ஷஸரும். பசியினுல் மெலிவுபெற்றும் பயங்கரரூபிகளாயும் இருப்பர்.

ப்ரஹ்மாவின் புத்ரனாகிய புலஸ்த்யரில் நின்றும் யக்ஷர்களும் ராக்ஷஸர்களும் பிறந்தார்கள்.

இவருடைய புத்ரனாகிய விஸ்ரவஸ் பாரத்வாஜ ருஷியின் மகளாகிய தேவவர்ணினியை மணந்து அநேக ஸத்வகுணம் பொருந்திய வைஸ்ரவணனைப் பெற்றார். வைஸ்ரவணன் ஜன பரிபாலனத்தை விரும்பித் தபஸ்செய்து அஷ்டபாலகர்களில் ஒருவராக நியமிக்கப்பட்டு, நிகரற்ற தனவானாகி, அங்க பங்கத்தைக் குறிக்கும் "குபேரன்" என்ற காரணப்பெயருடன், யக்ஷர்களுக்கும் ராக்ஷஸர்களுக்கும் அரசனாகி லங்காபுரியில் வெகுகாலம் வாழ்ந்தார்.

இவருடைய பிதாவாகிய விஸ்ரவஸ், கேஸினியை மணந்து, ராவணனையும் விபீஷணனையும் பெற்றார். ராவணன் லங்காபுரி தனக்குரியதென்று பாராட்டித் தனக்கு அதைக் கொடுக்க வேண்டும் என்று கேட்டபடியால், குபேரன் திருக்கைலாஸ கிரியில் அளகாபுரி என்ற பட்டணத்தை அடைந்து தமது திக்பாலக உத்யோகத்தை வடதிக்கில் நடத்திவருகின்றார்.

கஸ்யபர், கஸா என்ற பெண்ணை மணந்து, வேறு யக்ஷரையும் ராக்ஷஸரையும் பெற்றார்.

"வித்தேஸன்"=நிதிக்கு ஈஸன். இவரே குபேரன்.

(3) ப்ரஹ்மாவின் புத்ரனாகிய தருமர், தக்ஷனுடைய மகளாகிய வஸு தேவியை மணந்து, அஷ்ட வஸுக்களைப் பெற்றார். இவர்களின் நாமங்கள் தரன் த்ருவன் ஸோமன் ஆபன் அனலன் அனிலன் ப்ரத்யூஷ் ப்ரபாஸன் என்பனவாம்.

ஸிவாலயங்களில் இவர்களுக்கு நித்ய உத்ஸவத்தில் இருவேளை பலி கொடுக்கப்படும்.

வஸுக்களில் விஸேஷ குணவான் அனலன். இவரைப் "பாவகன்" என்றும் சொல்வார்கள்.

(4) பொன்மயமாகிய மேரு ஸுமேரு மஹாமேரு ஸுராலயம் ரத்னஸாநு ஹைமாத்ரி என்றும் கூறப்படும்.

இதன் சிகரங்களில் த்ரிமூர்த்திகளும் இந்த்ராதி லோக பாலர் முதலிய தேவர்களும் இருக்கின்றனர். ஆகாஸ கமனம்

செய்கின்ற வஸித்த புருஷர்களும் ருஷிகளும் வேதாகம ஶாஸ்த்ர விசாரணைகளைப்பற்றி அங்கு ஸபைகூடி ஸம்வாதனை செய்வார்கள்.

ஸாதாரண மனுஷர்களுக்கு இந்தமலை புலப்படாது. ஸவர்க்க லோகத்தைப்போல வாயு தத்வ ப்ரபலத்தால் இயற்றப்பட்டது. ஆதலால், ப்ருதுவி தத்வம் மிகுந்த ஜனங்கள் அதைக் காணவும் தொடவும் மாட்டார்கள்.

புராணங்களிலும் இதிகாஸங்களிலும் மஹாமேரு பாதாளந்தொட்டு புவர் ஸ்வர் லோகங்கள்வரையிற் செல்லுகின்றதென்றும், பூலோகத்தில் "எர்த்" (earth) என்று அங்க்லேயரால் கூறப்பட்ட ஜம்பு த்வீபத்தில் இலாவ்ருத தேச மத்தியில் உள்ளதென்றும், அந்த இலாவ்ருத தேசம் ஹிமாலயமலைக்கு அப்பாற்பட்ட கிம்புருஷ தேசத்துக்கும் ஹரிவர்ஷத்துக்கும் வடக்கே உள்ளதென்றும், உத்தரகுரு தேசத்துக்கும் ரம்யக தேசத்துக்கும் தெற்கே உள்ளதென்றும், கூறியிருக்கின்றது. மேலும், இந்த மஹாமேரு நீல மலையை வடக்கிலும், கந்தமாதன மலையைக் கிழக்கிலும், மால்யவத் மலையை மேற்கிலும் எல்லையாகக் கொண்டதென்று கூறியிருக்கின்றது.

இப்படிக் கூறப்பட்ட தேசங்களின் இருப்பிடமும் மலைகளின் இருப்பிடமும் நிதானித்தாலன்றி, மஹாமேருவின் இருப்பிடம் அறிதல் அஸாத்யம்.

இப்பொழுது நடைபெறும் மன்வந்த்ர ஆரம்பத்திலுள்ள குலபர்வதங்களைப் புராணங்கள் குறிப்பிட்டிருக்கின்றன. எந்த மலைக்குமுன் எந்த மலை என்றும், எந்த மலைக்குப் பின் எந்த மலை என்றும், எந்த மலை வரிசைகளின் இடையில் எந்தத் தேசம் என்றும், விளக்கியிருக்கின்றது. இக்காலத்தில் ஜாதி பாஷை வேற்றுமைகள் எப்படியிருப்பினும், குல மலைகளும் இவற்றைப்பற்றிய நிலங்களும் ஆதியில் இருந்தவாறே இன்றும் ஏறக்குறைய உள்ளன என்று தோற்றுகின்றது.

ஆஷியா (Asia) க் காண்டத்தில் உள்ள இந்தியா (India) வுக்கும் ஸைபீர்யா (Siberia) வுக்கும் இடையிலுள்ள பர்வதங்

களை ஆராயின், இந்தியாவின் வடபாக எல்லையிலுள்ள ஹிமாலய பர்வதத்துக்கு வடக்கே சீனபாஷையில் "குவான் லுன்" என்று கூறப்பட்ட ஒரு நெடிய பர்வதம் உண்டு. இதுவே ஸம்ஸ்க்ருத பாஷையில் ஹேமகூடம் என்று கூறப்படும்.

ஹிமாலயத்துக்கும் ஹேமகூடத்துக்கும் இடையிலுள்ள தேசத்தை இக்காலத்தில் டிபெற் (Tibet) என்பார்கள். ஆதிகாலத்தில் அது கிம்புருஷ வர்ஷம் எனப்படும். மேற்குக் கிழக்காகச் சென்று நிற்கும் ஹேமகூட பர்வதத்துக்கு வடக்கே நிஷதம் என்ற பர்வதமும் மேற்குக் கிழக்காக ஓடி நிற்கின்றது. இதைச் சீனர்கள் "தியான் ஷன்" மலை என்பார்கள்.

ஹேமகூட பர்வதத்துக்கும் நிஷத பர்வதத்துக்கும் இடையிலுள்ள தேசம் ஹரிவர்ஷம் எனப்படும். இந்தத் தேசம், பாப கர்ம மிகுதியால் வெகுகாலம் மணற்காடாகி, கோபி (Desert of Gobi) எனப்படும்.

தியான்ஷன் என்ற நிஷத பர்வதத்துக்கு வடக்கே, மேற்குக் கிழக்காகச் சென்று, நீல பர்வதம் நிற்கின்றது. இதை இக்காலத்தில் "ஆல்ற்றே" (Altai) மலை என்பார்கள்.

நிஷத பர்வதத்துக்கும் நீல பர்வதத்துக்கும் இடையிலுள்ள தேசம் இலாவ்ருதம் எனப்படும்.

இந்த இலாவிருதத்தின் மத்தியில் மஹாமேரு, பூமியைப் பீறி, ஸூர்ய சந்த்ர நட்சத்திராதிகளுக்கு உரிய புவர்லோகத்தையும் பீறி, ஸ்வர்க்கலோகப் பரப்பிலுள்ள த்ருவ லோகம் வரையில் நிற்கின்றதென்று ஶாஸ்திரங்கள் கூறும். த்ருவ லோகம் ஆங்க்லேய பாஷையில் "போல் ஸ்டார்" (Pole Star) எனப்படும்.

மஹாமேரு பாதாளம் தொட்டு த்ருவலோகம்வரைக்கும் நிற்பதால், அதன் உயர்வை கணக்கிடுதல் அரிது. புராணங்களில் கூறப்பட்ட யோஜனைக்கணக்கு உள்ளபடியான கணக்கன்று. உள்ளபடி கணக்கை விரிக்கின், மனசுக்கு எட்டாமற் போகும். அங்குக் கூறப்பட்ட யோஜனை தூரக் கணக்குக்கள் ஸாம்ய ஸம்பந்தக் கணக்கென்றே அறியவேண்டும்.

மேருவின் அடி 16,000 யோஜனையுள்ள விஸ்தாரமானால், அதன் முடி 32,000 யோஜனை உள்ள விஸ்தாரமாகுமென்று நிதானிக்கப் பட்டது. செந்தாமரைக்காய் (pericarp of the pink lotus) போன்ற இவ்வித ரூபம்—அடிப் பரப்பு ஒடுங்கி, முடிப் பரப்பு விரிந்த ரூபம்—மானுடர்களாற் காணப்பட்ட மலைகள் ஒன்றுக்கும் அமையவே இல்லை. த்ரிலோகமும் பீறிநிற்கும் தன்மையும் வேறொரு மலைக்கு உரியதுமன்று.

இந்த அதிவிநோத மலையின் மேகலைகளில் அநேக க்ஷேத்ரங்கள் உள்ளன. மத்ய மேகலையில் சிவபெருமான் எழுந்தருளிய திருக்கைலாஸமும் திக்பாலகர் வஸிக்கும் நகரங்களும் இருக்கின்றன

த்ராவிடதேசங்களில் ஆகமப்படி நடத்தப்பட்ட சிவாலயங்களில் நித்ய உத்ஸவம் கைலாஸ பாவனையே.

மஹாமேரு புவர்லோகத்திற்கு மேலுள்ள ஸ்வர்க்க லோகம்வரையிற் சென்று நிற்கும். ஸ்வர்க்கலோகத்தைச் சார்ந்த ஸப்தருஷி மண்டலமும், த்ருவன் வஸிக்கும் த்ருவலோகமும், மேருவின் உச்சி மேகலைப் பாங்கில் இருக்கும்.

அண்டத்தில் எவ்விதம் மேரு த்ரிலோகங்களிலுள்ள சராசரங்களின் பரிபாலனத்துக்கு இயற்றப்பட்டதோ, அவ்விதமே பிண்டத்திலும் மேரு வீணாதண்ட (vertebra) ரூபமாக இருக்கின்றது. அண்டத்தில் மஹாமேருவைக் கண்ட பெரியோர் பிண்டத்திலுள்ள வீணாதண்டத்தையும் மஹாமேரு என்று கூறினார்கள்.

ஸ்தூல தேகத்திலுள்ள வீணாதண்டமும் தாமரைக்காய் போன்ற எலும்புகளால் இயற்றப்பட்டு, ஆறு மேகலைகளால் சிறப்புப்பெற்றது. அவற்றில் மூலாதாரம் ஸ்வாதிஷ்டானம் மணிபூரகம் அநாகதம் விஶுத்தி ஆக்ஞை என்ற சக்ரங்கள், நகரங்கள்போல, விரிந்தன. மூலாதாரத்தில் விக்னேஶ்வரனும், ஸ்வாதிஷ்டானத்தில் ப்ரஹ்மாவும், மணிபூரகத்தில் விஷ்ணுவும், அநாகதத்தில் ருத்ரனும், விஶுத்தியில் மஹேஶ்வரனும், ஆக்ஞையில் சதாசிவனும் வீற்றிருப்பர்.

பிண்டத்திலுள்ள மேருவை ஸாதாரண ஜனங்கள் அறியார்கள். பிண்ட மேருவிலுள்ள ஆறுதாரங்களையும், அவற்றில் வஸிக்கும் தேவர்களையும், கல்விமான்கள்தாமும் அறியார்கள். ஞானதிகாரியே இவற்றைப் பிண்டத்தில் அறிவதுபோல, ப்ரஹ்மாண்டத்திலுள்ள மஹாமேருவைத் தக்க ஸித்திபெற்றவர்களே அறிவார்கள்.

**உ௰௪. பார்த்த, புரோஹிதர்களுக்குள் (1) முக்கியனான ப்ருஹஸ்பதி (2) என்று என்னை அறி (3). ஸேனாபதிகளுக்குள் ஸ்கந்தனும் நானே (4). ஜலமுள்ளவைகளுக்குள் ஸமுத்ரமும் நானே.**

(1) "புரஹ்" (முன்), "ஹித:" (வைக்கப்பட்டவன்) என்ற பதங்கள்கூடி "புரோஹித:" (முன்வைக்கப்பட்டவன்) என்றாகி, வழிகாட்டுவோன் என்று பொருள்படும். விதி விலக்குக்களை அறிந்து, செல்லவேண்டிய மார்க்கம் இதுவே என்று உறுதியாகக் கூறுகின்றவன் "புரோஹிதன்".

இவனே "ஆசார்யன்". "ஆ" (சுற்றிலும்), "சார்ய:" (செல்லக்கூடியவன்) என்ற பதங்கள் கூடி, "ஆசார்ய" என்ற ஸமாஸம் சூழ்ந்த பார்வைபெற்ற புத்திமான் என்று அர்த்தப்படும். எனவே, புரோஹிதனும் ஆசார்யனும் ஏகார்த்த பதங்களாம்.

(2) தேவ குருவாகிய வ்யாழ பகவான். இவர் ப்ரஹ்மாவின் புத்ரனாகிய அங்கிரஸ் மஹர்ஷியின் புத்ரன்.

(3) என்றவரும் நானே.

(4) அரசைக் காக்கும் ஸேனாதிபதிகளில், தேவ ஸேனாதிபதியாகிய ஸ்கந்தனும் எனது ப்ரதான ஶக்தியே.

ஸ்கந்த ஸ்வாமியை ஶரவணபவன் என்றும், கார்த்திகேயன் என்றும், ஸுப்ரஹ்மண்யம் என்றும் கூறுவார்கள்.

அநேக கல்ப காலங்களுக்கு முன் அஸுரர்களின் வாதனையைப் பொறுக்கக்கூடாத தேவர்களை ரக்ஷிக்கும் பொருட்டு, ஶிவபெருமான் தமது ப்ரஹ்ம ஶக்திகளாகிய ப்ரணவம் ஈஶானம் தத்புருஷம் அகோரம் வாமதேவம் ஸத்யோஜாதம் என்றவற்றில் நின்று நிகரற்ற வெப்பமுடைய அக்நிப் பொறிகளைப்

ப்ரயோகித்து, அந்த ஆறு பொறிகளையும் கைலாஸ கிரிப் பாங்கில நாணற் புல்லாற் சூழப்பட்ட வாவியாகிய ஶரவணத்திற் செலுத்தினர். ("ஶர"=நாணற் புல், "வண"=நீர்).

விஸாக நக்ஷத்ரத்தில் ஶரவணப் பொய்கையில் வைக்கப் பட்ட ஷட் ஜ்யோதிகள், ஸுப்ரஹ்ம லக்ஷணத்தோடு, ஆறு சிறு குழந்தைகளாகிச் செந்தாமரை மலரின்மீது வீற்றிருந்தார்கள். இவர்களைக் கண்ட கார்த்திகை நக்ஷத்ர மகளிர் அறுவரும் மிக மகிழ்ந்து, ஒவ்வொருவரும் ஒவ்வொரு புதல்வனை எடுத்துத் தங்கள் முலைப்பாலை ஊட்டி வளர்த்தனர். அக்காலத்தில் கைலாஸபதியும் உமாதேவியும் அங்குச் செல்ல, பேரன்போடு உமாதேவி தமது ஷட் குமாரர்களையும் இரு கரங்களாலும் சேர்த்தெடுத்துத் தழுவினர். உடனே ஷண் (ஆறு) முகங்களும் பன்னிரு கரங்களும் உடைய ஒரு திருமேனியாயிற்று. இப்படிக் கூட்டி எடுக்கப்பட்ட குமர (முருக)க் கடவுள் "ஸ்கந்தன்" ("ஸ்கந்த"=சேர்க்கப்பட்டவன்) எனவும், "ஷண்முகன்" எனவும் அழைக்கப்பட்டார்.

பரமேஶ்வரன் பெருங் கருணையோடு தமது இடப்பக்கத்தில் ஸ்கந்தனையும் உமாதேவியையும் இருத்தி யருளினர். இம்மூவரும் ஒன்றுகூடி அமர்ந்த மூர்த்தம் "ஸோமாஸ்கந்த மூர்த்தி" எனப்பட்டது. ("ஸஹ"=கூட, "உமா"=பார்வதி, "ஸ்கந்த"=குமாரஸ்வாமி). உமையாளோடும் ஸ்கந்தனோடும் கூடித் தர்ஶனை கொடுக்கின்ற மூர்த்தி எவரோ, அவர் ஸோமாஸ்கந்த மூர்த்தியாகிய மஹாதேவர்.

கார்த்திகைப் பெண்களின் விசேஷ புண்ய கர்மத்தை லோகத்தார் பாராட்டும்பொருட்டு, ஶிவபெருமான் ஸ்கந்தனுக்குக் "கார்த்திகேயன்" என்ற பெயரிட்டார். மேலும், கார்த்திகை நக்ஷத்திரத்தில் ஸ்கந்தஸ்வாமியை ஶ்ரத்தையோடு உபாஸிக்கின்றவர்கள் போகத்தையும் ஞானத்தையும் பெறுவார்கள் என்று விதித்தருளப்பட்டது.

ஸித்தி முத்திகள் என்ற நன்மைகளை அருளும் ப்ரஹ்மாம்ஶங்களோடு பிறந்ததால், ஷண்முகன் "ஸுப்ரஹ்மண்யன்"

என்ற திருநாமத்தைப் பெற்றார். "ஸு" (நல்ல) + "ப்ரஹ்மன்" =விரிவுள்ள வஸ்து.

**உ௰௫. மஹர்ஷிகளுக்குள் ப்ருகுவும்(1) நானே. ஶப்தங்களுக்குள் [ஓம் என்ற] ஏகாக்ஷரமும் நானே (2). யஜ்ஞங்களுக்குள் ஜப யஜ்ஞமும் (3) நானே. அசைவற்றவைகளுக்குள் ஹிமாலயமும் (4) நானே,**

(1) ப்ருகு என்பவர் ப்ரஹ்மாவின் மானஸ புத்ரர்களில் அதிவைராக்கியம் பெற்றவர். பார்க்கவ புராணம் இவராற் சொல்லப்பட்டது.

(2) ஸம்ஸ்க்ருதத்தில் ஓரெழுத்தாற் குறிக்கப்பட்ட ப்ரணவ நாதமும் எனது விஶேஷ ஶக்தியே.

நிர்க்குண ப்ரஹ்மத்தில் நின்று தோன்றினது பராஶக்தி. அதனில்நின்று ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹார ஶக்திகளாகிய அகார உகார மகாரங்கள் தோன்றி "ஓம்" என்ற ப்ரணவ நாதமாயிற்று. (அ உ ம்=ஓம்.) இதில்நின்று மற்றைய ஸகல அக்ஷரங்களும் உபதேஶங்களும் ஶாஸ்த்ரங்களும் தோன்றின. எனவே, ஏகாக்ஷரம் பகவானது விஶேஷ ஶக்தியே.

(3) ஜப மந்த்ர உபாஸனையும் பீஜாக்ஷரங்களோடு கூடிய ஜபமந்த்ர உச்சாரணையும் ப்ரஹ்ம ஶக்தியே.

ஈண்டு "யஜ்ஞங்களுக்குள்" என்றது கர்ம யோகிகளுக்குரிய அநுஷ்டானங்களில் என்று பொருள்பண்ணவேண்டியது. ஏனெனில், ஸாங்க்யர்கள் (நிராசை மிகுந்தவர்கள்) ஆகிய ஞான நிஷ்டர்களுக்கு நினைப்பற நிற்றல் உரியதாதலாலும், ஜப க்ருத்யம் உரியதன்றாதலாலும் ஜபம் அவர்களால் அநுஸரிக்கப்பட்டாலும், அவர்களது வாக்கில் நின்று தானே நழுவும்.

ஜபமந்த்ரங்களைக் காலையிலும் மாலையிலும் க்ரமமாக உச்சரித்து வருகின்ற அதிகாரியில் உபாஸிக்கப்பட்ட மூர்த்தியின் அநுக்ரஹம் (அருள்) உதயமாகும். இந்த உண்மையை "உருவேறத் திருவேறும்" என்ற மணி வாக்குக் குறிக்கின்றது. ("உரு"=ரூபிகரம்; "திரு"=அருள்.)

(4) இந்த மலை மஹா உன்னத தீர்க்க விஶாலத் த்வங்களைப்

பெற்றும், தேவ கங்கா நதிக்குப் பூலோகத்தில் அவதார ஸ்தானமாயிருந்தும், விசேஷ புண்ய பூமியாகிய பரத தேசத்தை வடபாகத்திற் காத்தும், அதன் பாரிஸங்களில் அநேக யோகீஸ்வரர்களும் ஸித்த புருஷர்களும் ஸித்தி முத்திக்குரிய மூலிகளும் வஸிக்கத் தக்க இடங்களை உடையதாயும் இருப்பதால், ஜகத்தில் பர்வத ராஜன் என்று அழைக்கப்பட்டது. அதன் பாரிஸங்களில் புண்ய பலன்களைப் பெறுதற்காக ப்ரஹ்மா தக்ஷப் ப்ரஜாபதி இந்த்ரன் முதலிய தேவர்கள் முற்காலத்தில் யாகாதி கர்மங்களைச் செய்தனர்.

இவ்வாறு ப்ரஸித்திபெற்ற மலையை உடையவர் ஹிமய ராஜன். இவரையும் பர்வத ராஜன் என்பார்கள். இவர் தவத்தாற் பெற்ற புத்ரி பார்வதி.

தக்ஷனுடைய யாகத்தில் உமாதேவியாகத் தோன்றின பராசக்தியே பின்னொருகாலத்தில் பார்வதியாக, இமய பர்வதத்திலுள்ள ஓர் தடாகத்தில் தாமரைப் புஷ்பத்தில், துலங்கி ஹிமய ராஜனால் எடுக்கப்பட்டார்.

**உ௰சு. எல்லா வ்ருக்ஷங்களுக்குள்ளும் அஸ்வத்தமும் (1) நானே. தேவ ருஷிகளுக்குள் நாரதரும் (2) நானே. கந்தர்வர்களுக்குள் (3) சித்ரரதனும் நானே. சித்தர்களுக்குள் கபிலமுனியும் நானே (4).**

(1) ஆலமரம். Ficus indica (Indian fig.)

ஆலமரத்தின் பால் விழுது பட்டை இலை புஷ்பம் பழம் விதை அநேக ரோகங்களைத் தீர்க்கும். இதன் நிழல் போகிகட்கும் யோகிகட்கும் தக்க சுகத்தைக் கொடுக்கும். இதனில் சிவபெருமானும் திருமாலும் அபிமானம். அத். ௰ரு, மந். க இல் ஸகுண ப்ரஹ்மம் அஸ்வத்த வ்ருக்ஷம்போல விரிந்து நிற்கின்றது என்று கூறப்பட்டது.

(2) இவர் ப்ரஹ்மாவின் புத்ரரில் ஒருவர். தர்மசாஸ்த்ரத்திலும், வீணை வாஸித்தலிலும், வாக்கு வல்லபத்திலும், தூது போவதிலும் மிகச் சிறந்தவர். ராமாயண சரித்ரத்தை இவர் வால்மீகி ருஷிக்கு உரைத்தார்.

(3) காஶ்யபர், தக்ஷப் ப்ரஜாபதியின் மகளாகிய ப்ராதை யை மணந்து, கந்தருவரைப் பெற்றார். தேச சஞ்சாரத்திலும் சித்ரமான நடை உடை பாவனைகளிலும் ஆடல் பாடலிலும் கந்தருவர் மிகப் ப்ரீதிபெற்றவர்கள். இவர்களுக்குரிய விவா கம் எதிர்ப்பட்டு ஒருவரை ஒருவர் அவாவிக் கூடுதலே. இது கந்தர்வ விவாகம் எனப்படும். இவர்களுக்கு அரசன் சித்ரரதன்.

(4) ப்ரஹ்மாவின் புத்ரனாகிய கர்த்தம ப்ரஜாபதி, மநுவின் புத்ரியாகிய தேவஹூதியை விவாகஞ்செய்து, கபிலமுனியைப் பெற்றார். இவர் ஸாங்க்யம் என்ற வேதாந்தக் கட்டளைகளைத் தமது மாதாவுக்கும் தம்மை அண்டின ஏனையோர்க்கும் உபதே ஶித்தருளினார்.

ஆகாஶ தத்வ ப்ரபலத்தால் உண்டான ஸித்த லோகத் தில் நவகோடி ஸித்த புருஷர்கள் வீற்றிருக்கின்றனர். வேறு லோகங்களிலும் விஶேஷ ஸித்திகளைப் பெற்றவர்கள் வாழ்கின் றனர். ஞானம் பெற்ற ஸித்தர்கள் ஞானஸித்தர் எனப்படுவார் கள்.

ஸித்த கணங்களைத் தாயுமான சுவாமி தமது ஸித்தகணப் பதிகத்தில் பாடியிருக்கின்றார்.

தமிழ் நாட்டில் பதினெண் ஸித்தர்கள் திருவாய் மலர்ந் தருளிய நாடி முதலிய ஶாஸ்த்ரங்கள் வழங்கி வருகின்றன. இவர்கள் பெயர்,—அகஸ்த்யர், தன்வந்தரி, வ்யாஸர், திருமூ லர், ஶிவவாக்யர், யூகமுனி, தேரையர், புண்ணாக்கீஶர், ஸூத முனி, வால்மீகர், மத்ஸ்யமுனி, புலிப்பாணி, சட்டமுனி, போகருஷி, வாரருஷி, ராமதேவர், இடைக்காடர், கொங் கணர்,—எனவாம்.

**உ௯எ. குதிரைகளுக்குள் அம்ருதத்தோடு பிறந்த (1) உச்சைஶ்ர வஸ் (2) ஆக என்னை அறி. யானைகளுக்குள் ஐராவதமாக (3) அறி. மனுஷ்யர்களுக்குள் அரசனாக (4) அறி.**

(1) தைத்யராலும் தானவராலும் வாதிக்கப்பட்ட இந்த் ராதி தேவர்கள் விஷ்ணுபகவானிடம் தங்கள் வலிமைக் குறை

வை நிறைவாக்கி ஶத்ரு ஜயத்தைத் தந்தருள வேண்டுமென்று ப்ரார்த்தித்தனர். தேவர்களின் ஶக்தியை வ்ருத்திசெய்யும்பொருட்டு, மந்தர கிரியை மத்தாகவும், வாஸுகி நாகத்தைக் கயிறாகவுங்கொண்டு, தமது திருப்பாற்கடலைக் கடைவது அவஶ்யம் என்றும், திருப்பாற்கடலைக் கடைந்து அதனில் தோன்றும் அம்ருதத்தைத் தேவர்கள் பானஞ்செய்தால் அவர்கட்கு திடபுத்தியும் தேக வலிமையும் சாவாமையும் ஸித்திக்கும் என்றும், தைத்யர்களையும் தானவர்களையும் எவ்விதமும் தேவர்கள் வஶப் படுத்தித் திருப்பாற்கடலைக் கடைதற்குக் கொண்டுவர வேண்டும் என்றும், திருப்பாற் கடலைக் கடையும்பொழுது வாஸுகியின் தலைப்பக்கத்தைத் தைத்யரும் தானவரும், வாற்பக்கத்தைத் தேவர்களும், பிடிக்க வேண்டும் என்றும், ஆக்ஞாபித்தார்.

அவ்வாறே திருப்பாற் கடலைக் கடைய, வாஸுகியின் வாயினால் வந்த விஷ வாயு தைத்யர்களையும் தானவர்களையும் வாட்டி அவர்களுடைய ஶக்திகளைக் குன்றப் பண்ணினது. அந்தச் சமயத்தில் ஸகல இஷ்டகாம்யங்களைக் கொடுக்கத் தக்க ஸுரபி என்ற பசுவும் (காமதேனுவும்), பாரிஜாதம் என்ற வ்ருக்ஷமும், ஸ்ரீ என்ற லக்ஷ்மியும், ஐராவதம் என்ற வெள்ளை யானையும், உச்சைஶ்ரவஸ் என்ற அதிவேகமுடைய குதிரையும், வைத்யேஶ்வராம்ஶமான தன்வந்தரியும், அவரால் ஏந்தப் பட்ட கமண்டலத்தில் அம்ருதமும் திருப்பாற்கடலின்மீது தோன்றின.

அம்ருதத்தைக் கண்டவுடனே தைத்யர்கள் அதைத் தன்வந்தரியின் கையில்நின்று அபகரித்தார்கள். ஆனால் திருமாலின் திருவிளையாடலால் அதை இந்த்ராதி தேவர்களே பாணஞ்செய்து, மிக்க வலிமையைப் பெற்று, தங்களோடு போர்புரியும் தைத்யர்களையும் தானவர்களையும் ஜயித்துத் துரத்திவிட்டார்கள்.

"ஸுரா" என்ற அம்ருதத்தை உண்ட தேவர்கள் "ஸுரர்" என்றும், அதை உண்ணாத தைத்யர்களும் தானவர்களும் "அஸுரர்" என்றும், அழைக்கப்பட்டனர்.

(2) நிமிர்ந்த காதையுடைய குதிரை "உச்சைஶ்ரவஸ்". கதியிலும் தைர்யத்திலும் நிகரற்றது. இது இந்த்ரனுக்குக் கொடுக்கப்பட்டது.

(3) பாற்கடலில் தோற்றின வெள்ளேயானே. "இரா" (இன்பம்), "வத்" (உடையது, கொடுக்கத்தக்கது) என்ற பதங்கள் கூடி "ஐராவதம்" என்ருயிற்று. இது இந்த்ரனது பட்டத்து யானை.

(4) மனுஷர்களுக்குள் எவன் ஸர்வ ஆளுகையை ஒரு தேசத்தில் பெற்று வாழ்கின்ருனே, அவனது ஶக்தி எனது ஶக்தியே.

உ௰அ. ஆயுதங்களுக்குள் வஜ்ரமும் (1) நானே. தேனுகளுக்குள் காமதேனுவும் நானே (2). [ஸ்த்ரீபுருஷர்களில் அன்பைப்] பிறப்பிக்கும் கந்தர்ப்பனும் (3) நானே. ஸர்ப்பங்களுக்குள் வாஸுகியும் (4) நானே.

(1) ஒரு கிருதயுகத்தில் தானவர்களால் வாதிக்கப்பட்ட தேவர்கள் பிரமாவினிடம் சென்று முறையிட, அவர் மஹா தபஸ்வியாகிய ததீசியின் பராக்கிரமங்களேயும் பரோபகாரத்தையுங் கூறி, அந்தத் தர்மவானுடைய எலும்புகளாற் செய்யப்படும் வஜ்ராயுதமே தானவர்களேயும் அவர்கள் தலைவனுகிய வ்ருத்ரனேயும் ஸம்ஹாரஞ் செய்யத்தக்கதென்று சூழ்ச்சிசொன்னர். இதைக்கேட்ட இந்த்ராதிதேவர்கள் நாராயணமூர்த்தியோடு சரஸ்வதிநதிதீரத்திலுள்ள வனுந்தராஶ்ரமத்தில் வாழும் ததீசியோகீஶ்வரனிடம் போய் ப்ரஹ்மாவின் உத்தேஶத்தைச் சொன்னவுடனே அப்படியே யாகட்டுமென்று தம்தேகத்தைத் த்ரிலோக சம்ரக்ஷணேக்காகத் தானம்செய்து முத்தியடைந்தார். அவருடைய எலும்புகளே எடுத்துத் தேவதச்சனுகிய துவஷ்ட்ரியிடம் இந்த்ரன் கொடுக்க, அவற்றுல் ஆறுபாரிசம்பெற்ற வஜ்ராயுதத்தை அவ்ன் இயற்றிக்கொடுத்தான். இதனுல் வ்ருத்ராஸுரனும் அக்காலத்துத் தானவர்களும் அழிக்கப்பட்டார்கள்.

இந்த ஒப்பற்ற பரோபகார விஷயம் திருக்குறளில்
"அன்பிலார் எல்லாம் தமக்குஉரியர் அன்புஉடையார்
என்பும்உரியர்பிறர்க்கு"
என்று குறிக்கப்பட்டது.

(2) பசுக்களுக்குள் இஷ்ட காம்யங்களைக் கொடுக்கின்ற பசுவும் (காமதேனுவும்) நானே.

(3) மன்மதனும்.

(4) கஶ்யப ப்ரஜாபதி தக்ஷ ப்ரஜாபதியின் புத்ரியாகிய கத்ருவை விவாகஞ்செய்து பல சிரசுள்ள சர்ப்பங்களாகிய ஶேஷன், வாஸுகி, தக்ஷகன், ஶங்கன், ஸ்வேதன், மஹாபத்மன், கற்கோடகன் முதலிய நாகங்களைப் பெற்றார்.

ரஸாதல பாதாளத்தில் போகவதி என்ற நகரத்தில் வாஸுகி வாழ்கின்றான் என்று புராணங்கள் கூறும்

**௨௰௯. நாகங்களுக்குள் அனந்தனும் (1) நானே. ஜலதேவதைகளுக்குள் வருணனும் நானே (2). பித்ருகளுக்குள் அர்யமாவும் நானே (3). தண்டிக்கிறவர்களுக்குள் யமனும் நானே (4).**

(1) ஆதிஶேஷனும்.

பாதாளங்கள் ஏழுக்கும் அப்பால் இருந்து பூலோகத்தையும் மற்றைய மேல் லோகங்களையும் சுமந்துகொண்டிருக்கின்றார் என்றும், அவர் ஸ்வஸ்திகா முத்ரையையுடைய ஆயிரம் தலைகளும் உழுபடையாகிய ஏரும் உலக்கையும் தரித்த இரண்டு திருக்கரங்களும் பெற்றுப் பிறிதொரு கைலாஸ கிரியையும் அதிலிருந்து விழுகின்ற கங்கா நதியையும் போன்ற திருமேனியுடையவர் என்றும, ஜ்யோதிஷ ஶாஸ்த்ரங்களில் அதிபாண்டித்யம் பெற்றவர் என்றும், தேவர்களாலும் சித்தர்களாலும் கந்தர்வர்களாலும் போற்றப்பட்டவர் என்றும், கல்ப கால முடிவில் அவருடைய வாய்களினின்று தோன்றும் விஷாக்நியால் த்ரிலோகங்களும் தஹிக்கப்படும் என்றும், விஷ்ணு புராணத்தில் கூறப்பட்டது.

(2) வருணன் திக்பாலகர்களில் ஒருவர். இவருக்கு உரிய

திசை மேற்கு. ஸமுத்ரங்களுக்கும் நதிகளுக்கும் அரசன். புண்யாகமுதலிய நைமித்திக கர்மாநுஷ்டானங்களில் விக்நேஸ்வரருக்குப் பூஜையாகி இவருக்குப் பூஜையாகும்.

(3) பித்ருக்கள் என்றது பிதாக்கள்.

ஸூக்ஷ்ம ஶரீரத்தோடு வாழ்கின்ற ஸாத்ய தேவர்களுக்கு ஸோமஸத்துக்கள் என்ற வைராஜர்கள் பித்ருக்கள்.

போதன ஶரீரத்தோடு வாழ்கின்ற தேவர்களுக்கு அக்நிஷ்வாத்தர்கள் பித்ருக்கள். தைத்யர் தானவர்யக்ஷர் ராக்ஷஸர் கந்தர்வர் முதலியவர்களுக்குப் பர்ஹிஷதிகள் பித்ருக்கள்.

மாநுடர்களில் ப்ராஹ்மணர்களுக்கு ஸோமபர் என்ற உஷ்மபர் பித்ருக்கள். க்ஷத்ரியர்களுக்கு ஹவிர்புஜ என்ற ஹவிஷ்மத்துக்கள் பித்ருக்கள். வைஶ்யர்களுக்கு அஜ்யபர்பித்துருக்கள். ஸூத்ரர்களுக்கு ஸுகாலிகர் பித்ருக்கள்.

இந்த ஆதி பித்ரு கணங்களின் குணங்களைப் பற்றியும், இவர்களது க்ருபையினால் ஒருவன் தன் பிதா மாதா முதலியலேபபாகி பித்துருகளுக்கு உபகரிக்குந்தக்க பலன்களைப் பற்றியும் அத் ௩, மந். ௰உ க்குரிய உரையிற் காண்க.

அர்யமாவை நானே என்று விஶேஷித்தார். ஏனெனில், பரோபகார புத்தி மிகுதியால் பித்ருக்களை இவர் எப்பொழுதும் ஸந்தோஷிப்பிக்கின்ற படியால்.

(4) விவஸ்வத் என்ற ஸூர்யபகவான், ஸஞ்ஞாவை விவாகம் பண்ணி, யமனைப் பெற்றார். இவர் பித்ருக்களுக்கும் நரகலோகங்களுக்கும் தலைவர். லோக பாலகர்களில் இவர் தென்திக்கைப் பரிபாலிக்கின்றவர். ப்ரஜைகளின் புண்யபாபங்களை அறிந்து நீதி வழுவாது தண்டஞ் செய்கின்றபடியால், இவருக்குப் பெயர் தர்ம ராஜன்.

**௩0. தைத்யர்களுக்குள் ப்ரஹ்லாதனும்(1) நானே. காலத்தைக் கணக்கிடுவோர்களின் காலவதப்பும் நானே (2). ம்ருகங்களுக்குள் ம்ருகேந்திரனும் (3) நானே. பக்ஷிகளுக்குள் வைநதேயனும் (4) நானே.**

(1) தைத்யர் என்பவர் காஶ்யபருக்கும் திதிக்கும் பிறந்த

பிள்ளைகளாகிய ஹிரண்யாக்ஷன் ஹிரண்யகஶிபு என்பவரின் சந்ததியார். இவர்களுள் ஹிரண்யகஶிபன் மகன் ப்ரஹ்லாதன். இவன் மிக ப்ரஸித்திபெற்ற விஷ்ணுபக்தன். இவனை ஹிம்ஸித்த ஹிரண்யகஶிபன் நரஸிம்ஹ அவதாரத்தால் நாஶமடைந்தான்.

(2) ஈண்டு ஜனங்கள் உபயோகித்துவரும் காலப்பிரிவுபாடுகள் தனது ஶக்திரூபங்களே என்று கூறி, ௩௰௩ வது மந்த்ரத்தில் பிரிவுபாடில்லாத அகண்டகாலமும் தனது ஶக்திரூபமே என்றார்.

(3) ஸிம்ஹமும்.

(4) தக்ஷப் ப்ரஜாபதியின் மகள் வினதா கஶ்யப ப்ரஜாபதியை விவாகம் செய்து பக்ஷிகளுக்கு அரசனாகிய கருடனைப் பெற்றாள். இவருடைய அருளுடைமையும் அன்புடைமையும் ஒழுக்கமுடைமையும் வலியுடைமையும் கண்ட ஸ்ரீ விஷ்ணுமூர்த்தி இவரைத் தனக்கு வாஹனமாகவும் த்வஜஶிகரமாகவும் கொண்டார்.

**௩௰௧. ஸுத்தப்படுத்துகின்றவைகளுக்குள் பவனனும் (1) நானே. ஆயுததாரிகளுக்குள் ராமனும் (2) நானே. மத்ஸ்யங்களுக்குள் மகரமும் (3) நானே. நதிகளுக்குள் ஜாஹ்நவியும் (4) நானே.**

(1) வாயுவும்.

ஈண்டு ப்ராண அபான வாயுக்களையும் ஸ்தூலபூத வாயுவையும் ஒன்றுகூட்டி நானே என்று விஶேஷித்தார். ஏனெனில், ஶரீரங்கள்தோறும் நின்று ஸஞ்சரிக்கின்ற ப்ராண அபான வாயுக்கள் வெளியில் நின்ற பூதவாயுவை உச்சுவாஸ நிஶ்வாஸ க்ரியைகளால் உள்வாங்கியும் வெளிவிடுத்தும் அந்த ஶரீரங்களைச் ஸுத்தப்படுத்துவதால்.

(2) ராவணனை ஸம்ஹரித்த அவதார புருஷனாகிய ஸ்ரீ ராமமூர்த்தியும்.

(3) மகரம் ஓர் விநோதமான மீன். இக்காலத்தில் உள்ளதன்று. ஶில்ப ஶாஸ்த்ரங்களில் இதைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கின்றது.

(4) ஜஹ்நு ராஜனிடம் பிறப்புப்பெற்ற கங்காநதியும்.

சந்த்ரபகவானுடைய புத்ரனாகிய புதன் புரூரவஸ் என்ற பிள்ளையைப் பெற்றார். இவனுடைய ஐந்தாம் தலைமுறையில் பிறந்த ஜஹ்நு என்ற மஹா தபஸ்வீ யாகஞ் செய்துகொண்டிருக்கும் பொழுது கைலாஸமார்க்கமாகப் பகீரதனால் கொண்டு வரப்பட்ட கங்காநதி தனது யாகபூமியில் ப்ரவேஶித்து யாகத்தை அழித்தவுடனே, அவளுடைய அஹங்கரத்தை அடக்கும் பொருட்டு அவளுடைய ஜலதேஹம் முழுவதையும் உட்கொண்டு நாஶமாக்கினார். மஹருஷிகளும் தேவர்களும் அவரிடம் வந்து கங்காதேவியை மன்னிக்கவேண்டுமென்று ப்ரார்த்தித்ததால், அவளைத் தன்காது வழியால் மீளவும் பிறக்கச் செய்தார். இதுபற்றி அவளுக்கு "ஜாஹ்நவி" என்ற பெயர் வந்தது.

த்ருவ சக்கரத்திற்கு அப்பாற்பட்ட ஸத்ய லோகத்திலிருந்து த்ருவனாலும் ஸப்தருஷிகளாலும் உபசரிக்கப்பட்டுச், சந்த்ரமண்டலத்தைச் சிறப்பித்து, மஹாமேரு வழியால் இறங்கி, ஜம்புத்வீபத்தில் அஷ்டதிக்குகளிலுமுள்ள நதிகளுக்கும் ஆதாரமாகி, இமயபர்வதத்தைச் சார்ந்து, ஹரித்வார மார்க்கமாக அநேக புண்யக்ஷேத்ரங்களின் அருகிற் சென்று, ஸமுத்ரத்தில் வீழ்ந்து, பாதாளங்கள் தோறும் சென்று, ப்ரஜைகளுக்கு நற்பலன்களை ஸதாகாலமும் கொடுத்தே நிற்பாளென்றும், அவள் பெருமையைக் கேட்டவர்களுக்கும் சிந்தித்தவர்களுக்கும் போற்றினவர்களுக்கும், அவளைக் கண்டவர்களுக்கும் ஸ்பர்ஶித்தவர்களுக்கும், அவளிடத்தில் நீராடினவர்களுக்குங் பாபநிவாரணையும் ஶாந்தியும் உண்டாகுமென்றும், வேதாகம புராண இதிகாஸங்கள் கூறுகின்றன. பாரததேஶத்தில் புதன் வம்ஶத்தில் மஹா புண்யாத்மாவாகிய ஜஹ்நுவின் ஶ்ரோத்ரவழியாற் பிறந்து, ஶ்ரௌதகர்மங்கள் தனது இருபாரிசங்களிலும் செய்யப்பெற்று, ஸ்வர்க்காதி போகங்களுக்கும் முத்திகளுக்கும் ஹேதுவாயிருப்பதால், "ஜாஹ்நவி நானே" என்றார்.

௩௰௨. அர்ஜுந, ஸ்ருஷ்டிகளின் (1) ஆதியும் மத்யமும் அந்தமும் நானே. வித்தைகளுக்குள் அத்யாத்ம வித்தையும் (2) நானே. நன்ன

டைபெற்ற வாதமும் நானே ([3]).

(1) ஸ்ருஷ்டிக்கப்பட்ட சராசரங்களின்.

(2) ஆத்மாவைப்பற்றிய வித்தையும்; விஞ்ஞான ஸஹித ஞானமும்.

(3) விகல்பமின்றி ஸமத்வபுத்தியோடு பேசப்பட்ட வார்த்தைகளும் எனது ஶக்தி ரூபங்களே.

**௩௰௩. அக்ஷரங்களுக்குள் அகாரமும் நானே ([1]). ஸமாஸக்கூட்டத்துள் த்வந்தவமும் நானே ([2]). அழிவில்லாத காலமும் நானே. விஶ்வதோமுகனை ([3]) தாதாவும் நானே.**

(1) உயிர்மெய் யெழுத்துக்களுக்கு ஆதாரமான அகாரமும் எனது ஶக்திரூபமே.

(2) பலபதங்களை ஓர்பதமாக்கும் உபாயங்களில் த்வந்த்வ ஸமாஸம் எனது ஶக்திரூபமே.

ஸமாஸமாவது அநேக பதங்களை ஒருபதமாக்குதல். உதாரணம், ராஜ்ஞ:+புருஷ:, "ராஜபுருஷ": என்று வரும். இது தத்புருஷ ஸமாஸக்கூட்டத்தில் ஓர் பிரிவு. இப்படியே இன்னும் ஐந்துவித ஸமாஸங்கள் உண்டு. இவற்றுள் த்வந்த்வ ஸமாஸம் விஶேஷம். உதாரணம், ராமஸ்ச+க்ருஷ்ணஶ்ச என்ற சொற்கள் "ராமகிருஷ்ணௌ" என்றாகும்.

ஒவ்வொருவித ஸமாஸத்திற்கும் அநேக உட்பிரிவுகளிருப்பதால், "ஸமாஸக்கூட்டத்தினுள்" என்றார்.

(3) ஸகல ரூபங்களிலும் ப்ரஸன்னமாயிருக்கின்ற.

**௩௰௪. ஸர்வ ஹரனை ம்ருத்யுவும் ([1]) நானே. ஏற்படப்போகின்றவைகளுக்குள் உதயமாகின்றதும் நானே ([2]). மானுட ஸ்திரீகளின் கீர்த்தியும், ஸ்ரீயும் ([3]), [மதுர] வாக்கும், ஸ்ம்ருதியும், ([4]), தைர்யமும், பொறுமையும் நானே.**

(1) ப்ரஹ்மாவால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ம்ருத்யு தேவி ப்ராரத்வ முடிவுகாலத்தில் வியாதியாய்த் தோன்றி ஜந்துக்களைக் கொல்லுவாள் என்று மஹாபாரதம் ஶாந்திபர்வம் மோக்ஷதர்மத்தில் விளக்கியிருக்கின்றது.

"ஸர்வஹராஞ்ன"=ஸர்வ ஜந்துக்களையும் ஒடுக்குகின்ற.

(2) இனிவரப்போகின்ற கர்மபலன்களுக்குள் உதயமாகும் பலன் எதுவோ, அதுவும் என்னுடைய ஸக்திரூபமே.

(3) லக்ஷ்மிகரமும்.

(4) தர்ம சிந்தனையும்.

(5) ப்ரதிஷ்டை பெற்ற புத்தியும்.

**கூ௰௫. ஸாமவேதங்களுக்குள் ப்ருஹத்ஸாமமும் நானே. சந்தஸ்களுக்குள் காயத்ரீயும் நானே (1). மாஸங்களுக்குள் மார்கழியும் நானே (2). ருதுக்களுக்குள் வஸந்த ருதுவும் (3) நானே.**

(1) "சந்தஸ்" என்பது ருக்வேத பாராயணத்துக்குரிய அக்ஷர ஸங்க்யையும் (ஒலிவடிவக்கூட்டமும்), அநேக விதமாயிருக்கும் வேத ஒலிவடிவங்களைப் போதிக்கும் ஸாஸ்த்ரமுமாம். வேதத்தைப்பற்றிய ஆறு அங்கங்களில் இந்த சந்தஸ் ஒன்று.

"சந்தஸ்களுக்குள்"=சந்தஸ்களை உடைய (அக்ஷர ஸங்க்யையைப்பெற்ற) வேத ருக்குகளுக்குள்.

"காயத்ரி" என்ற மந்த்ரம் ரிக்வேதத்தில் 62. 10 இல் உள்ள ஓர் ப்ரார்த்தனை. அதன் அர்த்தமாவது: எவன் நமக்கு புத்தி தத்வத்தை அருள்கின்றானோ, அந்தக் காரணதேவனுடைய சிறந்த தேஜஸை த்யானஞ் செய்கின்றோம், என்பதே.

இந்த ப்ரார்த்தனையில் அடக்கப்பட்ட பரம ரஹஸ்யங்களாவன: பரமேஸ்வரனே ஜீவாத்மாக்களுக்குப் புத்தி முதலிய அந்தக்கரணங்களைக் கொடுத்தாரென்பதும், புத்தியின் ஸமத்வ ப்ரகாஸத்தாலேயே எது ஆத்மா எது அனாத்மா என்ற விசாரணையில் ஸித்திபெறலாமென்பதும், இந்த ஆத்மானாத்ம விவேக ஸம்பத்தை உபகரித்த மூர்த்தியை நன்றியறிவோடு உபாஸித்து அநந்யபக்தியோடு வாழக்கடவோம், என்பனவாம்.

எந்தத் தேவர்களை உபாஸிக்கின்றவனாயிருந்தாலும், ஒருவன் இந்த ப்ரஹ்ம காயத்ரி மந்த்ரத்தைப் பலமுறையும் ஜெபித்துப் பரமேஸ்வரனை ஸந்திகாலங்களில் வந்தனஞ் செய்யவேண்டும்.

(2) ஸூர்ய பகவான் தை மாஸந்தொட்டு ஆனி மாஸம் வரையில் வடமுகமாகச் செல்வதை உத்தராயணம் என்றும், ஆடி மாஸம் தொட்டு மார்கழி மாஸம் வரையில் தென்முகமாகச் செல்வதை தக்ஷிணாயனம் என்றும் கூறுப. இவற்றுள், முதல் ஆறு மாஸங்கள் தேவர்களுக்கு ஒருபகலாகும். மற்ற ஆறுமாஸங்கள் ஓர் இரவாகும். மார்கழிமாஸம் தேவர்களுக்கு விடியுங் காலம் அல்லது ப்ராதஃகாலம் ஆதலால், அவர்கள் எழுந்திருந்து ஸ்நானஞ்செய்து ப்ரஹ்ம யஜ்ஞங்களை முடிப்பார்கள்.

தேவர்களை வழிபட்டு வாழும் மானுடர் தேவர்களோடு சேர்ந்து ஸ்வாமியைப் பூஜித்தல் உத்தமம் என்று நிஸ்சயித்து, மார்கழி மாஸத்து ப்ராதக்காலங்களில் தங்கள் பூஜைகளைச் செய்வார்கள்.

(3) "ருது" என்றது ஆடி மாஸமுதலாக இவ்விரண்டு மாஸங்களாக வரும் பருவகாலம். இது கார் கூதிர் முன்பனி பின்பனி இளவேனில் முதுவேனில் என ஆறும்.

இவற்றுள் வஸந்த ருது என்பது சித்திரை வைகாசி மாஸங்கள்.

**ங௰சு. மாயாவித்தைக்காரர்களின் லீலையும் ஆகின்றேன் (1). தேஜஸ் (2) பெற்றவர்களின் தேஜஸும் நான். [வெற்றி பெற்றவர்களின்] வெற்றியுமாகிறேன். [முயற்சிபெற்றவர்களின்] முயற்சியுமாகிறேன். ஸத்வகுணம் பெற்றவர்களின் ஸத்வமும் நான்.**

(1) "த்யூதம் சலயதாம்" = மாயா வித்தைக்காரர்களின் லீலை.

"த்யூதம்"=விளையாட்டு, ஆட்டம், லீலை.

"த்யூதம் சல்யதாம்" என்றதை "கபடர்களின் சூதாட்டம்" என்று சிலர் பொருள் பண்ணுவார்கள். இது பரமேஸ்வரனது பரிஸுத்த பரோபகார லக்ஷணத்துக்கு ஒவ்வாது.

ப்ரக்ருதி எக்காலமும் மாறிமாறிக்கொண்டே தோற்றுவதால் நிலையற்ற வஸ்து, அல்லது மித்யா வஸ்து, எனப்படும். மெய்போலத் தோன்றிக்கொண்டிருக்கும். இந்த பொய்ப்பொ

ருளாகிய மாயை பரமேஸ்வரனால் தனது பஞ்ச க்ருத்யங்களு க்கு உபயோகிக்கப்பட்டு வருதலால் அவரை மஹா மாயாவி (மாயா வித்தைக்காரன்) என்று மஹான்கள் போற்றுவார்கள்.

தேவ உபாஸனையால் இந்த்ரஜால வித்தைகளில் ஸித்தி பெற்று ஜனங்களை ஆஸ்சர்யப்படுத்துவோரும் மாயாவித்தைக் காரர் எனப்படுவர்.

"லீலை" என்றது அபாரமாக (லகுவாக)ச் செய்யப்பட்ட அரிய விநோத வேலை.

(2) தேஹஸௌந்தர்யம் மனோஸௌந்தர்யம் கீர்த்தி முதலியவற் றால் வரும் ப்ரகாசம்.

**௩௰௭. வ்ருஷ்ணிகளுக்குள் வாஸுதேவனாயிருக்கின்றேன் (1), பாண்டவர்களுக்குள் தனஞ்ஜயனாயிருக்கிறேன் (2). முனிகளுக்குள் வியாஸனும் நான். கவிகளுக்குள் உஸனஸ் (3) கவியும் நான்.**

(1) வ்ருஷ்ணி வம்ஸத்திற் பிறந்தவர்களுக்குள் வாஸுதேவ னென்னும் அரசனுடைய புத்ரனும் எனது ஸக்தி ரூபமே.

யாதவர்களும் அந்தகர்களும் வ்ருஷ்ணிகளும் போஜர் களும் யதுராஜனுடைய பரம்பரையினின்று பிறந்தவர்கள். யது ராஜனை "வ்ருஷ்ணி" என்றுங் கூறுவார்கள்.

ஈண்டு, வாஸுதேவன் என்றது, வஸுதேவனுடைய புத்திர னாகிய ஸ்ரீ க்ருஷ்ணனை.

ஸமஷ்டி (எல்லாம் ஒன்றுகூடின) ஸ்தூல ஸூக்ஷ்ம தேக வடிவத்தோடு நின்று விஸ்வரூபதர்ஸனையைக் கொடுக்கின்ற மஹேஸ்வரன், வியஷ்டி (வெவ்வேறு) ரூபமாகிய ஸ்ரீ க்ருஷ்ண னைத் தனது விபூதிகளில் ஒன்றாகப் பாராட்டி, "வ்ருஷ்ணிகளு க்குள் வாஸுதேவனாய் இருக்கின்றேன்" என்றார்.

(2) அர்ஜுனன் நான்.

(3) ஸுக்ரன். இவர் அஸுரர்களுக்கு குரு; ஸப்த ருஷிக ளில் ஒருவராகிய ப்ருகுவின் பௌத்ரன்.

**௩௰௮. தண்டிக்கின்றவர்களின் தண்டமாயிருக்கின்றேன்(1). வெற் றிபெற விருப்பம் பெற்றவர்களின் நீதியாயிருக்கின்றேன் (2). குஹ்யங்**

களுக்குள் மௌனமுமாயிருக்கின்றேன் (3). ஞானம் பெற்றவர்களின் ஞானம் நான்.

(1) தண்டஶக்தியும் நானே.

(2) விதி விலக்குகளை ஒருபொழுதும் மறவாது ஜயத்தைப் பெறுகின்றவர்களின் தர்ம நிலையும் நான்.

அதர்ம நிலையாற் பெற்ற விஜயம் தனக்கு அன்யம் என்பது கருத்து.

(3) ரஹஸ்யங்களுக்குள் த்ரிகரண அடக்கமுமாயிருக்கின்றேன்.

த்ரிகரணம்=காயம் வாக்கு மனம்.

௩௰௯. அர்ஜுந, சரம் அசரம் என்று பூதம் நானன்றி இல்லாததால், ஸர்வ பூதங்களுடைய பீஜம் எதுவோ, அந்த பீஜம் நான் (1).

(1) சராசரங்களாகிய தேஹக்கூட்டங்களைத் தோற்றுவிக்கும் காரணமாகிய ஶக்தி நான்.

௪௰. பரந்தப, திவ்யங்களான எனது விபூதிகளுக்கு முடிவில்லை. இந்த விபூதியின் விஸ்தாரம் என்னால் சுருக்கமாகக் கூறப்பட்டது.

௪௰௧. எந்தெந்த ஸத்வம் (1) விபூதி, ஸ்ரீ, உத்ஸாகம் என்ற இவைகளைப் பெற்றிருக்கின்றதோ, அதை எனது தேஜாம்ஸத்திலிருந்து (2) பிறந்ததாகவே அறி.

(1) ப்ராணி, ஜீவாத்மா.

(2) ப்ரகாஶிக்கின்ற தேவாத்ம ஶக்தியில்.

௪௰௨. ஆனால், அர்ஜுந, இந்த அநேக [விபூதிகளைப்பற்றிய] ஞானத்தால் உனக்கு என்ன [பலன்] (1)? இந்த ஜகத்தை யெல்லாம் ஓர் அம்ஶத்தில் நிறுத்தி நான் நிற்கின்றேன்.

(1) நீ கேட்டபடி சில விபூதிகளை உனக்குச் சொன்னேன். இதை ஶ்ரவணஞ்செய்தால் உன்னுடைய துக்க பய விஶாதங்கள் தீருமா? ஸகல விபூதிகளும் மற்றுமுள்ள சராசரங்களுமாகிய ஜகத் எல்லாம் என்னுடைய ஒரு ஸச்சிதாநந்த ரேகையில்

தோன்றி அழிகின்றன.

இந்த மந்த்ரத்தின் லக்ஷ்யார்த்தம் என்னவெனில், துக்க பய விஷாதங்களைத் தீர்ப்பது ஈஸ்வரார்ப்பண கர்மாநுஷ்டானத்தால் பெறப்பட்ட கைவல்யமே என்பதாம்.

---

உபநிஷத்கள் என்றும் ப்ரஹ்மவித்தை என்றும் யோகஸாஸ்த்ரம் என்றும், பகவத்கீதைகள் என்றும் கூறப்பட்ட ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுந ஸம்வாதத்தில் ப்ரஸித்திபெற்ற விபூதி யோகம் என்ற பத்தாம் அத்யாயம் முற்றிற்று.

---

# பதினோராம் அத்யாயம்.

## விஸ்வரூப தர்ஶன யோகம்.

---

[அஃதாவது, மஹேஶ்வரனது ஸர்வ வ்யாபகமாயிருக்கும் ஶாந்த அகோர ரூபங்களை அர்ஜுநன் கண்டான் என்பதை விளக்கும் பதினோராம் பாடம்.

பத்தாம் அத்யாயத்தில் விளக்கப்பட்ட மஹேஶ்வர விபூதிகளையும் அவரது ஐஶ்வரயோகமாகிய ப்ரக்ருதி முழுவதிலும் வ்யாபித்திருத்தலையும் கேட்ட அர்ஜுநன் தனக்கு அந்த விஶ்வரூபத்தைக் காட்டியருளவேண்டுமென்று ௰௧, ௩ இல் ப்ரார்த்தித்தான். ஐம்பொறிகளில் ஒன்றாகிய ஊனக் கண்ணால் இந்த ஸ்வரூபத்தை அறியக்கூடாதாதலால், பகவான் அர்ஜுநனுக்கு ஒரு திவ்யக்கண் என்ற விஶேஷ ஶக்தியை அருளி அக்காட்சியைப் பெறச்செய்தார்.'

ஆரம்பத்தில் குறிக்கப்பட்ட தமது ஶாந்த விஶ்வரூபத்தைக் காட்டின மாத்திரத்தில், அர்ஜுநன் பரமானந்தத்தோடு பகவானைப் போற்றினான். அந்த ஸமயத்திலேயே குறிக்கப்பட்ட தமது அகோர விஶ்வரூபந் தோன்ற, அவன் மிகப் பயந்து ரக்ஷிக்கவேண்டுமென்று ஓலமிட்டான். உடனே தமக்குரிய தேவ ஶரீரத்தைக் காட்டினார். அதனையுங் கண்டு பயப்பட, மானுட ஶரீரத்தில் ப்ரஸன்னமானார். (௰௧, ௪௰௬-௫௰.)

தமது மாயா சொரூபங்களை அவன் தர்ஶித்தபின், அந்த மாயாரூப தர்ஶனைகளால் அவனுக்குப் பய துக்க விஷாதங்கள் தீராதென்றும், மாயைக்கு அப்பாற்பட்ட நிர்க்குண ப்ரஹ்ம தர்ஶனையாலேயே தீருமென்றும், உபதேஶித்தார்.

ஆனால், அர்ஜுநனுக்கு அருளப்பட்ட மாயா விஶ்வரூப தர்ஶனம் அவன் மனஸில் யுத்தத்தைப் பற்றி உதயமான ஸம்ஶயங்கள் யாவற்றையும் ஒழித்தது. இனி நடக்கப்போகின்ற யுத்தத்தின் முடிவையும் துர்யோதனாதிகள் ஸம்ஹாரத்தையும்

*பகவானே நடத்தி வைக்கின்றார் என்றும், தான் இந்த யுத்தத்தில் ஓர் நிமித்தகாரணன் என்றும் ப்ரத்யக்ஷமாகக் கண்டபடியால், அவன் செய்யவேண்டிய யுத்த கர்மங்களை ஈஶ்வரார்ப்பணமாகச் செய்யத் துணிந்தான்.]*

---

அர்ஜுநன் கூறினான்:—

௧. என்னை அநுக்ரஹிக்கிறதற்காக பரமமும் குஹ்யமும் அத்யாத்ம வித்யா (1) என்ற பெயருடையதும் ஆகிய எந்த வசனம் உன்னால் கூறப்பட்டதோ, அதனால் எனது மோஹம் சென்றுவிட்டது.

(1) ௰, ௩௰௨.

௨. கமலபத்ராக்ஷ, (1) பூதங்களின் தோற்றமும் ஒடுக்கமும் [உன்னுடைய] மாறுதலில்லாத மஹாத்மியமும் (2) உன்னிடமிருந்து என்னால் விரிவாகக் கேட்கப்பட்டன.

*(2) தாமரைமலர்போன்ற கண்ணை உடையவனே.*
*(2) மஹாத்மாவின் தன்மையையும்; பேரறிவின் அகண்ட ஶக்தியையும்.*

௩. பரமேஶ்வர, எவ்விதம் நீ உன்னைப்பற்றிக் கூறுகின்றாயோ, இவ்விதம் இது (1). புருஷோத்தம, உனது ஐஶ்வர (2) யோகத்தைப் பார்க்க (3) விரும்புகின்றேன்.

*(1) கூறப்பட்டபடியே இது இருக்கின்றது. எல்லாம் உண்மையே என்றது கருத்து.*
*(2) நீ ப்ரக்ருதியில் வ்யாபித்து அதனோடு கூடியிருக்கும் நிலையை.*
*(3) கண்ணால் காண.*

௪. ப்ரபு, என்னால் அதைப் பார்க்கக்கூடும் என்று எண்ணுகின்றாயாகில், யோகீஶ்வர, அழிவற்ற ஆத்மாவை (1) எனக்குக் காண்பி.

*(1) மஹேஶ்வர ஸ்வரூபத்தை.*

ரு. பார்த்த, நாற்றுக்கணக்காயும் ஆயிரக்கணக்காயும் நானு வர்ணமும் அங்க அமைப்பும் பெற்றவைகளும் (1) [இன்னும்] நானு விதங்களுமாகிய எனது சிறந்த ரூபங்களைப் பார்

(1) "நாநாவர்ணுக்ருதீநி"=பலவர்ணத்தையும் அவயவ ஸமஸ்தானங்களையும் பெற்றவைகள்.

சு. பார்த்த, ஆதித்யர்களையும் (1) வஸுக்களையும் (2) ருத்ரர்களையும் (3) அஸ்வினிகளையும் (4) மருத்துக்களையும் (5) பார். அவ்விதமே முன் காணப்படாத அநேக ஆஸ்சர்யங்களையும் பார்.

(1) ௰, உ௰க (1).
(2) ௰, உ௰௩ (3).
(3) ௰, உ௰௩ (1).
(4) ஓர் அமயத்தில் ஸூர்யபகவான் ஆண் அஸ்வரூபந் தரித்து, பெண் அஸ்வரூபந்தரித்துக் கொண்டிருந்த தனது பத்னியாகிய ஸம்ஞாவை மணந்த ஸமயத்தில், அவரது நாஸியில் நின்று புறப்பட்ட உச்சுவாஸங்கள் அதிஸுந்தரமான இரு தேவ குமாரர்களாகத் தோன்றின. இவர்களுக்கு அமைக்கப்பட்ட காரணப்பெயர் அஸ்வினிகள். இவர்களுடைய மூத்த ஸஹோதரர்கள் வைவஸ்த மனுவும் யம தர்மராஜனும்.

தேவர்களைப் பிராமாதாக்களாகக் கொண்டு, தேவ சரீரங்களோடு பிறந்தும் தேவர்களுக்கு வைத்யர்களாக ஸூர்ய பகவானுல் நியமிக்கப்பட்டும், அவர்களுடைய கர்மங்களால், மற்ற முக்ய தேவர்களைப்போல, யஜ்ஞ தானங்களைப் பெறத் தகாதவர்கள் என்று வெகுகாலம் நீக்கப்பட்டனர். மருத்வத் தொழில்களை நடத்தும்பொருட்டு வரையறையற்றுத் தேஶ ஸஞ்சாரம் பண்ணுவதாலும், பலபண்டங்களையுந் தேஹங்களையும் ஸ்பர்ஶிப்பதாலும், தங்களுக்குரிய கர்மமாகிய யஜ்ஞ தானங்களை வாங்க யோக்யதையற்றவர்கள் என்று தேவராஜனுகிய இந்த்ரன் ஆக்ஞாபித்தான்.

ஆனுல், இந்த அவமானம் ப்ருகுமஹா ருஷியின் புத்திரனுகிய ச்யவந ருஷியால் விலக்கப்பட்டது. இவருடைய வயோ

*திகத்தையும் அவலக்ஷண ரூபத்தையும் அஸ்வினி தேவர்கள் நீக்கினபடியால், அந்த ச்யவனருஷி ஓர் யாகஞ்செய்து அஸ்வினிகளுக்குத் தானங் கொடுக்கும்பொழுது இந்த்ரன் கோபித்து வஜ்ராயுதத்தை ப்ரயோகஞ் செய்ய யத்தனித்த ஸமயத்தில் அந்த ருஷியின் வல்லமையினால் இந்த்ரனுடைய கை பாவனையற்றுச் சோர்ந்தது. இதனால் இந்த்ரன் நடுங்கி, ச்யவனருஷியிடம் ஶாந்த வார்த்தைகளைக் கூறி, அஸ்வினிகளது மருத்வத்தால் ஸ்பர்ஶ தோஷம் விலக்கப்பட்ட நாள்முதல் அஸ்வினிகளை மற்றும் முக்யதேவர்களோடு ஸமமாகும்படி செய்தான்.*

(5) ௰, உ௰௧ (3).

**எ. குடாகேஶ, சராசரங்களோடு கூடின ஜகத்தை எல்லாம் இந்த எனது [மாயா] தேகத்தில் ஓர் பாகத்தில் நிற்கின்றதாக இப்பொழுது பார். வேறு எதைப் [1] பார்க்க விரும்புகிறயோ, [அதையும் பார்.]**

(1) *யுத்தத்தில் வெற்றியடைவாயோ தோல்வியடைவாயோ என்பதை.*

**அ. இந்த உனது கண்ணினால் என்னைப் பார்ப்பதற்கு வல்லவனாகாய். உனக்குத் திவ்யக் கண்ணைக் [1] கொடுக்கின்றேன். எனது ஐஸ்வரயோகத்தைப் பார்.**

(1) *"திவ்யக்கண்"=ப்ரகாஶம் பெற்ற கண். அதாவது, ஸூக்ஷ்ம காட்சிகளை அறியத்தக்க விஶேஷ ஶக்தி.*

*ஸாக்ஷித்வமுடைய ஆத்மாவுக்கு, ப்ரக்ருதி கார்யங்களை அறியும்பொருட்டு பரமேஸ்வரன் அந்தக்கரணங்களையும் ஞானேந்திரியங்களையும் அருளினார். ஞானேந்த்ரியங்களில் ஒன்று அத்ருஶ்யமான கண் என்ற பொறி, "சக்ஷு". இது ஶிரஸுக்குள் இருக்கும் ஒரு நாடியில் நின்று, இருவிழிகள் (ஊனக்கண்கள்) வழிகளால் புறத்திலுள்ள பிம்பங்களை எதிர் நோக்கின மாத்ரத்தில், அந்த பிம்பங்கள் தனக்குள் ப்ரதிபிம்பங்களா*

கும். இப் ப்ரதிபிம்பங்களை மனஸ் கவனித்தால், அவை மானஸ விக்ரஹங்களாக (நினைவு ரூபங்களாக) மாறும். கண் முதலிய பொறிகளாலும் மனஸ் முதலிய அந்தஃகரணங்களாலும் சேவிக்கப்பட்ட ஜீவாத்மா வெளியிலுள்ள விஷயங்களையும் அவற்றின் ப்ரதிபிம்ப மானஸ ரூபங்களையும் அறியும், "பார்க்கும்" "தர்ஶிக்கும்".

இவ்விதம் அறிகின்ற ஆத்மாவைப் பெரியோர்கள் "ஸாக்ஷி" (காண்பவன்) என்பார்கள். கண்ணுள்ளவனே ஸாக்ஷியாகலாம் என்பது போல, அறியும் ஶக்திபெற்ற ஆத்மாவுக்கு "கண்" ("சக்ஷு") உண்டு என்பார்கள்.

எனவே, "சக்ஷு" ("கண்") என்ற பதத்துக்கு ஸாதாரண (பொது) அர்த்தம் ஐம்பொறிகளில் ஒன்றாகிய சக்ஷு என்றும், விஶேஷ (சிறப்பு) அர்த்தம் அறியும் ஶக்தி என்றும் விதிக்கின்றது.

பலருக்கும் அறியும் ஶக்தி உண்டு. இந்த ஶக்தியால் புறத்திலுள்ள விஷயங்களையும் அவற்றின் மானஸ ரூபங்களையும் அறிவார்கள்.

ஆனால், அர்ஜுநனுக்கு இந்த அவஸரத்தில் அருளப்பட்டது ஒரு விஶேஷ ஶக்தி. இதை "திவ்ய சக்ஷு" (ப்ரகாஶம் பெற்ற கண்) என்றார் பகவான். இந்தக் கண் ஐம்பொறிகளால் க்ரஹிக்கப்பட்ட விஷயங்களையாவது மனஸால் ஸங்கல்பிக்கப்பட்ட அவற்றின் மானஸ ரூபங்களையாவது அறியும்படி கொடுக்கப்படவில்லை. பகவானது மஹா அற்புத விஶ்வரூபத்தை அறியும்படியே கொடுக்கப்பட்டது.

இந்த மாயா (அதாவது, மானஸ) விஶ்வரூபத்தை அர்ஜுநன் புறத்தில் காணவில்லை. கண்டிருந்தால், யுத்தகளத்திலிருந்த மற்றவர்களும் தங்கள் கண்ணால் அதைக் கண்டிருப்பார்கள். அப்படி ஒருவரும் காணாதபடியால், அவன் மனஸிலும் புத்தியிலும் பகவான் ஆரோபித்ததை (தோற்றுவித்ததை) அவனுடைய ஜீவாத்மா கண்டதென்று நிஶ்சயிக்கவே வேண்டும்.

"என்னுடைய ஐஶ்வரயோகத்தைப்பார்" என்றும், "ஆதித்

யர்களேயும் வஸுக்களேயும் ருத்ரர்களேயும் அஸ்வினிகளேயும் மருத்துக்களேயும் பார்" என்றும் பகவான் கூறி, அர்ஜுநனுக்கு அந்நேரத்தில் அவனுடைய மனஸிலும் புத்தியிலும் அநேகவித விநோதக் காட்சிகளே ஆரோபித்து விரித்தமாத்ரத்தில், அவன் தனக்கருளிய விஶேஷ ஶக்தியால் அவற்றையெல்லாங் கண்டான்.

ஸஞ்ஜயன் கூறினன்(1),—

கூ, ய, யக. ராஜனே (2), இவ்விதம் சொல்லி, பிறகு, மஹா யோகேஸ்வரனை (3) ஹரி, அநேக வாய்களேயும் நேத்ரங்களேயும் பெற்றதும், அநேக அற்புத தர்ஶனங்களே உடையதும், அநேக திவ்ய ஆபரணங்களேப் பெற்றதும், உயர ஏந்தப்பட்ட அநேக திவ்ய ஆயுதங்களேயுடையதும், சிறந்த மாலேகளேயும் வஸ்த்ரங்களேயும் தரித்துக் கொண்டிருக்கின்றதும், திவ்ய கந்தங்களேப் பூசிக்கொண்டிருக்கின்றதும், யாவர்க்கும் ஆஶ்சர்யத்தைச் செய்கின்றதும், ப்ரகாஸிக்கின்றதும், முடிவில்லாததும், விஸ்வதோ முகங்களேயுடையதும் ஆகிய மேலான ஐஸ்வர (4) ரூபத்தைக் காண்பித்தார்.

(1) அர்ஜுநன் தனக்குள் கண்ட மாயா தர்ஶனத்தை ஸஞ்ஜயன் ஸமக்ஷமறிந்தான் என்பதை வ்யாஸ ருஷி தாம் பாடின மஹாபாரதத்தில் விளக்கியிருக்கின்றார். முகவுரை எ-ம் பக்கத்தைப் பார்த்தறிக.

(2) த்ருதராஷ்ட்ரனே.

(3) அளவிடப்படாத யோகஶக்திகளே உடையவனை.

(4) ஈஸ்வரத்வம் பெற்ற; ஸகல வஸ்துக்களேயும் தனக்குள் அடக்கி ஆளுகின்ற.

யஉ. ஆகாஶத்தில் ஆயிரம் ஸூர்யனுடைய காந்தி ஏக காலத்தில் உண்டாகுமாகில் அக்காந்தி மஹாத்மாவாகிய அவனது (1) காந்திக்கு ஸமானமாகும். (2).

(1) ஸ்ரீ க்ருஷ்ணபகவானுடைய.

(2) ஆயிரம் ஸூர்யர் ஒரேகாலத்தில் உதயமாகாதபடியால், நிகர் ஒன்றும் இல்லே என்பது கருத்து.

யரு. தேவதேவனுடைய (1) அந்த [மாயா] ஶரீரத்தில் அநேக

ப்ரகாரமாக வகுக்கப்பட்டதும், ஓர் பாகத்தில் (²) இருக்கின்றதும், ஆகிய எல்லா ஜகத்தையும் பாண்டவன் (³) அந்த வேளையில் பார்த்தான்.

(1) தேவர் அஸுரர் மானுடர் முதலியவர்களுக்குத் தலைவனாகிய மஹாதேவனுடைய, அதாவது, மஹேஸ்வரனுடைய.
(2) ஒருபக்கத்தில் (௰, ௪௰௨ இல் சொன்னபடி)
(3) அர்ஜுநன்.

௰௪. பிறகு ஆஶ்சர்யத்தால் வ்யாபிக்கப்பட்டவனும் ஸந்தோஷம்பெற்ற ரோமங்களோடு கூடியவனும் ஆகிய அந்த தனஞ்ஜயன் ஶிரஸினால் வணங்கி அஞ்சலிசெய்து தேவனிடங் கூறினன்.

அர்ஜுநன் கூறினன்,—

௰௫. தேவ, உனது ஶரீரத்தில் எல்லாத்தேவர்களையும், அவ்விதமே பூதவிஶேஷக் கூட்டங்களையும், ஈஶனும் கமலாசனத்தில் வீற்றிருக்கின்றவனும் ஆகிய ப்ரஹ்மாவையும். எல்லா ருஷிகளையும், திவ்ய ஸர்ப்பங்களையும் பார்க்கின்றேன் (¹).

(1) ஸ்வர்க்கலோகத்திலுள்ள தேவர்களையும், கைலாஸத்திலுள்ள பூதகணங்களையும், ஸத்யலோகத்திலுள்ள ப்ரஹ்மாவையும், தபோலோகத்திலுள்ள முனிகளையும், பாதாளலோகத்திலுள்ள ஆதிஶேஷன் வாஸுகி முதலிய நாகங்களையும் காண்கின்றேன்.

௰௬. விஶ்வேஶ்வர, (¹) விஶ்வரூப, (²) பற்பல கைகள் உதரங்கள் முகங்கள் நேத்ரங்களோடு கூடியவனும், முடிவில்லாத ரூபங்கள் பெற்றவனும் ஆகிய உன்னை எல்லாவிடத்திலும் பார்க்கின்றேன். உனது ஆதியையும் மத்யத்தையும் அந்தத்தையும் காணவில்லை (³).

(1) ஜகதீஶா. ("விஶ்வம்"=லோகம், எல்லாம்.)
(2) எல்லா ரூபங்களையுந் தரித்தவனே.
(3) அடி முடிகளைக் காணவில்லை, ஆதலால் நடுவையும் நிதானிக்க முடியவில்லை. ஒருபாகத்தை மாத்திரம் காண்கின்றேன் என்பது கருத்து.

௰எ. கிரீடம் பெற்றவனும், கதாயுதம் பெற்றவனும், சக்கரம் பெற்றவனும் (1), எல்லாவிடத்திலும் விளங்குகின்ற தேஜஸ்மயமானவனும், [கண்கொண்டு] பார்க்க முடியாதவனும், சுற்றிலும் ப்ரகாஸிக்கின்ற அக்நி ஸூர்யன் என்பவர்களுடைய ஒளிபோன்ற ஒளியை உடையவனும், நிர்ணயிக்க முடியாதவனும் ஆகிய உன்னைப் பார்க்கின்றேன்.

*(1) மஹேஶ்வர அகோரரூபத்திலும் விஷ்ணுவின் ஆயுதங்களாகிய கதாயுதமும் சக்ரமுந் தோன்றின.*

௰அ. அழிவற்றதும், மேலானதும், அறிதற்கரியதும் நீ; இந்த லோகத்திற்கு மேலான இருப்பிடமும் நீ; ஶாஶ்வத தர்மத்தைக் காக்கும் அவ்யயனும் நீ, (1) ஸநாதந புருஷனும் நீ, [என்று] என்னால் ஸம்மதிக்கப்பட்டவன்.

*(1) ஜீவர்களை ஸன்மார்க்கத்தில் செலுத்தும்படி அடிக்கடி உண்டாகின்ற விதிவிலக்கு ரூபமான ஸ்ம்ருதியை, அவர்கள் மறக்க மறக்க, அதை மீண்டு மீண்டும் ஸ்தாபிக்கின்ற மாறுதலற்ற புருஷனும் நீ.*

*அவ்யயன் நீ=தர்மம் மறைந்தாலும் தோன்றினாலும், நீ மாறுதலற்று நிற்கின்றாய்.*

௰கூ. ஆதி மத்யம் அந்தம் அற்றவனும், முடிவில்லா வீர்யம் பெற்றவனும், (1) கணக்கில்லாத கரங்களை யுடையவனும், சந்த்ர ஸூர்யரை நேத்ரங்களாகக் கொண்டவனும், ப்ரகாசிக்கின்ற அக்நியை வாயிற்கொண்டவனும், தனது தேஜஸினால் இவ்வுலகத்தைத் தாபிக்கின்றவனுமாகிய உன்னைப் பார்க்கின்றேன்.

*(1) ஶத்ருபயமில்லாதவனும். ௰க, சம (2).*

உ௰. மஹாத்மன்; ஸூர்யமண்டலத்துக்கும் மேகமண்டலத்துக்கும் உடைய (1) இந்த அந்தரமும் (2) எல்லாத்திக்குகளும் ஒருவனாகிய உன்னால் வ்யாபிக்கப்பட்டிருக்கின்றது. உக்ரமும் அத்புதமுமாகிய உனது இந்த ரூபத்தைப் பார்த்து மூவுலகமும் நடுங்குகின்றன.

*(1) "த்யாவாப்ருதிவ்யோ"=த்யோவுடையதும், ப்ருதிவியுடையதும். "த்யோ" அல்லது "திவ்"=ஸூர்யமண்டலம். "ப்ரு*

திவி"=பூமி.

(2) அந்தரம்=இடை. ஸுர்யமண்டலத்துக்கும் பூலோக மேகமண்டலத்துக்கும் இடையிலே உள்ள ஆகாஶத்துக்குப் பெயர் "அந்தரிக்ஷ" என்று ஶங்கராசார்ய ஸ்வாமி பாஷ்ய ஹ்ருதயத்தில் விளக்கியிருக்கிறார்.

ப்ரஹ்மா ப்ரஹ்மாண்டத்தை இரண்டு பாகமாகப் பிரித்து மேற்பாகத்துக்கு "திவ்" என்றும் கீழ்பாகத்துக்கு "பூமி" என்றும் பெயரிட்டு, இவ்விரண்டுக்குமிடையிலே வ்யோமத்தை வைத்தார் என்று மநு ஸ்ம்ருதியில் கூறப்பட்டது. இந்த இடையிலுள்ள வ்யோமம் (ஆகாஶம்) "அந்தரிக்ஷ".

**உயக. இந்த (1) ஸுர ஸங்கங்கள் (2) உன்னை ப்ரவேசிக்கின்றன (3). [அவைகளில்] சிலர் பயத்துடன் கை கூப்பித் துதிக்கின்றனர் (4). மஹர்ஷி ஸித்த ஸங்கங்கள் 'ஸ்வஸ்தி' (5) என்று கூறி, புஷ்கல ஸ்துதிகளினால் (6) உன்னைத் துதிக்கின்றனர்.**

(1) இதோ முன் நிற்கின்ற.

(2) தேவக்கூட்டங்கள். "ஸுர"=அம்ருதத்தை உண்ட.

(3) உன்னில் சென்று மறைகின்றன.

(4) சில தேவர்கள் அகோர ரூபத்தைக் கண்டு பயந்து போற்றி நிற்கின்றனர்.

(5) "ஸு"+"அஸ்தி"=நல்ல நிலை, அநுக்ரஹ நிலை, வாழ்வைத்தரும்நிலை.

(6) (அன்பும் அர்த்தமும்) நிறைந்த ஸ்தோத்ரங்களினால்.

**உயஉ. ருத்ரர்கள், ஆதித்யர்கள், வஸுக்கள், ஸாத்யர்கள், விஶ்வதேவர்கள், அஶ்விநிதேவர்கள், மருத்துக்கள், பித்ருக்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், அஸுரர்கள், ஸித்தர்கள் என்பவர்களின் ஸங்கமெல்லாம் ஆஶ்சர்யத்துடன் உன்னைப் பார்க்கின்றன.**

**உயரு. மஹாபாஹு, அநேக முகங்கள் அநேக நேத்ரங்கள் உடையதும், அநேக கைகள் தொடைகள் பாதங்கள் உடையதும், அநேக வயிறுகளை உடையதும், அநேக கோரப்பற்களால் பயத்தை உண்டுபண்ணுவதுமாகிய உனது மஹத்ரூபத்தைக் (1) கண்டு ப்ரா**

ணிகள் நடுங்குகின்றன. அவ்விதம் நானும் [நடுங்குகின்றேன்].

(1) விரிவுபெற்ற மஹேஶ்வரரூபம்

உ௰௪. விஷ்ணு, (1) ஆகாஶம் எங்குந் தொடுகின்றவனும், ப்ரகாஶிக்கின்றவனும், அநேக நிறங்களைப் பெற்றவனும், திறந்த வாய்களை உடையவனும், ஜ்வலிக்கின்ற விஶாலமான கண்களை உடையவனும், ஆகிய உன்னைப் பார்த்து உள்ளம் நடுங்கித் தைர்யத்தையும் ஶாந்தியையும் பொருந்துகின்றேன் இல்லை.

(1) "விஷ்ணு" என்ற பதத்துக்கு ஸாதாரண அர்த்தம் வ்யாபக ஸ்திதி கர்த்தா. ஈண்டு, வ்யாபக ஸம்கார கர்த்தாவாகிய ருத்ரனை "விஷ்ணு" என்றார். ப்ரஹ்மா விஷ்ணு ருத்ரன் என்ற மும்மூர்த்திகள் மஹேஶ்வரனில் அடங்கியிருத்தலால்.

உ௰ரு. ஜகந்நிவாஸ (1), தேவேஶ (2), கோரப்பற்களினால் பயத்தைச்செய்கின்றவைகளும், காலாக்நிக்கு ஸமமானவைகளும் ஆகிய உனது முகங்களைக் கண்டு திக்குகளை அறியேன்; ஸுகத்தையும் அடையவில்லை. ப்ரஸாதத்தைச் செய்யும் (3).

(1) ஜகத்துக்கு இருப்பிடமானவனே.
(2) தேவர்களுக்கு ஈஶனுயுள்ளவனே.
(3) என் அறிவைத் தெளியச் செய்யும். அல்லது, நீர் ஶாந்தலக்ஷணத்தைப் பொருந்தும்.

உ௰சு, உ௰எ. ராஜக்கூட்டங்களோடு த்ருதராஷ்டிரன் புத்ரர்களாகிய இவர்களெல்லாம் நம்மைச் சார்ந்த ப்ரதான யுத்த வீரர்களுடன், பீஷ்மரும் த்ரோணரும் ஸூதபுத்ரனும் (1), வீரப்பற்களினால் க்ராளங்கள் உள்ளனவும் (2) பயத்தைச் செய்கின்றவைகளுமாகிய உனது வாய்களில் ப்ரவேசிக்கின்றனர். சிலர் பற்களின் இடைகளில் சிக்கித் தலை பொடிபட்டவர்களாய்க் காணப்படுகின்றனர்.

(1) கர்ணனும்.

(2) வக்ர தந்தங்களால் பல்வரி ஒழுங்கீனமாயும்.
க்ராளங்கள்=மேடு பள்ளங்கள்.

**உ௰அ**. எவ்விதம் நதிகளின் அநேக ஜலவேகங்கள் ஸமுத்ராத்தி லே நேர்முகமாக ப்ரவேசிக்கின்றனவோ, அவ்விதம் இந்த நரலோக[1] வீரர்கள் ஜோலிக்கின்ற உனது வாய்களில் ப்ரவேசிக்கின்றனர்.

(1) மானுட லோக.

**உ௰கூ**. எவ்விதம் பதங்கங்கள் [1] ஜோலிக்கின்ற நெருப்பை அதிவேகத்துடன் அழிவதற்காகப் ப்ரவேசிக்கின்றனவோ, அவ்வித மே லோகங்கள் அதிவேகத்துடன் உனது வாய்களில் அழிவதற்காக ப்ரவேசிக்கின்றன.

(1) விட்டில் பூச்சிகள்.

**௩௰**. விஷ்ணு [1], லோகங்களை எல்லாம் ப்ரகாஸிக்கின்ற வாய் களினால் முற்றும் விழுங்கும்யோழுதே நக்குகின்றாய். உனது உக்ரகாந்தி கள் [தங்கள்] தேஜஸ்களினால் ஸமஸ்த லோகங்களையும் நிரப்பித் தபி க்கின்றன.

(1) வ்யாபகா.

**௩௰க**. தேவர்களிற் சிறந்தவனே, உக்ர ரூபனான நீ யார் [1], என க்குச் சொல்வாயாக. உனக்கு நமஸ்காரம். ப்ரஸாதத்தை அருள்க. ஆத்யனாகிய [2] உன்னை அறிய விரும்புகின்றேன். உனது ப்ரவ்ருத்தியை யும் நான் அறியேன் [3].

(1) முன்னிலையாக நிற்கும் ஸ்ரீ க்ருஷ்ணபகவானை அர்ஜு னன் தனது ஊனக்கண்களாற் காணவில்லை. திவ்யக் கண்ணா ற்கண்ட விஸ்வரூபம் தனது இச்சைப்படியே அநுக்ரஹிக்கப்ப ட்டதென்ற ஞாபகமும் இல்லாமற் போயிற்று. பயம் மேலிட் டபடியால் காணப்பட்ட சொரூபம் யாரோ எவரோ என்று தெரியாமல் மயங்கினான். பயத்துக்குக் காரணம், “உனது ப்ர வ்ருத்தியையும் நான் அறியேன்” என்ற வாக்யத்திற்காண்க.

(2) ஆத்யன்=ஆதியில் உள்ளவன்.

(3) என்னையும் நீ விழுங்கிவிடுவாயோ என்பது கருத்து. ப்ரவ்ருத்தியையும்=ப்ரயத்நத்தையும்.

ஸ்ரீ பகவான் கூறினர்:

௩௰உ. லோகத்துக்கு நாஸஞ் செய்கின்றதும், அதிகவளர்ச்சி பெற்றதுமாகிய காலம் ஆகின்றேன். இவ்விடத்தில் [கூடிநிற்கும்] லோகத்தாரை [எனக்குள்] ஸமாஹரிப்பதற்கு (1) ப்ரவர்த்தித்தேன். (2) ப்ரதிபக்ஷ (3) ஸேனைகளில் நிற்கின்ற யுத்த வீரர்களெல்லாம் நீ இல்லாதுபோனலும் இறந்தேபோவார்கள்.

(1) கூட்டி எனக்குள் ஒடுக்குதற்கு.

(2) முயன்றேன். இதனுல் தன் அவதார க்ருத்யமாகிய துஷ்ட நிக்ரஹத்தைக் குறித்தார்.

(3) எதிரியான; ஒன்றுக்கொன்று விரோதமான.

௩௰௩. ஆதலால், ஸவ்யஸாசி (1), நீ எழுந்திரு. ஶத்ருக்களை வென்று கீர்த்தியைப் பெறு. எல்லாம் நிறைந்த ராஜ்யத்தை அநுபவி. இவர்கள் முன்னமே [ஈஶ்வரனுகிய] என்னுலேயே கொல்லப்பட்டார்கள். நீ நிமித்தமாய் மாத்ரம் இரு (2).

(1) இடதுகையால் ப்ரயோகிப்பதற்குரிய வல்லபத்தை உடையவன். ("ஸவ்யம்"=இடதுகை.) வலதுகையால் பாணங்களைச் சாதுர்யமாக ஏவுவது போல இடதுகையாலும் ஏவும் ஶக்தி உடையவன்; இருகைவல்லபி.

(2) யுத்தத்திற்கும் ஸம்ஹாரத்திற்கும் நானே காரணன். இந்தக் காரணத்வத்தில் நீ செய்யவேண்டியது பாணத்தை ஏவுதல் மாத்திரமே. இவ்வொன்றில்தான் நீ நிமித்தம். (நிமித்தம்=காரணம்.)

௩௰௪. என்னுல் கொல்லப்பட்ட த்ரோணனையும் பீஷ்மனையும், ஜயத்ரதனையும், கர்ணனையும், அவ்விதமே மற்றப் போர்வீரர்களையும் நீ கொல்லு. துக்கத்தை அடையாதே. போர்புரி. போரில் ஶத்ருக்களை வெல்லுவாய்.

ஸஞ்ஜயன் கூறினான்:

௩௰௫. கேஶவனுடைய இந்த வசனத்தைக் கேட்டு, கிரீடி (1) நடுங்கிக் கைகூப்பி வணங்கி மறுபடியும் பயந்து பயந்து நமஸ்கரித்து, [உரை] தடுமாறி க்ருஷ்ணனிடம் கூறுகின்றான்:

(1) இந்த்ரனிடம் கிரீடம் பெற்ற அர்ஜுனன்.

௩௰௬. ஹ்ருஷீகேஶ (1), உனது புகழால் ஜகத் ஸந்தோஷிக்கின்றது (2), அநுராகத்தையும் (3) பெறுகின்றது. [இது] ஸ்தானம். துர்தேவதைகள் (4) பயந்து திக்குக்களில் செல்லுகின்றன. எல்லா ஸித்த ஸங்கங்களும் வணங்குகின்றன.

(1) இந்த்ரியங்களை நடத்துவோனே.

(2) உனது புகழ்ச்சியைக் கேட்ட லோகத்தார் ஆனந்தம் கொள்ளுகின்றார்கள்.

(3) உள்ளன்பையும்.

(4) பூத, ப்ரேத, அஸுர, ராக்ஷஸர்கள்.

௩௰௭. மஹாத்மன், ப்ராஹ்மாவுக்கும் ஆதி கர்த்தாவும், மிகப் பெரியவனும் ஆகிய உன்னை ஏன் வணங்கார்கள்? அனந்த (1), தேவேஶ (2), ஜகந்நிவாஸ (3), எது ஸதஸத்தோ (4) அதற்கு மேலானதும் அழிவற்றதும் நீ (5).

(1) முடிவில்லாதவனே.

(2) தேவர்களுக்கு ஈஶனே.

(3) தோன்றி அழியும் லோகங்கள்தோறும் இருக்கின்றவனே.

(4) ஸதஸத்=மனஸ், அல்லது மாயை. மநு ஸ்ம்ருதி, க. ௰௪; உமாபதி ஶிவாசார்யார், திருவருட்பயன், உ. எ.

(5) "த்வம் அக்ஷரம் ஸதஸத் தத்பரம் யத்" என்றதை "யத் ஸதஸத் தத்பரம் அக்ஷரம் த்வம்" என்று மாறுக.

௩௰௮. ஆதிதேவனான (1) புராண புருஷன் (2) நீ. இந்த விஶ்வத்துக்கு (3) மேலான இருப்பிடம் நீ. அறிகின்றவன் (4) நீ. அறிவதற்குரியதும் (5) நீ. பரமதேஜஸும் நீ.

(1) காரண தேவனை.
(2) தொன்றுதொட்டு இருக்கின்றவன்.
(3) ப்ரபஞ்சத்துக்கு.
(4) "வேத்தா"=அறிகின்றவன், ஞாதா, ஞாத்ரு.
(5) "வேத்யம்"=அறிவுக்கு லக்ஷ்யப்பொருள்; ஞேயம்.

**௩௰௯. வாயுவும் யமனும் அக்நியும் வர்ணனும் ஸஸாங்கனும் (1) ப்ரஜாபதியும் ப்ரபிதாஹமனும் (2) நீ. உனக்கு ஆயிரந்தரம் நமஸ்காரம், நமஸ்காரம் ஆகட்டும். இன்னும் மேன்மேலும உனக்கு நமஸ்காரம், நமஸ்காரம்.**

(1) முயலை அடையாளமாகக் கொண்டவனும், அம்ருதா வதுா, சந்த்ரனும்.

(2) "பிதா"=தந்தை, ப்ரஜாபதிகள்.

"பிதாமஹன்"=தந்தையின் தந்தை; ப்ரஜாபதிகளுக்குத் தந்தையாகிய ப்ரஹ்மதேவன்.

எனவே, "ப்ரபிதாமஹ"=தந்தையின் தந்தையின் தந்தை; ப்ரஹ்மாவினைக் கற்பித்த மஹேஸ்வரன்.

**௪௰. ஸர்வ (1), உனக்கு முன்னுக்கும் நமஸ்காரம், பின்னுக்கும் நமஸ்காரம், எல்லாவிடத்தும் நமஸ்காரம. அளவிறந்த வீர்யனும் (2), அளவிடக்கூடாத பராக்ரமமுடையவனும் (3) ஆகிய நீ யாவற்றையும் பூரணமாக வ்யாபித்திருக்கிறாய். ஆதலால், ஸர்வமுமாயிருக்கிறாய்.**

(1) யாவற்றிலும் பூரணமாக வ்யாபித்திருக்கின்றவனே.

(2) "வீர்ய"=வீரத்தன்மை பெற்றவன்.

"வீர", "ஸூர" என்ற இரண்டு தாதுக்கள் ஸம்ஸித்தி என்ற பொருளைக் குறிக்கும் என்று பாணிநி கூறியுள்ளார்.

"வீர்யம்" அல்லது "வீரம்"=சிறந்த ஸித்தி.

எனவே, "அநந்த வீர்யன்"=எவ்வளவு ப்ரயத்னமோ, அவ்வளவிலும் பூர்ணஸித்தி பெற்றவன்.

(3) "விக்ரம:" = (வி+க்ரம=விவித பாத விக்ஷேபம்=பலவித கால் வைத்தல்)=ஸமயத்துக்குத் தக்கபடி தன் வலிமையை

*ப்ரயோகித்தல்.*

*"அமித விக்ரம:"=ஸமயத்துக்குத் தக்கபடி தன் ஶக்தியை அளவிடக்கூடாத புத்தியோடு உபயோகிக்கின்றவன்.*

**௪௰௧, ௪௰௨.** தோழன் என்றெண்ணி "ஹே க்ருஷ்ண, ஹே யாதவா, ஹேதோழா" (1) என்று வணக்கமின்றி உனது இந்த மஹத்வத்தை **அறியாத** என்னால், மறதியினாலேயோ அல்லது ஸ்நேஹிதத்தினால் ஏற்பட்ட **விஶ்வாஸத்தினாலேயோ** (2), எது கூறப்பட்டதோ, அதையும் **விஹாரம்** (3) படுக்கை ஆஸனம் போஜனம் [என்ற ஸமயங்]களில், **பரிஹாஸத்திற்காக**, அழிவற்றவனே, நீ [என்னோடு] தனித்தவனாய் [இருக்கும்பொழுது] அல்லது மற்றவர்கள் முன்னிலையாக [இருக்கும்பொழுது] ஸத்கரிக்கப்(4) படாதவனாகின்றாய் என்றது எதுவோ, அதையும் (5) அளவிடமுடியாத என்னை மன்னிக்கும்படி கேட்கின்றேன் (6).

(1) *"ஹே க்ருஷ்ண" முதலிய விளிகளெல்லாம் உச்சரிப்பு வேற்றுமைகளால் உயர்வு தாழ்வைக்குறிக்கும். ஆதலால்,* "*ப்ரஸபம்*" (*உரமாக, வணக்கமற்று*) *என்றார்.*

(2) *"ப்ரணயேந"=ஸ்நேகிதத்தினால் ஏற்பட்ட விஶ்வாஸத்தால்.*

(3) *விளையாட்டு.*

(4) *உபஸரிக்க.*

(5) *அந்த ஸத்காரமின்மையால் பிறந்த குற்றத்தையும்.*

(6) (*நான் தகாத வார்த்தைகளைப் பேசியிருந்தாலும், அபசார செய்கைகளைச் செய்திருந்தாலும்*), *உனது அளவற்ற கருணையால் என்னை நீ மன்னிக்கவேண்டும் என்பது வேண்டுகோள்.*

**௪௰௩.** நிகரில்லாத வல்லமை பெற்றவனே, சராசரமாகிய இவ்வுலகத்துக்குப் பிதாவாகவும் (1), பூஜிக்கத் தக்கவனாகவும் மிகப்பெரிய குருவாகவும்(2) இருக்கின்றாய். மூவுலகத்திலும் உனக்கு ஒப்பானவன் இல்லை. மேற்பட்ட வேறொருவன் எவ்விடமிருந்து [வருவன்]?

(1) *பாலனஞ் செய்கின்றவனாகவும்.*

(2) *"கரீயாந்"=ஒப்பற்ற ஆசார்யன்.*

**௪௰௪.** ஆதலால், நான் ஶரீரத்தைச் செவ்வையாக வைத்து

வணங்கி, ஈஶனும் ஸ்துதிக்கத்தக்கவனும் ஆகிய உன்னை ப்ரஸாதத்தைப் பெறும்படி செய்வேன் (1). ஓ தேவ, புத்ரனுடைய [குற்றத்தைப்] பிதா போலும், மித்ரனுடைய [குற்றத்தை] மித்ரன் போலும், ப்ரியையின் (2) [குற்றத்தை] ப்ரியன் போலும், [என் குற்றத்தைப்] பொறுக்க [நீ] உரியவனுகின்றாய் (3).

(1) ஶாந்த ரூபத்தை யடைந்து என்னை ரக்ஷிப்பாயாக.
(2) அன்புள்ள ஸ்த்ரீயின்.
(3) கடமைப்பட்டிருக்கின்றாய்.

௪௰ரு. தேவ, தேவேஶ, ஜகந்நிவாஸ, முன்காணுத மாயா [விஶ்வ] ரூபத்தைக் கண்டு ஸந்துஷ்டனுகின்றேன் (1). எனது மனஸ் பயத்தினல் நடுங்குகின்றது. [இந்த அகோர ரூபத்தை நீக்கி] அந்த [ஶாந்த] தேவ ரூபத்தையே (2) காண்பிப்பாயாக. ப்ரஸாதத்தை அருளுக.

(1) பயத்தைக் கொடுக்கின்ற ரூபமாயிருந்தாலும் ஆவலோடு காணவேண்டுமென்ற (௰க-௩, ௪)காட்சியைக் காண்பித்தபடியால், என் மனஸ் த்ருப்தி பெற்றிருக்கின்றது.
(2) விஷ்ணுவினுடைய சதுர்புஜமும் வில் வாள் ஶங்கு சக்ர கதாயுதங்களுங் கூடிய தேவ ஶரீரத்தை.

௪௰௬. கிரீடம் பெற்றவனும், கதை (1) பெற்றவனும் சக்ரத்தைக் கையில் தரித்தவனும் ஆகிய உன்னை அவ்விதமே பார்க்க விரும்புகின்றேன். ஸஹஸ்ரபாஹோ, விஶ்வமூர்த்தி, சதுர்புஜமுள்ள அந்த [தேவ] ரூபத்துடனே (2) இருக்க.

(1) தடி. அவரது தண்டாயுதத்தின் பெயர் "கௌமோதகி".
(2) ஶாந்தி தேவரூபத்துடனே.

ஸ்ரீ பகவான் கூறினர்:

௪௰எ. அர்ஜுந, தேஜோமயமும், எல்லையற்றதும், ஆத்யமும் (1), எல்லாமும் (2) ஆகிய எனது எந்தரூபம் உன்னிலும் வேறனவனுல் (3) முன் காணப்படவில்லையோ, இந்த மேலான ரூபம் ப்ரஸன்னனுன (4) என்னுல் உனக்கு ஆத்மயோகத்தால் (5) காண்பிக்கப்பட்டது.

(1) ஸகலத்துக்கும் காரணப் பொருளும்.
(2) "விஶ்வ"=ஸர்வம்.
(3) வேறொரு மனிதனுல். தேவர்களில் நாரதருஷிக்கு விஶ்வரூபதர்ஶனம் கிடைத்ததென்று மஹாபாரதத்தில் கூறப் பட்டிருக்கின்றது. அவ்விதமே பார்க்கவபுராணத்தில் ப்ரஹ்மாவுக்கும் விஷ்ணுவுக்கும் அருளப்பட்டதென்று கூறியிருக்கின்றது.
(4) ப்ரஸாதத்தை அருளினவன் ப்ரஸன்னன். "ப்ரஸாதம்"=தெளிவு. ப்ரார்த்தனுடைய விருப்பத்தை நிறைவேற்றுதலே அருளப்பட்ட தெளிவு, ஶாந்தி. ௨. ௬௰௪ (6).
(5) ஆத்மஶக்தி யோகத்தால். நீ திவ்யசக்ஷு என்ற எனது விஶேஷ ஶக்தியைப் பொருந்தினதால்.

**௪௰௮.** குருவம்ஶத்திற் சிறந்த வீரனே, மனுஷ்யலோகத்தில் இவ்வித [மாயா விஶ்வ] ரூபம் பெற்ற நான் உன்னிலும் வேறனவனுல் பார்க்கக் கூடாதவன். வேதாத்யயன (1) யஜ்ஞாத்யயன (2) மார்க்கங்களாலும், தானங்களாலும், க்ரியைகளாலும், உக்ர தபஸ்களாலும் பார்க்கக்கூடாதவன் (3).

(1) வேதாத்யயனம்=வேதங்களை ஓதுதல்.
(2) யாகத்தை விதிவழுவாமற் செய்தல்.
(3) மாயா விஶ்வரூபத்தையாவது, நிர்குண ஸ்வரூபத்தையாவது வேதங்களை ஓதி அல்லது யஜ்ஞம் தானம் தபஸ் முதலிய கர்மங்களை அநுஷ்டித்து நேரே அறியக்கூடாது. விஶ்வரூப தர்ஶனம் பகவானுல் அருளப்படும் ஆத்ம ஶக்தியாலே பெறலாகும்.

**௪௰௯.** இந்த எனது கோர ரூபத்தைக் (1) கண்டு உனக்கு மனவருத்தம் வேண்டாம்; விமூட பாவமும் (2) வேண்டாம். பயமற்று ப்ரீதி பெற்ற மனஸோடுகூடி, நீ எனது அந்த [ஶாந்த] ரூபத்தையே எதிரே பார்.

(1) பயங்கரமான வடிவத்தை.

மஹேஸ்வரனுடைய பஞ்ச க்ருத்ய ரூபங்களில் இச்சமயத் தில் வெளிப்பட்டு நின்றது ஸம்ஹார ரூபம்.

(3) விமூடத் தன்மை=மோஹம். புத்தி தடுமாறி வாய் குளறிற்று (யக. நயரு). "நீ யார், உன் ப்ரயத்தனம் என்ன" என்று (யக. நயக) கேட்டான். மேலும், என் மனஸ் பயத்தினால் நடுங்குகின்றது, ஶாந்த தேவரூபத்தைக் காட்டி அருளுக (யக. சயரு) என்று குறையிரந்தான். இவ்வாறு மனம் சலனப்பட்டதால், இந்தப் பயத்தையும் வெறுப்பையும் "விமூட பாவம்" என்றார்.

ஸஞ்ஜயன் கூறினான்:

ருய. மஹாத்மாவாகிய வாஸுதேவன் (1) அவ்விதங் கூறின அர்ஜுநனிடம் இவ்விதம் சொல்லித் தன்னுடைய [அவதாரதேவ] ரூபத்தைத்(2) காண்பித்தார். [அதைக்கண்டு] மறுபடியும் பயந்தவனை, ஸௌம்ய (3) [மானுட] ஶரீரம் பெற்றவராகி, மறுபடியும் ஸமாதானஞ் செய்தார்.

(1) ஸர்வத்திலும் வஸிக்கும் தேவன், அந்தர்யாமி ஈஸ்வரன்.

(2) அவதாரதேவ சொரூபத்துக்குச் சின்னங்கள் சதுர்புஜம், ஸ்ரீவத்ஸம் (மார்பில் ஓர் விதக்குறி), கௌஸ்துபம் (துளசிமாலை), பாஞ்சஜன்ய ஶங்கம், கௌமோதகி (கதாயுதம்), நந்தகம் (வாள்), ஶார்ங்கம் (வில்) என்பவையாம்.

இவ்வித சின்னங்களோடு மதுராபுரியில் வஸுதேவராஜன் பத்னியாகிய தேவகியின் பிள்ளையாய் ஸ்ரீ க்ருஷ்ண பகவான் பிறந்தார். பிறந்த ஸமயத்தில் இந்த தேவஶரீரத்தைக் கண்டவர்கள் பயந்தனர். தன் பிதாவின் ப்ரார்த்தனைப்படி, தேவ ஶரீரம் மறைந்து மானுட ஶரீரம் தோன்றிற்று.

இந்த அவஸரத்தில் அர்ஜுநனுக்குக் காட்டியது மறைத்துவைத்த அவதார சொரூபத்தையே.

(3) ஸோமனைப் போன்ற.

"ஸௌம்ய ஶரீரம்"=சந்த்ரனுடைய தன்மையாகிய ஸந்தோஷத்தை விளைவிக்கும் ஶரீரம்.

அர்ஜுநன் கூறினன்:

௫௰௧. ஜநார்த்தந([1]), ஸௌமியமான உனது இந்த மானுட ரூபத்தைப் பார்த்து ப்ரக்ஞை பெற்றவனுகவும், ஸ்வபாவத்தைப் பெற்றவனுகவும் இப்பொழுது ஆகின்றேன்.

(1) ஜனங்களைக் கண்டித்து நல்ல பதவியைக் கொடுக்கின்றவர். அல்லது, ஜனங்களால் ப்ரார்த்திக்கப்படுகின்றவர்.

ஸ்ரீ பகவான் கூறினர்:

௫௰௨. அதிக அகோர தோற்றத்தோடு கூடிய ([1]) இந்த எனது ரூபத்தைப் பார்த்தவனுகின்றய். இந்த ரூபத்தின் தர்ஶனத்தை தேவர்களும் பார்க்க விரும்புகின்றர்கள்.

(1) "ஸுதுர்தர்ஶம்"=அதிக கலக்கத்தை விளைவிக்கும் பார்வையுடைய.

௫௰௩. என்னை எவ்விதம் நீ பார்த்தாயோ ([1]), இவ்விதப்பட்ட நான் வேதங்களாலும் பார்ப்பதற்கரியவனில்லை; தபஸாலும் [பார்ப்பதற்கரியவன்] இல்லை; தானத்தாலும் யஜ்ஞத்தாலும் இல்லை ([2]).

(1) மாயா விஶ்வரூபனைக் கண்டாயோ.

(2) ஒருவன் வேதங்களைப் படித்தாலும் யஜ்ஞம் தானம் தபஸ் என்ற கர்மங்களை அநுஷ்டித்தாலும் இந்த மாயா விஶ்வரூபத்தைக் காணமாட்டான்.

இந்த மந்த்ரத்தின் ஸூக்ஷ்மார்த்தமென்னவெனில், மஹேஶ்வரனது மாயாசொரூபத்தைக் காண விரும்புகின்றவன் நிவ்ருத்தி மார்க்கத்தைப் பற்றியிருக்கும் முமுக்ஷுவல்ல என்பதும், ப்ரவ்ருத்தி மார்க்கத்தையே பற்றியிருக்கும் பக்தன் என்பதும், ஆத்ம அனாத்ம விவேகம் பெற்றவனுக்கு ஐஶ்வரயோகம் லோகவாழ்விலேயே விளங்குவதால் அவன் ப்ரபஞ்ச சொரூபியாகிய மஹேஶ்வரனுக்கு அப்பாற்பட்ட பரமாத்மாவிலேயே த்ருஷ்டி வைத்திருப்பான் என்பதுமே.

௫௰௪. ஆனல் ([1]) பரந்தபனை அர்ஜுந, இவ்விதப்பட்ட [மாயா ரூபங்களைத்தரித்த நான் அனந்யபக்தியால் [ஸதாகால] தத்போரு

னாக (2) விசாரிப்பதற்கும் (3), [நேரே] தர்ஸிப்பதற்கும் (4) என்னுள் ப்ரவேஸிப்பதற்கும் (5) உரிய ஸக்திக்கு விஷயமாகுவேன் (6).

(1) ஆனால் ("து") என்ற பதம் முன் சொல்லப்பட்டதற்கு வேறுபாடான பொருளைக் குறிக்கின்றது. ௫௰௨ ௫௰௩-ம் மந்த்ரங்களில் தேவர்களும் வேதபாராயணர்களும் தபஸிகளும் தானம் யாகம் செய்கின்றவர்களும் தர்ஸிக்காத காட்சியை நீ கண்டாய் என்றார். ௫௰௪ வது மந்த்ரத்தில் அந்த மாயா விஸ்வரூபத்திற்கு மேலான தத்பொருளை, நிர்குண ப்ரஹ்மத்தை, "அஹம்" (நான்) என்று சுட்டி, இதன் தர்ஸனத்தை அநந்ய பக்தியால் எந்தப் பதவியும் பெறலாம் என்று உபதேஸிக்கின்றார்.

(2) தத்பொருள்=நாம ரூபங்களால் குறிக்கப்படாத அந்த ("தத்") நிர்குணப்பொருள்.

(3) "ஞாதும்"—தேடிப் பிடிப்பதற்கும்.

(4) "த்ரஷ்டும்"—கைவல்ய தஸையில் அறிவதற்கும்.

(5) "ப்ரவேஷ்டும்"—என்னோடு இரண்டறக் கலப்பதற்கும்.

(6) "அஹம் ஸக்ய:"=நான் ஸக்திக்கு விஷயன், அதாவது, அநந்யபக்தி என்ற மேலான ஸக்தியுடையவர்களுக்கு நான் ஸாத்யன்.

௫௰௫. எவன் அஹம் என்ற ப்ரஹ்மத்தின் கர்மம் என்றெண்ணித் தன் கர்மத்தைச் செய்கின்றனோ (1), [எவன்] அஹம் என்ற ப்ரஹ்மத்தை ஸர்வத்திற்கும் மேலானதென்று எண்ணுகின்றனோ (2), [எவன்] அஹம் என்ற ப்ரஹ்மத்தில் பக்தியுள்ளவனோ (3), [எவன்] தன் மனஸை இந்த்ரிய ஸங்கத்தினின்று நீங்கச்செய்தானோ (4), [எவன்] ஸர்வ ப்ராணிகளிலும் விரோதமற்றவனோ (5), அவன் என்னைப் (6), பெறுகின்றன். பாண்டவ.

(1) "மத்கர்ம க்ருத்"=அஹம் என்ற ப்ரஹ்மத்தின் கர்மம் என்று தன் கர்மத்தைச் செய்பவன்.

௰௧. ௨௰௭ இல் "தத்க்ருஷ்ய மதர்ப்பணம்" என்றார். அதாவது, அதை என்னிடம் (ப்ரஹ்மத்தினிடம்) ஒப்புவித்ததாகச்

செய், என்பதே.

(2) "மத்பரம:" = ப்ரஹ்மமே ஸர்வத்திற்கும் மேலான வஸ்து என்று நினைக்கின்றவன்.

(3) "மத்பக்த:"=அஹம் என்ற ப்ரஹ்மத்தில் பக்தி உள்ளவன்.

(4) "ஸங்கவர்ஜித:" =ஸங்கத்தினின்று நீக்கப்பட்டவன். அகந்தை மமதை என்ற ஜீவ பந்தங்களை விட்டவன.

("வர்ஜ"=நீக்குதல்.)

(5) "ஸர்வ பூதேஷு நிர்வைர:" = ஸர்வ பூதங்களிலும் விரோதமற்றவன்; ஜீவகாருண்யமுள்ளவன்.

"நிர்வைர:"=விராகமற்றவன், வெறுப்பற்றவன், பகையற்றவன்.

இந்த ஸ்லோகத்தில் நிர்க்குண ப்ரஹ்மத்தைப் பெறுவதற்கு உபாயங்கள் கூறப்பட்டன. அவையாவன: மத்பக்தத்வம், மத்கர்மத்வம், மத்பரமத்வம், ஸங்கவர்ஜிதத்வம், ஸர்வ பூத நிர்வைரத்வம் என்பவையாம். இவையெல்லாம் புத்தியின் நிலைகளாதலால், ஒன்றோடொன்று ஸம்பந்தப்பட்டே இருக்கும். வெவ்வேறு நிஷ்டைகள் என்று எண்ணலாகாது. அநந்யபக்தியாகிய மத்பக்தத்வத்தில் மற்றைய நான்கு நிஷ்டைகளும் உண்டு.

---

உபநிஷத்கள் என்றும், ப்ரஹ்மவித்தை என்றும், யோகஶாஸ்த்ரம் என்றும், பகவத்கீதைகள் என்றும், கூறப்பட்ட ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுந ஸம்வாதத்தில் ப்ரஸித்திபெற்ற விஶ்வரூப தர்ஶனயோகம் என்ற பதினோராம் அத்யாயம் முற்றிற்று.

---

# பன்னிரண்டாம் அத்யாயம்.

## பக்தி யோகம்.

---

[அஃதாவது, பரமேஸ்வரனில் அநந்ய பக்தியைச் செலுத்தி, அதனால் பெறப்படும் பலனை அர்ஜுநன் கேட்டுச் சிந்தித்தான் என்று விளக்கும் பன்னிரண்டாவது பாடம்.

அத். ௰௧. ௫௫ இல் பரமாத்மாவை அறியத் தக்கவர்கள் "மத் கர்ம க்ருத்" தும் (அதாவது, அஹம் என்ற ப்ரஹ்மத்தின் கர்மம் என்றெண்ணித் தன் கர்மத்தைச் செய்கின்றவனும்), "மத் பரமஃ" உம் (அதாவது, அஹம் என்ற ப்ரஹ்மத்தை ஸர்வத்துக்கும் மேலானதென்று எண்ணுகின்றவனும்), "மத் பக்தஃ" உம் (அதாவது, அஹம் என்ற ப்ரஹ்மத்தில் பக்தியுள்ளவனும்), "ஸங்கவர்ஜிதஃ" உம் (அதாவது, தன் மனஸை இந்த்ரிய ஸங்கத்திலின்று நீங்கச் செய்தவனும்), "ஸர்வ பூதேஷு நிர்வைரஃ" உம் (அதாவது, ஸர்வ ப்ராணிகளிலும் விரோதமற்றவனும்), பரமாத்ம தர்ஸனத்தைப் பெறத்தக்கவர்கள் என்ற உபதேசத்தைக் கேட்ட அர்ஜுநன், அத். ௰௨. ௧ இல் இந்த ஐவகை "யோகவித் தமாஃ" களில் (அதாவது, யோகத்தை அறியும் உத்தமர்களில்) எந்த யோகவித் மிகச்சிறந்தவன் என்று வினவினான்.

இந்த ப்ரஸ்னத்துக்கு உத்தரம் அத். ௰௨. ௰௪ இல் பகவானால் அளிக்கப்பட்டது. மத்பக்தர்களோடு கூறப்பட்ட மற்ற நான்குவித யோகவித் தமாஃக்களும் மத்பக்தர்களே என்றும், இவர்களில் எவனுடைய பக்தி ஓங்கி வளர்ந்து பூரணப்படுமோ அவனே "யுக்த தமாஃ" (அல்லது ஜீவன்முக்தன்) என்றும், ௰௨. ௰௩-௨௰ இல் விளக்கினார்.

இந்த அத்யாயத்தில் "பக்தி" என்று விரிக்கப்பட்டது எ. ௰எ இல் "ஏக பக்தி" என்றும், அ. ௨௰௨ இலும் ௰௧. ௫௰௪ இலும் "அநந்ய பக்தி" என்றும் கூறப்பட்டிருக்கின்றது.

௰௨. ௩, ௪ இல் இந்தப் பக்தி த்வந்த்வ ஸமத்வத்தாலும் ஐம்பொறி அடக்கத்தாலும் ஸர்வ ஜீவர்களின் நன்மையை விரும்புதலாலும் ப்ரஹ்ம கூடஸ்த உபாஸனையாலும் பூரணப் படுமென்றும்; ௰௨. ௫ இல் தேகமே நான் என்றிருக்கின்றவனுக்கு இந்த ப்ரஹ்ம கூடஸ்த உபாஸனை ஸித்திக்காதென்றும், ஆதலால் இவனுக்கு துக்க விமோசனம் பெறலாகாதென்றும், ௰௨. ௬-௮ இல் ப்ரஹ்மார்ப்பண கர்மானுஷ்டானத்தால் மனஸை ப்ரஹ்மத்தோடு சேர்த்து ஜீவாத்மாவைத் துக்க பய ஸோகங்களில்நின்று உத்தாரணஞ் செய்யலாமென்றும்; ௰௨. ௯ இல் மனோலயப் பழக்கத்தால் ப்ரஹ்ம கூடஸ்த உபாஸனை ஸித்திக்காதுபோனால், ப்ராணாயாம அப்யாஸம் செய்யவேண்டுமென்றும்; ௰௨. ௰, ௰௧ இல் ப்ராணலயம் ஒத்துக்கொள்ளாதுபோனால், மத் கர்மயோகத்தை அல்லது கர்மபல த்யாகத்தை அநுஷ்டிக்க வேண்டுமென்றும்; ௰௨. ௰௨ இல் கர்மபல த்யாகத்தாலேயே ஸாந்தி (துக்க பய ஸோக நிவாரணை) பெறலாமென்றும் உபதேஸித்து, ௰௨. ௰௩-௨௰ இல் மத்பக்தர்களில் உத்தமன் ஜீவன்முக்தனே என்று பாடத்தை முடித்தார்.]

---

அர்ஜுநன் கூறினன்:

௧. இவ்விதம் ஸதாகால யோகம்பெற்று (1) எந்த பக்தர்கள் (2) உன்னை உபாஸிக்கின்றனரோ. எவர்கள் [உன்னை] அக்ஷரமாகவும் அவ்யக்தமாகவும் [உபாஸிக்கின்றனரோ]. அவர்களில் உத்தம யோக வித்துக்கள் (3) யார்?

(1) எப்பொழுதும் பரமேஶ்வரனில் ப்ரதிஷ்டைபெற்ற.

(2) அத். ௰௧. ௫௰௫ இல் கூறியபடி, மத்கர்ம யோகி, மத பரம யோகி, மத்பக்த யோகி, ஸங்கவர்ஜித யோகி, ஸர்வ பூதேஷு நிர்வைரஃ என்ற அன்பர்கள்.

(3) பரமேஶ்வரனோடு ஐக்யமாகும் வழிகளை அறிந்தவர்கள்.

ஸ்ரீ பகவான் கூறினார்:

உ. எவர்கள் என்னிடம் மனஸை ப்ரவேஶிக்கச் செய்து நித்ய யுக்தர்களாய் (1) என்னை உபாஸிக்கின்றனரோ, பரம ஶ்ரத்தையோடு கூடின அவர்கள் உத்தம யுக்தர்கள் என்று என்னால் ஒப்புக்கொள்ளப் பட்டனர் (2).

(1) ஸதாகாலமும் என்னோடு கூடினவர்களாய்.

(2) இந்த மந்த்ரத்தின் ஸாரமாவது,—தன் கர்மத்தை பரமேஶ்வரனது கர்மமென்றெண்ணிச் செவ்வையாகச் செய்கின்றவனுக்கும், பரமேஶ்வரனை ஸகல வஸ்துக்களிலும் மேலான வஸ்து என்ற சிந்தனையோடு இருக்கின்றவனுக்கும், பரமேஶ்வரனில் அன்பு பாராட்டிக்கொண்டு வாழ்கின்றவனுக்கும், மனஸை இந்த்ரியங்களோடு கூடி வெளிமுகமாகச் செல்லவிடாமற் பிரித்து உள்முகமாக அறிவில் நிறுத்துகின்றவனுக்கும், ஸர்வ ப்ராணிகளிலும் விரோதமற்றவனுக்கும் பொது லக்ஷணம் அன்பு என்பதும், இவர்களில் அன்பு எவனிடம் பூரணப்படுமோ (போன்பாகுமோ), அவனே உத்தம யோகவித் என்பதுமே.

௩, ௪. எவர்கள் இந்த்ரிய க்ராமத்தைச் (1) செவ்வையாக அடக்கி, ஸர்வத்திலும் ஸமபுத்திகளாய் (2), அக்ஷரனும் அநிர்த்தேஶ்யனும் (3) அவ்யக்தனும் ஸர்வத்திலும் சென்றிருப்பவனும் மனஸுக்கு எட்டாதவனும் (4) அசைவற்றவனும் நித்யனும் ஆகிய கூடஸ்தனை (5) உபாஸிக்கின்றார்களோ (6), எல்லாப் பூதங்களுடைய ஹிதத்தில் (7) அன்பு பெற்ற அவர்கள் ப்ரஹ்மத்தையே பெறுகின்றனர் (8).

(1) மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற ஐம்பொறிக் கூட்டத்தை.

(2) ஶீதோஷ்ணம், ஸுகதுக்கம், ஜயம் அபஜயம், பெரியது சிறியது, மானம் அவமானம் முதலிய த்வந்த்வ புத்திகளற்று.

(3) அது இது என்று சுட்டிக் காட்டுவதற்கு உரித்தாகாதவனும்.

“நிர்த்தேஶ்ய”=சுட்டிக்காட்டுவதற்கு உரிய.

“அநிர்த்தேஶ்ய ஸர்வத்ரகம்” என்ற வேதவாக்குகளை தாயுமானஸ்வாமிகள் “அங்கிங்கெனாதபடி எங்கும் ப்ரகாஶமாய்”

என்று "திருவருள் விலாசப் பரசிவ வணக்கம்" என்ற பதிகத்தில் அர்த்தம் செய்தார்கள்.

(4) ஆத்மாவால் மாத்திரம் அறியத்தக்கவனும்.

(5) சு. அ, (ச).

(6) நினைப்பு மறப்பு அற்று அறிகின்றார்களோ.

மைத்திராயண்ய உபநிஷத்தில் இந்தக் கூடஸ்த உபாஸனை என்ற ராஜயோகம் மேல்வருமாறு விளக்கப்பட்டது. "நித்ரை நினைப்பு என்றவைகள் இல்லாமல், மனதைச் சலனமற்றதாகச் செய்து எப்பொழுது மனமில்லாமையை அடைகின்றானோ, அப்பொழுது அதே பரமபதம்; இதுவே மோக்ஷம்."

(7) நன்மையில்.

(8) "மாம் ஏவ ப்ராப்நுவந்தி"=என்னையே (ப்ரஹ்மத்தையே) அடைகின்றனர்.

**௫. தேகவான்களால் (1) அவ்யக்த கதி (2) துக்கமாகப் (3) பெறப்படுகின்றபடியால், அவ்யக்தத்தில் பற்றில்லாத மனதை (4) உடையவர்களுக்குத் துக்கம் மிக அதிகம்.**

(1) தேஹமே நான் என்றும், தேஹத்துக்குரிய ஸுகங்களுக்கு மேற்பட்ட ஸுகம் இல்லை என்றும் இருக்கின்ற மூட, புத்தி பெற்றவர்களால்.

(2) மனஸுக்கு எட்டாத நிர்க்குண உபாஸனா மார்க்கம்.

(3) வருத்தப்பட்டு.

தேஹவான்கள் மோக்ஷ ஸுகத்தின் பெருமையைக் கேட்டு, அதைப்பெற வேண்டுமென்று முயன்றால், பஞ்சப் பொறிகள் தத்தம் விஷயங்களைப் பற்றாமல் நில்லா; மனஸ், பஞ்சப்பொறிகளோடு இழுபட்டுத் திரிந்து, ஆத்ம விசாரணையை மேலாக எண்ணாது; புத்தியும் அகண்ட வஸ்துவாகிய தத்பொருளுக்குரிய ஸாஸனங்களை லகுவில் அறியாது. ஆதலால், மனஸுக்கும் ஐம்பொறிகளுக்கும் அப்பாற்பட்ட மெய்ப் பொருளுக்கு இயற்றப்பட்ட அதிஸூக்ஷ்ம பாதை என்னும் "அவ்யக்த கதி"யைத் தேகவான் இச்சித்தாலும், அதில் ப்ரவேசித்து நிற்றல்

அவனுக்கு மிகத் துன்பமாயிருக்கும் என்பது பற்றி, "தேஹவான்களால் அவ்யக்த கதி துக்கமாகப் பெறப்படுகின்றது" என்றார்.

தேஹவானுக்கு அவ்யக்தத்தில் துக்கபுத்தியும், வியக்த ஸம்ஸாரத்தில் சுகபுத்தியும் உண்டு. ஆத்மவானுக்கு வியக்தமாகிய ஸம்ஸாரத்தில் துக்கபுத்தியும், அவ்யக்த ப்ரஹ்மத்தில் ஸுக புத்தியும் உண்டு.

(4) "அஸக்த சேதஸ்"=ஸங்கமற்ற மனஸ்.

அவ்யக்த பரமாத்மாவில் அபக்தியும் தேஹ போகங்களில் பற்றுங் கூடியிருந்தால், மோக்ஷப் ப்ராப்தி ஸித்திக்கிறது அஸாத்யம்.

**சூ. எ. ஆனால், பார்த்த, எவர்கள் எல்லாக் கர்மங்களையும் என்னிடம் ஸந்ந்யஸித்து (1), மத்பரராய் (2), அநந்ய [பக்தி] யோகத்தாலேயே என்னை த்யானித்து(3) உபாஸிக்கின்றனரோ (4), [இவ்வாறு] என்னிடம் மனம் வைத்தவர்களை ம்ருத்யுவோடு கூடின ஸம்ஸார ஸமுத்ரத்தில்நின்று (5) நான் உயரத்தூக்குகின்றவனாக சீக்ரமாவேன்(6).**

(1) முற்றாக ஒப்புவித்து, அர்ப்பணம் செய்து.

(2) பரமாத்மா யாவற்றிலும் மேலான பொருள் என்று எண்ணி.

இப்படி எண்ணினால் போதுமோ? இப்படிச் சிந்தித்தால் மோக்ஷம் ஸித்திக்குமோ? ஸித்திக்காது என்பதுபற்றி, அடுத்தவரியில் அநந்ய பக்தியால் பரமேஸ்வரனை த்யானித்து உபாஸிக்க வேண்டும் என்றார்.

(3) மேன்மேலும் அளவிறந்த அன்போடும் விஸ்வாஸத்தோடும் அதைப் பாவனை செய்து.

(4) ஏகாக்ர சித்தனாகி (அத். சூ. ௰க, ௰௨), அதன்மேல் நினைப்பு மறப்பற்றுப் பேரறிவு சொரூபமாகின்றனரோ.

(5) மரண ஸம்பந்தமான த்ரிலோக ஸஞ்சார வாழ்வில் நின்று.

(6) நான் சீக்ரமாகத் தூக்கி அந்த வாழ்வின் துக்கங்களை முற்றாகப் போக்குவேன்.

"உத்தர்தா"=மேலெடுக்கின்றவன்; மலத்தில்நின்று உத்தாரணம் செய்கின்றவன் (அத். ௬. ௫.)

**அ. என்னிடமே மனஸை வை, என்னிடம் புத்தியை ப்ரவேசிக்கச்செய் (1). இதன்மேல் என்னிடமே வஸிப்பாய் (2). ஸம்சயமில்லை (3).**

(1) ப்ரஹ்ம நிஷ்டைபெற்ற மனஸும் புத்தியும் ப்ரஹ்மப் ப்ராப்திக்கு இன்றியமையாத கருவிகள், என்பது கருத்து.

(2) இப்படி மனஸையும் புத்தியையும் என்னிடம் வைத்த பின், ஆத்மா என்னைவிட்டுப் ப்ராக்ருதியைச் சாராது.

(3) இந்த உண்மையை ஸகல ஜீவன்முக்தர்களும் ஸ்வாநுபவமுறையாக அறிந்திருக்கின்றார்கள்.

**௯. ஆனால், தநஞ்ஜய, என்னிடம் சித்தத்தை ஸ்திரமாக வைப்பதற்கு [நீ] வல்லமையற்றவனாகில் (1), அப்யாஸ யோகத்தால் (2) என்னைப் பெற விரும்பு (2).**

(1) உன்னுடைய மனஸ் பரமாத்மாவைப்பற்றி உறுதியாக நிற்காதுபோனால்.

(2) அஷ்டாங்கயோகத்துக்குரிய ப்ராணாயாம ப்ரத்யாஹாரப் பழக்கங்களால்.

நிராசையைப் பற்றி வாழும் ஸாங்கியர்கள் அநுஸரித்து வரும் புத்திநிலைகள் அங்கங்கள் என்று கூறப்படவில்லை.

பல ஆசைகளாலும் விஷய ஸுகங்களாலும் வாதிக்கப் பட்டு, இவற்றை எல்லாம் கர்மாநுஷ்டானங்களால் ஜயிக்க வேண்டுமென்று யத்தனிக்கின்ற தைர்யவான்களுக்குக் அஷ்டாங்கங்களால் சிறப்பிக்கப்பட்ட கர்மயோகம் கூறப்பட்டது.

இவற்றின் லக்ஷணங்கள் ௭௭, ௭அ ம் பக்கங்களில் காணப் படும்.

அங்கு கூறப்பட்ட அஷ்டாங்கங்களில், யமம் தொட்டு ப்ரத்யாகாரம் ஈறாக உள்ளவை தேஹத்தையும், ப்ராண அபான வாயுக்களையும், ஐம்பொறிகளையும் அடக்கும் பழக்கங்கள் ("அப்யாஸங்கள்") ஆகும்.

தாரணையாவது, மனஸின் ஓர் அம்ஶமாகிய சித்தத்தை த்யேயத்தில் (த்யானிக்கப்பட்ட பொருளில்) ஸ்திரமாக நிறுத்துதல்.

த்யானமாவது, வேறொரு வ்ருத்தியால் தடைப்படாத த்யேயாகார வ்ருத்திப் ப்ரவாஹம். (அதாவது, த்யானிக்கப்பட்ட பொருளுக்கு வேறான நினைவுகளை வரவிடாமல், அப்பொருளைப் பற்றிய நினைவுகளை பெருகுதல்.)

ஸமாதியாவது, த்யானம் த்யேய த்யாத்ரு என்ற த்ரிபுடிகள் அற்றுத் த்யானிக்கப்பட்ட ஆத்மாவாகவே நிற்றல்.

(3) பரமாத்ம சொரூபமாகிய நிர்குண வஸ்துவாய் வர விரும்புவாயாக.

**௰. அப்யாஸத்தாலும் நீ ஸமர்த்தனாகாத பக்ஷத்தில், மத்கர்மத்தை (1) மேலாகக்கொண்டவனாய் இரு. [இப்படிக்] கர்மங்களை மதர்த்தமாகவும் செய்கின்ற நீ ஸித்தியைப் (2) பெறுவாய்.**

(1) அத். ௯. ௩௪.

(2) துக்க விமோசனம் என்ற ப்ரஹ்ம பதத்தை.

**௰௧. மத் [கர்ம] யோகத்தை ஆஶ்ரயித்து அதனையும்(1) செய்ய அஶக்தனாயிருப்பாயாகில். ஆத்மாவை (2) யமம் செய்பவனாய் ஸர்வ கர்மபல த்யாகத்தைச் செய்.**

(1) அந்த மத்கர்மத்தையும்.

(2) மனத்மாவை.

**௰௨. அப்யாஸத்திலும் [விஜ்ஞான] ஞானம் சிறந்தது [என்பது] ப்ரஸித்தம் (1). [விஜ்ஞான] ஞானத்திலும் த்யானம் சிறந்தது (2). த்யானத்திலும் கர்மபலத் த்யாகம் சிறந்தது (3). த்யாகத்தின்பின் ஶாந்தி [சித்திக்கும்] (4).**

(1) "ஶ்ரேயஸ் ஹி"=மேலானது அல்லவா? மேலான நிலை என்றதை ஜீவன்முக்தர் அறிவார்கள், என்பது கருத்து.

ப்ராணாயாமம் ப்ரத்யாகாரம் என்ற கர்மாநுஷ்டானம் சித்தஶுத்திக்கு ஹேதுவாயிருப்பதாலும், சித்தஶுத்தி உள்ள

வர்கள் ஞான ஶாஸ்த்ரங்களை லெகுவாய் அறியத்தக்கவர்களாதலாலும், "அப்யாஸங்களிலும் [விஜ்ஞான] ஞானம் மேலானது" என்றார்.

(2) ஞான ஶாஸ்த்ரங்களில் கூறப்பட்ட ஆத்ம அனாத்மப் பொருள்களைக் குரு முன்னிலையாக ஶ்ரவணம் மனனம் செய்தால் பரோக்ஷ (பிறர்கண்ணால், குரு ஸகாயத்தால் அறியப்பட்ட) ஞானம் (hear say knowledge regarding the soul) உண்டாகும். இந்தப் பரோக்ஷ ஞானம் தன்னைத் தன்னால் அறியும் நேர் ஞானம் (direct knowledge of the soul) ஆகிய ஸ்வானுபூதி அன்று. ஸ்வாநுபூதிக்கு மிகத் தாழ்வாயிருந்தும், விஜ்ஞான ஞானமாகிய பரோக்ஷஞானம் ஈஶ்வர பக்தியை விளைவித்து, த்யானத்துக்கு ஸோபானமாய் (படியாய்) இருப்பதால், விஜ்ஞான ஞானத்திலும் த்யானம் மேலானது என்றார்.

(3) த்யானிக்கப்பட்ட வஸ்துவாகிய பரமேஶ்வரனுடைய லக்ஷணங்கள் வெள்ளம்போல த்யானதசையில் மனவயில்நின்று பெருகும். இந்த த்யானப் பெருக்கால் பக்தி விளைந்து நற்கர்மங்களுக்குரிய விஷயபோக பலன்களில் வெறுப்பை உண்டாக்கிப், "பரமேஶ்வரனே எனக்கு வேண்டும்" என்றும், "எனது கரணங்களும் அவருடைய ஶக்திகளே" என்றும், "அவற்றால் செய்யப்பட்ட கர்மங்களும் அக்கர்மங்களில்நின்று ஜன்யமாகும் ஶுபாஶுப பலன்களும் எனதல்ல" என்றும், வாழச்செய்யும். இப்படி ஆத்மாவிலுள்ள கர்மபல விருப்பு த்யானத்தால் நீங்குவதால், த்யானத்திலும் கர்மபலத் த்யாகம் சிறந்தது என்றார்.

(4) கர்மபலத்தில் ஆசை தீர்ந்த பக்விக்குத் துக்கபய ஶோகங்கள் கெடும்.

இந்த மந்த்ரத்தில், ஸாங்க்யம் என்ற ஞானயோகத்துக்கும், கர்மயோகம் என்ற அஷ்டாங்க யோகத்துக்கும் உள்ள ஸூக்ஷ்ம ஸம்பந்தம் விளக்கப்பட்டது.

தேவ மானுட ஜீவர்கள் விஷயபோகிகள் என்றும், யோகிகள் என்றும், ஸாங்க்யர் (அல்லது, மெய்யறிவாளிகள்) என்றும்

மூவகைப்படுவார்கள்.

விஷயபோகிகள் தோன்றி அழியும் சிற்றின்பத்தைத் துன்பம் என்று அறியாமல் ஜீவிப்பதால், அவர்களுடைய மோஹத்தைத் தீர்க்கும்பொருட்டு துக்கப் ப்ரவ்ருத்தி மார்க்கமாகிய த்ரிலோக ஸஞ்சாரம் என்னும் பூலோக நரகலோக ஸ்வர்க்கலோகப் ப்ராப்திகளை அருளி, மெல்ல மெல்ல விஷயஸுகங்களைப் பரமேஶ்வரன் வெறுக்கச் செய்வார்.

விஷய ஸுகங்களைத் துன்பம் என்று நிதானித்தவர்களில் அநேகர் கர்மயோகிகள் (அல்லது, "யோகிகள்") ஆகவும், சிலர் ஞானயோகிகள் (அல்லது, "ஸாங்க்யர்") ஆகவும், அவரவர்கள் இயல்பின்படி, பிரிந்தனர்.

கர்மயோகிகளுக்கும் ஞானயோகிகளுக்கும் இயற்றப்பட்டது துக்க நிவ்ருத்தி மார்க்கம். இது யமம் நியமம் என்ற நல்லொழுக்கங்களாயும் (ஸதாசாரங்களாயும்), ஆஸனம் என்ற தேக அடக்கமாயும், ப்ராணாயாமம் என்ற உச்ச்வாஸ நிஶ்வாஸ வாயு அடக்கமாயும், தாரணை என்ற ஏகாக்ர சித்தமாயும், ஸமத்வபுத்தியாயும், ஞான ஶாஸ்த்ர விசாரணையாயும், த்யானம் என்ற த்யாேயய சித்த வ்ருத்தியாயும், கர்மபலத் த்யாகமாயும், ஸமாதி என்ற நினைப்பு மறப்பற்ற கைவல்யம் (ஶாந்தி) ஆயும் இருக்கும்.

இவற்றுள், கர்மயோகிகளுக்கு யமம் நியமம் ஆஸனம் ப்ராணாயாமம் ப்ரத்யாஹாரம் தாரணை த்யானம் கர்மபலத் த்யாகம் ஸமாதி என்ற நிலைகள் உரியன. ஞானயோகிகளுக்கு ஸமத்வ புத்தி ஞானஶாஸ்த்ர விசாரணை கர்மபலத்யாகம் ஸமாதி உரியன. பரிபக்வத்தில் ஞானயோகிகள் கர்மயோகிகளிலும் முதிர்ந்தவர்களாதலால், அவர்கட்கு யமம் நியமம் ஆஸனம் ப்ராணாயாமம் ப்ரத்யாகாரம் தாரணை என்றவை வலிய வஸித்திக்கும். ஏனெனில், முற்பிறவியில் அவற்றை நன்றாய் அநுஷ்டித்து ஒழித்ததால்.

எனவே, நிவ்ருத்தி மார்க்கத்தில் கர்மயோகம் கீழ்ப்பாகமாகவும், ஞானயோகம் மேற்பாகமாகவும், இருக்கின்றன.

கர்மயோகிக்குரிய த்யானம் எவ்விதம் அவனுக்கு ஸமாதியைக் கொடுக்கும் என்ற வினாவுக்கு ௰௨ம் மந்த்ரத்தில் விடை அளிக்கப்பட்டது. த்யானம் ஸித்தித்தால், அது விஷய ஸுகத்தில் உள்ள விருப்பையும் விஷய அஸுகத்தில் உள்ள வெறுப்பையும் அறுக்கும். அறுபடவே கர்மபலத் த்யாகம் உண்டாகும். அஃது உண்டாக ஆசைகளைப்பற்றி ஜீவிக்கின்ற நினைப்பு மறப்புக்கள் ஒழிந்து ஸமாதி ஸித்திக்கும்.

௰௩, ௰௪. எனது பக்தனுகிய எந்த யோகி ஸகல ப்ராணிகளிலும் த்வேஷமற்றவனும் மித்ரனும், கருணைபெற்றவனும், மமதையற்றவனும், அஹந்தையற்றவனும், ஸுகத்தையும் துக்கத்தையும் ஒன்றுபோற் பார்க்கின்றவனும், பொறுதியுள்ளவனும். எக்காலங்களிலும் த்ருப்திபெற்றவனும், மனதை ஒடுக்கினவனும், உறுதியான நிஶ்சய புத்தியுடையவனும், என்னிடம் அர்ப்பணம் செய்யப்பட்ட மனமும் புத்தியும் உடையவனும் இருக்கின்றனே, அவன் எனக்கு ப்ரியன் (1).

(1) இந்த இரண்டு மந்த்ரங்கள் தொட்டு ௰௯ம் மந்த்ரம் வரையில் ஜீவன்முக்தனுடைய லக்ஷணங்கள் கூறப்பட்டன.

பரமேஶ்வரனும் ஜீவன் முக்தனும் சச்சிதானந்த சொரூபமாதலால், இவர்கட்கு ஐக்ய பாவனையாகிய பரஸ்பர ப்ரீதி உண்டு.

ஸத் சித் ஆனந்த லக்ஷணங்களில் இவர்கள் ஒன்றுனாலும், ஶக்தி விஷயத்தில் பரமேஶ்வரனுக்கு ஜீவன்முக்தர் நிகரல்லர். பரமேஶ்வரன் அளவிறந்த ஶக்திமானாயும், ஜீவன்முக்தர் ஸுதந்தர ஶக்தியற்றவர்களாயும் இருப்பார்கள்.

௰௫. எவனிடமிருந்து லோகத்தார் நடுக்கத்தை (1) அடைகிறர்கள் இல்லையோ, எவன் லோகத்தாரிடமிருந்து நடுக்கத்தை அடைகிறனில்லையோ, எவன் ஸந்தோஷம் கோபம் பயம் துக்கம் என்றவைகளால் விடப்பட்டவனே, அவன் (2) எனக்கு ப்ரியன்.

(1) "உத்விஜதே"=உத்வேகத்தைப் (பெறவில்லையோ.)

உத்வேகம் = "ஸம்ப்ரம" = ஒருவனுடைய அஹம்பாவனை

களைக் கண்டு ஜன்யமான நடுக்கம்.

(2) அந்த ஜீவன்முக்தன்.

**யசு.** என் பக்தனுய் எவன் அபேக்ஷயற்றவனுயும் (1), ஸௌ சமுள்ளவனுயும் (2), ஸமர்த்தனுயும் (3), உதாஸீனனுயும் (4), மனவே தனையற்றவனுயும் (5), ஸர்வ கர்மாரம்பங்களை பரித்யாகம் செய்தவ னுயும் (6) இருக்கின்றனே, அவன் (7) எனக்குப் ப்ரியன்.

(1) அபேக்ஷை=இஃது எனக்குவேண்டும், இப்படி இது முடிய வேண்டும் என்ற முதலிய விருப்பங்களால் பந்திக்கப் பட்ட புத்தி. உபேக்ஷை=வெறுப்பால் பந்திக்கப்பட்ட புத்தி.

(2) ஸௌசம்=ஸுத்தி, சித்த ஸுத்தி, கபடமில்லாமை.

(3) ஆத்ம கார்யங்களில் கௌஸலனும்.

(4) "உத்" (அப்பாற்பட்டு), "ஆஸன்" (இருப்பவன்) என்ற பதங்கள் கூடி "உதாஸீனன்" ஆகி, த்வந்த்வங்களில் சிக்கா மல் விலகி நிற்கின்றவன் என்று பொருள்படும்.

(5) அசல மனஸை உடையவனுகியும்.

(6) எல்லாக் கர்ம அநுஷ்டானங்களும் பரமேஸ்வரனுடை ய பஞ்ச க்ருத்யங்கள் என்று ஸாக்ஷிரூபமாயிருக்கின்றவனும்.

(7) அந்த ஜீவன்முக்தன்.

**யஎ.** பக்திமானுகிய எவன் [ஸம்பவித்ததில்] ஸந்தோஷம் அடைகிறனில்லையோ, எவன் த்வேஷத்தைப் பெறுகிறனில்லையோ எவன் துக்கத்தைப் பெறுகிறனில்லையோ, எவன் விரும்புகிறனில்லை யோ, எவன் ஸுபத்தையும் அஸுபத்தையும் பரித்யாகம் செய்த வனே, அவன் (1) எனக்கு ப்ரியன்.

(1) அந்த ஜீவன்முக்தன்.

**யஅ. யகூ.** பக்திமானுகிய எவன் ஸத்ருவினிடமும் (1) மித்ரனிட மும் ஸமனுயும், அவ்விதமே மானத்திலும் அபமானத்திலும் (2) ஸமனு யும், குளிர் சூடு ஸுகம் துக்கம் என்றவைகளில் ஸமனுயும், விஷய ஸங்கத்தில் நின்று இந்த்ரியங்களை முற்றுக நீக்கினவனுயும் (3), நிந்தை ஸ்துதி என்றவைகளைத் துல்யங்களாக்கிக்(4) கொண்டவனுயும், மௌ

**னியாயும் ([5]), ஏதானாலும் அதில் த்ருப்திபெற்றவனாயும் ([6]) நியதமான விடுதியில்லாதவனாயும் ([7]), ஸ்திர மதியுடையவனாயும் இருக்கின்றானே. அந்த மனுஷ்யன் ([8]) எனக்கு ப்ரியன்.**

(1) *தன்னோடு எதிரி பாராட்டுகின்றவனிடமும்.*

(2) *அன்பால் ஏற்படுத்தப்பட்ட மானத்திலும், பகையால் ஏற்படுத்தப்பட்ட அபமானத்திலும்.*

*மானமும் அபமானமும் அஹந்தை மமதையுள்ளவர்களின் கல்பிதம். "நான் யார், இப்பெயர்ப்பட்டவருடைய ஸந்ததியில் உதித்தவனல்லவா நான், எனக்கு இடம் பொருள் ஏவல் உண்டு" என்னும் பூர்வ்ய ஞாபகங்கள் உதயமாக, அஹங்காரம் தடித்து, தர்மவிஷயங்களிற் சென்றால், புண்ணியகர்மங்களுக்குக் காரணமாகும்; அதர்ம விஷயங்களிற் சென்றால், பாபகர்மங்களுக்குக் காரணமாகும்.*

*நல்ல அஹங்காரம் பெற்றவனை "மானி" என்றும், பொல்லாத அஹங்காரம் பெற்றவனை "அபமானி" என்றும் கூறுவர்.*

*மானிகளால் மானம் வந்தாலும், அபமானிகளால் அபமானம் வந்தாலும், ஸமபுத்தியோடு சலனமற்று இருக்கவேண்டும்.*

(3) *"ஸங்கவிவர்ஜித:"=இந்த்ரியங்களைத் தத்தம் விஷயங்களில்நின்று முற்றாக விலக்கினவன். உ. ௬௰உ; ௰௩. ௫௰௫ (4).*

(4) *தராசு (துலாம்) போல ஸமனுக்கி.*

(5) *மனஸ் வாக் காயம் என்ற த்ரிகரணங்களை அதர்ம விஷயங்களிற் செல்லவிடாமல் அடக்கிவைத்திருக்கின்றவனும்.*

(6) *எது ஸம்பவித்தாலும் அது போதும், எனது பூர்வ கர்மத்துக்குத் தக்கபடி பரமேஶ்வரனால் அது அருளப்பட்டதால், அது சரியே என்ற புத்தியுடையவனாயும்.*

(7) *பிறந்த வீட்டிலும் வளர்ந்த வீட்டிலும் நெடுநாள் உபஸரிக்கப்பட்ட வீட்டிலும் மோஹங் கொள்ளாமல், தங்கின இடம் எதுவோ அதுவே தனக்கு வீடு என்றவனாயும்.*

(8) *அந்த ஜீவன்முக்தன்.*

**௨௰. ஆனால் ([1]), தர்மத்தால் பெறக்கூடியதும் அமிர்தமுமாகிய இதை ([2]) க் கூறினபடி எந்த பக்தர்கள் உபாஸிக்கின்றனரோ, ஶ்ரத்**

**தை பெற்றவர்களும் மத்பரமர்களும் ஆகிய அவர்கள் (4) எனக்கு மிக ப்ரியர்கள்.**

(1) எனக்குப் ப்ரியனாகிய ஜீவன்முக்தனுடைய லக்ஷணத்தை மிகவிரிவாகக் கூறவேண்டியதில்லை. இப்பொழுது சுருக்கமாக நீ அறியவேண்டியது யாதெனில்.

(2) நிவ்ருத்தி மார்க்க விதிகளை அநுஷ்டித்துப் பெறக்கூடிய இறப்புப்பிறப்பற்ற இந்த யுக்த தமஸ்த்வம் (௰௨. க.) ஆகிய ஜீவன்முக்தியை.

(3) மத்கர்மக்ருத், மத்பரமன், மத்பக்தன், ஸங்கவர்ஜிதன், ஸர்வ ஜீவகாருண்யன் என்று ௰௨.௫௫ இல் கூறப்பட்ட அன்பர்கள்.

(4) இந்த ஐவித புருஷர்களுக்கும் பொது லக்ஷணம் பரமேஶ்வரனே யாவற்றிலும் மேலான பொருள் என்ற நிஶ்சயமும் அவரிலே அநந்ய அன்புமே.

---

**உபநிஷத்கள் என்றும், ப்ரஹ்மவித்தை என்றும், யோகஶாஸ்த்ரம் என்றும், பகவத்கீதைகள் என்றும், கூறப்பட்ட ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுந ஸம்வாதத்தில் ப்ரஸித்திபெற்ற பக்தியோகம் என்ற பன்னிரண்டாம் அத்யாயம் முற்றிற்று.**

---

# பதின்மூன்றாம் அத்யாயம்.

## க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ விபாக யோகம்.

---

[அஃதாவது, ஒரு முதலை எடுத்து விபாகம் (பிரித்தல்) செய்வது போல, "ஸேஶ்வரஜகத்" என்ற ப்ரபஞ்சத்தை ஒரு முதலாகக் கொண்டு, அது "க்ஷேத்ரஜ்ஞன்" "க்ஷேத்ரம்" என்று இருவகையாகப் பிரிக்கப்படும் என்றும்; இவற்றுள், மலத்துக்கு அடிமைப்பட்டுத் தான் யார் பலம் யாது என்று அறியாமல் ஜீவிக்கும் கிஞ்சிஜ்ஞன் (சிற்றறிவு) என்ற ஜீவாத்மாவும் அறிவற்ற ஜகத்தும் "க்ஷேத்ரம்" என்றும்; ஜீவர்களிலும், ஜகத்திலும் ப்ரவேஶித்துப் பேரறிவும் பேரன்புமாயிருந்து பஞ்சக்ருத்யங்களை நடத்திவருகின்ற பரமாத்மா "க்ஷேத்ரஜ்ஞன்" என்றும்; க்ஷேத்ரஜ்ஞனுடைய லக்ஷணத்தையும் க்ஷேத்ரஜ்ஞனுக்கும் க்ஷேத்ரத்துக்கும் உள்ள ஸம்பந்தங்களையும் அறிதலே ஸத்யஞானம் (மெய்யறிவு) என்றும்; க்ஷேத்ரஜ்ஞனை விடுத்து க்ஷேத்ர லக்ஷணங்களை மாத்ரம் விசாரித்தல் துன்பங்களுக்கு ஹேதுவாயிருப்பதால், அந்தவிசாரணை மித்யாஞானம் (பொய்யறிவு) என்றும்; தனது உத்தாரணத்தை விரும்புகின்ற ஜீவாத்மா அவஶ்யமாக அறியவேண்டிய பொருள் ("ஞேயம்", "வேத்யம்") பரமாத்மாவே என்றும், உபதேஶித்ததை அர்ஜுநன் கேட்டுச் சிந்தித்தான் என்று விளக்கும் பதின்மூன்றும் பாடம்.]

---

**அர்ஜுநன் கூறினான்:**

**க. ஓ கேஶவ, க்ஷேத்ரம் (1) என்று ப்ரக்ருதியையும், க்ஷேத்ரஜ்ஞன் (2) என்று புருஷனையும், ஞானத்தையும், ஞேயத்தையும் அறிய விரும்புகிறேன்.**

(1) "க்ஷேத்ரம்" என்ற பதம் "க்ஷி" (கெடுதல்) அல்லது "க்ஷே" (அநர்த்தம்) என்ற தாதுவினின்று ஜனித்து அழியும்

வஸ்துவாகிய ஶரீரங்கள், ரூபங்கள் என்று பொருள்படும். ப்ரக்ருதியும் ப்ரக்ருதி கார்யங்களும் க்ஷேத்ரம். இது பரப்ரக்ருதி க்ஷேத்ரம் என்றும் அபரப்ரக்ருதி க்ஷேத்ரம் என்றும் இருவகைப்படும். பர ப்ரக்ருதி க்ஷேத்ரமாவது அஹங்கார மமகாரங்களுக்கு அடிமைப்பட்டு நல்லறிவு கெட்டு அலைந்து திரியும் ஆத்மா. அபர ப்ரக்ருதியாவது மூலத் என்ற ப்ரக்ருதியும், அஹங்காரம் புத்தி, பஞ்ச தந்மாத்ரைகள் (ஸூக்ஷ்ம பூதங்கள்) என்ற தத்வங்களும், இவற்றால் இயற்றப்பட்ட ஸகல ஸூக்ஷ்ம ஸ்தூல ரூபங்களுமே.

(2) "க்ஷேத்ரஜ்ஞன்" என்றது க்ஷேத்ரமாகிய ப்ரக்ருதியையும் ப்ரக்ருதி கார்யங்களையும் அறிகின்ற ஆத்மா.

மேல்வரும் ௨, ௩ ம் மந்த்ரங்களில் "க்ஷேத்ரஜ்ஞன்" என்ற பதம் பரமாத்மாவுக்கும் ஜீவன்முக்தனுக்கும் உரியது என்று விளக்கப்பட்டது.

இந்த ஶ்லோகம் சில ப்ரதிகளில் காணப்படவில்லை.

௨. கௌந்தேய. இந்த ஶரீரம் க்ஷேத்ரம் என்று கூறப்படுகின்றது. இதை எவன் [தான் அன்று என்று] அறிகின்றனோ, அவனை க்ஷேத்ரஜ்ஞன் என்று தத்வித்துக்கள் (1) கூறுகின்றனர்.

(1) தத்பொருளை அறிந்தவர்கள், தத்வஞானிகள்.

ஶரீரம்வேறு நானென்ற ஆத்மா வேறு என்று உள்ளபடி அநுபவமுறையாக அறிந்த ஜீவன்முக்தர்கள்.

௩. பாரத, என்னை எல்லா க்ஷேத்ரங்களிலும் இருக்கின்ற க்ஷேத்ரஜ்ஞனாகவும் அறி (1). க்ஷேத்ரன் க்ஷேத்ரஜ்ஞன் என்றவைகளைப் பற்றிய ஞானம் எதுவோ. அது ஞானம் (2) என்று எனக்கு ஸம்மதம்.

(1) எவ்விதம் பூத ஆகாஶம் அகண்டமாய் ஸ்தூல வடிவங்கள்தோறும் ப்ரவேஶித்து நிற்குமோ, எவ்விதம் மஹாகாஶம் ஸூக்ஷ்ம வடிவங்கள்தோறும் அகண்டமாய் ப்ரவேஶித்து நிற்குமோ, அவ்விதமே சிதாகாஶமாகிய க்ஷேத்ரஜ்ஞன் அகண்டமாய் ஸர்வ ஸ்தூல ஸூக்ஷ்ம வடிவங்களிலும் ப்ரவேஶித்து நிற்கின்றான்.

(2) க்ஷேத்ரஜ்ஞனாகிய பரமாத்மாவைப்பற்றிநின்றே க்ஷேத்ரங்கள் தோன்றுகின்றன என்பதும், க்ஷேத்ரங்கள் நாநாரூபமாயிருந்தும் அவற்றால் க்ஷேத்ரஜ்ஞன் ஊடுருவிப் பஞ்சக்ருத்யங்களையும் நடத்தி வருகின்றான் என்பதும், க்ஷேத்ரம் தாமஸ ராஜஸ ஸாத்விக குணங்களால் ஏவப்பட்டுத் தோன்றியும் அழிந்தும் வருகின்றது என்பது முதலிய உண்மைகளை அறிதலே ஸத்யஞானம் எனப்படும். இதனையே ௬. ௧ இல் விஞ்ஞான ஸஹிதஞானமென்றார்.

பரமாத்மா இருக்கின்றாரோ இல்லையோ என்ற ஸம்சயத்தால் அவரைப் புத்தியினின்று நீக்கி, ப்ரக்ருதி சொரூபங்கள் தங்கள் சக்திகளாலேயே தோன்றியும் அழிந்தும் வருகின்றன என்றும், அவற்றைத் தேஹ ஜீவனத்திற்கும் ஸம்பொறி விஷய ஸுகத்திற்கும் உபயோகிக்க வேண்டும் என்றும், எண்ணி அவற்றின் தன்மைகளையும் சக்திகளையும் அறியும்படி முயல்கின்றவர்களின் கல்வி அஜ்ஞானமேயென்று மதிக்கவேண்டியது.

ஆத்மாவை மறந்து அனாத்மாவை விஷயஸுகத்துக்காக விசாரிக்கின்றவர்கள் அவித்யாவில் மூழ்கியிருப்பவர்கள். ஆத்மா மெய்ப்பொருள், ப்ரக்ருதியும் ப்ரக்ருதிகார்யங்களும் பொய்ப்பொருள், ஜீவாத்மகோடிகள் பொய்ப்பொருளில் அமிழ்ந்து இருப்பதால் எது ஆத்மா எது அனாத்மா என்று விசாரித்து பொய்ப்பொருளின் பந்தனங்களைத் தஹிக்கும் முறையையும் அறிந்து ஆனந்தசொரூபிகளாக இருக்கவேண்டும் என்று நிஸ்சயித்த புத்திமான்கள் அவித்யாவினின்று தப்பி மோக்ஷம் பெறத்தக்கவர்கள்.

**௪. அந்த க்ஷேத்ரம் எது, எவ்விதம் (1), என்ன விகாரங்களை உடையது (2), எதில்நின்று எது (3), மேலும் எவன் எந்த ப்ரபாவத்தைப் பெற்றவன் (4); அதை [எல்லாம்] சுருக்கமாய் எனது [வாக்யத்தால்] கேள்.**

(1) க்ஷேத்ரத்தின் பிரிவுபாடுகள் என்ன? அவ்யக்த ப்ரக்ருதி மூன்றும் விகார ப்ரக்ருதி ௰௬௰௩. ஆக ௰௯. ப்ரக்ருதி

தத்வங்களை "க்ஷேத்ரம்" என்ற பதம் குறிக்கும். ௰௩. ௬, எ, மந்த்ரங்களைப் பார்த்தறிக. ஸாங்க்ய விதிப்படி ப்ரக்ருதி க, ப்ர க்ருதி விக்ருதி எ, விக்ருதி ௰௬, ஆக ப்ரக்ருதி தத்வங்கள் உ௰௪ ஆகும்.

(2) ப்ரக்ருதி என்னவிகாரங்களைப் பெற்றது என்ற வினவுக்கு உத்தரம் ௰௩. ௬, எ, இல் அளிக்கப்பட்டது

(3) விகாரங்கள் தோன்றின வரிசைக் க்ரமம் என்ன.

"ப்ரபாவம்"=ப்ரபு ஶக்தி. ௰௩, ௬, எ.

(4) க்ஷேத்ரஜ்ஞன் என்றவன் எந்த அடக்கியாளும் மேலான ஶக்திகளை உடையவன்? ௰௩, அ-௰௪ இல் இதற்கு உத்தரம் அருளப்பட்டது.

ரு. [க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞன் என்றவற்றின் உண்மை] பல சந்தஸ்களாலும் (1), ப்ரமாணம் பெற்றவர்களும் (2) தத்வநிஶ்சயம் பெற்றவைகளும் (3) ஆகிய ப்ரஹ்ம ஸூத்ர பதங்களாலும் (4). ருஷிகளால் (5) பலவிதமாகக் கூறப்பட்டது (6).

(1) வேதங்களின் ஞானகாண்டமாகிய பல உபநிஷத்களாலும்.

"சந்தஸ்"=அக்ஷரம், மாத்ரா, ஸ்வரம் என்றவைகளைப் பற்றிய நியமம்.

(2) ஶ்ருதி, யுக்தி, அநுபவம் என்ற ஹேதுக்களை ஆதாரமாகக் கொண்டவைகளும்.

(3) பரமாத்மாவைப்பற்றி உறுதியாகப் போதிக்கின்றவைகளும்.

(4) ப்ரஹ்மத்தை ஸூசிப்பிக்கின்ற (தெரிவிக்கின்ற) சொற்களினாலும்.

வியாஸருஷியால் அருளப்பட்ட ப்ரஹ்மஸூத்ரங்கள், ஶ்ருதி யுக்தி அநுபவங்களால் ப்ரஹ்மத்தை ஸாதிக்கின்றபடியால் "ப்ரமாணம் பெற்ற ........ ஸூத்ரபதங்கள்" எனப்பட்டன.

(5) பரமாத்ம தர்ஶனம் பெற்றவர்களால்.

(6) மாணாக்கர்களுடைய க்ரஹண ஶக்திக்கேற்றபடியும்

தேசிகனுடைய வஸதிக்கேற்றபடியும் வெவ்வேறு விதமாகத் தத்வங்கள் கணக்கிடப்பட்டது.

க்ஷணந்தோறும் அழியாமல், யுகபர்யந்தம் இருக்கும் தத்வங்கள் தனித்தனியாக நில்லா. ஸம்பந்தப்பட்டே நிற்கும். ஆதலால், முன்பின்னாகவும், சுருக்கியும் விரித்தும் கூறத்தக்கவை. இதுபற்றியே தத்வக் கணக்குகள் வேறுபட்டன.

**ௗ, ௭. அவ்யக்தம் (1). புத்தி, அஹங்காரம், மஹா பூதங்கள் (2), பதினொரு இந்த்ரியங்கள் (3), ஐந்து இந்த்ரிய கோசரங்கள் (4), இச்சை (5), த்வேஷம், ஸுகம், துக்கம், ஸங்காதம் (6), சேதனை (7) தைர்யம் (8). இது [எல்லாம்] க்ஷேத்ரம் (9): விகாரத்தோடு கூடிச் (10) சுருக்கமாக உரைக்கப்பட்டது.**

(1) அத்ருஶ்ய மூல ப்ரக்ருதி.

(2) தன் மாத்திரைகளாகிய ஶப்த, ஸ்பர்ஶ, ரூப, ரஸ, கந்தங்கள். இவற்றின் ரூபங்கள் அதி ஸூக்ஷ்மங்களாக இருக்கும்.

(3) இவை மெய் வாய் கண் மூக்கு செவி என்ற ஐந்து புத்தி இந்த்ரியங்களும், வாக்கு பாணி பாதம் பாயு உபஸ்தம் என்ற ஐந்து கர்மேந்த்ரியங்களும், மனஸும், ஆகப் பதினொன்று.

(4) மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற புத்தியிந்த்ரியங்களுக்கு விஷயங்களாகிய ஸ்பர்ஶ ரஸ ரூப கந்த ஶப்தங்கள். கோசரம்=விஷயம்.

(5) ராகம், விருப்பு.

(6) ருதிரம் (ரக்தம்), மாம்ஸம், மேதஸ், அஸ்தி, மஜ்ஜா, ஶுக்லம், சர்மம் என்ற ஸப்த ஸ்தூல தத்வங்களின் கூட்டம். இக் கூட்டத்தால் (ஸங்காதத்தால், ஸமூகத்தால்) தோன்றினது ஶரீரம்.

(7) சைதன்ய ஆபாஸமாகிய ஜீவன். அஃதாவது அஹந்தை மமதை பெற்ற அறிவு. இந்த அறிவில் நின்று அஹந்தை மமதை நீங்கினவுடனே இது பேரறிவாகும். எனவே, சிற்றறிவுதான் ஜீவன், சேதனை. இது அறியாதவனாயிருந்தும் அறிந்தவன்போன்று திரிதலால், சைதன்ய ஆபாஸன் என்று அழைக்

கப்படுகிறான்.

(8) நீரனுடைய தன்மை, ஸ்திரபுத்தித்வம்.

(9) முற்கூறிய ௩௰௩-ம் ஶாக்த ஆத்மாவாகிய க்ஷேத்ரஜ்ஞன் அல்லாததால், க்ஷேத்ரஜ்ஞனைப்பற்றிய க்ஷேத்ரம் என்றார். அஃதாவது, ஒருகாலத்தில் அழியும் ஶரீரமேயாம்.

ஶரீரம் மூவிதமாகும். அவையாவன,—காரண ஶரீரமாகிய மலமும் (ஸூக்ஷ்ம அனுத்மாவும்); ஸூக்ஷ்ம ஶரீரமாகிய மனம் புத்தி முதலிய தத்வங்களும் (ஆத்ம அனாத்ம மிஶ்ரமும், கலப்பும்); ஸ்தூல ஶரீரமாகிய ஜடமும் (ஸ்தூல அனுத்மாவும்) ஆம்.

(10) அவ்யக்தமான மூலப்ரக்ருதி ௩௰௨ விகாரங்களைப் பெற்று நிற்பதால் "விகாரத்தோடு கூடி" என்றார். எனவே, க்ஷேத்ரஜ்ஞன் (ஆத்மா) நிர்விகாரி என்று வெளித்திக்கின்றது.

**அ—ம௨.** அமானித்வம் ([1]), அதம்பித்வம் ([2]), அஹிம்ஸா ([3]), க்ஷாந்தி ([4]), ஆர்ஜவம் ([5]), ஆசார்ய உபாஸனை ([6]), ஶௌசம் ([7]), ஸ்தைர்யம் ([8]), மனோநிக்ரஹம் ([9]), இந்த்ரியார்த்தங்களில் வைராக்யம் ([10]), அஹங்காரமின்மை ([11]), ஜன்மத்தில் துக்கம் ([12]), வ்யாதி ஜரை மரணம் என்ற தோஷங்களைச் சிந்தித்தல் ([13]), ஸங்கமற்றிருத்தல் ([14]), புத்ரன் தாரம் க்ருஹம் முதலியவைகளில் பற்றில்லாமை ([15]), இஷ்டங்கள் அல்லது அநிஷ்டங்கள் வந்தால் எப்போதும் ஸமசித்தனுயிருத்தல் ([16]); அநந்ய யோகத்தால் ([17]) என்னிடம் வ்யபிசாரமற்ற பக்தி ([18]), தனித்த இடத்தை அண்டுதல், [அவிவேக] ஜனங்களின் ஸபையில் வெறுப்பு, அத்யாத்ம ஞானத்தில் நித்யவிசாரணை ([19]), தத்வஞானத்தின் அர்த்தத்தை அறிதல் ([20]), இஃதெல்லாம் ஞானம் ([21]) என்று கூறப்பட்டது. இதிலும் எது வேறோ, [அது] அஜ்ஞானம் ([22]) என்று கூறப்பட்டது.

(1) ம௨. ம௮, (2).

(2) தன் தர்மங்களை டம்பமாய்ப் பேசாத தன்மை.

(3) ப்ராணிகளை வதைக்காதிருத்தல், இன்னா செய்யாமை.

(4) பொறுமை, ஒருவன் தனக்கு ஹிம்ஸை செய்தால் விகாரமற்றிருத்தல்.

(5) ஆர்ஜவம்=நேர்மை; கபடமற்ற சிந்தனையும் வார்த்

தையும் செய்கையும்.

(6) குரு ஸேவையும் குரு ஶ்ரவணமும்.

(7) தேஹமும் மனமும் ஶுசியாய் (ஶுத்தமாய்) இருத்தல்.

(8) ஸ்திரபுத்தி, நல்விஷயங்களில் ப்ரதிஷ்டை பெற்ற புத்தி.

(9) மன அடக்கம். இந்த்ரியங்களோடு செல்லவிடாமலும் காம க்ரோத லோபங்களைப் பற்றவிடாலும் நிறுத்தப்பட்ட மனம்.

(10) ஐம்பொறி விஷயங்களில் விருப்பில்லாத தன்மை. தத்தம் விஷயங்களைச் சேரவிடாமல் ஐம்பொறிகள் (அவற்றிற்கு ஶத்ருக்கள்போல) புத்தியோடு நிற்றலே இந்த்ரியார்த்த வைராக்கியம்.

(11) நான் இதைச் செய்கின்றேன், என்னையன்றி இது முடியாது, இவன் என்னை இப்படித் தூஷிக்கவா, என்றின்னோரன்ன அஹங்கைகள் இல்லாதிருத்தல்.

(12) திருவருளை அறியாத பிறவிகளிடத்தில் துக்கம்.

அவித்யா என்ற துக்க ஸாகரத்தில் வீழ்ந்தவர்களைக் கரை ஏற்றும் பொருட்டே ஸூக்ஷ்ம ஸ்தூல ஶரீரங்களைப் பகவான் இயற்றியிருப்பதால், அந்த ஶரீரங்கள் எனக்கு அமைந்து நிற்கின்றனவே என்று துக்கித்தல் மூடம். அந்தஃ கரணங்கள் ஐம்பொறிகள் செல்லும் வழிகளில் சென்றால் துக்கத்தை அடையும். அவ்வழிகளை அடைத்து மனதைப் புத்தியில் ப்ரதிஷ்டை செய்து, புத்தியை ஆத்மாவில் நிறுத்தினால், அது இன்ப ஸ்வரூபமாயும் அன்பு ஸ்வரூபமாயும் அறிவு ஸ்வரூபமாயும் வெளிப்படும் என்பதற்கு ஸம்ஶயமில்லை. இந்த ஆத்ம தர்ஶனத்திற்குப் பேருதவி ஞானகுருவின் கடாக்ஷமே. அந்தத் திருவருளைப் பெற்று, அதுவே பரம்பொருள் என்று நிஶ்சயித்தவனுக்குப் பிறவி, துன்பமாகத் தோன்றாது. மானுட தேஹமென்ற பிறவியைப் பெற்று அதன் பயனாகிய திருவருளைத் தேடிப் பெறாதவனுக்கு இப்பிறவியிலும், வரும்பிறவியிலும் துக்கபுத்தி யிருப்பது ந்யாயமே. சிற்றின்ப ஸுகங்களெல்லாம், துன்பங்களென்றும், சிற்றி

ன்பங்களுக்கு மேலான அழிவற்ற ஸுகங்களாகிய பேரின்பம் உண்டென்றும், அதனைப் பெறுவதற்கு ஸூக்ஷ்ம ஶரீரமும் ஸ்தூல ஶரீரமும் அவஶ்யமென்ற ஞானோபதேஶத்தைக் கேட்ட முமுக்ஷு தற்கொலைசெய்யாது தனக்கருளப்பட்ட தேஹத்தை யாத்ரைக்குரிய தோணியென்றெண்ணி அதை ஸம்ரக்ஷித்து; அதன் ஸஹாயத்தால் முக்தியென்ற பெருந்துறையை அடையப்பார்ப்பான். “இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ” என்று ஏங்குவான். அறிவாளிகளுக்கு இனிவரும் தேஹத்தில் துக்கபுத்தி உண்டு. மேலும் இப்பிறவியில் ஐம்புல அநுபவங்களிலும் துக்கபுத்தி உண்டு.

(13) அறிவீனர்கள் விஷயாநுபவங்களில் இழுபடும் பொழுது வ்யாதி ஜீரணம் மரணம் என்ற துன்பங்களைச் சிந்திக்க மாட்டார்கள். புத்திமான்கள் இத்துன்பங்கள் யாவும் பாபகர்மத்தின் பலன்களென்று விசாரித்தறிந்து பாபகர்மங்கள் ஒன்றையும் செய்யாது புண்ய கர்மங்களை ஈஶ்வரார்ப்பணமாகவே செய்வார்கள். இந்த அநுஷ்டானத்தால் அவர்களுக்குக் க்ரமமாகப் பேரறிவும் பேரின்பமும் ஸித்திக்கும்.

(14) பற்றியும் பற்றாதிருத்தல். அந்தஃகரணங்களும் கர்மேந்த்ரியங்களும் தத்தம் கர்மங்களைச் செய்யும்போது, அக்கர்மங்களில் அழுந்தாமல் ஆசைகளை அடக்கி ஆத்மாவுக்கு ஆபத் வராமல் காத்தல்.

(15) ஈஷணா த்ரயங்களில் (தாரம், புத்ரன், வித்தம் என்ற மூன்று இச்சைகளில்) மனஸ் பந்தமில்லாதிருத்தல். வித்தம் =பொருள்.

(16) எனது பூர்விக கர்மத்துக் கேற்றபடி பரமேஶ்வரன் பலன்களைக் கொடுப்பாரென்று அறிந்து, எந்தெந்த ஸுகதுக்க பலன்கள் வந்தாலும் அவற்றை ஸமத்வ புத்தியோடு அநுபவித்தல்.

(17) பரமேஶ்வரனே பரம்பொருளென்றும், அவரே எனக்கு உற்றதுணை என்றும், அவரைப் பிரிந்திருந்தால் எனக்குத் துன்பமுண்டாகும் என்றும். நிஶ்சயித்த ஐக்யபக்தியால் பிறந்த.

(18) வேறொரு பொருளிலும் செல்லாத ஶ்ரத்தை.

(19) ஆத்மாவைப்பற்றிய ஞானத்தைத் தினமும் ஶ்ரவணம் செய்தல்.

(20) ஞான ஶாஸ்த்ரங்கள் கூறிய பொருளை மனனஞ்செய்து தெளிதல்.

(21) மெய்யறிவு.

(22) பொய்யறிவு, மித்யாஞானம்.

ஒருபொழுதும் ஓரேநிலையில் நில்லாது, மாறி மாறிக் கொண்டே நிற்கும் வஸ்துவாகிய ப்ரக்ருதியும், அதன் காரியங்களும், அதனைப்பற்றிய கல்வியும், பொய்ப்பொருளென்றறிக.

**௰௩. எது ஜ்ஞேயமோ ([1]) அதைக் கூறப்போகின்றேன். எதை ([2]) அறிந்து அம்ருதத்தைப் ([3]) பெறுகிறானோ [அந்த] அநாதியும் ([4]) பரமுமாகிய ([5]) [நிர்க்குண] ப்ரஹ்மம், ஸத் என்றுங் கூறப்படுகிறதில்லை அஸத் என்றுங் கூறப்படுகிறதில்லை ([6]).**

(1) ஜ்ஞேயம்=அறியத்தக்க பொருள்; ஞானாதிகாரிகள் அவஶ்யமாக அறியவேண்டிய பொருள். இதை ௯. ௰ால் "ஜ்ஞேயம்" என்றார்.

(2) எந்த பரமாத்மை.

(3) சாவாமையை. அதாவது, இறப்புப்பிறப்பற்ற ப்ரஹ்ம நிர்வாணத்தை.

(4) ஆதியற்றதும். அதாவது, காரணமற்றதும்.

(5) மேலானதும்; பொய்ப்பொருளாகிய ப்ரக்ருதிக்கு மேலானதும்.

(6) நிர்க்குண ப்ரஹ்மம் எல்லையற்றுக், குணங் குறி ரூபம் முதலிய வரம்புகளுக்கு அப்பாற்பட்டிருத்தலால், அதற்கு உள்ளது ("ஸத்") இல்லது ("அஸத்") என்ற பதங்களும் பொருந்தா.

**௰௪. [நிர்க்குண ப்ரஹ்மமென்ற] அது ([1]) [ஸகுணமாகி] எல்லாருடைய கைகளையும் கால்களையும் உடையது. எல்லாருடைய கண்களையும் ஶிரஸ்களையும் முகங்களையும் உடையது. எல்லாருடைய செவிகளையும் உடையது. உலகத்தில் யாவற்றையும் பரவிநிற்கின்றது ([2]).**

(1) ௫. ௧௭.

(2) மெய்ப்பொருளாகிய பரமாத்மா ப்ரக்ருதியுட் புகுந்து, அதை விரித்து, நாநாவித ரூபங்களை ஸ்ருஷ்டித்து, அந்த ரூபங்கள்தோறும் ஊடுருவி இருப்பதால், அந்த ரூபங்கள் எல்லாம் அவருடையவை எனலாம். அவரே எனலாகாது. என்னுடைய தேகம் நான் ஆகுமா? அநாத்மாவை ஆத்மா என்று அறிதல் மூடம்.

"ஆவ்ருத்ய"=ஆவரணத்தைச் செய்து, அஃதாவது யாவற்றையும் நீக்கமறப்பரவி.

௧௫. [அது] (1) ஸர்வ இந்த்ரியங்களற்றதாயும் (2). [ஆனால்] இந்த்ரியங்களின் குணங்களை ப்ரகாஸிப்பிக்கின்றதாயும் (3), ஸங்கமற்றதாயும் (4), [ஆனால்] யாவற்றையுந் சுமக்கின்றதாயும் (5), குணபோக்தாவாயும் (6) [அறியவேண்டியது] (7).

(1) ௧௩. ௧௪ இல் நின்றநுவருவித்தது.

(2) அதற்கு ஐம்பொறிகளில்லை, அந்தஃகரணங்களில்லை, ப்ராணவாயுக்களில்லை, கர்மேந்த்ரியங்களில்லையாயினும்.

(3) அந்த இந்த்ரியங்களைத் தன் ஸக்தியாலேயே நடத்திவைக்கின்றதாயும்.

(4) பூதாகாஸத்தை த்ருஸ்யப்பொருள்கள் பற்றியிருந்தாலும் அது அவற்றைப் பற்றுததுபோலச், சிதாகாஸமாகிய பரமேஸ்வரனை பூதாகாஸம் முதலியவைகள் பற்றியிருந்தாலும் அது அவற்றைப் பற்றுததாயும்.

(5) பற்றிநின்று ஸகல பொருள்களுக்கும் ஆதாரமாகியும்.

(6) ப்ரக்ருதியின் தாமஸ ராஜஸ ஸாத்விக குணங்களையும் அவற்றின் காரியங்களையும் அறிந்து, சலனப்படாமல் (தன்னிலை குலையாமல்), பஞ்ச க்ருத்யங்களை நடத்துவதாயும்

(7) ௧௩. ௧௭ இல் வரும் (ஜ்ஞேயம், அறியவேண்டியது) என்பது ஈண்டுக் கூட்டப்பட்டது.

௧௬. அது பூதங்களின் உள்ளும் புறம்புமாயும் அசரமாயும் ஸூக்ஷ்மமாதலால், அறிதற்கு அரிதாயும், [அபக்விக்கு] தூரத்தில் நிற்

கின்றதாகவும், [பக்கத்தில்] ஸமீபத்தில் [நிற்கின்றதாகவும் அறியவேண்டியது] (1).

(1) ௰௩. ௰௭ இல் வரும் ஜ்ஞேயம் (அறியவேண்டியது) என்பது ஈண்டுக் கூட்டப்பட்டது.

௰௭. கண்டிதஞ் செய்யக்கூடாததாயும் (1) [ஆனால்] பூதங்களில் கண்டிக்கப்பட்டதுபோல நிற்கின்றதாயும் (2), பூதங்களைப் பிறப்பிக்கின்ற ஸ்வபாவம் பெற்றதாயும் (3) சுமக்கின்றதாயும் (4), விழுங்குகின்ற ஸ்வபாவம் பெற்றதாயும் (5) அறியவேண்டியது.

(1) வெவ்வேறு துண்டுகளாகப் பிரிக்கக்கூடாததாயும்.
அஃதாவது, ஏகமான முழுப்பொருளானதும்.

(2) ஆனால் ஶரீரங்கள் (நாமரூபங்கள்) வெவ்வேறாயிருப்பதால், அதுவும் வெவ்வேறாயிருப்பதுபோலத் தோன்றுகின்றதாயும்.

(3) ஜீவர்களுக்குத் தேஹங்களைக் கொடுத்தருளும் ஈஶனையும்.

(4) ஆதேயங்களுக்கு ஆதாரமாயிருக்கின்றதாயும்.

(5) தனக்குள் ஸகலத்தையும் ஒடுக்கிக்கொள்ளும் ஶக்தி உடையதாயும்.

௰௮. அது ஜ்யோதிகளுக்கு ஜ்யோதியாயும் (1), தமஸுக்கு மேலானதாயும் (2) கூறப்படுகின்றது. ஞான சொரூபமாயும் (3), ஞானத்தால் அறியக்கூடியதாயும் (4), ஸர்வத்தின் ஹ்ருதயத்தில் இருக்கின்றதாயும் (5) அறியவேண்டியது (6).

(1) சந்த்ர ஸூர்ய அக்நி முதலிய ப்ரகாஶங்களுக்கு ப்ரகாஶந்தரும் ஜ்யோதியாயும்.

(2) ப்ரக்ருதியின் குணங்களாகிய ஸத்வமும் ரஜஸும் தினப்ரளயத்திலும் மஹா ப்ரளயத்திலும் ஒடுங்கும் ஸ்தானமாகிய, தமஸுக்கு அப்பாற்பட்டதாயும்.

(3) பேரறிவு ரூபமாயும்.

(4) மலத்தினின்று ஶுத்தப்பட்ட அறிவென்ற ஆத்மாவால்மாத்ரம் அறியக்கூடியதாயும்.

(5) ஜட சித் பொருள்கள் யாவற்றிலும் வீற்றிருப்பதாயும்.
(6) "ஜ்ஞேயம்".

**௰௮. க்ஷேத்ரமும், அவ்விதமே ஞானமும் ஜ்ஞேயமும், சுருக்கமாக இவ்வாறு கூறப்பட்டது. எனது பக்தன் இதை அறிந்து, மத்பாவத்துக்கு (1) உரியவனாகிறான்.**

(1) "ப்ரஹ்மாஸ்மி" என்ற நிலைக்கு.

*க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ ஞானம் "மத்பாவனை" க்குத் தக்க உபாயமாகும்.*

*"மத்பாவம்" என்பது "அஹம்" (நான்) என்ற ஆத்மாவே பரம்பொருளென்றும், அதன் மீதிலேயே பக்தி செலுத்த வேண்டுமென்றும், அதனிடமே எனக்குரிய கர்மங்களை ஒப்புவிக்கவேண்டுமென்றும், புத்தியோடிருந்து பரமேஶ்வரனோடு ஐக்யப்படுதல்.*

*எனவே, மத்பாவ யோகத்தில் மத்பாமயோகமும் மத்பக்த யோகமும் மத்கர்ம யோகமும் அடக்கப்பட்டன.*

**௨௰. ப்ரக்ருதி, புருஷன், என்ற இரண்டையும் அநாதிகளாக அறி (1). குணங்களையும் விகாரங்களையும் ப்ரக்ருதியினின்று பிறந்தவைகளாக அறி (2).**

(1) க்ஷேத்ரனும் க்ஷேத்ரஜ்ஞனும் யாதொரு காலத்தில் உண்டானவைகளென்று எண்ணாதே.

(2) அவை அகாரண வஸ்துக்கள்.

*த்ரிகுணங்களுக்கும் த்ரிகுணகார்யங்களுக்கும் மூலம் ப்ரக்ருதி என்று அறி.*

**௨௰௧. கார்ய காரண [ஸம்பந்தம் பெற்ற] கர்த்ருத்வ புத்தியில் (1) ப்ரக்ருதி காரணம் என்று கூறப்படுகின்றது (2). ஸுகதுக்கங்களைப் பற்றிய போக்த்ருத்வ புத்தியில் (3) புருஷன் காரணம் (2) என்று கூறப்படுகிறான்.**

(1) நான் கர்த்தா என்ற புத்தி தோன்றின இடங்களில் (ஸமயங்களில்).

(2) நான் இதைச் செய்தேன், உன்னால் எனக்கு இது ஸம்பவித்தது, அவனால் இந்த நன்மையைப் பெற்றேன் என்ற வசனங்களில் அடங்கிய காரண கார்யங்களைப்பற்றி நிற்கும் தேஹ அபிமான புத்தியாகிய கர்த்ருத்வம் எதனால் வந்ததென்று விசாரிக்கின், ஆத்மாவாகிய நான் ப்ரக்ருதிக்கு அடிமைப்பட்டுத் தேஹமே நானென்று மயங்கினதால் வந்ததென்று அறியவேண்டியது. எனவே, கர்த்ருத்வத்திற்கு ஹேது ப்ரக்ருதி; "நான் கர்த்தா" என்ற புத்திக்குப் ப்ரதான காரணம் சேஷ்டையும் அறியாமையும் நிறைந்த ப்ரக்ருதி.

(3) நான் அனுபவிக்கின்றேன் என்ற புத்தி தோன்றின இடங்களில் (ஸமயங்களில்).

(4) நான் நன்றாய்ச் சாப்பிட்டேன், நான் ஸுகமாய்ப் படுத்திருந்தேன், எனக்குத் தலைவலி அதிகம், எனக்குத் துக்கமாயிருக்கின்றது, என்ற வசனங்களில் அடங்கிய ஸுகதுக்க அநுபவமாகிய போக்த்ருத்வம் எதனால் வந்ததென்று விசாரிக்கின், ப்ரக்ருதிக்கு வேறான ஆத்ம ஸாக்ஷாத்காரத்தால் வந்ததென்று அறியவேண்டியது. எனவே, போக்த்ருத்வத்திற்கு ஹேது புருஷன்; "நான் அநுபவிக்கின்றேன்" என்ற புத்திக்குப் ப்ரதான காரணம் அறிவாகிய ஆத்மா.

மற்றும்வரனுஜிய பரமாத்மா அறிவித்தாலன்றி ஜீவாத்மா அறியாதபடியால் (௰. உ௰௩), போக்த்ருத்வம் என்று கூறப்பட்ட அநுபவங்களுக்கு, (அறிதலுக்கு, ஸாக்ஷித்த்வத்துக்கு) பரமாத்மாவே காரணன். அதாவது, நிமித்தகாரணன். அத். கூ, ௰௩. அ.

உ௰உ. ப்ர்க்ருதியில் பிறந்த குணங்களை (1) புருஷன் (2) ப்ரக்ருதியில் நின்று (3) அநுபவிக்கின்றபடியால் (4), இவனுக்கு (5) ஸத்யோனி ஜன்மத்திலும் (6) அஸத்யோனி ஜன்மத்திலும் (7) குணஸங்கம் (8) காரணம்.

(1) ப்ரக்ருதி கார்யங்களான ஸுகதுக்கங்களை.
(2) ஆத்மா.

(3) மனஸோடு ஸம்பந்தப்பட்டு.

(4) அந்த ஸுகதுக்கங்களைத் தன் விருப்பு வெறுப்புக்கேற்றபடி நன்றென்றும் தீதென்றும் அறிதலால்.

(5) இந்த போக்த்ருத்வம் பெற்றவனுக்கு. அதாவது, இது எனக்கு ஸுகம் இது எனக்கு துக்கம் என்ற விபரீத அறிவோடு திரிகின்றவனுக்கு.

(6) மேலான தேவ மானுட தேகங்களைப் பெறுதலுக்கும். "ஸத்யோனி ஜன்மம்"=நல்ல கர்ப்பப்பையில் தரித்துப் பிறத்தல்.

(7) கீழான மிருகம் தாவர தேகங்களைப் பெறுதலுக்கும். "அஸத்யோனி ஜன்மம்"=கெட்ட கர்ப்பையில் அகப்பட்டுப் பிறத்தல்.

(8) ப்ரக்ருதி குணங்களோடு ஸம்பந்தப்பட்டு, அவைவேறு நான் வேறு என்று தெரியாமல் இருப்பதே.

உ௱௩. இந்த தேகத்தில் பரம புருஷன் உபத்ரஷ்டா (1) என்றும், அனுமந்தா (2) என்றும், பர்த்தா (3) என்றும், போக்தா (4) என்றும், மஹேஶ்வரன் என்றும், பரமாத்மா என்றும், கூறப்பட்டான்.

(1) "உப" (ஸஹாயம் செய்யும்) "த்ரஷ்டா" (ஸாக்ஷி) என்ற ஸமாஸ பதம் ஜீவர்களுக்கு அறிவிக்கும் அறிவு என்று பொருள்படும்.

(2) "அநு" (அநுகூலமாய்) "மந்தா" (விசாரிக்கின்றவன்) என்ற ஸமாஸபதம் புத்திக்குப் புத்தியாய் நின்று விசாரணைகளை நடத்துகின்றவன் என்று பொருள்படும்.

(3) "பர்த்தா"=பரணத்தை (சுமத்தலை)ச் செய்கின்றவன், யாவற்றையுஞ் சுமக்கின்றவன்.

(4) போக்தா"=புஜிக்கின்றவன், அநுபவிக்கின்றவன், அறிகின்றவன்.

உ௱௪. புருஷனையும் குணங்களோடு கூடப் ப்ரக்ருதியையும் எவன் இவ்வாறு அறிகின்றனோ (1), அவன் எவ்விதம் மிருந்தாலும் (2) மறுபடி பிறக்கின்றனில்லை (3).

(1) இது பரமாத்ம தர்ஶனம் பெற்ற ஞானியைக் குறிக்கின்றது. பரமாத்மாவை உள்ளபடி அறிந்தவன் அதனை ஸச்சிதானந்தப் பொருள் என்றும் அதற்கு அந்யமான ப்ரக்ருதியின் லக்ஷணங்களை அந்ருதஜடதுக்கம் என்றும் அறிவான்.

(2) ஜீவோபாதியினின்று விலகி ஸச்சிதானந்த சொரூபமானவனில் ஜீவகாருண்யம் நிறைவு பெற்றிருப்பதால், அவன் ஜீவர்களுக்கு ஒருபோதும் ஒருஹிம்ஸையுஞ் செய்யான். ஆதலால், "எவ்விதம் இருந்தாலும்" என்ற பதங்கள் "ஹிம்ஸைகளை அல்லது பாபகர்மங்களைச் செய்தாலும்" என்று பொருள் படா. அந்தப் பதங்கள், "கர்மாதிகாரிக்கு அன்பையும் அறிவையும் பெருக்கும்படி அருளப்பட்ட யஜ்ஞம் தானம் தபஸ்களை அநுஸரித்தாலும் அநுஸரிக்காதுபோனாலும்" என்றே பொருள் படும்.

(3) அந்த ஜீவன்முக்தனுக்குப் புநர்ஜன்மமில்லை. ப்ராரப்த்வ கர்ம முடிவில் தேஹம் நழுவின உடனே, விதேஹமுக்தி என்னும் ஸாயுஜ்ய பதவியை அடைவான்.

௨௰௫. சிலர் ஆத்மாவை த்யானத்தால் அந்தஃகரணத்தில் தர்ஶிக்கின்றனர் (1), [சிலர்] ஸாங்க்ய யோகத்தால் ஆத்மாவால் [தர்ஶிக்கின்றனர்] (2). சிலர் கர்மயோகத்தாலும் [தர்ஶிக்கின்றனர்] (3).

(1) இதில் ஸகுணப்ரஹ்ம தர்ஶனம் மனஸாலேயே த்யான அப்யாஸத்தில் ஸித்திக்கும் என்று உபதேஸிக்கப்பட்டது. மஹேஶ்வரனை த்யானஞ் செய்யும்பொழுது, அவரைப்பற்றிய லக்ஷணங்களை, வேறொரு ப்ரவ்ருத்தியில்லாமல், ஒன்றுக்கு மேல் ஒன்றை இடைவிடாது வருவித்துப் பாவனை செய்யவேண்டும். அப்போது மனஸும் புத்தியும் அந்த த்யேயாகாரமாகப் பெருகும். இவ்விதம் அத்விதீய வஸ்துவில் புத்தியை மேன்மேலும் பெருகச் செய்தல் ஈஶ்வர த்யானம். ௰௨. ௰௨. இந்த த்யானத்தை ஸகுணாத்ம தர்ஶனம் என்றார்.

(2) இதில் மெய்ஞ்ஞான நிஷ்டர்களாகிய ஸாங்க்ய புத்திமான்கள், நினைவையும் நித்ரையையும் ஒழித்த ஸமயத்தில் பூரித்துத் தோன்றும் தமது ஆத்மாவால் நிர்க்குண ப்ரஹ்மத்தை

*தர்ஸிப்பார்கள் என்று விளக்கினர்.*

*(3) வேறுசிலர் நைஷ்கர்ம்ய அநுஷ்டானத்தால் தங்கள் கர்மங்களை ஈஸ்வரனுக்கு ஒப்புவித்து அவரோடு ஸம்பந்தப் பட்டு நிற்கின்றனர். இந்த ஈஸ்வரார்ப்பண கர்மாநுஷ்டானத் தையும் ஆத்ம தர்ஸனம் என்றார்.*

**உ௰௬.** இவ்விதம் [த்யானம், ஸாங்க்யயோகம், கர்மயோகம் என்றவைகளைப்] பழகி வராத வேறுசிலர் [ஞான ஸாஸ்த்ர வாக்யங் களை] ஸ்ரவணஞ்செய்து [அந்த ஸ்ரவணப்பொருளை] உபாஸிக்கின்ற னர். இந்த ஸ்ரவணத்தை மேலான வழியாகக் கொண்ட அவர்களும் ம்ருத்யுவை நிஸ்சயமாய்க் கடக்கின்றனர் (1).

*(1) இதில், ஞானஸாஸ்த்ர விசாரணை ப்ரஹ்ம உபாஸனை என்றும், இவ்வித யஜ்ஞத்தை அநுஸரிக்கின்ற புண்யவான் கள் ஸ்வர்க்கலோகத்திற்கு அப்பாற்பட்ட லோகங்களிற் சென் று, (அத். அ, உ௰௪.) இறவாமை என்ற நிலைமை நிஸ்சயமாகப் பெறுகின்றனர் என்றும், விளக்கப்பட்டது.*

**உ௰௭.** பரதரிஷப. ஸ்தாவர ஜங்கமமான யாதொரு ப்ராணி பிறக்கின்றதோ, அதை க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ ஸம்யோகத்தால் [பிறந் தது] என்றறி (1).

*(1) இதில், பரமாத்மாவும் ப்ரக்ருதியுங் கூடினதால் ஜீவா த்மாக்களுக்குச் சர ஸரீரங்களும் அசர ஸரீரங்களும் கிடைத் தன என்று கூறப்பட்டது.*

**உ௰௮.** எவன் பரமேஸ்வரனை ஸர்வபூதங்களில் ஸமமாக இருக் கிறவனாகவும், அவைகள் அழியும்போழுது அழியாதவனாகவும், அறிகின் றனோ, அவன் [பரமேஸ்வரனை] தர்ஸிக்கின்றன் (1).

*(1) மானுட மருக வ்ருக்ஷாதி தேகங்கள் ஒவ்வொன்றிலும் பரமேஸ்வரன் ஸமனாக இருக்கிறார் என்றும், அந்த தேஹங்க ள் இறந்த பின்னும் அவர் இறவாமல் இருக்கிறார் என்றும் நிஸ் சயித்த புத்திமானுக்கு பரமாத்ம தர்ஸனம் ஸித்திக்கும், என் பது கருத்து.*

**உ௰௯.** ஈஶ்வரனை யாவற்றிலும் ஸமமாயிருக்கிறவனாக அறிபவனாதலால், அவன் ஆத்மாவால் (1) ஆத்மாவை (2) வாதிக்கமாட்டான். அதன்மேல் பரமகதி [யாகிய மோக்ஷத்தைப்] பெறுகின்றான். (3).

(1) கர்மேந்த்ரியங்களால்.

(2) ஜீவாத்மாக்களின் மனஸையும் தேஹத்தையும்.

(3) ஸர்வ வ்யாபகத்தன்மை பரமேஶ்வரனுக்கு உள்ளதென்று அறிந்த காலத்தில் ஜீவர்களில் அன்பு வளரும், அஹிம்ஸை என்ற வ்ரதம் திடமாகி, நிவ்ருத்திமார்க்கத்தின் பலனாகிய மோக்ஷம் ஸித்திக்கும்.

**௩௰.** எவன் ஸர்வ கர்மங்களும் ப்ரக்ருதியினாலேயே செய்யப்படுகிறவைகளாக அறிகிறானோ, அவ்விதமே ஆத்மாவையும் அகர்த்தாவாக [எவன் அறிகிறானோ], அவன் [பரமேஶ்வரனை] தர்ஶிக்கின்றான் (1).

(1) கர்மேந்த்ரியங்களே கர்மங்களைச் செய்கின்றன என்றும், ஆத்மா அவற்றிற்கு ஸாக்ஷிமாத்ரமே (கர்த்தா அன்று) என்றும், நிஶ்சயிக்கின்ற புத்திமானுக்கும் பரமாத்ம தர்ஶனம் படிப்படியாக் ஸித்திக்கும், என்பது கருத்து.

**௩௰௧.** பூதங்களின் ப்ரதக்பாவத்தை (1) ஏகவஸ்துவில் (2) நிற்கின்றதாக எப்பொழுது அறிகிறானோ, அதினின்றே, [பூத] விஸ்தாரத்தையும் அறிகிறானோ (3), அப்பொழுது (4) ப்ரஹ்ம ஸம்பத்தைப் பெறுகின்றான்.

(1) ஶரீரங்கள் வெவ்வேறாயிருத்தலை.

(2) பிரிக்கப்படாத முழுப்பொருளாகிய பரமாத்மாவைப் பற்றியே.

(3) அந்தப் பரமாத்மாவைப் பற்றிநின்றே ஶரீரங்களெல்லாம் தோன்றி விரிந்தன என்று நிஶ்சயிக்கின்றானோ.

(4) அந்தப் பக்வ காலத்தில்.

கண் மேகக் கூட்டங்களைப் பார்க்கும்பொழுது, அறிவாளியின் புத்தி மேகங்களுக்கு பிறப்பிறப்பிடமாகிய ஆகாஶத்திலிருக்கும். அதுபோல, விஷயங்களை இந்த்ரியங்கள் வெவ்வேறாகப்

*பார்க்கும்பொழுது அறிவாளியின் புத்தி அவையெல்லாம் பரமாத்மாவில் ஜனித்து ஒடுங்கும் என்று நிஶ்சயிக்கும்.*

**௩௰௨.** அநாதித்தன்மையாலும் நிர்குணத்தன்மையாலும் இந்த பரமாத்மா அவ்யயம் (1). ஶரீரத்தில் நின்றாலும், [கர்மத்தைச்] செய்கிறதுமில்லை, [கர்மத்தால்] பந்திக்கப்படுகிறதுமில்லை. கௌந்தேய.

(1) *பரமாத்மா மாறுதலற்ற வஸ்து, ஏனெனில் அது த்ரிகாலத்துக்கும் த்ரிகுணங்களுக்கும் அப்பாற்பட்டதால்.*

**௩௰௩.** எவ்விதம் ஸர்வகதமான (1) ஆகாஶம், ஸௌக்ஷ்மமாயிருப்பதால், [ஒன்றாலும்] தொடப்படுகிறதில்லையோ, அவ்விதம் ஸகல தேஹங்களிலும் நிற்கின்ற ஆத்மா [ஒன்றாலும்] தொடப்படுகிறதில்லை (2).

(1) *எங்கும் சென்றிருக்கின்ற.*

(2) *ஆகாஶம் மற்றைய பூதங்களாகிய வாயு அக்நி ஜலம் ப்ருதுவிகளில் வ்யாபித்து நின்றாலும் அதனை இவை ஸ்பர்ஶிக்க மாட்டா. அதுபோல, பரமாத்மா ஸகல தேகங்களிலும் வ்யாபித்து நின்றாலும், அதனை இவை பந்திக்கா.*

**௩௰௪.** பாரத. ஒரே ஸூர்யன் லோகமுழுவதையும் எவ்விதம் ப்ரகாஶிக்கும்படி செய்கின்றனோ, அவ்விதம் [ஒரே] க்ஷேத்ரீ (1) எல்லா க்ஷேத்ரங்களையும் ப்ரகாஶிப்பிக்கின்றன் (2).

(1) *க்ஷேத்ரத்தைத் தரித்தவன்; க்ஷேத்ரஜ்ஞன்; தேஹி.*

(2) *தோற்றுவிக்கின்றான்.*

**௩௰௫.** இவ்விதம் ஞானக்கண்ணினால் (1) க்ஷேத்ரன் க்ஷேத்ரஜ்ஞன் என்றவைகளின் பேதத்தையும், பூத ப்ரக்ருதியின் மோக்ஷத்தையும் (2) எவர்கள் அறிகின்றார்களோ. அவர்கள் பரத்தைப் (3) பெறுகின்றனர்.

(1) *அகண்ட அறிவால்.*

(2) *ஆத்மாவினின்று ஶரீரம் நழுவும் தன்மையும்.*

*"மோக்ஷம்" என்ற பதம் வழக்கத்தில் ஆத்மாவைப் பற்றி*

யே நிற்கும். ஈண்டு, அனாத்மாவைப் பற்றி நிற்கின்றது. ஆத்மா ப்ரக்ருதியினின்று விடைபெறும் என்று கூறாமல், தேஹம் ஆத்மாவினின்று விடைபெறும் என்றார்.

(3) ப்ரக்ருதிக்கு மேற்பட்ட பரமாத்மாவைப்

**உபநிஷத்கள் என்றும், ப்ரஹ்ம வித்தை என்றும், யோகஶாஸ்த்ரம் என்றும், பகவத்கீதைகள் என்றும், கூறப்பட்ட ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுந ஸம்வாதத்தில் ப்ரஸித்திபெற்ற க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ விபாகயோகம் என்ற பதின்மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.**



## பதினான்காம் அத்யாயம்.

# குணத்ரய விபாக யோகம்.

---

[அஃதாவது, ப்ரக்ருதியில் நின்று தோன்றின மிகக் கலப்புள்ள குணங்களை மூன்று பிரிவாகப் பகவான் வகுத்து, அவற்றையும் அவற்றின் கார்யங்களையும் ஜீவாத்மாக்களின் மலநீக்கத்துக்காக உபயோகித்தார் என்ற உபதேசத்தை அர்ஜுநன் கேட்டுச் சிந்தித்தான் என்று விளக்கும் பதினான்காம் பாடம்.]

"குணம்" என்ற பதம், "குண்" (ஆவ்ருத்தி, திருப்புதல், முறுக்குதல், பின்னுதல்) என்ற தாதுவில் ஜனித்து, கயிறுபோல ஆவ்ருத்தி பெற்று பந்தனத்தைச் செய்யும் வஸ்து என்று பொருள்படும்.

"குணத்ரயம்"=மூன்றுகுணம். ப்ரக்ருதியில்நின்று பிறந்தவை. யச. அத். ரு; யஅ. சயி.

"குண த்ரய விபாகம்"=முக்குண வகுப்பு, பிரிவு.

---

பகவான் கூறினர்:—

க. இதில்நின்று (1) எதை (2) அறிந்து எல்லா முனிகளும் (3) மேலான ஸித்தியைப் (4) பெற்றார்களோ, ஞானங்களுக்குள் (5) உத்தமமும் பரமுமாகிய அந்த ஞானத்தை (6) இன்னும் கூறப்போகின்றேன்.

(1) யங. கயரு இல் உபதேசித்தவாறு, இந்த க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ ஞானத்தில் நின்று; இந்த விஞ்ஞான ஸகித ஞானத்தால்.

(2) எந்தப் பரமாத்மாவை.

(3) த்ரிகரண அடக்க முள்ளவர்களும்.

(4) மோக்ஷப் ப்ரஸாதத்தை.

(5) கல்விகளுக்குள், வித்தைகளுக்குள்.

(6) அந்த ராஜ வித்தையை; ப்ரக்ருதி புருஷ ஞானத்தை.

ஞானம் பரோக்ஷம் என்றும், அபரோக்ஷம் என்றும் இரு வகைப்படும்.

"பரோக்ஷம்"=பரருடைய அக்ஷத்தால் (அறிவால்) அறியப் பட்டது; ஶ்ரவண ஞானம் (hearsay knowledge).

"அபரோக்ஷம்"=ஶ்ரவண ஞானத்துக்கு மேற்பட்ட ஸ்வாநுபவ ஞானம்.

பரோக்ஷ ஞானத்தை பாஹ்யம் என்றும், ஆப்யந்தரம் என்றும் கௌடபாதர் ஸாங்க்ய காரிகா பாஷ்யத்தில் (௨௰௩ வது காரிகைக்குரிய உரையில்) வினக்கினர்.

பாஹ்ய ஞானமாவது ஶிக்ஷா, கல்பம், வியாகரணம், நிருத்தம், சந்தஸ், ஜ்யோதிஷம், என்ற ஆங்கங்களோடு கூடின நான்கு வேதங்களும், புராணங்களும், நியாயமும், பூர்வ மீமாம்ஸாவும், தர்ம ஶாஸ்த்ரங்களும்.

ஆப்யந்தர ஞானமாவது ப்ரக்ருதி புருஷஞானம்.

௨. இந்த ஞானத்தை ஆஶ்ரயமாகக்கொண்டு (1) எனது ஸாதர்ம்யத்தைப் பெற்றவர்கள் (2) ஸ்ருஷ்டி காலத்திலும் பிறக்கின்றார்களில்லை, ப்ரலயத்திலும் அழிவு பெறுகின்றார்களில்லை.

(1) இந்த ப்ரக்ருதி புருஷ வித்தையை ஜீவாத்மாவும் புத்தியும் இருப்பிடமாக ("ஆஶ்ரயமாக")க் கொண்டு. அஃதாவது, அதன் லக்ஷணங்களைக் கடைப்பிடித்து.

இன்ப துன்பங்களில் ஸமத்வம் பெற்ற புத்தியோடு ஸம்பந்தப்பட்ட ஜீவாத்மா ஞான ஶாஸ்த்ரங்களில் மிகப் ப்ரீதி கொள்வதும், அவற்றை ஶ்ரவணம் மனனஞ் செய்வதும் இயல்பு. இப்படி ஞான ஶாஸ்த்ரங்களைக் கற்று ப்ரக்ருதி எது புருஷன் எது என்று அறியாத ஜீவாத்மாவை மலத்தில் நின்று உத்தாரணஞ் செய்யவே கூடாதென்பது பற்றி, "இந்த ஞானத்தை ஆஶ்ரயமாகக் கொண்டு" என்றார்.

(2) ஸச்சிதானந்த ஸ்வரூபத்தைப் பெற்ற ஜீவன்முக்தர்கள்.

"எனது ஸாதர்ம்யம்" = [எனது தர்மத்தோடு] ஸமான

மான தாமத்தைப் பெற்றுநிற்கின்ற தன்மை.

"ஸாதர்ம்யம்"=ஸதர்மனுடைய தன்மை.

"ஸதர்மன்"=இன்னொருவனுடைய தர்மத்தோடு ஸமான மான தர்மத்தைப் பொருந்தினவன்.

பரமாத்மாவும் ஜீவன்முக்தனும் ஸச்சிதானந்தத்திலும் அகர்த்ருத்வத்திலும் ஸதர்மர். முக்தியில் ஜீவன்முக்தனுக்கு ஸாதர்ம்யம் இல்லை; ஏனெனில், பரமாத்மா மாத்திரமே முக்தி மானதலால். ஜீவன்முக்தனுக்கும் பந்தப்பட்ட ஜீவனுக்கும் பரமேஶ்வரனே முக்திகளை அருள்கின்றார்.

இந்த மந்த்ரத்தில் பரமாத்மாவும் ஜீவன்முக்தனும் ஸ்ருஷ்டியிலும் லயத்திலும் ஸதர்மர் என்று கூறப்பட்ட திருவாய்மொழி வேதாகமங்களின் ஞானகாண்டமாகிய சைவஸித்தாந்தத்தில் கூறப்பட்ட உபதேசமே.

௩. பாரத. மஹத்வம்பெற்ற ப்ரஹ்மம் (1) [என்ற மூலப்ரக்ருதி] எனது யோனி (2). அதில் நான் [எனது] கர்ப்பத்தை வைக்கிறேன்(3). அதில்நின்று ஸகல பூதங்களின் ஸம்பவம் உண்டாகின்றது(4).

(1) மிகப் பெருமை பெற்றதும், மிக விரிவுபெற்றதால், "ப்ரஹ்ம" என்றழைக்கப் பட்டதும்.

ஸ்ருஷ்டிக்கு முக்ய காரணமாக ப்ரக்ருதி எடுக்கப்பட்டதாலும், அதனாலேயே ஞான ஸாதனங்களாகிய அந்தக்கரணங்களும் ஐம்பொறிகளும், கர்ம ஸாதனங்களாகிய ப்ராணாதி வாயுக்களும் கர்மேந்த்ரியங்களும், புவனங்களுமாகிய பதினாலு லோகங்களும், அநுபவங்களாகிய ஸுகதுக்கங்களும் இயற்றப்பட்டதாலும், கஷ்மலரூப ப்ரக்ருதி பகவானது அநுக்ரஹத்தால் மிகப்பெருமை பெற்று "மஹத்" என்று ஜீவன்முக்தரால் அழைக்கப்பட்டது.

(2) யோனி=கர்ப்பப்பை.

"யோனி" என்ற பதம் "யு" (சேர்தல்) என்ற தாதுவினின்று ஜனித்து, வித்துசேருமிடம் என்று பொருள்படும். எதில் வித் சேர்ந்ததோ, அது யோனி.

ப்ரக்ருதியின் தன்மை ப்ரஸவித்தல். அதாவது, ஒன்றுயி

ருந்தது· இரண்டு மூன்று பலவாய்ப் பெருகுதல். இப்படி ப்ரஸ விக்கப்பட்ட கார்யங்களெல்லாம் அதன் அம்ஸமாகவே இருக்கும். ப்ரக்ருதியின் அம்ஸங்களாவன: ஜடத்வம் (corporeality), தோன்றுதல், மாறுதல், விரிதல், ஒடுங்குதல், தனக்கு அன்யமான ஆத்மப் பொருளைப் பற்றித் தன்மலசொரூபமாக்குதல், தன்தொழில்களையாவது பிறர் நிலைகளையாவது அறியாதிருத்தல், என்பனவாம்.

(3) இந்த அம்ஸங்களைப்பெற்ற கர்ப்பப்பையில் எனது கருவாகிய ஸக்தியை தங்கச்செய்கின்றேன்.

அனுத்ம அம்ஸங்களோடு இருக்கும் ப்ரக்ருதியை பரமேஸ்வரன் தனது பஞ்ச க்ருத்யங்களுக்கு ஸாதனமாகக்கொண்டு, தன் ஸக்தியை அதனுள் ப்ரயோகித்து, அதை மூவகையாக வரும்படி செய்தார். குணமூலமாகிய ப்ரக்ருதியை விபாகஞ் செய்தால், ஒவ்வொரு பாகத்திலும் மூலத்திலுள்ள அம்ஸங்களெல்லாம் இருக்கும். ஆனால், தேவாத்ம ஸக்தியால் ஒருபாகத்தில் இருள், அல்லது அறியாமை, அல்லது ஜடத்வம், ப்ரபல்யமாகி அப்பாகம் தாமஸகுணம் என்ற பெயரைப் பெற்றது. இரண்டாம் பாகத்தில் வேகம், வலிமை, விரும்புதல், செய்தல் என்றவை ப்ரபலமாகி, அந்தப் பாகம் ராஜஸ குணம் என்ற பெயரைப் பெற்றது. மூன்றும் பாகத்தில் கல்வியிலும் ஸுகத்திலும் விருப்பம் ப்ரபலமாகி, அந்தப் பாகம் ஸத்வகுணம் என்ற பெயரைப் பெற்றது.

இந்த குணத்த்ரய விபாகத்தோடு கர்ம விபாகத்தையும் பரமேஸ்வரன் செய்து, இப்படி விரிக்கப்பட்ட குணங்களையும் கர்மங்களையும் கலந்து சதுர்வர்ணத்தை உண்டுபடுத்தி, புண்ய ஜீவாத்மாக்களை அவற்றில் அமைத்தார் என்று ஸ்ரீ க்ருஷ்ண பகவான் உபதேஸித்திருக்கின்றார்.

(4) இந்தக் கர்ப்பப்பையில் எனது ஸக்தி சேர்ந்த மாத்ரத்தில், குணங்கள் விபாகப்பட்டு, அவற்றின் கார்யங்களாகிய ஸகல ஸூக்ஷ்ம ஸ்தூல ஸரீரங்களின் பிறப்பு உண்டாகின்றது.

மஹாபாரதத்தின் அஸ்வமேத பர்வத்தில் (அத். ௩௰௬, ஸ்லோ. 3—7) ப்ரக்ருதியின் ஸ்ரோதஸுகளை (ப்ரவாகங்களை) "நாடி

கள்" என்றும், குண சொரூப ப்ரவ்ருத்திகள் என்றும் கூறி, இவைகளுக்கு இயல்பான அவஸ்தைகளை "பஞ்ச தாதுக்கள்" என்றும், இவற்றின் பெயர்கள் "அன்யோன்ய மிதுனத்வம்" (ஒன்றோடொன்று சேர்ந்து பிரியாது இரட்டித்திருத்தல்), "அன்யோன்ய அநுஜீவித்வம்" (ஒன்றோடொன்று கலந்து துணையாக ஜீவித்தல்), "அன்யோன்ய அபாஸ்ரயத்வம்" (ஒன்றோடொன்று அண்டியும் தன் ஸ்வபாவத்தில் நிற்றல்), "அன்யோன்ய அநுவர்த்தித்வம்" (பிரிவுபாடில்லாது ஒன்றின் பக்கத்தில் ஒன்று இருத்தல்), "அன்யோன்ய வ்யதிஷக்தத்வம்" (ஒன்றோடொன்று மிகக் கூடி இருத்தல்) என்றும்; அன்யோன்ய மிதுனத்வத்தில், தமஸுக்கு மிதுனம் ஸத்வம் என்றும், ஸத்வத்துக்கு மிதுனம் ரஜஸ் என்றும், ரஜஸுக்கு மிதுனம் ஸத்வம் என்றும், ஸத்வத்துக்கு மிதுனம் ரஜஸ் என்றும், விளக்கப்பட்டது.

௪. கௌந்தேய, எல்லா யோனிகளிலும் எந்த மூர்த்திகள் பிறக்கின்றனவோ, அவைகட்கு மஹத்தான ப்ரஹ்மம் யோனி. நான் பீஜத்தைக் கொடுக்கின்ற பிதா (1).

(1) எங்கெங்கு வ்யஷ்டி (தனித்தனியாகத் தோன்றும்) கர்ப்பப்பையிலிருந்து எங்கெங்கு சரீரங்கள் பிறக்கின்றனவோ, அந்த வ்யஷ்டி சரீரங்கள் யாவற்றிற்கும் மாதா மூலப்ரக்ருதி; ஸச்சிதானந்தமாகிய நான் பிதா.

௫. மஹாபாஹோ, ப்ரக்ருதியினின்று பிறந்த ஸத்வம் ரஜஸ் தமஸ் என்ற குணங்கள் மாறுதலற்ற தேஹியை தேஹத்தில் பந்திக்கின்றன (1).

(1) "நிபத்நந்தி"=பந்தனம்பெறச் செய்கின்றன.
"தேகத்தில் பந்திக்கின்றன"=தேகமே நான் என்று எண்ணச் செய்து ஆத்மாவை மயக்கும்.

௬. அனக (1), அவைகளில் ஸத்வம், நிர்மலமாதலால் (2), ப்ரகாஸிப்பிக்கின்றதாயும் (3) அனாமயமாயும் (4) [நின்றுகொண்டு] ஸுகஸங்கத்தாலும் (5) ஞானஸங்கத்தாலும் பந்தனஞ் (6) செய்கின்றது.

(1) பாபபுத்தியற்றவனே.

(2) முக்குணங்களில் ஸத்வம் குறைவான மலத்தோடிருப்பதால்.

(3) இருள்பற்றிய ஆத்மாவுக்கு நல்லறிவை ஊட்டுகின்ற தாயும்.

(4) துக்க ரஹிதமாயும்.

(5) ஸுக ஸங்கம்=ஸுகத்திலும் அஸுகத்திலும் ஸங்கம். இது ஸுகம், இது அஸுகம், என்ற புத்தி ஸத்வகுண ஸம்பந்தத்தால் வரும்.

(6) ஞான ஸங்கம்=கல்வியில் ஸங்கம். நான் இதைப்பற்றி அறியவேண்டும் என்ற புத்தி எழுச்சிக்குக் காரணம் ஸத்வகுணப் ப்ரவாகம்.

தேஹ மானஸ ஸுகங்களிலும் கல்வியிலும் பலவித விசாரணைகளிலும் விருப்பத்தை உண்டுபண்ணி, ஆத்மாவின் ஸாக்ஷித்வத்தை (அறிவை)யும் ஶாந்தியையும் ஸத்வகுணம் சுருக்கும்.

எனவே, ஸத்வ குணத்தின் லக்ஷணங்கள்: மலத்தில் அல்பத்வம், துக்கத்தில் அல்பத்வம், ஆத்மாவுக்கு மேலான போதனை செய்தல், கல்விமுதலிய விசாரணைகளில் விருப்பத்தை ஊட்டல், தேஹ மானஸ ஸுகங்களில் மோகஞ் செய்தல், என்பனவாம்.

௭. கௌந்தேய, ராகசொரூப (1) ரஜஸை த்ருஷ்ண (2) ஸங்கத்துக்குக் காரணம் (3) என்று அறி. அது தேஹியை கர்மஸங்கத்தால் பந்திக்கின்றது (4).

(1) ராக த்வேஷ ரூபம்பெற்ற.

(2) ஆசை, காமம் (௩. ௩௰௭), இச்சை (௫. உ௰அ).

(3) த்ருஷ்ண ஸங்கம்=ஆசைகளில் ஸங்கம்.

மண்ணாசை பொன்னாசை பெண்ணாசை என்ற மூவித ஆசைகளை மனம் பற்றுதலுக்கு ரஜஸ் காரணம்.

(4) இப்படி த்ருஷ்ணைக்களில் ரஜஸ்குணம் மனஸை ஏவி,

செயல்களில் ப்ரவேஶிக்கச் செய்து, மனஸின் சலனத்தால் ஆத்மாவின் ஸாக்ஷித்வத்தையும் ஶாந்தியையும் குறைக்கும்.

எனவே, ரஜஸ் குணத்தின் லக்ஷணங்கள்: இந்த்ரியங்களை விஷயங்களில் ஏவுதலும், அவற்றைப் பெறுதற்குத் தொழில் களோடு கூட்டுவித்தலும், இவற்றால் ஆத்மாவின் ஸாக்ஷித்வத் தையும் ஶாந்தியையும் குன்றச்செய்தலுமாம்.

**அ. பாரத, தமஸை அஜ்ஞான சொரூபமாகப் பிறந்ததாகவும் (1) ஸகல ப்ராணிகளுக்கு மோஹத்தைச் செய்கின்றதாகவும் (2) அறி. அது ப்ரமாதம் (3), சோம்பல், நித்ரை என்றவைகளினால் [தேஹி யைப்] பந்திக்கின்றது (4).**

(1) தமஸ் குணத்தின் சொரூபம் அறியாமையே.

(2) ஆதலால், ஆத்மாவுக்கு ஸம்ஶயத்தையும் விபரீதத்தை யும் உண்டுபண்ணி அதை மயக்கும்.

(3) ப்ரமாதம்=தவறுதல்; மனஸில் நிற்கவேண்டிய நினைவு கள் நழுவுதல்; அவதானமில்லாமை.

(4) மறதி சோம்பல் தூக்கங்களால் தமஸ்குணம் ஆத்மா வின் ஸாக்ஷித்வத்தையும் ஶாந்தியையுங் கெடுக்கும்..

எனவே, தமோகுணத்தின் லக்ஷணங்கள்: அறிவின்மை, மயங்கச் செய்தல், மறதி சோம்பல் தூக்கங்களால் ஆத்மாவின் ஸாக்ஷித்வத்தையும் ஶாந்தியையும் கெடுத்தல் என்பனவாம்.

**கூ. பாரத, ஸத்வம் [தேஹிக்கு] ஸுகத்தில் ஸங்கத்தைச் செய் கின்றது (1). ரஜஸ் கர்மத்தில் ஸங்கத்தைச் செய்கின்றது (2). தமஸ் ஜ்ஞானத்தை மறைத்து ப்ரமாதத்திலும் (3) ஸங்கத்தைச் செய்கின்ற து (4).**

(1) தேஹ ஸுகமும் ஐம்புல விஷயத்தைப்பற்றிய மானஸ ஸுகமும் நன்று, அவற்றை நான் தேடவேண்டும் அநுபவிக்க வேண்டும், என்ற புத்திகளுக்குக் காரணம் ஸத்வகுணம். இந்த அநித்ய ஸுகங்களில் புத்தி அழுந்தினால், ஆத்மா அவற்றில் ஸங்கமாகித் தனது நித்ய ஸுகமாகிய பேரின்பத்தை மறக் கும்.

(2) தொழில்களில் கொண்ட விருப்பத்திற்குக் காரணம் ரஜஸ் குணம்.

(3) ம் என்ற விக்ருதி நித்திரையையும் சோம்பலையும் ப்ரமா தத்தோடு (மறதியோடு) கூட்டுகின்றது.

(4) மேகம் ஸூர்யனை மறைக்கின்றதுபோல, தமஸ்குணம் ஆத்மாவை மறதியாலும் சோம்பலாலும் தூக்கத்தாலும் மறைத்துக் கெடுக்கும்.

**௰. பாரத, ஸத்வகுணம் ரஜஸையும் தமஸையும் அவமதித்து (1) நிற்கின்றது(2). அவ்விதமே, தமஸ் ஸ்த்வத்தையும் ரஜஸையும் அவமதித்து நிற்கின்றது (3).**

(1) "பரிபூய"=அவமதித்து, கீழாக்கி, தாழ்த்தி.

(2) முக்குணங்கள் ஒன்றோடொன்று இணங்காமல் இருப்பது அவற்றின் இயல்பு என்றும், ஶாஸ்த்ர ஆராய்ச்சியை மேலாகக்கொண்டு ஜனஸங்கம் இல்லாவிடத்து ஸுகாஸனத்தைப் பொருந்தி ஶாந்தியைப் பெறவேண்டுமென்ற ஸத்வ குணவான் விளையாட்டையும் த்ரவ்யந் தேடுதலையும் வேறு ஜீவனோபாய கர்மங்களையும் அவமதித்திருப்பான் என்றும், இதில் விளக்கப்பட்டது.

(3) தமஸ் குணப் ப்ரவ்ருத்தியால் மறதியிலும் சோம்பலிலும் தூக்கத்திலும் இருக்கின்ற ஆத்மாவுக்கு முயற்சியிலும் கர்மாநுஷ்டானங்களிலும் கல்வியிலும் விருப்பிராது என்பதுபற்றி ஸத்வ குணத்தையும் ரஜஸ் குணத்தையும் தமஸ் "அவமதிக்கும்" என்றார்.

எனவே, விபாகப்பட்ட குணங்கள் தத்தம் ப்ரபல்யத்தால் அடங்காமல், தாம் பற்றிப்பிடித்த ஆத்மாவைத் தமக்கு அடிமைப்படுத்தியே வைக்கும். இதை அறிந்த பரமேஶ்வரன் குண விபாக தந்த்ரத்தால் ஜீவாத்மாக்களை குண பந்தனங்களினின்று விடுவிக்கின்றார்.

தாமஸகுணத்தை தமஸில் தமஸ் என்றும், தமஸில் ரஜஸ் என்றும், தமஸில் ஸத்வம் என்றும்; ராஜஸ குணத்தை ரஜஸில் தமஸ் என்றும், ரஜஸில் ரஜஸ் என்றும், ரஜஸில்

ஸத்வம் என்றும்; ஸத்வகுணத்தை ஸத்வத்தில் தமஸ் என்றும், ஸத்வத்தில் ரஜஸ் என்றும், ஸத்வத்தில் ஸத்வம் என்றும், குணங்களை ஒன்பதுவகையாகப் பிரித்து, ஜீவாத்மாக்களை ஜனனத்தில் அவரவர் கர்மத்துக்கேற்றபடி அவ்வொன்றில் அமைத்து, ஜீவிய காலங்களில் மெல்ல மெல்ல அதற்கு உயர்வானதில் ஏற்றி, குணரகித ஞானத்தைப் பெறச் செய்வார்.

**௰௧.** இந்த தேஹத்தில் எல்லா த்வாரங்களிலும் ஞானம் என்ற ப்ரகாஶம் எப்பொழுது பிறக்கின்றதோ, அப்பொழுது ஸ்த்வம் வளர்ச்சிபெற்றதென்று அறியவேண்டும் (1).

(1) ஸத்வகுண வளர்ச்சிக்குச் சின்னங்கள், ஞானஸாதனங்களாகிய ஐம்பொறிகளும் அந்தஃகரணங்களும் அனாத்ம விஷயங்களை வெறுத்தலும், ஆத்ம ஶாஸ்தரங்களை மிக ஶரத்தையுடன் ஶ்ரவணம் மனனம் செய்தலுமாம்.

**௰௨.** பரதரிஷப, ரஜஸ் வளர்ச்சிபெற்றால் விருப்பம், ப்ரவ்ருத்தி, கர்மாரம்பம், லோபம், மனமடங்காமை என்றவை பிறக்கின்றன (1).

(1) ரஜஸ்குண வளர்ச்சிக்குச் சின்னங்கள்: ஒன்றில் விருப்பங்கொள்ளுதலும் அதைப்பற்றி நினைத்தலும், விசாரித்தலும், அதனால் பெற்ற ப்ரயோஜனங்களைப் பிறருக்குக் கொடாமல் தானே அநுபவித்தலும், போதும் என்ற புத்தி இல்லாமையும் ஆம்.

**௰௩.** குருநந்தன (1), தமஸ் வளர்ச்சிபெற்றால் அப்ரகாஶம், அப்ரவ்ருத்தி, ப்ரமாதம், மோஹம் என்றவைகள் பிறக்கின்றன (2).

(1) குருவம்ஶத்தாரைச் சந்தோஷம் பெறச்செய்கின்றவனே.

(2) தமஸ்குண வளர்ச்சிக்குச் சின்னங்கள்: புத்தியின் தெளிவுக்குறைவும், கர்மேந்த்ரியங்கள் தத்தம் கர்மங்களைச் செய்வதில் சோம்பல்படுதலும், செய்யவேண்டியவைகளை மறத்த

னும், ஒருபொருளை அல்லது நிலையை வேறொன்ருகக் காண்ட லுமாம்.

**௰௪. தேஹத்தைச் சுமக்கின்றவன் (1) ஸத்வ குணம் வளர்ச்சி பெற்ற யாதோரு காலத்தில் ப்ரலயத்தை அடைகிறனோ, அப்பொழுது உத்தம வித்துக்களுடைய அமலலோகங்களை அடைகிறன் (2).**

(1) தேஹி, ஜீவாத்மா.

(2) ஸத்வகுண வ்ருத்தியில் ஒருவன் இறந்தால், அவன் மேலான அறிவாளிக்குரிய ஸுக லோகங்களைப் பெறுகிருன்.

அமல லோகம்—மமதை என்ற மலங்களை நிஷேதித்தவர்கள் வாழும் ஸுகலோகங்கள்.

அத். ௭. ௰௫, ௰௬ மந்த்ரங்களையும், அத். அ. ௨௰௪ மந்த்ரத்தையும் சேர்த்தறிக.

**௰௫. ரஜஸில் ப்ரலயத்தைப் பெற்றுக் கர்ம ஸங்கமுள்ளவர்களில் பிறக்கின்றன் (1). அவ்விதமே, தமஸில் ப்ரலயம் அடைந்தவன் மூடயோனிகளில் பிறக்கின்றன் (2).**

(1) ரஜஸ் குணவ்ருத்யில் ஒருவன் இறந்தால், அவன் மறு பிறவியில் கர்மாநுஷ்டானங்களே ப்ரதான மென்று வாழ்கின்றவர்களின் ஸுகதுக்கமிஶ்ர (இன்பமும் துன்பமும் கலந்த) லோகமாகிய பூமியில் பிறக்கின்ருன்.

(2) தாமஸகுணவ்ருத்தியில் இறக்கின்றவன் மூடகுணத்தைப் பெற்று கர்மாநுஷ்டானங்களை அவமதிக்கின்ற அதமஜாதி மானுடனுகவும், அவனுடைய அறிவிலும் கீழான பசுமுதலிய ம்ருகங்களாகவும், அரசுமுதலிய வ்ருக்ஷங்களாகவும் கர்மத்துக்கேற்றபடி பிறக்கின்ருன்.

**௰௬. நிர்மலமாகிய(1) ஸாத்விகத்தை ஸுக்ருத கர்மத்தின் பலனுகக் கூறுகின்றர்கள் (2). துக்கத்தை ரஜஸின் பலனுகக் கூறுகின்றர்கள் (3). அஞ்ஞானத்தை தமஸின் பலனுகக் கூறுகின்றர்கள் (4).**

(1) மலதோஷம் குறைந்த. ஸத்வகுண கார்யங்களான ஜீவ

காருண்யம் பொறுமை முதலிய மனோதர்மங்கள் த்வேஷம் (பகை) அற்றதால், "நிர்மலம்" என்று சிறப்பிக்கப்பட்டன.

(2) பகவானால் விதிக்கப்பட்ட புண்யகர்மங்களைச் செய்தவனுக்கு ஸத்வகுணம் கர்ப்பப்பையில் அமைக்கப்படும்.

"ஸுக்ருத கர்மம்"=நற்கர்மம், ஹிதம் செய்தல்.

(2) ரஜோகுணத்துக் கடிமைப்பட்டுப் புண்யகர்மங்களையும் பாபகர்மங்களையும் கலந்து செய்கின்றவனுக்கு சிற்றின்பங்களும் ஆதி வியாதி என்ற துன்பங்களும் அமையும்.

ரஜோ குணத்தை யார் பெறுவார்கள் என்ற வினாவிற்கு இந்தமந்த்ரத்தின் கருத்தைத் தழுவிய விடையாவது, புண்ய கர்மங்களையும் பாபகர்மங்களையும் கலந்து செய்பவர்களே என்பதாம். ஜீவனோபாய கர்மங்களையாவது ஆத்மோபாய கர்மங்களையாவது செய்யும்பொழுது நன்றுந் தீதும் கலந்து செய்து வருகின்றவர்களுக்கு ரஜோகுணம் அமைக்கப்பட்டு இந்த மிஸ்ரலோகம் உரியதாகும்.

(3) தாமஸகுணத்துக்கு அடிமைப்பட்டு மறதி சோம்பல் நித்ரைகளால் செய்யவேண்டிய கர்மங்களைச் செய்யாதவனுக்கு மேன்மேலும் அறியாமை விளையும். இந்த நல்விஷயத்தை அறியவேண்டும், அதற்குரிய கர்மங்களை முயற்சியாகச் செய்யவேண்டும் என்ற விருப்பம் இல்லாதவனுக்கு முன்னுள்ள தாமஸ குணம் (அவித்யா) நிலைபெற்றே வரும்.

அஞ்ஞானம்=அஞ்ஞானக்கூட்டம். ௰௪. அ, ௰எ.

தமஸின் பலன்=தமஸின் கார்யம்.

**௰எ. ஸத்வத்தினின்று ஞானம் (1) பிறக்கின்றது, ரஜஸினின்று லோபம் (2) பிறக்கின்றது, தமஸினின்று ப்ரமாதமே, மோஹம், அஞ்ஞானம் என்றவைகள் பிறக்கின்றன.**

(1) அனாத்ம விஷயங்களில் வெறுப்பும், ஆத்ம விஷயங்களை அறியத்தக்க ஶக்தியும்.

(2) ௰௪. ௰௨.

**௰அ. ஸத்வத்தில் நிற்கின்றவர்கள் உயரப் போகின்றார்கள் (1).**

**ரஜோகுணத்தைச் சார்ந்தவர்கள் நடுவில் நிற்கின்றார்கள் (2). தாழ்ந்த குணத்தின் வ்ருத்தியில் நிற்கின்ற தமஸைச் சார்ந்தவர்கள் கீழே போகின்றார்கள் (3).**

(1) *நிவ்ருத்தி மார்க்கத்தை அடைந்து அதற்குரிய உயர்ந்த வாழ்வைப் பூலோகத்திலும் மேல் லோகங்களாகிய மஹ ஜன தப ஸத்ய லோகங்களிலும் பெறுகின்றனர்.*

(2) *மத்யம வாழ்வாகிய ப்ரவ்ருத்தி மார்க்கத்தை அடைந்து த்ரிலோக (பூ, ஸ்வர், நரக) ஸஞ்சாரிகளாக இருக்கின்றனர்.*

(3) *மிருக விருக்ஷப் பிறவிகளைப் பெறுகின்றனர்.*

௰௯. **எப்போது த்ரஷ்டா (1) குணங்களைத்தவிர வேறு பொருளைக் கர்த்தாவாக** அறிகிறானில்லையோ (2), **குணங்களிலும்** [தன்னை] வேறாக **அறிகிறானோ** (3), அவன் **மத்பாவத்தைப்** (4) பெறுகின்றான்.

(1) *ஸாக்ஷி, தேஹி.*

(2) *குணங்களே கர்மேந்த்ரியங்களை ஏவிக் கர்மங்களைச் செய்விக்கின்றதால் குணங்களே கர்மகர்த்தாக்கள் என்று அறிகிறானோ.*

(3) *தான் என்ற ஆத்மா குணங்களுக்கு அன்யம் என்று அறிகின்றானோ.*

*ஸச்சிதானந்த சொரூபத்தை.*

**௨௰. தேஹி, தேஹத்துக்குக் காரணங்களான இந்த மூன்று குணங்களைக் கடந்து, ஜன்மம் நரை மரணம் என்றவைகளால் ஏற்பட்ட துக்கங்களால் விடப்பட்டு** அம்ருதத்தைப் பெறுகின்றான் (1).

(1) *தேகத்தைத் தரித்த ஆத்மா, தான் குணத்ரயங்களுக்கு அடிமைப்பட்டதால் தனக்கு தேஹம் வந்ததென்று எண்ணி, குணத்ரயங்களின் பந்தங்களாகிய கர்த்ருத்வத்தை எப்பொழு விடுகின்றானோ, அப்பொழுதே "நான் பிறந்து அநேக ஹிம்சைகளை அடைகின்றேன்" என்ற நினைவைப்பற்றியும், "எனக்கு வயோதிகம் வந்து வருத்தப்படுகின்றேன்" என்ற நினைவைப் பற்றியும், "நான் மரணத்துக்கு ஆளாகின்றேன்" என்ற நினைவைப்பற்றியும் தோன்றின துக்கங்களை விட்டு, ப்ரஹ்ம நிர்வா*

ணத்தைப் பெறுகின்றான்.

**அர்ஜுநன் கூறினான்:**

**உ௯க. ப்ரபு, இந்த த்ரிகுணாதீதன்(1) எந்த லக்ஷணங்களினால் (2) அறியப்படுகின்றான். [அவன்] என்ன ஆசாரம் பெற்றவன்? இந்த மூன்று குணங்களையும் எவ்விதம் கடக்கின்றான்?**

(1) முக்குணங்களையுங் கடந்தவன்; முக்குணங்களுக்கு அடிமைப் படாத ஆத்மா.

(2) அறிகுறிகளால் "லக்ஷணம்" என்ற பதம், "லிக்" (அறிவிக்கும் பொருள்) என்ற தாதுவில்நின்று ஜனித்து, அறிகுறி என்று பொருள்படும்.

மேல்வரும் ரு ஸ்லோகங்களில் ஜீவன்முக்தனுடைய லக்ஷணங்கள் விரிக்கப்பட்டன.

**உ௯உ. பாண்டவ, வந்தவைகளாகிய (1) ப்ரகாஸம், ப்ரவ்ருத்தி, மோஹம் என்பவைகளையும் வெறுக்கமாட்டான் (2) போனவைகளை விரும்பான் (3).**

(1) "ப்ரவ்ருத்தாநி"=நடைபெற்றுவருகின்ற காரியங்கள்.

(2) ஸத்வகுண ப்ரபலத்தைப் பெற்ற புத்திமான்களையாவது, ரஜஸ்குண ப்ரபலத்தைப் பெற்ற ஸமர்த்தர்களையாவது, தமஸ்குண ப்ரபலத்தைப்பெற்ற துஷ்டர்களையாவது, யானை ரிஷபம் குதிரை முதலிய ஜந்துக்களையாவது (அவை தன் முன்வந்தால்), வெறுக்காமல் ஸமமாகப் பாவிப்பான்.

(3) "நிவ்ருத்தாநி"=சென்ற காரியங்கள்.

இறந்துபோன ஜீவர்களைப்பற்றியாவது, பிரிந்துவிட்ட பொருள்களைப்பற்றியாவது நினைத்துச் சலனப்படமாட்டான்.

**உ௯ரு. எவன் உதாஸீனன் (1) போலிருந்துகொண்டு குணங்களினால் அசைக்கப்படுகிறானில்லையோ, எவன் குணங்கள் [குணங்களில்] இருக்கின்றன (2) என்றே [எண்ணி] இருக்கின்றானோ, [ஆதலால் எவன்] அசையவில்லையோ;**

**உ௯ச. எவன் ஸுகதுக்க ஸமனாயும் (3), தன்னில் நிற்பவனாயு**

**ம் (4), ஓட்டையும் (5) கல்லையும் (6) தங்கத்தையும் (7) ஸமமாகக் கொண்டவனும், ப்ரிய அப்ரியங்களை துல்யங்களாகக் (8) கொண்டவனும், தீரனும் (9), தன்னைப்பற்றிய பழிப்பையும் புகழையும் துல்யங்களாகக் கொண்டவனும்;**

**உ௰௫. மான அபமானங்களில் துல்யனும், மித்ர ஶத்ரு பக்ஷங்களில் துல்யனும், ஸர்வாரம்பங்களையும் [ஈஶ்வரனுக்குப்] பரித்யாகம் செய்தவனுமாயு மிருக்கின்றனோ, அவன் குணாதீதன் என்று கூறப்படுகின்றன்.**

(1) உத் + ஆஸீன = அப்பால் இருக்கின்றவன், விலகி இருக்கின்றவன், அன்யன்.

(2) குணங்கள் ஆத்மாவுக்கு அன்யமாகில், குணங்களின் காரியங்களாகிய ஸூக்ஷ்ம ஸ்தூல பூதங்களும் அவற்றின் நாநாவித தோற்றங்களும் எங்கிருக்கும் என்ற கேள்விக்கு இதில் பகவான் உத்தரமளித்தார். "குணங்கள் [குணங்களில்] இருக்கின்றன" என்ற வாக்கியம் குணங்களிலேயே குணகாரியங்கள் இருக்கின்றன என்று விரிக்கப்படும். எப்படி அலை திரை நுரை ஸமுத்ரநீரிலேயே இருக்கின்றனவோ, அப்படி குணகாரியங்கள் குணங்களிலேயே உள்ளன. ஸமுத்ரத்திற்கு ஆதாரமான பூமிக்கு நீரும் அதில் அலை நுரைகளும் அன்யமானது போல, ப்ரக்ருதிக்கு ஆதாரமாயிருக்கும் ஆத்மாவுக்கு ப்ரக்ருதியும் குணங்களும் குணகாரியங்களும் அன்யம்.

குணகாரியங்கள் குணங்களிலேயே தோன்றுமன்றி குணியாகிய ஆத்மாவில் தோன்ற. இந்த உண்மை கைவல்யத்தில் வாழும் ஜீவன்முக்தனுக்கு ப்ரத்யக்ஷம்.

(3) ஸுகத்தையும் துக்கத்தையும் ஸமமாகக்கொண்டவனும்.

(4) குணங்களிற் சிக்காமல் ஆத்மசொரூபமாய் நிற்பவனும்.

(5) "லோஷ்டம்" = மட்பாத்ரத்தின் துண்டு, ஓடு.

(6) "அஶ்ம" = கற்றுண்டு.

(7) "காஞ்சநம்" = பொன்.

(8) "துல்யம்" = துலாமுக்கு (தராஸுக்கு) உரியது, ஸமம்

(9) தீரன்=ஆத்மாவில் புத்தி ("தீ")யை நிறுத்துகின்றவன். இவனே புத்திமான்.

**௨௰௬—௨௰௭. அம்ருதமும் (1) அவ்யயமும் (2) ஆகிய ப்ராஹ்மத்துக்கும் (3), ஶாஶ்வதமான தர்மத்துக்கும் (4), ஐகாந்திக ஸுகத்துக்கும் (5) நான் ப்ரதிஷ்டாஸ்தானமாதலால் (6), எவன் என்னை வ்யபிசாரமற்ற (7) பக்தி யோகத்தால் ஸேவிக்கிறானோ, அவன் இந்தக் குணங்களைக் கடந்து ப்ராஹ்மபூயத்துக்கு (8) ஸமர்த்தனாகின்றான்.**

*(1) லயித்தபின் மீளவும் ஸ்ருஷ்டிக்கு வருவதால், முற்றாக அழியாததும்.*

*(2) அத்ருஶ்யமானதும்.*

*(3) ப்ரக்ருதிக்கும்.*

*(4) எக்காலத்துமுள்ள தர்மத்துக்கும்.*

*(5) ஏகாக்ர சித்தம் என்ற நிலையில் உதயமாகும் ஸுகத்துக்கும்.*

*(6) பரமாத்மாவாகிய நான் ஆதாரவஸ்துவாதலால்.*

*(7) அநந்ய. (வி+அபி+சாரம் = வேறு விஷயங்கள் மீது செல்லாமை.)*

*(8) ப்ரஹ்மநிர்வாண பதத்துக்கு.*

---

**உபநிஷத்கள் என்றும், ப்ரஹ்மவித்தை என்றும், யோகஶாஸ்த்ரம் என்றும் பகவத்கீதைகள் என்றும் கூறப்பட்ட ஸ்ரீக்ருஷ்ணார்ஜுந ஸம்வாதத்தில் ப்ரஸித்திபெற்ற குணத்ரயவிபாகயோகம் என்ற பதினான்காம் அத்யாயம் முற்றிற்று.**

---

# பதினைந்தாம் அத்யாயம்.

## புருஷோத்தமப் ப்ராப்தி யோகம்.

---

[அஃதாவது, பதினான்காம் அத்யாயத்திற் கூறப்பட்ட குணத் த்ரயத்தை தனக்கு வேறாகக் கண்டு, அவற்றில் நின்று ஒழிவுபெற்ற "த்ரிகுணாதீதன்" (யச. உயக—உயரு.) உத்தம புருஷன் என்னும் பரமாத்மாவாகின்றான் என்றும், அப்படிச் சச்சிதானந்த மயமாகுதல் "புருஷோத்தமப் ப்ராப்தி" என்றும், இந்தப் புருஷோத்தமப் ப்ராப்தியை ஸ்வாநுபவமாகப் பெற்றவனே வேதங்கள் ப்ரயாஸப்பட்டு வர்ணிக்கின்ற நிர்குணப் பொருளை அறிந்தவனாகிய "வேதவித்" என்றும், ஒருவன் ஸப்தரூப சதுர்வேதங்களை ஷடங்கத்துடன் கற்றதால் மாத்ரம் தான் ஏகவேதி த்விவேதி த்ரிவேதி சதுர்வேதி என்று நினைக்கின்றவன் "வேதவித்" அல்லன் என்றும், கர்மாநுஷ்டானிகளில் வேதங்களின் லக்ஷ்யார்த்தப் பொருளை உள்ளபடி அறிந்து வேதவித்தானவனே "க்ருத க்ருத்யன்" என்றும், உபதேஸித்ததை அர்ஜுநன் கேட்டுச் சிந்தித்தான் என்று விளக்கும் பதினைந்தாம் பாடம்.]

இந்தப் பாடத்தின் முதல் நான்கு மந்திரங்களில் (கடோபநிஷத்தில் போதிக்கப்பட்டவாறே) நிர்குண வஸ்துவை ஸகல ஸகுண வஸ்துக்களுக்கும் மேலானது ("ஊர்த்வம்") என்றும், யாவற்றிற்கும் அது ஆதாரம் ("மூலம்") என்றும், அதனில் ப்ரதிஷ்டை பெற்றே ஸகுண ப்ரஹ்மம் நின்றோங்கி ஆல் ("அஸ்வத்தம்") போல விரிந்தது என்றும், இந்த ஸகுண ப்ரஹ்மம் அழிவற்றது என்றும், இதனிலிருந்து வேதங்களும் வேதபாரா

யணத்துக்குரிய அக்ஷர மாத்ரா ஸ்வர ந்யமங்களாகிய சந்தஸ்களும் பிறந்தன என்றும், எதற்காகப் பிறந்தனவெனில் நிர்குண ப்ரஹ்மத்தையே பெறுதற்கு என்றும், ஆதலால் இவற்றை மூலஸ்தானப் பொருளென்று எண்ணுமல் மூலஸ்தானமாகிய நிர்குண ப்ரஹ்மத்துக்கு வழிகள் என்றே எண்ண வேண்டும் என்றும், ஞானகாண்டத்தில் கூறியபடி திருஷ்டியெல்லாம் நிர்குண ப்ரஹ்மத்தில் வைத்து கர்மகாண்டத்தில் கூறப்பட்ட ஸ்வர்க்காதி விஷய போகங்களையும் நாநாவித ஸித்திகளையும் வெறுத்து (உ, சஉ—சரு), அந்தப் புருஷோத்தம சொரூபமானவனே கௌஶல கர்மாநுஷ்டானியும் வேதவித்தும் என்றும், போதிக்கப்பட்டது.

---

பகவான் கூறினர்:—

க. ஊர்த்வத்தை (1) மூலமாகக்கொண்டதும் (2) கீழானவைகளை (3) ஶாகைகளாகக் கொண்டதும் (4) ஆகிய அஶ்வத்தத்தை (5) அவ்யயமாகக் (6) கூறுகின்றனர். எதற்குப் (7) பத்ரங்கள் (8) சந்தஸ்களோ (9) அதை (10) எவன் அறிகின்றனோ (11) அவன் வேதவித் (12).

(1) மேலான வஸ்துவாகிய நிர்க்குண வஸ்துவை.

"ஊர்த்வம்"=உயர்ந்த பொருள்; ஸகல வஸ்துக்களுக்கும் மேலான புருஷோத்தமன் (உத்தம புருஷன்); பரமாத்மா.

(2) காரணமாக உடையதும்.

அத். ௰ச, மந். ச, உ௰கூ, உ௰எ இல் மஹத் அல்லது ப்ரஹ்மம் என்று அழைக்கப்பட்ட ப்ரக்ருதிக்கும் ஶாஸ்வத தர்மத்துக்கும் ஐகாந்திக ஸுகத்துக்கும் ப்ரதிஷ்டா ஸ்தானம் ப்ரமாத்மா என்று கூறினபடி, ஈண்டு ஸகுண ப்ரஹ்மம் பரமாத்மாவை மூலமாகக்கொண்டது என்றார்.

(3) நிர்க்குண வஸ்துவுக்குக் கீழான அஶுத்த மாயா கார்யங்களை.

பரமாத்மாவில்நின்று பராஶக்தி தோன்றி, பராஶக்தியில் நின்று பிந்து நாதம் ஸதாஶிவம் மஹேஶ்வரன் ருத்ரன் விஷ்ணு

ப்ரஹ்மா என்ற நவவடிவங்கள் தோன்றின.

பிந்துவை ஶுத்தமாயை என்பார்கள். இதன் அதோபாகம்(கீழ்ப்பக்கம்)அஶுத்தமாயை எனப்பட்டு, காலம் நியதி கலை வித்தை ராகம் மஹத் (ப்ரக்ருதி) என்ற அநித்ய கார்யங்களுக்கு தாயாகி நிற்பதால், இவையெல்லாம் நிர்க்குணத்துக்குக் கீழானவை ("அத:") என்றார்.

(4) கொம்புகளாக, கவர்களாக.

(5) ஆல வ்ருக்ஷத்தை.

"அஶ்வத்தம்" என்ற பதம் "அஶ்" (வ்யாபித்தல்), "த்த" (நிற்றல்) என்ற தாதுக்களில் ஜனித்து, வியாபித்து நிற்கின்ற மரம் என்று பொருள்படும்.

இந்த ஸகுணப்ரஹ்ம வ்ருக்ஷம் "ஜீவேஶ்வரஜகத்" என்றும், "ப்ரபஞ்சம்" என்றும் அழைக்கப்படும்.

"ஜீவேஶ்வரஜகத்"=ஜீவகோடிகளும், அண்டபிண்டப் பரப்பாகிய ஜகத்தும், இவற்றுள் வீற்றிருந்து இவற்றை அடக்கி ஆளும் மஹேஶ்வரனும்.

"ப்ரபஞ்சம்"=ஜீவர்கள் என்றும் ஜகத் என்றும் ஈஶ்வரன் என்றும் விரிந்து நிற்கின்ற பொருள். "பச்" அல்லது "பஞ்ச்" (விரிதல்) என்ற தாதுவில்நின்று ஜனித்த பதம்.

இந்த அஶ்வத்த வ்ருக்ஷத்துக்கு ஆதாரம் ("மூலம்") பரமாத்மா என்றும், இதன் வளர்ச்சிக்குக் காரணம் ப்ரக்ருதி குணங்கள் (யரு. ந) என்றும், இதன் கொம்புகள் மேலும் கீழும் பரவப்பட்ட ப்ரக்ருதி தத்வ சொரூபங்கள் என்றும், இவற்றில் தோன்றும் தளிர்கள் ("ப்ரவாளா:) ஶப்த ஸ்பர்ஶ ரூப ரஸ கந்தங்களாகிய விஷயங்கள் என்றும், இதன் விழுதுகள் ("மூலானி") அஹந்தை மமதைகளாகி, மநுஷ்ய லோகத்தில் ப்ரஸ்தாபம்பெற்ற காரண கார்ய ஸம்பந்தமுடைய கர்மங்களும் கர்மபலன்களும் என்றும், முதல் இரண்டு ஶ்லோகங்களில் வர்ணித்து, இப்படி ஓங்கிவளர்ந்து நிற்கும் வ்ருக்ஷத்தை மெய் என்று அதனில் பற்றுவைத்து வாழ்கின்றவர்களுக்கு நிர்க்குண ப்ரஹ்மப் ப்ராப்தி ஸித்திக்காதபடியால், பற்றில்லாமை

("அஸங்கம்") என்ற ஆயுதத்தால் அந்த அஶ்வத்தம் மீதுள்ள ஆசையை அறுக்கவேண்டும் என்று மூன்றும் நாலாம் ஶ்லோகங்களில் உபதேஶிக்கப்பட்டது.

(6) அழிவற்றதாக.

மஹா ப்ரலயகாலத்தில் ப்ரக்ருதி கார்யங்கள் எல்லாம் ப்ரக்ருதியில் ஒடுங்கி, ப்ரக்ருதியும் ஜீவர்களும் மஹேஶ்வரனும் நிர்குண பரஹ்மத்தில் ஒடுங்கி, மீளவும் ஸ்ருஷ்டிக்கு வருவதால், ஸகுண ப்ரஹ்ம அஶ்வத்தம் அழிவற்றதாம்.

(7) எந்த நிர்குண ப்ரஹ்மத்துக்கு.

(8) இலைகள்.

(9) ௰௩. ௫ (1). ஈண்டு "சந்தஸ்" என்ற பதம் வேதங்களைக் குறிக்கின்றது.

(10) அந்த நிர்க்குண வஸ்துவை.

(11) ஸ்வரூபவமுறையாகத் தர்ஶிக்கின்றானோ.

(12) வேத வாக்குகளின் லக்ஷியப்பொருளாகிய நிர்க்குண ப்ரஹ்மத்தை அறிந்தவன்.

இந்த ஶ்லோகத்தின் பதங்கள் கடோபநிஷத்தில் ௨. ௬. ௧ இலும் மேல்வருமாறு உபயோகிக்கப்பட்டன:—

"ஊர்த்வ மூல: அவாக் ஶாக: ஏஷ: அஶ்வத்த: ஸநாதந: தேவ ஶுக்ரம், தத் ப்ரஹ்ம, ததேவ அம்ருதம் உச்யதே. தஸ்மின் லோகா: ஶ்ரிதா: ஸர்வே தது நாத்யேதி கஶ்சந ஏதத் வை தத்."

இந்த ருக்கின் பதப்பொருளாவது:—

"இந்த அஶ்வத்தம் ஊர்த்வ மூலத்தைப் பெற்றது. குறுக்கே விரிந்த ஶாகைகளை உடையது. ஸநாதநம். அந்த [ஊர்த்வ] வஸ்துவே [இதற்கு] பீஜம் (ஶுக்ரம்"). அது [மஹத் என்ற ஶகுண] ப்ரஹ்மம் என்றும், அழிவற்றது என்றும், சொல்லப்பட்டது. அதை ஸர்வ லோகங்களும் அண்டியிருக்கின்றன. [அதனில் பற்றுவைத்தவன்] ஒருவனும் அதைக் கடக்கின்றான் இல்லை. இதுவே (இந்த ஶகுண ப்ரஹ்மமே) அது (அந்த நிர்க்குண ப்ரஹ்மம்)."

**௨. அதன் ஶாகைகள் (1) கீழும் மேலுமாய்ப் பரவியிருக்கின்றன (2), குணங்களினால் வளர்ச்சிபெற்றவைகள் (3), விஷயங்களைத் தளிர்களாகக் கொண்டவைகள் (4). கீழே விழுதுகள் அநுஸந்ததியைப் பெற்றவைகளாகவும் (5), மனுஷ்ய லோகத்தில் கர்மத்தை அநுஸரித்துப் பிறந்தவைகளாகவும் [இருக்கின்றன.] (6)**

(1) *அந்த ஸகுண ப்ரஹ்ம அஶ்வத்தத்தின் கொம்புகளாகிய ப்ரக்ருதி தத்வங்கள்.*

(2) *த்வந்த லக்ஷணங்களைப் பொருந்தி, அண்ட பிண்ட ரூபங்களாகப் பரவப்பட்டிருக்கும்.*

*ஒவ்வொரு ஸூக்ஷ்மபூத ப்ராபல்யத்தால் ஆகாஶ அண்டங்களென்றும், வாயு அண்டங்களென்றும், அக்நி அண்டங்களென்றும், ஜல அண்டங்களென்றும், ப்ருதிவி அண்டங்களென்றும், அநேக கோடிகள் உண்டு. இவற்றுள் ப்ருதுவி அண்டம் பூ புவர் ஸ்வர் மஹர் ஜன தபஸ் ஸத்ய லோகங்கள் ஏழாயும், அதல விதல நிதல ரஸாதல மஹாதல ஸுதல பாதால லோகங்கள் ஏழாயும், தட்டுக்குமேல் தட்டாய் விரிந்து, நிற்கின்றது.*

*பிண்டமும் இவ்வாறு மேலுங் கீழுமாக விரிந்து நிற்கும். வித்தை நட்டால், அது மண்ணுக்கு மேல் முளையாகவும் மண்ணுக்குக்கீழ் வேராகவும் விரியும். புருஷர்களுடைய பிந்து கர்ப்பத்தில் தரித்துவளர்ந்தால், அந்த தேகத்தின் நாபிஸ்தானம் தொட்டு ஶிரஸ் வரையில் மேற்பாகம் என்றும், பாதம் வரையில் கீழ்ப்பாகம் என்றும், கூறப்படும்*

*அண்டத்திலும் பிண்டத்திலும் ப்ரக்ருதியின் ஸ்வபாவம் மேல் கீழாகவும் பக்கமாகவும் வ்யாபித்தலே.*

*ஆனால், மேல் கீழ் முதலிய த்வந்த லக்ஷணங்கள் நிர்க்குண வஸ்துவுக்கு இல்லை; ஸகுணத்துக்கே இவை இயல்பு.*

(3) *மேல் கீழ் முதலிய வ்ருத்திகள் எல்லாம் குணஸங்கத்தால் உண்டானவை.*

*"குணஸங்கம்"=குணக்கூட்டம், முக்குணங்களின் சேர்க்கை.*

(4) *ஶப்த ஸ்பர்ஶ ரூப ரஸ கந்தம் என்ற விஷயங்களும்,*

அவைகளைப் பற்றிவந்த ஸுக துக்கங்களும், அஶ்வத்த ஶாகை களில் தளிர்போலப் ப்ரகாஶிக்கின்றன.

இவைகளைத் தளிர் என்றது ஏனெனில், பற்றின ஸமயத் தில் நொறுங்கி அழிவதால் என்க. விஷயங்களும் ஸுகதுக்கங் களும் அநித்யம் என்பது கருத்து.

(5) ப்ரவ்ருத்தி மார்க்கத்துக்கு உரிய ஸ்வர் புவர் பூ லோக ங்களிலும் பாதாலங்களிலும் ஜீவ அஹங்காரமும் அதனைச் சா ர்ந்த காமம் க்ரோதம் லோபம் முதலிய மோகங்களும், விழுது கள் போல் இறங்கி, பாரம்பரையாகத் துன்பங்களைக் கொடுக் கின்றவைகளாயும்.

"அநுஸந்தத:" ["அநு", தொட்டு, + "ஸம்", செவ்வை யாக, + "தத", விரிந்தது] = தன்னைத் தொட்டு விரிவைப் பெ ற்றவைகள்.

அஃதாவது, க்ரமமாக வருகின்ற ஜனன மரண துன்பங் கள்.

(6) பூலோகத்தில் ஜீவாத்மாக்களின் கர்மபலத்துக்கு ஏற் றபடி பல வர்ண மனுஷர்களாய்ப் பிறந்து, பலவித கர்மாநுஷ் டானிகளாய், இருப்பார்கள்.

௩. இதன் ரூபம் இவ்விடத்தில் அப்படி அறியப்படுகின்றதில் லை (1). [இந்த வ்ருக்ஷத்திற்கு] ஆதியுமில்லை, மத்யமுமில்லை, அந்தமு மில்லை (2). ஓங்கி வளர்ந்த விழுதுகளோடுகூடிய இந்த அஶ்வத்தத் தை அஸங்கம் (3) என்ற த்ருடமான ஆயுதத்தால் பிளந்து (4),

௪. அதன்பின், எதில் (5) சென்றவர்கள் மறுபடியுந் திரும்பார் களோ (6), எதனிடமிருந்தும் (7) புராணப் ப்ரவ்ருத்தி [மார்க்கம்] ஏற்பட்டதோ (8), அந்த ஆத்ய புருஷனையே (9) பேறுகிறேன் [என்றெ ண்ணி] அந்தப் பதம் (10) தேடத்தக்கது.

(1) இந்த ஸகுணப்ரஹ்ம வ்ருக்ஷத்தின் லக்ஷணங்களை இ ப்பொழுது கூறினவாறு மனுஷ்ய லோகத்தில் ஜீவிக்கும் பா மர ஜனங்கள் அறியார்கள்.

அஃதாவது, நிர்குண ப்ரஹ்மம் ஜீவகாருண்யத்தால்

தன் ப்ரஹ்ம ஶக்திகளை விஜ்ரிம்பிக்கச் செய்து, மோஹ ரூபமான ப்ரக்ருதியுட்சென்று அதன் குணங்களைத் தன் நியதி ஶக்திகளால் விபாகஞ்செய்து, அண்டபிண்டங்களை விரித்து, ஜீவாத்மாக்களைத் தனுகரணங்களோடு அநேக புவனங்களில் வைத்து, ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி மார்க்கங்கள் என்றும், புண்ய மிஶ்ர பாப கர்மங்கள் என்றும், அவைக்குரிய ஸுகதுக்க பலன்கள் என்றும் விதித்து, ப்ரக்ருதிப் பொருள் ஒவ்வொன்றோடும் ப்ரக்ருதி மயமாகவே (ஸகுணவடிவமாகவே) பரமாத்மா நிற்கின்றதென்று மூடர்கள் அறியமாட்டார்கள்.

(2) ஸகுண ப்ரஹ்ம விரிவுக்குக் கால தேஶ திக் என்ற நியமங்கள் கணக்குக்கு எட்டாதபடியால், ஆதி மத்யம் அந்தம் என்ற பதங்கள் அதைப் பொருந்தா.

ப்ரஹ்மாவின் காலவகுப்பையே மனஸ் பற்றுவது துர்லபமாயிருக்கின்றது. ஸகுண மஹேஸ்வரனுடைய காலம் அளவிடவேகூடாது.

இனி, ப்ரக்ருதி வடிவமாய் நிற்கின்ற பரமாத்மாவை எவ்விதம் ப்ராக்ருதியில்நின்று கழற்றி உள்ளபடி அறியலாம் என்ற வினவுக்கு, "அஸங்கம்" (பற்றில்லாமை) என்ற வாளினால் ப்ரக்ருதி குணங்களைத் தன்னில்நின்று பிரித்துத் தன்னை அறியவேண்டும் என்று உத்தரம் அளிக்கப்படும்.

(3) பற்றில்லாமை, நிராசை.

விருப்பு வெறுப்பு ரூபமான ஆசை மனவிலும் புத்தியிலும் ஏறி, அவ்விந்த்ரியங்களையும் ஜீவாத்மாவையும் விஷயங்களில் அழுத்திப் பற்று அல்லது பிடிமானம் செய்ய விடாதிருத்தலை "அஸங்கம்" என்றார்.

(4) ஆதி மத்யம் அந்தம் இல்லாத அஶ்வத்தத்தை அஸங்கம் பிளக்கும் என்றால் அர்த்தம் பொருந்தாது. அந்தப் பதங்களின் வாச்யார்த்தத்தை நீக்கி, லக்ஷ்யார்த்தத்தை க்ரஹிக்க வேண்டும்.

பரமாத்மாவை தர்ஶிக்க முயல்கின்ற கர்மாநுஷ்டானி பற்றில்லாமை ("அஸங்கம்") என்ற பழக்கத்தை இடைவிடாது

அநுஸரித்தால், அவன் அஹந்தை மமதை முதலிய மல தோஷங்களால் உண்டான பந்தனங்களை அறுப்பான் என்பதே லக்ஷ்யார்த்தம்.

நிர்க்குண வஸ்துவாகிய பரமாத்மா ஒவ்வொரு பொருளிலும் இருந்தாலும், அங்கிங்கு போய் அதனை அறியக்கூடாது. ஒருவன் தனக்குள் மாத்ரம் அதனை அறியலாமாதலால், தனது தேகத்திலுள்ள ஆத்மாவை ஐம்பொறிகளிலும் அந்தக்கரணங்களிலும் சோம்பல் நித்ரை பொறாமை விஷயஸுகம் முதலிய அவித்யா கார்யங்களிலும்நின்று மெல்லக் கழற்றி, ஸ்தூல ஸூக்ஷ்ம காரண தேஹங்களின் பந்தனங்களை முற்றாக அறுக்கவேண்டும். இந்தக் கைவல்ய தசையில் ஆத்ம தர்சனம் ஸித்திக்கும்.

"த்ருடமான ஆயுதம்" = வலிமைபொருந்திய பாணம், கருவி.

(4) எந்த நிவ்ருத்தி மார்க்கத்தில்.

(5) யோனி வாய்ப்பட்டு இன்னொரு பிறவிக்கு வராதவர்களோ.

(6) எந்த நிர்க்குண வஸ்துவினின்று.

(7) பழைய ப்ரவ்ருத்தி மார்க்கம் உண்டானதோ.

(8) ஸர்வத்திற்கும் காரணமான அந்தப் புருஷோத்தமனையே.

(9) நிர்க்குண ப்ரஹ்ம பதம்.

**௫. மானம் மோஹம் அற்றவர்களும், ஸங்க தோஷத்தை ஜயித்தவர்களும்[1], அத்யாத்மத்தில் நித்யர்களும் [2], முற்றகக் காமங்களினின்று நீங்கினவர்களும், ஸுகதுக்கம் என்று பெயர்பெற்ற த்வந்த்வங்களால் விடப்பட்டவர்களும் ஆகிய அமூடர்கள் [3] அவ்யயமான அந்த [ப்ரஹ்மபூய] பதத்தைப் பெறுகின்றனர் [4].**

(1) கர்மாநுஷ்டானங்களின் பலாபலன்களில் சிக்காதிருப்பவர்களும்.

"ஸங்க தோஷம்"=ஸகாம புத்தி தோஷம்.

விருப்பு வெறுப்பு, ஸுகம் கஷ்டம், ஸித்தி அஸித்தி

முதலிய ப்ரக்ருதி த்வந்தவங்களைக் கருதிச் செய்யப்பட்ட அல்லது விடப்பட்ட கர்மங்கள் ஸகாம புத்திதோஷத்தைப் பெற்றவை. தனக்குரிய கர்மங்களை ஸுக துக்க ஜய அபஜய காமங்களுக்கு அடிமைப்படாமல் செய்கின்றவனே நிஷ்காம கர்மாநுஷ்டானி.

(2) ஆத்மாவைப்பற்றிய கல்வியிலும் கர்மங்களிலும் இடைவிடாது உறுதியாக நிற்கின்றவர்களும்.

(3) விவேகிகள்.

(4) மோக்ஷ ஸம்பத்துக்கே ஜீவாத்மா லோகத்தில் வாழ வேண்டும் என்று இந்த ஸ்லோகத்தில் விளக்கி, அடுத்த ஸ்லோகத்தில் மோக்ஷம் ஸ்வயம் ஜ்யோதி ஸ்தானம் என்றும், ஸூர்ய சந்தர அக்நி ஜ்யோதிகள் பந்த தனையில் நிற்கின்ற ஜீவாத்மாவை விமோசனம் செய்வதற்கு ஸ்ருஷ்டிக்கப்பட்டன என்றும் போதிக்கின்றார்.

**௬. எதையடைந்து திரும்பார்களோ (1), அந்த எனது மேலான ஸ்தானத்தை (2) ஸூர்ய சந்த்ராக்நிகள் ப்ரகாஸிப்பிக்கின்றார்களில்லை (3).**

(1) எந்த லோகத்தைப் பெற்றுத் திரும்ப வரமாட்டார்களோ.

நிஷ்காம புத்தியோடு கர்மங்களைச் செய்கின்றவர்களுக்கு விஷய ஸுகங்களிற் பற்று இராது. இவர்களில் அநேகர் மேல் லோகங்களில் ஒன்றாகிய பூலோகத்தில் வாழ்ந்து, இறந்தபின் ஸ்வர்க்க லோகத்துக்கு அப்பாற்பட்ட மஹர் முதலிய மேல் லோகங்களிற் சென்று, கௌமார திவ்ய ஸரீரத்தைப் பெற்று, அங்கிருந்தே வேறொரு பிறவியைப் பெறாமல் ஸத்கர்ம அநுஷ்டானங்களால் ஜீவன்முக்தியைப் பெறுவார்கள்.

சில நிஷ்காமபுத்திமான்கள், தாங்கள் பூர்வத்தில் ஸகாம புத்தியோடு செய்த புண்யகர்மங்களின் பலன்களைப் புசிக்கும் பொருட்டு, ஸ்வர்க்கலோகஞ் சென்று, அதன்பின் பூலோகத்துக்குவந்து, புண்ய யோனிவாய்ப்பட்டு மாநுட தேஹமெடு

த்து வாழும்பொழுது பூலோகத்திலேயே ஜீவன்முக்தியை அடைவார்கள்.

(2) என்னுடைய ப்ரஹ்ம நிர்வாண பதத்தை.

(3) ஜீவன்முக்தர்கள் வஸிக்கின்ற ப்ரஹ்ம நிர்வாணம் ஸ்வயம் ஜ்யோதிப் ப்ரகாஶத்தைப் பெற்றிருப்பதால், அதற்கு ஸூர்ய சந்த்ர அக்நிப் ப்ரகாஶங்கள் வேண்டியதில்லை. சந்த்ரன் ஸ்தூல தேஹ வ்ருத்திக்கு முக்ய காரணன். ஸூர்யனும் அக்நியும் ப்ராணன் புத்தி முதலிய ஸூக்ஷ்ம தேஹ தத்வங்களின் வ்ருத்திக்குக் காரணங்கள். ஜீவன்முக்தி தஶையில், ஆத்மா, காரண ஸூக்ஷ்ம ஸ்தூல தேகங்களைப் பற்றாமல், தனக்குரிய ப்ரகாஶத்தோடு வாழ்வதால், அந்த ப்ரஹ்ம நிர்வாண நிலையில் "ஸூர்ய சந்த்ராக்நிகள் ப்ரகாஶிக்கின்றார்களில்லை" என்றார்.

**எ. எனது ஸநாதன அம்ஶமே (1) ஜீவலோகத்தில் (2) ஜீவனாகி (3), ப்ரக்ருதியில் நிற்கின்றவைகளும் (4) மனஸை ஆறவதாகக் கொண்டவைகளும் (5) ஆகிய இந்த்ரியங்களை இழுக்கின்றது (6).**

(1) ஸதாகாலமுமுள்ள எனது அன்பும் அறிவுமயமான ஒரு ரேகையே.

"அம்ஶம்"=கூறு, பகுதி, பங்கு, ரேகை, கதிர், கிரணம்.

(2) ஜீவர்கள் வஸிக்கும் ஒவ்வொரு லோகத்திலும்.

(3) "ஜீவபூத:"=ஜீவனாகி; ஜீவாத்மாக்களாகி. அத். எ.௫ (௪.) எண்ணரிய ரேகைகளில் ஒரு ரேகை அசைய, அதனில் ஒடுங்கி நின்ற ஜீவகோடிகள் அக்நிப் பொறிகள் போலத் தோன்றின என்று உபநிஷத்தில் கூறியிருக்கின்றது.

(4) ப்ரக்ருதி குணங்களில்நின்று பிறந்தவைகளும்.

(5) ஆறும் இந்த்ரியமாகிய மனஸைப்பற்றியே ஜீவிக்கின்றவையாயும்.

(6) மெய் வாய் கண் மூக்கு செவி என்ற ஞானேந்த்ரியங்களை என்வஶம் இழுக்கின்றது.

"இந்த்ரியாநி கர்ஷதி"=இந்த்ரியங்களை இழுக்கின்றது.

"கர்ஷதி"=கர்ஷணத்தை (இழுத்தலைச்) செய்கின்றது.

ஞானேந்த்ரியங்களை உள்முகமாக இழுத்து, நிவ்ருத்தி மார்க்கத்தை மேலாகக்கொண்ட புத்தியோடு பரமாத்மாவின் திருவருள் (அநுக்ரஹ ஶக்தி) சேர்க்கும் என்பது பற்றி "எனது அம்ஶமே...இந்த்ரியங்களை இழுக்கின்றது" என்றார்.

தத்தம் விஷயங்களை ஐம்பொறிகள் க்ரஹிக்கும்பொழுது மனஸ் அவ்விந்த்ரியங்களோடு கூடி நில்லாதுபோனால், அவற்றின் க்ரஹணம் ப்ரயோஜனப்படாது. ஐம்பொறிகளை மனஸ் அடுத்து, ஒவ்வொன்றின் தன்மையைப் பெற்று, ஒவ்வொன்றுக்கும் ஸஹாயமாக நிற்பதால், "மனஸை ஆறாவதாகக் கொண்ட" இந்த்ரியங்கள் என்றார்.

ப்ரவ்ருத்தி மார்க்கத்தைப் பற்றிநிற்கும் நாட்களில் மனஸ் ஐம்பொறிகளால் இழுபட்டு, பஹிர் முகமாகவே அனாத்ம கார்யங்களைப் பாராட்டி வரும்.

அனாத்ம கார்யங்கள் அழிவுள்ளவை என்றும், அவற்றால் வரும் இன்பங்கள் தோன்றினவாறு அழிகின்றபடியால் துன்பத்துக்கு ஹேது என்றும், நிஶ்சயித்த புத்திமான் நிவ்ருத்தி மார்க்கத்தை நாடுவான். அந்த பக்வகாலத்தில் பரமேஶ்வரன் பஞ்ச இந்த்ரியங்களை அந்தர்முகமாகத் திருப்பி, ஆத்மாவைத் தேடும் புத்தியில் ப்ரதிஷ்டை செய்வார்.

ஜீவாத்மா தனக்கு ஸுகங்களை ஏற்படுத்தும் நற்கர்மங்களையும் தனக்குத் துக்கங்களை ஏற்படுத்தும் தீக்கர்மங்களையும், தானே செய்து வருகிறான் என்று நினைப்பான். ஆனால், உள்ள ஸங்கதி அப்படியன்று. ௰அ. ௰௪-௰௫ இல் கர்மத்துக்குக் காரணங்கள் ஸ்தூல ஶரீரமும், ஸூக்ஷ்ம ஶரீரமும், கர்த்ருத்வபுத்தி தோஷமும், ரஜஸ் குணத்தின் வேலும், மஹேஶ்வரனும் என்று விளக்கப்பட்டது. தீக்கர்மங்களுக்கு முக்ய காரணம் ரஜஸ் குண உத்வேகங்களாகிய துராசைகளே. துராசைகளில் சிக்குண்டவனுக்கு விதிவிலக்கு ரூபமான தர்மத்தால் நல்ல வழியைக் காட்டி, அவனுக்குள்ளிருந்து புண்ய கர்மங்களை அநுஸரிக்கும்படி செய்கின்றவன் அநுக்ரஹ கர்த்தாவாகிய மஹேஶ்வரன் என்பதுபற்றி, தனது ஸநாதன அம்ஶமே ஞானேந்த்ரியங்களை

உள்ளிழுத்தும், கர்மேந்த்ரியங்களை நற்கர்மங்களிற் ப்ரவேஸிக்கச் செய்தும், வருகின்றது என்று போதித்தார்.

வரும் ஸ்லோகத்தில் ஜீவாத்மாவின் இறப்பைப்பற்றி உபதேஸமாகும். இறப்பென்றது ஸ்தூல தேஹத்தை விடுதல்.

**அ. ஈஸ்வரன் (1) எப்பொழுது உத்க்ரமிக்கின்றனோ (2), எப்பொழுது [வேறொரு] ஸரீரத்தைப் பெறுகின்றனோ (3), அப்பொழுது (4) இவைகளை க்ரஹித்துக்கொண்டு செல்கின்றன் (5), வாயு [ஒரு] ஸ்தானத்தினின்று கந்தங்களை [க்ரஹித்துக்கொண்டு செல்வது] போல (6).**

(1) மஹேஸ்வரன் அங்கு மாத்ரம் இங்கு மாத்ரம் இருக்கின்றார் எனுதபடி ப்ராக்ருதிப் பரப்பெங்கும் நாயகனுக (கூ. ௰) இருப்பார். அதுபோல, ஜீவாத்மா தனக்குரிய தேகமெங்கும் நாயனுக இருப்பதாலும், அந்த ஜீவாத்மா பரமாத்ம அம்ஸமாதலாலும், ஈண்டு "ஈஸ்வரன்" என்ற பதம் ஜீவாத்மாவைக் குறிக்கின்றது. இது அன்பினுல் வந்த உபசார வார்த்தை.

(2) ஜீவாத்மா ஸ்தூல ஸரீரத்தினின்று எப்பொழுது புறப்படுகின்றனோ.

உத்க்ரமித்தல்= [ஸ்தூல தேஹத்தை விட்டு] வெளியே செல்லுதல், புறப்படுதல்.

(3) மரணகாலத்தில் தன் ஸ்தூல தேஹத்தைவிட்டு ஸூக்ஷ்ம தேஹத்தோடு ஜீவாத்மா புறப்படும் ஸமயத்தில், நரகத்துக்கு உரியவனுகில் நரகவேதனையைப் பொறுக்கத்தக்க யாதனு ஸரீரத்தைப் பெறுவான்; ஸ்வர்க்கத்துக்கு உரியவனுகில் ஸ்வர்க்க ஸுகங்களை அநுபவிக்கத்தக்க போதனு ஸரீரத்தைப் பெறுவான்.

நரக ஸ்வர்க்க அநுபவங்களைப் புசித்து மறுபடி பூலோகத்திற்குத் திரும்பும் பொழுது, வேறொரு ஸ்தூல தேஹத்தைத் தரிக்கின்றுன்.

(4) நரகலோகத்துக்குரிய யாதனு ஸரீரத்தையாவது, ஸ்வர்க்க லோகத்துக்குரிய போதனு ஸரீரத்தையாவது, பூலோகத்துக்குரிய ஸ்தூலதேஹத்தையாவது பெறும்பொழுது.

(5) "இவைகளை"=முன் ஸ்லோகத்தில் கூறப்பட்ட ஞானே

ந்த்ரியங்களையும் அவற்றோடு ஸம்பந்தப்பட்ட அந்தஃகரணங்களையும், கர்மேந்த்ரியங்களையும், ப்ராணாதிவாயுக்களையும்.

இந்த தத்வங்கள் எல்லாங்கூடி ஜீவாத்மாவுக்கு ஒரு ஸூக்ஷ்ம ஶரீரமாகும்.

(6) இப்படி ஒரு ஸ்தூல ஶரீரத்திலிருந்து ஜீவாத்மாவும் ஸூக்ஷ்ம ஶரீரமும் வேறொரு ஸ்தூல ஶரீரத்துக்குச் செல்லும் பொழுது, பழைய ஶரீரத்தில் சேகரித்த வாஸனைகளை அது புதிய ஶரீரத்துக்குக் கொண்டுபோகும். எப்படியெனில், வாயு பரிமளங்களை ஒரு ஸ்தானத்திலிருந்து இன்னொரு ஸ்தானத்துக்குக் கொண்டு போவதுபோல.

கந்தங்கள்=வாஸனைகள்.

ஜீவாத்மாவுக்குரிய உள்ளம் மனம் புத்தி சித்தம் அஹங்காரம் என்ற அந்தஃகரணங்களில், உள்ளம் என்ற அந்தஃகரணத்திலேயே ஸகல விஷயாநுபவங்களும் பீஜ ரூபமாக ஒடுங்கி வஸிக்கும். இவற்றை "வாஸனை" (residues of experiences) என்பார்கள் பெரியோர். இந்த வாஸனைகளைக் கொண்டே ஜீவாத்மாவின் உத்தாரணம், பிறவிக்குப் பிறவி, நடைபெற்று வரும். கர்மபலப் புஸிப்பாலேயே அதன் அறிவும் அன்பும் பிறவிகள் தோறும் விருத்திப்படும்.

அடுத்த ஶ்லோகத்தில் ஜீவாத்மா லோக விஷயங்களை நேரே அறியமாட்டான் என்றும், ஸூக்ஷ்ம ஶரீரத்தின் ஒரு பாகமாகிய ஞான ஸாதனங்களால் அவற்றை அறிவான் என்றும், விளக்கப்படும்.

**௯. இவன் (1), மெய் வாய் கண் மூக்கு செவிகளையும் மனஸையும் அதிஷ்டானமாகக் (2) கொண்டு, விஷயங்களை அநுபவிக்கின்றான் (3).**

(1) ஜீவாத்மா.

(2) இருப்பிடமாகக்.

(3) ஶப்த ஸ்பர்ஶ ரூப ரஸ கந்தங்களை அறிகின்றான்.

**௰. உத்க்ரமிக்கின்றவனாக, வஸிக்கின்றவனாக, அநுபவிக்கின்றவனாக, குணங்களோடு கூடியவனாக, அவிவேகிகள் [ஜீவாத்மாவைத்]**

தொடர்ந்து அறிகிறார்களில்லை (1). ஞானக்கண் பெற்றவர்கள் [அப்படி] அறிகிறார்கள் (2).

(1) பாமரஜனங்கள் (ப்ரமாணமற்றவர்கள்) தேஹமே நானென்றெண்ணி, அதற்கு வேறாக ஜீவாத்மா என்ற வஸ்து இருக்கின்றதென்றும், அந்த ஜீவாத்மாவே மரணகாலத்தில் வெளிப்படுகிறதென்றும், வேறொரு தேஹத்தில்போய் வாழுகின்றதென்றும், ஐம்பொறிகளாலும் அந்தக்கரணங்களாலும் விஷயங்களை அறிகின்றதென்றும், ஸத்வ ரஜஸ தமஸ் குணங்களைத் தரித்து நிற்கின்றதென்றும் அறியார்கள்.

அவிவேகிகள்=மூடர்கள், தேஹவான்கள்.

(2) பரமேஶ்வரன் அநுக்ரஹத்தால் பெற்ற பேரறிவாலேயே இந்த உண்மைகளை அறிகின்றார்கள்.

"ஞான சக்ஷு"=ஞானக் கண்; ஆத்ம கார்யங்களை அநாத்ம கார்யங்களில்நின்று பிரித்தறியும் ஶக்தி; பேரறிவு.

லோக விஷயங்களில் ஸங்க தோஷம் புத்திக்கு விருப்பு வெறுப்புக்களால் வந்தது. விருப்பு வெறுப்புக்கள் ஆஶையின் த்வந்த்வ மலங்கள் என்று நிஶ்சயித்த புத்தி அவற்றைத் தன் மேல் எறித் தன் விசாரணா ஶக்தியைக் கெடுக்கவிடாது. இந்த ஜாக்ர தஶையில் விருப்பையும் வெறுப்பையும் ஒன்றுபோல மதித்து, தன் விசாரணைகளில் சலனமற்றுப் ப்ரவேஶித்து ஜீவாத்மாவுக்கு உற்ற துணையாக நிற்கும்.

த்வந்த் ஸமத்வம் பெற்ற புத்தியின் பார்வையும் விசாரணத்வமும் அதிக விஶாலமாயும் ஆழமாயும் இருக்கும். ஐம்பொறிகளால் அறியப்பட்ட லோக விஷயங்களுக்கு மேலான ஆத்ம கார்யங்களையும் அறியும்.

பக்வகாலத்தில் பகவானால் அருளப்பட்ட இந்த மேலான அறிவு "ஞான சக்ஷு" (ஞானக் கண்) எனப்படும்.

இது மெல்ல மெல்லத் திறக்கப்படும். ஆரம்பத்தில் ஆத்ம அநாத்ம விஷயங்களை இருள் கலந்த ஒளியில் கண்டது போலச் சிறுக அறியும். முற்றாகத் திறந்த பின், விவரமாகவும் நிஶ்சயமாகவும் அக்கார்யங்களை அறியும். ஸாதாரண புத்திக்கு மேற்

பட்ட விவேகத்தால் ஜீவாத்மா தன்னைப் பந்திக்கின்ற மலபந்தங்களை உபாயமாக அறிந்து, அவற்றையெல்லாம் அறுப்பதற்கு முயலும். இவை முற்றுக அறவே, சிற்றறிவு பேரறிவாகும்.

ஜீவன் முக்தனுடைய பேரறிவே (அகண்டாகார அறிவே) சரியான "ஞானசக்ஷு". இந்த ஞானக்கண் பெற்ற ஜீவன்முக்தர்களே ஜீவாத்மா தேஹத்துக்கு வேறானவன் என்று ப்ரத்யக்ஷமாக அறிவார்கள்.

**௰௧. (ஆத்ம ப்ராப்திக்கு) முயற்சி செய்கின்ற(1) யோகிகள் இவனை (2) ஶரீரத்தில் [வேறாய்] நிற்கின்றவனாக அறிகின்றார்கள். சித்தஶுத்தியற்ற (3) அறிவீனர்கள் முயன்றாலும் (4) இவனை அறிகின்றார்களில்லை (5).**

(1) ஆத்ம தர்ஶனத்தைப் பெறும்படி முயல்கின்ற.

(2) இந்த ஜீவாத்மாவை.

(3) விருப்பு வெறுப்பு கோபம் லோபம் முதலிய மலங்களால் வாதிக்கப்பட்ட.

(4) ப்ரயாஸப்பட்டு அறிய யத்தனித்தாலும்.

(5) இவன் ஸ்தூல ஶரீரத்துக்கும் ஸூக்ஷ்ம ஶரீரத்துக்கும் வேறானவன் என்று அறியார்கள்.

ஸமத்வ புத்தியை ஆதாரமாகக்கொண்ட அஷ்டாங்க யோகத்துக்குரிய ஸவிகல்ப ஸமாதியிற் சென்றவர்களே இந்த உண்மையை அறிவார்கள்.

ஶைவ ஸித்தாந்த ஶாஸ்த்ரங்களில் ஸவிகல்ப ஸமாதி ஜீவாத்ம தர்ஶனம் எனப்படும். இந்த தர்ஶனைபெற்றவனே ஜீவாத்மா ஸூக்ஷ்ம ஸ்தூல தேஹங்களுக்கு அந்யன் என்று உறுதியாக அறிவான்.

எ—௰௧ மந்த்ரங்களில் ஜீவ புருஷ லக்ஷணங்கள் விளக்கப்பட்டன. இனி, மேல் வரும் ௰௨—௰௯ மந்த்ரங்களில் உத்தம புருஷனாகிய பரமாத்மாவின் லக்ஷணங்கள் உபதேஶிக்கப்படும்.

**௰உ. ஆதித்யனைச் சார்ந்த எந்த தேஜஸ் லோகத்தை எல்லாம் ப்ரகாஶிப்பிக்கின்றதோ, சந்த்ரனிடம் எந்த தேஜஸோ, அக்நியினிடம் எந்த தேஜஸோ, அந்த தேஜஸை எனதாக அறி (1).**

(1) *பரமேஶ்வரனுடைய ப்ரகாஶமே ஸூர்யனிலும் சந்த்ரனிலும் அக்நியிலும் உள்ளது. ஞான சக்ஷுவின் தேஜஸும் அவருடைய அம்ஶம் என்று இதில் காட்டினார்.*

**௰௩. எனது ஓஜஸால் (1) பூமியுட் புகுந்து நான் பூதங்களைச் சுமக்கின்றேன் (2). ஜலவடிவச் சந்த்ரனாகத் தோன்றி, ஓஷதிகளையும் (3) வளர்க்கின்றேன்.**

(1) *வல்லமையால்; தேவாத்ம ஶக்தியால்.*
(2) *சராசரங்களுக்கு ஆதாரமாயிருக்கின்றேன்.*
(3) *புல் பூண்டு செடி கொடி விருக்ஷங்களையும்.*

**௰௪. நான் வைஶ்வாநரனாகத் தோன்றி (1), ப்ராணிகளின் தேஹத்தை அண்டி, ப்ராணன் அபானன்களோடு கூடி, நான்குவித அன்னத்தைப் (2) பக்குவப்படுத்துகின்றேன் (3).**

(1) *ஜடராக்நியாக வயிற்றில் நின்று; அன்னபானாதிகளை ஜீர்ணிக்கச் செய்யும் அக்நியாகத் தோன்றி.*

*"வைஶ்வாநர"=ஸர்வ ("விஶ்") நரர்களிலும் (ப்ராணிகளிலும்) உள்ளது. அதாவது, ஜடராக்நி. "ஜடர"+"அக்நி"=வயிற்றினின்று ஜீர்ணிக்கும் அக்நி.*

*அர்ஜுநனுக்கு இன்னொருமுறை உபதேசிக்கப்பட்ட அநுகீதா, ரு. உ௰௧-உ௰௪ இல், பகவான் பஞ்சவாயுக்களின் மத்தியில் வைஶ்வாநர அக்நி எரிகின்றதென்றும், பஞ்ச ஞானேந்த்ரியங்களும் மனஸும் புத்தியும் அதன் ஸப்த ஜிஹ்வாக்கள் (ஏழு நாக்குகள்) என்றும், இவைகட்கு விறகு பஞ்ச விஷயங்களும் நினைவுகளும், ஞேயங்களும் என்றும், கூறினார்.*

(2) *அன்னம் என்றது பக்ஷியம், தீன்பண்டம். இது ப்ருதிவி அப்பு தேயு வாயுவின் ப்ராபல்யத்தால் நான்குவகைப்பட்டு, பார்த்திவ அன்னமென்றும், ஆப்ய அன்னமென்றும், தைஜஸ*

அன்னமென்றும், வாயவ்ய அன்னமென்றும் அழைக்கப்படும். மானுடர்க்குரியது பார்த்திவ அன்னம். சாதக பக்ஷிக்கும் ஸகோர பக்ஷிக்கும் உரியது ஆப்யான்னம். வாலகில்யிக்கு உரியது தைஜஸ அன்னம். ஸர்ப்பத்துக்கு உரியது வாயவ்ய அன்னம்.

(3) எந்தெந்தப் ப்ராணிகளுக்கு எந்தெந்த அன்னமோ, அந்த அன்னத்தை அவர்களில் ஜீர்ணிக்கப்பண்ணுகின்றேன்.

**௰௫.** நான் எல்லாருடைய ஹ்ருதயத்திலும்(1) வீற்றிருக்கின்றேன். என்னிடமிருந்து விதிரூபமாயும் விலக்கு ரூபமாயும் உள்ள ஸ்ம்ருதி (2) [தோன்றிற்று]. ஸர்வ வேதங்களாலும் வேத்யன் (3) நானே. வேதாந்தத்தைச் செய்தவனும் நானே (4). வேதவித்தும் நானே (5).

(1) புத்தி தத்வத்தில்.

(2) அக்ஷர மாத்ரா ஸ்வர ரூப வேதங்களை ஶ்ரவணஞ் செய்தே (காதால் கேட்டே) அறியவேண்டியதால், வேதங்கள் "ஶ்ருதி" என்ற பெயரைப் பெற்றன.

ஶ்ருதியைக் கற்றறிந்த மஹான்களின் மனதிற் படிந்த வேதார்த்தங்கள் "ஸ்மரணங்கள்", அல்லது "ஸ்ம்ருதிகள்", எனப்படும். இவையே தர்ம ஶாஸ்த்ரங்களாயின.

"மத்த: ஸ்ம்ருதி ஞானம் அபோஹநஞ்ச" என்ற பதங்கள், "என்னிடமிருந்து ஞாபகமும் மெய்யறிவும் [இவை] இல்லாமையும் [தோன்றின]" என்றும், பொருள் பண்ணலாம்.

(3) அறியத்தக்கவன்.

(4) வேதங்களின் ஞானகாண்டமாகிய வேதாந்தத்தை (உபநிஷத்களை), ருஷிகள் வாயால் பொழிந்தவனும் நானே.

(5) வேதவாக்கியங்கள் விளக்கும் மெய்ப்பொருளும் நானே; என்னை உள்ளபடி அறிகின்ற ஜீவன்முக்தனும் நானே.

**௰௬.** லோகத்தில்(1) க்ஷரன்(2) என்றும், அக்ஷரன் (3) என்றும், இரண்டு வகையான புருஷர்கள்(4) [உண்டு]. ஸர்வ பூதங்கள்(5) க்ஷர [புருஷர்] என்றும், கூடஸ்தர் (6) அக்ஷர [புருஷர்] என்றும், கூறப்படுகின்றன.

**௰எ.** அழிவற்ற எந்த ஈஸ்வரன் (7) மூவுலகத்தையும் உட்புகுந்து சுமக்கின்றனோ (8), அந்த வேறான (9) உத்தம புருஷன் (10) பரமாத்மா (11) என்று [வேதங்களில்] கூறப்பட்டான்.

(1) ப்ரக்ருதி ஸம்பந்தமாக.

(2) க்ஷர புருஷர்=அழிகின்ற புருஷர்.

(3) அக்ஷர புருஷர்=அழிவற்ற புருஷர்.

(4) "புருஷன்"=[தேஹத்தில்] உள்ளிருப்பவன்.

"த்வௌ புருஷௌ"=இரண்டு புருஷர்கள்=இருவகையான புருஷர்கள்.

ப்ரக்ருதிக்குள் வீற்றிருக்கும் புருஷர்களில், ஒருவகையார் ப்ரக்ருதி வேறு தாங்கள் வேறு என்ற உண்மையை அறியாத மூடர்கள். இவர்கள் "க்ஷர புருஷர்கள்" (அழியும் புருஷர்கள்), ஏனெனில், அந்த ஜட ஜீவிகளாக இருக்கின்றவர்கள் ஒருகாலத்தில் நாமரூபமடைந்து ஸச்சிதானந்த சிவ சொரூபிகளாதலால்.

இன்னொரு வகைப் புருஷர்கள், ப்ரக்ருதி வேறு தாங்கள் வேறு என்ற அறிவோடு, ப்ரக்ருதியிலிருந்தும் அதனைப்பற்றாமல், வாழும் ஞானிகள். இவர்கள் அந்தர்யாமியாகிய மஹேஸ்வரனும் ஜீவன்முக்தரும். இவர்கள் "அக்ஷர புருஷர்கள்" (அழியாத புருஷர்கள்), ஏனெனில், இவர்கள் ப்ரக்ருதியோடிருக்கும் காலமெல்லாம் ஸச்சிதானந்த ஸ்வரூபிகளாயிருப்பதால்.

(5) ஸகல ப்ராணிகள், ஜீவர்கள்.

(6) "கூட" (சிகரம்), "ஸ்த" (அசையாதுநிற்றல்) என்ற தாதுக்கள் கூடி ஜனித்த பதமாகிய "கூடஸ்த", மலையின் முடிபோல மேலான தனித்த நிலையை உடைய வஸ்து என்று பொருள்படும். சு. அ, (௩).

இந்த அக்ஷர புருஷர்களை பகவான் அத். சு. அ இலும் ௰உ. ச இலும், கூடஸ்தர் என்று தெளிவாகச் சொன்னார்.

(7) சக்திமானாகிய நிர்க்குண ப்ரஹ்மம், பரமாத்மா.

(8) பரமாத்மாவின் அனந்தகோடி ரேகைகளில் ஒரு ரேகை மஹேஸ்வரனாகி, பஞ்ச க்ருத்யங்களைப் பூ புவர் ஸ்வர்

மூதலிய லோகங்கள் தோறும் நடத்தி வருகின்றது என்பது பற்றி, "மூவுலகத்தையும் உட்புகுந்து சுமக்கின்ற" பரமாத்மா என்றார்.

(9) மஹேஸ்வரனுக்கு அப்பாற்பட்ட.

(10) மிக மேலான புருஷன்.

(11) "பரம"=யாவற்றிற்கும் உயர்ந்த. "ஆத்மா"=மெய்ப் பொருள்.

**௰அ. நான் [ப்ரக்ருதி புருஷர்களாகிய] க்ஷரத்துக்கும் அக்ஷரத் துக்கும் அப்பாற்பட்டவன். ஆதலால், லோகத்திலும் வேதத்திலும் புருஷோத்தமன் என்று ப்ரஸித்திபெற்றிருக்கிறேன். (1)**

(1) இந்த மூன்று (௰சு, ௰எ, ௰அ) மந்த்ரங்களில் ஆண் பெண் அலி ரூபமாய்த் தோன்றும் ப்ரக்ருதிக்குள் இருக்கும் புருஷர்கள் இருவகையார் என்றும், இவர்கட்கு அப்பாற் பட்ட வேறொரு புருஷன் இருக்கின்றான் என்றும், விளக்க ப்பட்டது.

ப்ரக்ருதி ஸம்பந்தமான புருஷர்களில், பலர், ப்ரக்ரு திக்கு அடிமைப்பட்டு ப்ரக்ருதி சொரூபமாகவே இருப்பதா லும், ப்ரக்ருதி அழிவதுபோலத் தங்கள் மூடத்வம் அழிவதா லும், ஜீவப்ரக்ருதிகள் (அத். எ. சு. ரு.) எனவும், க்ஷர புரு ஷர்கள் எனவும், அழைக்கப்படுவார்கள்.

வேறு சிலர், ப்ரக்ருதிக்கு அடிமைப்படாமல், ஸதேஹ தசையிலும் விதேஹ தசையிலும் அஸங்கமாக, அந்தர்யாமி ஈஸ்வரன் என்றும் ஜீவன்முக்தர் என்றும் போற்றப்பட்டு ஸச் சிதானந்த ஸ்வரூபிகளாக எக்காலமும் வாழ்வதால், அக்ஷர புருஷர்கள் என்றும், கூடஸ்தர் என்றும், அழைக்கப்படுவார்கள்.

ஜீவகோடிகளுக்கும், ஜீவன்முக்தர்களுக்கும், அந்தர்யாமி ஈஸ்வரனுக்கும் மேற்பட்ட புருஷன் புருஷோத்தமன், அல் லது பரமாத்மா.

**௰௯. பாரத, எவன் மோஹமற்று என்னை இவ்விதம் புருஷோ த்தமனாக அறிகின்றனோ, அவன் ஸர்வ வித்தாகி (1), என்னை ஸர்வ பாவனையால் (2) ஸேவிக்கின்றன் (3).**

(1) குணங்குறியற்றதும், பிரிக்கக்கூடாததும், ஸகல வஸ்துக்களிலும் ப்ரவேஶித்து நிற்கின்றதும், ஆகிய மெய்ப்பொருளை அறிகின்றவனுகி.

"வித்"=அறிகின்றவன். "ஸர்வ வித்"=எல்லாமானதை அறிகின்றவன்.

(2) விபாகஞ்செய்யாத அகண்ட பாவனையால்.

வெவ்வேருக இருக்கும் ரூபங்களைக் கவனித்தல் வ்யஷ்டி பாவனை.

ஸகல ரூபங்களும் சிதாகாஶமாய் நிற்கும் பரமாத்மாவில் தோன்றி மறைவதால், அவற்றை எல்லாம் பொய்ப்பொருள் என்று விட்டு, சிதாகாஶத்தையே கவனித்தல் ஸர்வ பாவனை.

(3) வணங்குகின்ருன்; அதுவே பரம்பொருள் என்றும். அதனையே வழிபடவேண்டும் என்றும் நிஶ்சயித்து, ஆனந்த சொரூபியாய் வாழ்கிருன்.

உ௰. பாபமற்ற (1) பாரத, மிக ரஹஸ்யமான இந்த [புருஷோத்தமப் ப்ராப்தி] ஶாஸ்த்ரம் என்னுல், கூறப்பட்டது. இதை புத்திமான் அறிந்து க்ருத க்ருத்யனுவான் (2).

(1) பழிக்கு அஞ்சின.

(2) "க்ருத க்ருத்யன்"=செய்யவேண்டிய கர்மங்களை கௌஶலமாகச் செய்கின்றவன்; க்ருதார்த்தன்.

உபநிஷத்களென்றும் ப்ரஹ்மவித்தைகள் என்றும் யோகஶாஸ்த்ரம் என்றும் பகவத்கீதைகள் என்றும் கூறப்பட்ட க்ருஷ்ணர்ஜுந ஸம்வாதத்தில் ப்ரஸித்திபெற்ற புருஷோத்தமப் ப்ராப்தியோகம் என்ற பதினைந்தாம் அத்யாயம் முற்றிற்று.

# பதினாறாம் அத்யாயம்.

## தைவாஸுர ஸம்பத் விபாக யோகம்.

---

[அஃதாவது, ஜீவாத்மாக்களில் சிலருக்கு தைவ குணப் பேறும், பலருக்கு ஆஸுர குணப்பேறும், அவர்களின் பக்வத்துக்குத் தக்கபடி, உற்பத்திகாலத்திலேயே பரமேஶ்வரன் அருள்வார் என்றும்; இந்த இரண்டு பேற்றில், தைவ ஸம்பத்தே பதினைந்தாம் அத்யாயத்தில் கூறப்பட்ட புருஷோத்தம ப்ராப்திக்கு அநுகூலப்படும் என்றும்; ஆஸுர ஸம்பத்தைப் பெற்றவர்கள் ஞான ஶாஸ்த்ரத்தையும் கர்ம ஶாஸ்த்ரத்தையும் ப்ரமாணமாகக் கொள்ளாமலும், அவற்றில் போதிக்கப்பட்ட ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி மார்க்கங்களின் லக்ஷணங்களையும் அறிய விரும்பாமலும், காமகாரத்தால் விஷய போகங்களைக் கருதி ஶாஸ்த்ர விதிகளை விட்டு, அந்யாயமாகப் பணம் வீடு தோட்டம் நகை முதலிய பொருட்களைப் பெற முயல்வார்கள் என்றும்; இவர்களுடைய காம க்ரோத லோபங்கள் மனதைக் கெடுத்து இவர்களை நரகத்தில் தள்ளும் என்றும், உபதேஶித்த வாக்குக்களை அர்ஜுநன் கேட்டுச் சிந்தித்தான் என்று விளக்கும் பதினாறும் பாடம்.

---

அறிவிலும் ஸுகத்திலும் மேன்மை பெற்ற ஸத்வகுணத்தைச் சார்ந்த ஜீவர்கள் மூடத்தை விட்டுப் ப்ரகாஶத்தைப் பொருந்துவார்கள். இந்த ஸத்வ குணப் ப்ரகாஶம் "தைவ குணம்" எனப்படும். ("தைவ" என்றது "தேவ" என்னும் பெயர்ச்சொல்லடியாக வந்த சொல்.)

"தைவ ஸம்பத்"=ஸத்வ குண ப்ரகாஶப்பேறு("ஸம்பத்").

இந்தத் தைவ ஸம்பத் பூலோகத்தில் ஸ்வல்பமாகவும் ஸ்வ

ர்க்கலோகத்தில் அதிகமாகவும் இருப்பதால், ஸ்வர்க்கலோக வாஸிகள் "தேவர்கள்" என்று ப்ரஸித்தி பெற்றார்கள்.

"தேவ" (தேவன்) என்ற பதம், "திவ்" (ப்ரகாஶித்தல்) என்ற தாதுவிலிருந்து ஜனித்து, ப்ரகாஶம் பெற்றவன் என்று பொருள்படும்.

இந்த ப்ரகாஶத்தையுடைய ஸத்வகுணத்துக்குப் பர்யாய நாமம் "ஸுர ஸம்பத்" ("ஸு"=ஸுகம், "ர"=ஈதல்), ஸுகத்தைக் கொடுக்கும் பேறு.

எனவே, "அஸுர ஸம்பத்" என்ற பதங்கள் ஸுகத்தைக் கொடாத பேறு என்று அர்த்தப்படும். இதுவே "ஆஸுரம்" எனப்படும். ("அஸுர" என்ற பெயர்ச்சொல்லடியாக வந்த சொல் "ஆஸுர".) ரஜஸ்குணத்துக்கும் தமஸ்குணத்துக்கும் உரியவை சினமும் துக்கமும்.

ஜ்யோதிஷ ஶாஸ்த்ரத்தில், பூலோகத்தில் பிறந்து வாழும் மானுடர்களில் சிலர் "தேவ கணம்" என்றும், சிலர் "ராக்ஷஸ (அதாவது, அஸுர) கணம்" என்றும், சிலர் "மனுஷ்ய கணம்" என்றும் மூவகையாகப் பிரிக்கப்பட்டார்கள். ஆனால், விருப்பங்களுக்கு அநுகூலமான ஸமயங்களில் ஆனந்தமும் அன்பும், ப்ரதிகூலமான ஸமயங்களில் பொறாமையும் கோபமும், தமக்குள் ஜனிப்பதைக் கண்டவர்கள் ஆஸுர ஸம்பத்தைப் பெற்றவர்களாதலால், பகவான் ௧௬. அ இல் உபதேஶித்தவாறு, மானுடருக்கு ஸ்ருஷ்டிக்கப்பட்ட ஸம்பத்கள் தைவமும் ஆஸுரமும் என்ற இரண்டே என்று அறியவேண்டியது.]

---

ஸ்ரீ பகவான் கூறினார்:—

க—ரு. பாரத, தைவ ஸம்பத்தைப் (1) பெற்றுப் பிறந்தவனுக்கு (2) அபயம் (3), ஸத்வஸுத்தி (4), ஞானம் யோகம் என்றவைகளில் நிற்றல் (5), தானம் (6), தமம் (7), யஜ்ஞம் (8), வேதாத்யயனம், தபஸ் (9), ஆர்ஜவம் (10), அஹிம்ஸை (11), ஸத்யம் (12), அக்ரோதம் (13), த்யாகம் (14), ஶாந்தி (15), அபைஶுநம் (16), ப்ராணிகளில் தயவு (17), அலோலுத்வம் (18), ம்ருதுத்வம் (19), க்ராம்ய தர்மத்தில் உபேக்ஷை (20), அசாபல்யம் (21), தேஜஸ் (22), பொறு

**தீ (23), தைர்யம் (24), ஶௌசம் (25), த்ரோகமின்மை (26), அதி மானமின்மை (27) [என்ற குணங்கள்] அமைகின்றன.**

(1) திவ்யகுணப்பேற்றை; ப்ரகாஶிக்கின்ற ஸத்வகுணப் பேற்றை.

(2) பிறந்தவனுக்கு=கர்ப்பத்தில்நின்று தோன்றினவனுக்கு.
"பிறத்தல்" (birth) என்பது மாதாவின் தேஹத்தினின்று ஒரு தேஹத்தோடு வெளிவருதல்.

ஸத்வகுணமானது பிறந்தபின் அருளப்படவில்லை என்பதுபற்றியும், கர்ப்பப்பையில் கரு தரித்தபின் அமைக்கப்பட்டது என்பதுபற்றியும், "தைவ ஸம்பத்தைப் பெற்றுப் பிறந்தவனுக்கு" என்றார்.

(3) பயப்படாத தன்மை; ஆபத்தில் அஞ்சாமை.

தைவ ஸம்பத்தைப் பெற்றவன் தன் தேஹத்தைப்பற்றி வரும் ஆபத்களுக்குப் பயப்படான். மற்றவர்களுக்கு ஆபத் வந்து, அவர்கள் பயப்படும் பொழுது, பயப்படாதே என்று தைர்யம் கூறுவான்.

(4) சித்தத்தில் கபடின்மை.

(5) ஆத்ம விசாரணையிலும் ப்ராணாயாம மனோலய யோகங்களிலும் புத்தி ப்ரதிஷ்டை பெற்றிருத்தல்.

(6) ஈகை, பரோபகாரம்.

(7) பாஹ்ய இந்த்ரிய நிக்ரஹம்; ஐம்பொறி அடக்கம்.

(8) தேவ உபாஸனை.

(9) உற்றநோயை ஸமாதானமாகப் பொருந்தி, மனஸ் வாக்கு காயங்களால் ஹிதம் செய்தல்.

(10) நேர்மை; தர்மத்தை அநுஸரித்தே நடத்தல்.

(11) இன்னுசெய்யாமை; மற்றவர்களுக்கு துன்பம் செய்யாதிருத்தல்.

(12) வாய்மை; உள்ளதைப் பேசுதல்.

(13) சினமின்மை.

(14) துறவு; அஹந்தை மமதையை விடுதல்.

(15) எது ஸம்பவித்தாலும் நல்லது என்று ஒழிவாக இருத்தல்.

(16) பிறருக்கு எப்பொழுது கேடு வருமென்று எதிர்பார்த்திராத தன்மை.

பிஸுநனுடைய குணம் "பைஸுநம்."

பிஸுநன்=பிறர் குற்றங் குறைகளை ஆராய்ந்தும் பேசியும் திரிகின்றவன். இவன் பொறாமையினால் பிறர்நாஸத்தை விரும்புவான். இவனுடைய தன்மைகள் "பைஸுநம்" ஆகும்.

(17) ஜீவகாருண்யம்.

(18) வீண் சிந்தனைகளை உண்டுபண்ணி, அவற்றைப் பெருக்கி, உழல்கின்ற மனவின் தன்மை இல்லாமை.

(19) பார்வையிலும் பேச்சிலும் செய்கையிலும் மென்மை, ம்ருதுவான தன்மை.

(20) "ஹ்ரீஹ்ற"=ப்ராக்ருத (நாகரீகமற்ற) நடையுடை பாவனைகளில் வெறுப்பு; அல்ப க்ராம வாஸிகளின் பழக்கத்தில் அப்ரீதி.

(21) ஸ்திர சித்தம்.

"அசாபல்யம்"=சித்த சபலம் இல்லாமை. "சபலம்"=ஸஞ்சலம், தீர்மானமற்ற தன்மை.

(22) புத்திப்ரகாஸம், முகக்களை.

(23) தனக்கு நேரிடும் தடைகளையும் துன்பங்களையும் பொறுத்துக்கொள்ளல்.

(24) திடபுத்தி.

(25) தேஹ மானஸ ஸுத்தி.

(26) மாறுபாடின்மை, பகையின்மை.

(27) மிக அபிமானம் இல்லாமை.

மேற்கூறிய உம்சு ஸத்வ குணங்களும் ஜீவர்களின் "தைவ ஸம்பத்கள்". அதாவது, ஜீவர்களின் இருளை நீக்கிப் ப்ரகாஸத்தைக் கொடுக்கும் திவ்ய குணங்கள்.

அடுத்த மந்த்ரத்தில் ஆஸுர ஸம்பத்கள் எவ்வித குணங்கள் எனக் கூறப்படும். இவை மூடத்தோடு மிகக் கலப்புப் பெற்றவை.

பிறவிகள் தோறும் ஜீவஜேபாய கர்மங்களை அநுஷ்டிக்கும்பொழுது ஜீவர்கள், பலவகையால் தண்டிக்கப்பட்டு, தங்

களுடைய தீய குணங்களை (அதாவது, தங்களுக்கு வகுத்துவிட்ட ஆஸுர ஸம்பத்தை) அவமதிப்பார்கள். அந்தப் பக்வ காலத்தில் இறந்து, மறுபிறவிகளில் தைவ ஸம்பத்களைப் பெறுவாரகள.

**௪. பார்த்த, ஆஸுர ஸம்பத்தைப் பெற்றுப் பிறந்தவனுக்கு தம்பம் (1), தர்பம் (2), அபிமானம் (3), கோபம், கோரவசனம், அறியாமை (4) [என்ற குணங்கள் ஏற்படுகின்றன].**

(1) தான் செய்யும் கர்மங்களை வெளியிடுதல்.

(2) கல்வி தனம் ஸ்வஜனம் முதலியவைகளால் வரும் செருக்கு.

(3) பிறர்மதிப்பில் அதிக விருப்பும் அவமதிப்பில் கோபமும்.

(4) புத்தித்தெளிவு இல்லாமை.

**௫. பாண்டவ. தைவ ஸம்பத் மோக்ஷத்துக்கும், ஆஸுர ஸம்பத் பந்தனத்துக்கும் [உரியது] என்று எண்ணப்பட்டது (1). தைவ ஸம்பத்தைப் பற்றி [நீ] பிறந்திருக்கிறாய். துக்கப்படாதே (2).**

(1) மேற்கூறிய தைவ ஸம்பத்தை (திவ்யகுணங்களை) உடையவன் துக்கநிவ்ருத்தியாகிய மோக்ஷத்தை வருத்தமில்லாமல் பெறுவான்.

ஆஸுர ஸம்பத்தை பெற்றவன் நரகாதி துன்பங்களை அநுபவிப்பான்.

(2) உனக்கு அமைக்கப்பட்டது தைவ ஸம்பத்தே. ஆனால் இப்பொழுது உன்னைத் துக்க பய விஷாதங்கள் வாதிக்கின்றன. அவற்றில் நின்று விலகு.

இனி ௬ தொட்டு வரும் ௰அ-ம் ஸ்லோகம் வரையில் ஆஸுர குணங்களை விரிப்பார்.

**௬. இவ்வுலகத்தில் (1) தைவம் என்றும், ஆஸுரம் என்றும், இரண்டு பூத ஸர்க்கங்கள் (2) [உண்டு]. தைவம் விரிவாகக் கூறப்பட்டது. பார்த்த, ஆஸுரத்தை என்னிடம் கேள்.**

(1) இந்த பூலோகத்தில்.
(2) ஜீவ குண ஸ்ருஷ்டிகள்.
"ஸர்க்கங்கள்"=விஸர்க்கங்கள், ஸ்ருஷ்டிகள். அத்.அ.௩.(3).
பூலோகத்தில் தைவ ஸம்பத்தைப் பெற்ற புண்யவான்கள் ஸாமான்ய மனுஷ்யர்களுக்கு மேற்பட்டவர்கள். இவர்களில் ஏகதேஸம் காமம் க்ரோதம் மோஹம் என்ற மலதோஷங்கள் ப்ரபலப்பட்டால்,ஸீக்ரத்தில் அடங்கி ஒழியும். ஆதலால், "இவ்வுலகத்தில் தைவம் என்றும் ஆஸுரம் என்றும் இரண்டு பூத ஸர்க்கங்கள் உண்டு" என்றார்.

**எ. ஆஸுர ஜனங்கள் ப்ரவ்ருத்தியையும் நிவ்ருத்தியையும் அறியார்கள் (1). அவர்களிடம் ஸௌசமும் இல்லை (2), ஆசாரமும் இல்லை (3). ஸத்யமும் இல்லை (4).**

(1) ஆஸுர குணத்தைப் பெற்றவர்கள் உண்ணுதலும் உடுத்தலும் சிற்றின்ப ஸுகங்களை நுகர்தலும் உறங்குதலுமே போந்த நெறி என்றிருப்பதால், அவர்கள் பகவானது கர்ம சக்ரத்தில் அமைக்கப்பட்ட ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி மார்க்கங்களின் லக்ஷணங்களை அறியத்தக்கவர்களல்லர்.

இம்மார்க்கங்களின் லக்ஷணம் மஹாபாரதத்தில் அநுஸாஸன பர்வத்தில் (அத். ௱௪௰௧, எ௰௫, அ௰௩) கீழ்வருமாறு கூறப்பட்டன:—

"ப்ரவ்ருத்தி லக்ஷண தர்மம் க்ருஹஸ்தனுக்கு விதிக்கப்படுகின்றது. ஸகல ப்ராணிகளுக்கும் இது ஹிதத்தையும் ஸுபத்தையுஞ் செய்யும். தன் ஸக்திக்கேற்றபடி க்ருஹஸ்தன் தானமும் யாகமும் அடிக்கடி செய்யவேண்டும். பூதியை (ஐஸ்வர்யத்தை) விரும்புகின்றவன், புஷ்டி கர்மத்தை (போஷண கர்மத்தை)ச் செய்யவேண்டும். தர்ம வழியில் நின்று பொருள் ஸம்பாதிக்கவேண்டும். தர்மத்தால் பெற்ற தனத்தை மூன்று பங்காகப் பிரித்து, ஒருபங்கை தர்மார்த்தமாகச் செலவிடவேண்டும், ஒருபங்கை இஷ்டகாம்யங்களில் செலவிடவேண்டும், மற்றப் பங்கை வளர்க்கவேண்டும்.

"நிவ்ருத்தி லக்ஷண தர்மம் மோக்ஷ ஸித்துக்காக இருக்

கின்றது. மோக்ஷத்தை விரும்புகிறவர்களுக்கு தர்மம் ஸர்வ ஜீவர்களில் தயவு, வானப்ரஸ்த ஸந்ந்யாஸ ஆஶ்ரமங்களில் சென்றிருந்தால் ஒரு க்ராமத்தில் ஒருநாளைக்கு மேற்பட்டு வாஸஞ்செய்யாமை, ஆஶாபாஶத்தின் நீக்கம், யோகத்திலும் ஸாங்க்யத்திலும் புத்தி".

நிவ்ருத்தி மார்க்கத்தின் ஸௌக்ஷ்ம கதி அத். யஉ, ஶ்ர. யஉ க்குரிய நான்காம் உரையில் கூறப்பட்டது. ஆங்கு காண்க.

(2) தேஹ ஶுத்தியும் க்ருஹ (வீடு) ஶுத்தியும் இல்லை.

(3) ஆத்மாவை லக்ஷ்யப்பொருளாகக்கொண்டு அதை அடையும் பொருட்டு அநுஷ்டிக்க வேண்டிய நல்லொழுக்கங்களும் இல்லை.

(4) கண்டதைக் கேட்டதை மனதில் தோன்றியதை உள்ளபடி உரைப்பதும் இல்லை.

**அ.** அவர்கள் (1) ஜகத்தை அஸத்யமாகவும் (2), ப்ரதிஷ்டை இல்லாததாகவும் (3), ஈஶ்வரனற்றதாகவும் (4), ஒன்றோடொன்று கூடிப் பிறந்ததாகவும் (5), காமத்தைக் காரணமாகக் கொண்டதாகவும் (6) கூறுகின்றனர். வேறென்ன [காரணம் ஜகத்துக்கு என்பர்.]

**கூ.** இந்த த்ருஷ்டியைக்கொண்டு (7) மனஸைக் கெடுத்தவர்களும் (8), அல்ப புத்தியுள்ளவர்களும் (9), உக்ர கர்மத்தைக் கொண்டவர்களும் (10) ஆகிய அஹிதர்கள் (11) லோகத்தாரின் அழிவுக்கு வல்லவர்களாகின்றனர் (12).

(1) ஆஸுர ஜனங்கள்.

(2) ஐம்பொறிகளுக்குத் தோற்றும் சொரூபங்களெல்லாம் மாறுதலைப் (மாறிமாறிக்கொண்டே இருக்கும் தன்மையைப்) பெற்றவை என்றும்.

(3) அவற்றிற்கு மேலான பொருள் ஒன்றிலும் நிலைபெற்றவையல்ல என்றும்.

(4) ஒருவனாலும் தோற்றலையும் காத்தலையும் அடக்குதலையும் பெறவில்லை என்றும்.

(5) ஸௌக்ஷ்ம பூதங்கள், ஒன்றோடொன்று கூடி, ஸ்தூல

ரூபங்களைத் தோற்றுவித்தன என்றும்.

(6) ஆசை இல்லாது போனால் ஜகத்தோற்றங்களும் இரா என்று யோசித்து, ஜகத் என்ற ப்ரபஞ்சத்துக்கு (பெரும் விரிவுக்கு) க் காரணம் ஆசையே என்றும்.

(7) இந்த நிரீஸ்வர நாஸ்திக மதத்தை அநுஷ்டித்து.

(8) ஆத்மாவைப் பற்றவேண்டிய மனதை அனாத்ம விஷயங்களில் செலுத்தி, அதன் பலத்தையும் ஸாத்தத்தையும் பாழாக்கினவர்களும்.

(9) மோஹத்தால் மிகச் சுருக்கப்பட்ட அறிவை உடையவர்களும்.

(10) அன்பற்ற தொழில்களில் ப்ரவேஸிக்கின்றவர்களும்.

(11) துன்பத்தை விளைவிக்கின்றவர்கள்.

(12) லோகத்தாரைத் தங்கள் நடத்தையாலும் போதனையாலும் கெட்ட வழியிலிழுத்து நாஸமாக்குதலுக்கு ஸமர்த்தர்.

இந்த இரண்டு மந்த்ரங்களில் லோகாயத மதம் கண்டிக்கப்பட்டது.

"லோகாயத" என்ற பதம், "லோக" + "ஆயத்" என்றவை கூடி, லோகத்தைப் பற்றி நிற்பவர்கள் என்று பொருள் படும். இவர்கள் "சார்வாகர்" என்றும், "பாஷண்டர்" என்றும், "நாஸ்திகர்" என்றும், "நிரீஸ்வரர்" என்றும் அழைக்கப்படுவார்கள்.

"சார்வாக" என்ற பதம், "சாரு" + "வாக" என்றவை கூடி, அழகான வாக்கு உடையவன் என்று பொருள் படும். சார்வாகன் விஷயஸுகமே புருஷார்த்தம் என்றவன். இவன் மதம் பாமரஜனங்களுக்கு அழகாயிருக்கும்.

"பாஷண்டன்", அல்லது "பாகண்டன்", என்றது வேத ப்ரமாணத்தால் கண்டிக்கப்பட்டவன் என்று பொருள்படும். ("பா"=ப்ரமாணத்தால், "கண்ட"=கண்டிக்கப்பட்டவன்.)

**௰. த்ருப்தி பண்ணக்கூடாத காமத்தை அண்டி ([1]), தம்பம் அபிமானம் மதம் என்றவைகளோடு கூடி, மோஹத்தால் அஸத் க்ராஹ்யங்களைக் ([2]) கற்று, அஸுசியான வ்ரதங்களை ([3]) உடையவர்களாயிப் ப்ரவர்த்திக்கின்றனர் ([4]).**

(1) போதும் என்ற புத்திக்கு இடங்கொடாத ஆசையை பெரும்பொருள் என்றெண்ணி.

(2) பொய்க் கொள்கைகளே.

(3) கெட்ட நியமங்களே.

(4) பாடுபடுகின்றனர்.

**௰௧—௰௨.** கணக்கிட முடியாததும், மரணத்தை எல்லையாகக் கொண்டதுமாகிய நினைவுகளைப் பெற்றவர்களும் (1), காமபோகத்தை மேலாகக் கொண்டவர்களும் (2), இவ்வளவுதான் [வாழ்வு] என்ற நிஸ்சயம் பெற்றவர்களும் (3), அநேக நூறு ஆஸாபாஸங்களினால் கட்டப்பட்டவர்களும் (4), காமம் கோபம் என்றவைகளைப் பரம அயனமாகக் கொண்டவர்களும் (5), விஷய போகத்திற்காக அந்யாயமாக அர்த்த ஸஞ்சயங்களைக் கருதி, முயற்சிக்கின்றனர் (6).

(1) நித்ரையிலிருந்து விழித்த காலந்தொட்டு மீண்டும் நித்ரையில் ப்ரவேஸிக்கும் வரைக்கும் ஓயாமல் ஜீவபர்யந்தம் லோகவிஷயங்களைப் பற்றி நினைவுகளை உண்டுபண்ணிக்கொண்டேயிருக்கும் மனசைப் பெற்றவர்களும்.

(2) மனஸில் உதித்த ஆஸைகளை எல்லாம் வ்ருத்திசெய்து நிறைவேற்றுவதே தக்க வாழ்வு என்றிருப்பவர்களும்.

(3) இதற்கு மேலான நெறி இல்லை என்ற தீர்மானத்தோடு திரிகின்றவர்களும்.

(4) ஆயிரக்கணக்குப்பெற்ற அநேகநேக ஆஸைகளின் பந்தனத்தால் தங்கள் அறிவும் அன்பும் சுருக்கப்பட்டவர்களும்.

"ஆஸாபாஸம்"=ஆஸை என்ற கயிறு.

ஆஸைகளால் சுருக்கப்பட்ட அறிவே "சிற்றறிவு" எனப்படும். அறிவும் அன்பும் விஸாலமாகிப் பூர்ணத்தைப் பெறவேண்டுமெனில், அஸாத்த (அநாத்ம) விஷயங்களைப் பற்றும் ஆஸைகளினின்று மனசை ஒழித்து, அதைப் பரோபகார முயற்சிகளிலும், கர்மபலத்யாகத்திலும், ஆத்ம விசாரணையிலும், யோகாப்யாஸத்திலும் செலுத்தவேண்டும்.

(5) விஷயங்களில் ஆஸை கொள்வதும், ஆஸையை மறுத்தவர்களில் கோபங் கொள்வதுமே மேலான வாழ்வு என்ற நிஸ்

சயம் பெற்றவர்களும்.

(6) தோன்றி அழியும் விஷய ஸுகங்களுக்காக தர்மவிதி விலக்குக்களைக் கவனியாமல், தாங்கள் இச்சித்தபடி ஸமயம் வாய்த்தால் தந்த்ரமாக நிலம், வீடு, பணம், நகை, வீட்டுக்குரிய சோடினைகள் முதலிய பொருள் வகைகளை வலிந்து தேடுகின்றார்கள்.

"அர்த்த ஸஞ்சயங்கள்"=பொருட்கூட்டங்கள்.

**௰௩—௰௪. இப்போது இது என்னால் பெறப்பட்டது (1), இந்த மனோரதத்தைப் பெறப்போகின்றேன் (2), இந்தத் தனம் இருக்கின்றது, இனி இந்தத் தனமும் வரப்போகின்றது (3), இந்த ஶத்ரு என்னால் அழிக்கப்பட்டான், மற்றவர்களையும் அழிப்பேன் (4). நான் ஈஶ்வரன் (5), நான் போகி (6), நான் ஸித்தன் (7), நான் பலம்பெற்றவன் (8), நான் ஸுகி (9),**

**௰௫. நான் பணக்காரன் (10), நான் சிறந்த வம்ஶத்தான் (11), எனக்கு ஸமானன் வேறு யார், யாகஞ் செய்வேன் (12), கொடுப்பேன் (13), ஸந்தோஷிப்பேன் (14) என்று மோஹத்தை அஞ்ஞானத்தால் பெற்றவர்களும் (16),**

**௰௬. [இவ்வித] அனேக நினைவுகளால் ப்ராந்தி பெற்றவர்களும், மோஹ வலையினால் முற்றகச் சூழப்பட்டவர்களும் (17), காமபோகங்களில் மிக்க ஸங்கம் பெற்றவர்களும் (18), அஶுசியான நரகத்தில் வீழ்கின்றனர் (19).**

(1) நான் இச்சித்த காரியம் இன்றைக்குப் பெற்றேன்.

(2) நாளைக்கு, ரதம்போன்ற உயர்வையுஞ் சிறப்பையும் பெற்ற, ஆஶை நிறைவேறும்.

"மனோரதம்"=மானஸ ரதம், மனஸால் இயற்றப்பட்ட ரதம். ஒரு அல்ப ஆஶை மனவில் ஏற, மனஸ் அந்த ஆஶையைப் பெருப்பித்தும் சிறப்பித்தும் காட்டும். இப்படி மனஸால் அலங்கரிக்கப்பட்ட ஆஶையை "ரதம்" என்றார்.

(3) எனக்கு இதுவரையில் இவ்வளவு பொருள் இருக்கிறது, அடுத்த மாஸத்தில், அல்லது அடுத்த வருஷத்தில், இன்னும் பொருள் வரும், நான் அதிக பணக்காரனகவேண்டும்,

பணமிருந்தால் யாவரையும் அடக்கி ஆளலாம்.

(4) ஒரு ஶத்ருவை ஜயித்து, அவன் குடியைக் கெடுத்து விட்டேன். மற்ற விரோதிகளையும் பாழாக்குவேன்.

(5) எல்லாரையும் அடக்க எனக்குத் தெரியும்.

(6) ஸகல அநுபவங்களும் எனக்கு உண்டு.

(7) நான் வேண்டியதெல்லாம் முடித்துக்கொள்வேன்.

(8) நான் வல்லபி.

(9) எனக்குள்ள ஸுகங்கள் ஆருக்குண்டு.

(10) என்னிலும் பெரிய பணக்காரன் யார்.

(11) என்னுடைய வம்ஶம் மற்றவர்கள் வம்ஶத்திலும் உயர்ந்தது.

(12) இன்னும் ஜனங்கள் என்னைப்பற்றிப் பேசும்படியாக யாகத்தைச் செய்விப்பேன்.

(13) அன்னதானம் ஸ்வர்ணதானம் முதலியவற்றைச் செய்வேன்.

(14) எனது கீர்த்தியை நினைத்து ஆநந்தங் கொள்வேன்.

(15) விமூட புத்திகளை அகந்தை மமதையால் பெற்றவர்களும்.

(16) லோககாரியங்களையே பற்றி மிக நினைத்ததால், மனவில் மயக்கத்தைப் பெற்றவர்களும்.

(17) அனாத்மாவை ஆத்மா என்றும், துக்கத்தை ஸுகமென்றும், அநித்யங்களை நித்யங்கள் என்றும், தகாதவைகளைத் தகுந்தவை என்றும், கூறுகின்ற மோஹவலைக்குள் அகப்பட்டவர்களும்.

(18) விஷய ஸுகங்களில் மிக்கப்பற்றிருக்கின்றவர்களும்.

(19) அஶுத்த சித்தங்களுக்கு அடிமைப்பட்டுத் துன்பங்களை அநுபவிக்கின்றனர்.

“அஶுசியான நரகம்”=அஶுசி என்ற நரகம். இது சித்த ஶுத்தி இல்லாதவர்களுக்குரிய நரகம்.

“நரகம்”=துன்பம் நிறைந்த லோகம்.

மானுட லோகம் இன்ப துன்ப லோகம் எனப்படும், மிஶ்ர கர்ம பூமியாதலால் (அதாவது, புண்யகர்மமும் பாபகர்மமும்

கலந்து செய்பவர்களுக்கு உரிய ஸ்தானமாதலால்)

**௰எ—௰அ. 'தங்களால் புகழப்பட்டவர்களும் (1), ஸ்தப்தர்களும் (2), தனத்தாலுண்டான அபிமானமும் செருக்கும் கொண்டவர்களும் (3), அஹங்காரத்தையும் பலத்தையும் இறுமாப்பையும் காமத்தையும் க்ரோதத்தையும் அண்டினவர்களும் (4), தன் தேஹத்திலும் பிறர் தேஹத்திலும் [உள்ள] என்னைப் பகைக்கின்றவர்களும் (5) அஸூயை கொண்டவர்களும் (6) ஆகியவர்கள், விதியை முன்னிடாமல், தம்பமாக நாம யஜ்ஞங்களால் [என்னைப்] பூஜிக்கின்றனர் (7).**

(1) தங்கள் பெருமையைத் தாங்களே பேசிக்கொள்ளுகிறவர்களும்.

(2) ஸ்தூல அறிவைப் பெற்ற தடியர்களும்.

இவர்கள் உரல்போன்ற தேஹத்தைப் பெற்று, தங்கள் ஸுகத்தையும் பெருமையையும் விரும்பி, பிறரை உபஸரிக்காமலும், சொன்னதை க்ரஹிக்காமலும், தங்கள் அபிப்ராயங்களையே கூறிக்கொண்டும், பெரும் போஜனத்திலும் தூக்கத்திலும் மிகப்ரீதி வைத்தும் இருப்பார்கள்.

(3) நான் பணக்காரன் ஆதலால் என்னை யாவரும் மதிக்கவேண்டும் என்ற புத்தியையும், நான் ஒருவனையும் மதிக்கவேண்டியதில்லை என்ற செருக்கையும் உடையவர்களும்.

(4) அகந்தை மமதையையும், கடினத்தையும், கர்வத்தையும், வாஞ்சையையும், கொடுங் கோபத்தையும் பெற்றவர்களும்.

(5) தேஹத்துக்குரிய விருப்பு வெறுப்புக்களை அநுஸரித்தும், ஆத்மாவின் நன்மையை அநுஸரிக்காமலும், நடக்கின்றவர்கள் பரமேஶ்வரனில் ஶ்ரத்தை இல்லாதவர்கள் என்பது பற்றி, "என்னைப் பகைக்கின்றவர்" என்றார்.

(6) பிறர் ஸுகத்திலும் பெருமையிலும் புகழ்ச்சியிலும் பொறாமை பெற்றவர்களும்.

(7) கர்மாநுஷ்டானங்களுக்குரிய விதிகளை மறந்து, பாமர ஜனங்களின் (ப்ரமாணமற்றவர்களின்) புகழ்ச்சியைப் பெறுவதற்காகப், போலி யாகங்களால் என்னை வழிபடப் பார்க்கிறா

ர்கள்.

"நாம யஜ்ஞும்"=பேரில் மாத்ரம் யாகம், அர்த்தத்தில் யாகமல்ல.

**௰௯. ஶத்ருக்களாயும் (1) க்ரூரர்களாயும் (2) அஶுபர்களாயும் (3) உள்ள அந்த அதம நரரை (4) ஸம்ஸாரங்களில் (5) ஆஸுர யோனிகளிலேயே எப்பொழுதும் நான் போடுகின்றேன் (6).**

(1) கோபத்தை நெடுநாள் சாதித்து, தங்கள் சித்தப்படி இசையாதவர்களுக்குத் தீங்கு செய்கின்றவர்களாயும்.

(2) துன்பஞ் செய்வதிலேயே ஸமர்த்தர்களாயும்.

(3) மற்றவர்கள் ஸுகத்தில் பொறாமை கொண்டவர்களாயும்.

(4) கீழான (மல ஸம்பந்த) புத்தியுடைய மானுடர்களை.

(5) அவரவர்கள் மரணகாலத்தின் பின், நரக ஸ்வர்க்க அநுபோகங்களை அநுபவித்தபின், பூலோகத்தில் பிறவியைப் பெற வந்த காலங்களில்.

(6) ஆஸுரம் என்ற யோனிகளில் (பிறவிப் பைகளில்) அவர்களை எக்காலமும் தரிக்கச் செய்கின்றேன்.

அதமர்களுக்குத் தைவ ஸம்பத் கர்ப்பப் பையில் அமையாது, ஆஸுர ஸம்பத்தே அமையும், என்பது பற்றி, "ஆஸுரயோனிகளிலேயே நான் போடுகின்றேன" என்றார்.

அதம நரர் ஆஸுர் யோனியைப் பெறுவார்கள் என்றதால், உத்தம நரர் தைவ யோனியையும், மத்ய நரர் தைவாஸுர மிஶ்ர யோனியையும், பெறுவார்கள் என அறியவேண்டியது.

**௨௰. கௌந்தேய, ஆஸுரயோனியைப் பெற்ற மூடர்கள் என்னைப் பெறாமல் (1), அதிலும் அதமமான கதியைப் பிறக்கப் பிறக்க அடைகின்றார்கள் (2).**

(1) பரமேஶ்வரனையாவது ஶாந்த தேவதைகளையாவது வழிபடாமல்.

(2) மானுடப் பிறவியை இழந்து, ம்ருகம் வ்ருக்ஷம் முத

விய தேஹங்களைப் பெறுகின்றார்கள்.

**உ௰க. மனஸைக் கெடுக்கின்ற (1) நரகத்தின் த்வாரம் காமம் என்றும் க்ரோதம் என்றும் லோபம் என்றும் மூன்று விதம் (2). ஆத லால் இம்மூன்றையும் விடவேண்டும் (3).**

(1) "நாஶநம் ஆத்மந:"=மனஸைக் கெடுக்கின்ற. நி. சு.

(2) காமமும் க்ரோதமும் லோபமும் மூன்று துன்ப த்வா ரங்களாகி, அத்துவார வழிகளால் வந்த துன்பங்கள் மனஸின் ஶக்திகளை அழிக்கும்.

(3) ஆத்ம உத்தாரணத்திற்கு மனஸ் உற்ற துணையாய் இருக்கவேண்டுமெனில், இம்மூன்றையும் ஜயிக்கவே வேண்டும்.

**உ௰உ. கௌந்தேய, தமோ த்வாரங்களான இம்மூன்றால் விடப் பட்ட நரன் மனஸின் ஶ்ரேயஸை அநுஸரிக்கின்றான் (1). ஆதலால், மேலான கதியைப் பெறுகின்றான் (2)**

(1) தமோகுண கார்யங்களாகிய காம க்ரோத லோபங் கள் என்ற வழிகளில்நின்று விடுபட்ட மநுஷ்யன் மனஸின் உத்தாரண ஶக்திகளைக் காக்கின்றான்.

(2) மனஸ் பரமேஶ்வரனது உத்தாரண ஶக்திகளைப் பெற் று, ஜீவாத்மாவை மோக்ஷத்துக்கு உரியவனாக்குகின்றது.

**உ௰௩. எவன் காமகாரத்தால் (1) ஶாஸ்த்ர விதியை விட்டு நட க்கின்றானோ (2), அவன் ஸித்தியைப் பெறுகிறானில்லை (3), ஸுகத்தை யும் பெறுகிறானில்லை (4) மேலான கதியையும் பெறான் (5).**

(1) ஆசைகளின் சேஷ்டைகளால், வேகத்தால்.

(2) விஷயஸுக ஆஶைகளால் ஏவப்பட்டு, எவன் விதி விலக்கு ரூபமான தர்மத்தை அநுஸரிக்காமல் திரிகின்றானோ.

(3) அவன் ஶுத்த மனஸால் பெறக்கூடிய நைஷ்கர்ம்ய ஸித்திகளைப் பெறுகின்றானில்லை.

(4) தெளிந்த மனஸினின்று தோன்றும் ஸாத்விக ஸுகங்

களையும் அறியான். (அத். ௰அ, ௩௰எ இல் ஸாத்விக ஸுகம் விளக்கப்பட்டது.)

(5) பரம் ஶாந்தியாகிய மோக்ஷத்தையும் பெருன்.

**உ௰௪. ஆதலால் ([1]), [எது] கார்யம், [எது] அகார்யம், என்பவையின் தீர்மானத்தில் ஶாஸ்த்ரம் உனக்கு ப்ரமாணம் ([2]). ஶாஸ்த்ர விதியில் கூறப்பட்டதை அறிந்து ([3]), [க்ஷத்ரிய] தர்மத்தை இவ்விடத்தில் ([4]) செய்வதற்கு உரியவனுகிறய்.**

(1) நைஷ்கர்ம்ய ஸித்தியும், ஸாத்விக ஸுகமும், முக்தியும் ஶாஸ்த்ரார்த்த விமூடனுக்கு இல்லாததால்.

(2) அந்தத்தர்ம ஶாஸ்த்ரமே எது செய்யத்தக்கது எது செய்யத்தகாதது என்று நீ கேட்ட கேள்விகளுக்குப் ப்ரமாணமாயிருக்கின்றது.

"ப்ரமாணம்"=உண்மையான அறிவை ஏற்படுத்தும் கருவி.

இது ப்ரத்யக்ஷம், அநுமானம், உபமானம், ஶப்தம் (ஆப்தர் வாக்யம், உண்மை பேசுவோரின் சொல்) என நால்வகைப்படும்.

இந்த நான்கு கருவிகளாலும் தர்மஶாஸ்த்ரம் ஸ்திரப்படுத்தப்பட்டதால், "ஶாஸ்த்ரம் உனக்கு ப்ரமானம் என்ருர்."

(3) தர்ம ஶாஸ்த்ர ஶாஸனங்களின் அர்த்தங்களை உள்ளபடி அறிந்து.

(4) இந்த யுத்த களத்தில்.

---

**உபநிஷத்தகளென்றும் ப்ரஹ்மவித்தை என்றும் யோகஶாஸ்த்ரம் என்றும் பகவத்கீதைகள் என்றும் கூறப்பட்ட க்ருஷ்ணர்ஜுந ஸம்வாதத்தில் ப்ரஸித்திபெற்ற தைவாஸுர ஸம்பத் விபாக யோகம் என்ற பதினறும் அத்யாயம் முற்றிற்று.**

# பதினேழாம் அத்யாயம்.

## ஶ்ரத்தா த்ரய விபாக யோகம்.

---

[அஃதாவது, யஜ்ஞம் தானம் தபஸ் என்ற ஆத்ம உத்தா ரண கர்மங்களிலும், ஆஹாரம் என்ற தேஹ ஸம்ரக்ஷண கர்ம த்திலும், உள்ள நிஶ்சயம் (ஶ்ள. ரு, ௩), ப்ரியம் (ஶ்ள. அ, ௯), இஷ்டம் (ஶ்ள. ௯), மனம் வைத்து யஜித்தல் (ஶ்ள. ௰௧), "ஶ்ர த்தை" எனப்படும் என்றும், அது பரமேஶ்வரனுடைய அநுக் க்ரஹ ஶக்திகளில் ஒன்றென்றும், யஜ்ஞம் தானம் தபஸிலும் ஆஹாரத்திலும் உள்ள ஶ்ரத்தை ஒருவனுடைய ஸத்வ ரஜஸ் தமஸ் குணங்களுக்கு ஒத்தபடியே அருளப்படுவதால், அது ஸாத்விகீ ராஜஸீ தாமஸீ என மூவகைப்படும் என்றும், யஜ் ஞம் தானம் தபஸ்களில் ஶ்ரத்தையற்றவன் அவற்றைச் செய் தால், அவன் அபீஷ்ட ஸித்தி சித்த ஶுத்தி முதலிய பலன்க ளைப் பெறமாட்டான் என்றும், கூறப்பட்ட உபதேஶங்களை அர்ஜுநன் கேட்டுச் சிந்தித்தான் என்று விளக்கும் பதினே ழாம் பாடம்.]

அர்ஜுந ந் கூறினன்.

௧. ஆனால், ஓ க்ருஷ்ண, எவர்கள் ஶாஸ்த்ர விதியை விட்டு ஶ்ர த்தையுடன் கூடினவர்களாய் யஜிக்கின்றார்களோ, அவர்களின் நிஷ் டை என்ன? ஸத்வமா, அல்லது ரஜஸா, அல்லது, தமஸா? (1).

(1) ஶ்ரௌத்த ஸ்மார்த்த ஶாஸ்த்ரங்களின் விதிகளை வழு வவிட்டு (கூறினபடி ஒழுங்காக அநுஸரிக்காமல்) ஒருவன் உள் ளன்போடு தேவ 'உபாஸனை செய்து வருகின்றானாகில், அவ னது மனோநிலை ஸத்வமா, ரஜஸா, தமஸா?

பகவான் பல்முறையும் அர்ஜுநனுக்கு, தர்ம ஶாஸ்த்ரார்

த்த விமூடம் இருப்பதால், அவன் துக்க பய விஷாதங்களுக்கு ஆளானன் என்று சொன்னதை மனவில் வைத்து, தனக்கு உதயமான ஒரு ஸங்கையைத் தீர்க்கும்படி இந்த ஶ்லோகத்தி லுள்ள வினவைக் கேட்டான்.

இவ்வினவில் அடங்கிய அர்த்தம் மேல்வருமாறு விரியும்:- "எனக்குத் தர்ம ஶாஸ்த்ரத்தின் ஸூக்ஷ்ம கதி தெரியாதென்பது வாஸ்தவமே. ஆனல், எனக்குக் குரு ஶ்ருதி தெய்வம் என்றவற்றில் ஶ்ரத்தை உண்டே, இந்த ஶ்ரத்தையைக்கொண்டு கர்மாநுஷ்டானங்களை நடத்தி வருகின்றேன். எனது ஶ்ரத்தைக்கும் த்ரிகுணங்களுக்கும் என்ன ஸம்பந்தம்? குணங்கள் மூவித விபாகத்தைப் பெற்றனபோல, ஶ்ரத்தையும் மூவிதமாயிருக்குமோ?" என்பது கருத்து.

**ஸ்ரீ பகவான் கூறினர்:—**

**௨. ஸாத்விகீ என்றும், ராஜஸீ என்றும், தாமஸீ என்றும் (1) மூன்றுவிதமான ஶ்ரத்தை ப்ராணிகளுக்கு இருக்கின்றது, அது ஸ்வபாவத்தால் பிறந்தது (2). அதைக் கேள்.**

(1) "ஸாத்விகீ"=ஸத்வ குணமயம். "ராஜஸீ"=ரஜஸ்குணமயம். "தாமஸீ"=தமஸ் குணமயம்.

ஸம்ஸ்க்ருதத்தில் "ஶ்ரத்தா" என்ற பதம் பெண்பாலாயிருப்பதால், "ஸாத்விகீ" "ராஜஸீ" "தாமஸீ" என்ற பெண்பால்ரூப சார்புச்சொற்கள் அதனோடு சேர்க்கப்பட்டன.

"குண" என்ற பதம் ஆண்பாலாயிருப்பதால், "ஸாத்விக" "ராஜஸ" "தாமஸ" என்ற ஆண்பால் ரூப சார்புச்சொற்களோடு சேர்க்கப்பட்டது.

(2) இந்த ஶ்ரத்தை "ஸ்வபாவம்" என்ற ப்ரக்ருதிவழியால் (அ. ௲.) ஜீவாத்மாவுக்கு வந்தது.

தனது அம்ஶங்களாகிய அறிவும் அன்புமே ஜீவாத்மா என்று ௰௫. எ இல் பகவான் உபதேஶித்து; இந்த அத்யாயத்தின் ௩-வது மந்த்ரத்தில் ஜீவாத்மா "ஶ்ரத்தாமயம்" என்று கூறி, ஶ்ரத்தை ப்ரக்ருதி குணங்களைப் பற்றியே ஜீவனுக்கு

அமைக்கப்பட்டது என்று விளக்கினார்.

மல ஸம்பந்தமாயிருக்கின்ற ஜீவாத்மாவுக்கு அறிவும் அன்பும் மிகக் குன்றி இருப்பதைப் பரமேஸ்வரன் கண்டு, அவனுக்கு ஶ்ருதியையும் குருவையும் தெய்வத்தையும் அருளி, அவனுடைய அன்பை இம்மூன்று வஸ்துக்களைப் பற்றச் செய்து, மெல்ல மெல்ல மலங்களைப் போக்கடித்து, குறுகின (சிற்) அன்பைப் பேரன்பாகச் செய்துவருகின்றார்.

ஶ்ருதி குரு தெய்வங்கள் ப்ரக்ருதி ஸம்பந்தப்பட்டே தோன்றுவதாலும், ஜீவாத்மாவின் அன்பிற்கு இவை விஷயமாக்கப்பட்டதாலும், ஜீவாத்மாவுக்கும் ஶ்ருதி குரு தெய்வங்களுக்கும் உள்ள ஶ்ரத்தை ப்ரக்ருதி வழியாலேயே, புண்ய கர்மங்களுக்குத் தக்கபடி, அருளப்பட்டது.

ஶ்ரத்தைக்கும் அன்புக்கும் ஆசைக்கும் பேதம் யாதெனில், முதல் அன்பின் லக்ஷணம் கூறுவோம்.

அன்பானது ஆத்ம அம்ஶம். இது ப்ரக்ருதிக்குரியதன்று. பரமாத்மா அகண்டாகார ஸச்சிதானந்தமெனப் ப்ரஸித்தி பெற்றது. ஸதாகாலமும் தன் மெய்நிலை குலையாது நிற்பதால், "ஸத்" எனவும், ஞான மய (அறிவு சொரூப) மாதலால். "சித்" எனவும், சலனமற்ற ஶாந்த வஸ்துவாதலால் "ஆனந்தம்" எனவும் போற்றப்பட்டது. இந்த ஸச்சிதானந்தப் பொருள் பேரறிவுமன்புமாயுள்ள ஶிவம். அன்பே ஶிவம் என்றார் திருமூலர்.

அன்பு பிறர் ஸுகத்தை அறிந்து காக்கத்தக்க ஜீவகாருண்யம். எப்பொழுதும் இனியதாயும் உருகியும் இசைந்தும் கொடுத்தும் வாழ்த்தியும் நிற்கும்.

ஆசை கடினம். பிறர் நன்மையை அறியாது, ஸஹிக்காது, இரங்காது. தணல் போல நின்று விஷயங்களை விறகுபோலப் பற்றி எரியும். வேண்டிய விஷயத்தைப் பெற்றவுடனே, வேறொன்றை நாடும். போதும் என்ற தன்மை இதற்கில்லை. ஒரு வேளை விரும்பும், இன்னொரு வேளை வெறுக்கும். வேண்டும் வேண்டாம் என்ற அவாக்களாய்த்திரியும்.

விரும்பின பொருளில் மனசை ஏவும். வெறுத்த பொரு

ளில் அருவருப்பு உண்டாக்கும். விருப்பு வெறுப்பை மறுத்த வர்கள்மேல் கோபரூபமாய் பாயும். எக்காலமும் ஸஹிக்கா மையையும் சலனத்தையும் நிரம்பாததன்மையையும் உடைய தால், ஆசை துக்கம் எனப்படும்.

ஆசையிற் சிக்குண்ட ஜீவனுக்கு அறிவும் அன்பும் குன் றின. இவை சிறுக, ஜீவாத்மா ஆசையே தான் என்றும், ஆசையின் த்வந்த்வங்களாகிய விருப்பும் வெறுப்பும் தன் அம்சங்கள் என்றும், எண்ணி, தன் சச்சிதானந்த ஸொரூப த்தை முற்றுக மறந்தான்.

இந்த அறியாமையை நீக்கும்பொருட்டு பரமேஶ்வரன் தநு கரண புவன போகங்களையும் தர்மத்தையும் ஶ்ரத்தை யையும் ஜீவாத்மாக்களுக்குத் தத்தம் பக்வகாலத்தில் அருள் கின்றார்.

ஶ்ரத்தை "விஶ்வாஸ" ரூபமாய் மனஸில் நின்று, மனஸ் நினைக்கும் பொழுது நினைத்த பொருளில் மனஸையும் புத்தி ய்யையும் சித்தத்தையும் வஸிக்க (தங்கிநிற்க) ச் செய்யும். இத ஞல் கர்மாநுஷ்டானம் ஸித்திக்கும்.

எனவே, யஜ்ஞம் தானம் தபஸ் என்ற உபாஸன தர்மங் களுக்கும், உணவு உடுப்பு ஒழுக்கம் என்ற ஸ்தூல அநுஷ்டா னங்களுக்கும், ஶ்ரத்தை விஶேஷ ஸாதனம் என்றறிக.

**௩. பாரத, ஸர்வத்திற்கும் (1) ஶ்ரத்தை [அவரவர்] நிலைக்கு அநுகூலமாயிருக்கின்றது (2). இந்த [ஜீவ] புருஷன் ஶ்ரத்தாமயம் (3). எவன் எதில் ஶ்ரத்தையுள்ளவனே, அவன் அதுவே (4).**

(1) தத்தம் பக்வகாலத்தில் ஶ்ரத்தையைப் பெறுகின்ற ஸர்வ ஜீவர்களுக்கும்.

(2) அவரவர்களுடைய ஸத்வ ரஜஸ் தமஸ் குணங்களு க்கு ஏற்றபடியே ஶ்ரத்தை அமைக்கப்படும்.

"ஸத்வாநுரூபா பவதி"="ஸத்வ" (இருத்தலின் தன்மை, நிலை)+"அநுரூப" (அநுகூலமாய்)+"பவதி" (இருக்கின்றது)= அவரவர்களின் நிலைக்கு ஒத்திருக்கின்றது.

(3) தமஸ் ரஜஸ ஸத்வ குணங்களுக்கு அநுகூலமாகவே ஶ்ரத்தை அருளப்படுவதாலும், அந்த ஶ்ரத்தை மனம் புத்தி சித்தம் அஹங்காரம் என்ற அந்தஃகரணங்களிலும், வாக்கு பாதம் பாணி என்ற கர்மேந்த்ரியங்களிலும் விஶ்வாஸரூபமாய்ச் சென்று காரியப்படுவதாலும், ஜீவாத்மா ஶ்ரத்தையைப் பற்றியே வாழத்தக்கவன்.

இவன் ஸாக்ஷிரூபன். வெளியிலுள்ள லோகவிஷயங்களை ஐம்பொறிகளாலும், மறைவாக இருக்கும் காரியங்களை புத்தியாலும், விசாரித்து அறிவான். அறிந்த அறிவுக்குத் தக்கபடியே ஶாந்தப்படுவான். இருளுக்கு மாற்று ஒளி என்றது போல, அறிவிலிருக்கும் மலங்களுக்கு மாற்று மெய்ஞானம். லோகத்தைப்பற்றிய கல்வி கற்றலுக்கும் ஆத்மாவைப்பற்றிய கல்வி கற்றலுக்கும் ஶ்ரத்தை அத்யாவஶ்யம். எதில் ஶ்ரத்தை செல்லுமோ அதில் ஜீவாத்மாவும் சென்று, அதைப் பார்த்துக்கொண்டேயிருந்து, அதன் தன்மையைப் பெறுவான், என்பதுபற்றி, "இந்த [ஜீவ] புருஷன் ஶ்ரத்தாமயம்" என்றார்.

ஶிவாகமங்களில் அநுபவமுறையாகக் கூறப்பட்ட உண்மையைத் தாயுமான ஸ்வாமி சிதம்பர ரஹஸ்யத்தில் "யாதொன்று பற்றின் அதன் இயல்பாய் நின்று பந்தமறும் பளிங்கனைய சித்து நீ" என்று உபதேஶித்தார். ஜீவாத்மா பளிங்கைப் போன்றது. எதற்கு ஸமீபமாய்ப் பளிங்கு நிற்குமோ, அதன் வர்ணத்தைப் பெறும். அவ்வாறே ஶ்ரத்தையோடு கூடி, ஶ்ரத்தையின் இயல்பை ஜீவாத்மா தரிக்கும். எதை ஶ்ரத்தை பற்றிற்றோ, அதை ஜீவாத்மா பற்றி அநுபவிப்பதால், ஜீவாத்மா ஶ்ரத்தாமயமே.

ஶ்ரத்தை இல்லாதுபோனால் மாநுடதேகம் பெற்ற ஜீவாத்மாவுக்கு நல்லறிவு வஸித்திக்காது. சிற்றறிவு பேரறிவாகாது. சின்றன்பு பேரன்பாகாது. இப்படியாவதற்கு ஶ்ரத்தை என்ற உத்தாரண ஶக்தி முக்ய ஸாதனம்.

ஶ்ரத்தைக்கு இருப்பிடம் தெளிவுள்ள மனஸும் புத்தியும். அவற்றில் நின்றே ஶ்ரத்தைப்ரத்யக்ஷமாவதால், "ஸ்வபாவத்தால் பிறந்தது" என்று இரண்டாம் மந்த்ரத்தில் போதித்தார்.

இனி, ஶ்ரத்தை பூர்வகமாக ஜீவாத்மா உபாஸிக்கின்ற தெய்வம் அவன் குணங்களுக்கு ஏற்றபடியே தெரிந்தெடுக்கப்படும் என்று போதிப்பார்.

**௪. ஸாத்விகர் தேவர்களையும், ராஜஸர் யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும், மற்றத் தாமஸ ஜனங்கள் ப்ரேதங்களையும் பூதங்களையும் பூஜிக்கின்றனர் (¹).**

(1) மூவிதமாகப் பிரிக்கப்பட்ட ஶ்ரத்தையில், ஸாத்விக ஶ்ரத்தையைப் பெற்றவர்கள் ஶாந்த தேவதைகளையும், ராஜஸ ஶ்ரத்தையைப் பெற்றவர்கள் அகோரமான யக்ஷ ராக்ஷஸர்களையும், தாமஸ ஶ்ரத்தையைப் பெற்றவர்கள் பூதப்ரேத பிஶாசர்களையும் வழிபடுவார்கள்.

அடுத்த ௫-௬ ம் மந்த்ரங்களில் ராஜஸ ஶ்ரத்தையைப் பெற்றவர்கள், தோன்றி அழியும் விஷய ஸுகங்களைப் பெறுவதற்குத், தேஹத்தையும் மனஸையும் வாட்டித், தர்ம விதிகளில் காணாத பயங்கரமான தபஸ்களைச் செய்வார்கள் என்றும், இவர்கள் ஆஸுர புத்திமான்கள் என்றும் போதிப்பார்.

**௫—௬. எந்த ஜனங்கள் தம்பம் அஹங்காரம் என்றவைகளோடு கூடி (¹), போக்ய வஸ்துவில் மிக விருப்பங்கொண்டு, விவேகமற்றவர்களாய், [ஸ்தூல] ஶரீரத்தில் வஸிக்கின்ற ஸூக்ஷ்ம ஶரீரக் கூட்டத்தை வாடச்செய்து (¹), அந்த ஶரீரத்தில் உள்ள என்னையும் வாடச்செய்து (²), ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்படாததும் (³) கோரமுமாகிய தபஸைச் செய்கின்றனரோ, அவர்களை ஆஸுர நிஶ்சயர்களாக(³) அறி.**

(1) அவர்களுடைய ஸூக்ஷ்ம ஶரீர தத்வங்களாகிய ப்ராணாதிகளையும், வாக்காதி கர்மேந்த்ரியங்களையும், மனாதி அந்தக்கரணங்களையும், ஶ்ரோத்ராதி ஞானேந்த்ரியங்களையும் துன்பப்படுத்தி.

(2) ஜீவப்ரக்ருதியில் வஸிக்கின்ற என்னை அநுக்ரஹஞ் செய்ய விடாமல்.

(3) மூட ஆஸானிடம் கற்றதும். அத். ௰எ. ௰௧. (1)

(3) வருத்தத்தை உண்டுபடுத்தும் ஆஸுர ஶ்ரத்தையே தக்க ஶ்ரத்தை என்ற தீர்மானம் பெற்றவர்கள் என்று.

இனி, உபாஸனைக் காரர்களுக்கும் ஏனையோர்க்கும் ஆஹாரம் அத்யாவஶ்யமாயிருந்தும் பல வேற்றுமைகளை உடையதாலும், அவற்றின் காரணங்கள் குணமும் ஶ்ரத்தையுமாதலாலும், ஆஹாரத்தை யஜ்ஞம் தானம் தபஸ்களோடு சேர்த்து, அததற்குரிய பேதங்களை எ-உ௰உ மந்த்ரங்களில் கூறுவார்.

எ. யாவருக்கும் ப்ரியமான ஆஹாரமும் யஜ்ஞமும் தபஸும் தானமும் மூன்றுவிதமாயிருக்கின்றன. அவைகளின் பேதத்தைக் கேள்.

அ. ஆயுள், ஸத்வம், பலம், ஆரோக்யம், ஸுகம் என்றவைகளை வளர்க்கின்றவைகளும் ரஸம் பெற்றவைகளும், பசை உள்ளவைகளும், ஸ்திரப்படுத்தக்கூடியதும், ஹ்ருதயத்தை மலரச் செய்வதும் ஆகிய ஆஹாரங்கள் ஸாத்விகருக்கு ப்ரியமானவைகள் (1).

(1) ஸாத்விகி ஶ்ரத்தை பெற்றவர்களுக்கு இயல்பிலே ப்ரியமான ஆஹாரம் ஆயுளைச் சேதம் பண்ணாததும், புத்தியின் தெளிவையும், பலத்தையும், வ்யாதி இல்லாமையையும், த்ருப்தியையும், இனிய குணத்தையும் வ்ருத்தி செய்கின்றவைகளும், மதுரமானவைகளும், குழைவு பெற்றவைகளும், தாதுக்களை நல்ல ஸ்திதியில் வைப்பதும் ஸந்தோஷத்தைத் தருவதுமாம்.

௯. கசப்பு உள்ளவைகளும், புளி உள்ளவைகளும், உப்பு உள்ளவைகளும். மிகச் சூடு உள்ளவைகளும், உறைப்பு உள்ளவைகளும், துவர்ப்பு உள்ளவைகளும், உள் எரிவை உண்டாக்குகின்றவைகளும், துக்கத்தையும் ஶோகத்தையும் வியாதியையும் கொடுக்கின்றவைகளுமாகிய ஆஹாரங்கள் ராஜஸனுக்கு இஷ்டங்களானவை(1).

(1) ராஜஸீ ஶ்ரத்தை பெற்றவர்களுக்கு ப்ரியமான ஆஹாரம் இதில் கூறப்பட்டது.

௰. எந்தப்போஜனம் [பாகமானபின்] யாமஞ் சென்றதும் (1), ரஸம் போனதும், நாற்றம் பெற்றதும், பழையதும், உச்சிஷ்டமானதும் (2), பரிஶுத்தமில்லாததுமோ, [அது] தாமஸர்களுக்கு ப்ரியம்.

(1) சமையலாகி வெகுநேரம் வைக்கப்பட்டதும்.
(2) எச்சிலாக்கப்பட்டதும்.
உச்சிஷ்ட போஜனம்=சாப்பிட்டபின் ஶிஷ்டமாகி (எஞ்சினதாய்) விலக்கத்தக்க உணவு.
தாமஸீ ஶ்ரத்தை பெற்றவர்களுக்கு ப்ரியமான ஆஹாரம் இதில் கூறப்பட்டது.
அடுத்த மூன்று மந்த்ரங்களில் யஜ்ஞ கர்மாநுஷ்டானிகளின் பேதங்கள் கூறப்பட்டன.

**௰௧. பலத்தில் விருப்பமற்றவர்களால் விதியில் காணப்பட்ட எந்த யஜ்ஞம் செய்யவே வேண்டும் என்று மனம் வைத்துச் செய்யப்படுகின்றதோ, அது ஸாத்விகம்.**

**௰௨. பாரத ஶ்ரேஷ்ட, பலத்தைக் கருதியும், தம்பத்துக்காகவும், எந்த யஜ்ஞம் செய்யப்படுகின்றதோ, அதை ராஜஸம் என்றறி.**

**௰௩. விதியில்லாததும், அன்னங் கொடுக்கப்படாததும் (1), மந்த்ரமற்றதும், தக்ஷிணையற்றதும், ஶ்ரத்தையற்றதும் ஆகிய யஜ்ஞத்தைத் தாமஸம் என்று கூறுகின்றனர்.**

(1) அன்ன நிவேதனம் இல்லாததும்.
இனி தபஸ்விகளை விபாகஞ் செய்வார்.

**௰௪. தேவர்கள், த்விஜர்கள் (1), குருமார், அறிவாளிகள் என்றவர்களைப் பூஜித்தலும், ஶௌசமும், ஆர்ஜவமும், ப்ரஹ்மசர்யமும் (2), அஹிம்ஸையும் ஶாரீர தபஸ் என்று கூறப்படுகின்றது.**

(1) இரண்டாம் பிறவியாகிய கைவல்ய தஶையை உள்ளபடி பெற்ற ப்ரஹ்மஞானிகள்.
ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஶ்ய குலங்கள் என்று கூறப்பட்ட ஸ்தூல தேஹ வர்ணத்தில் பிறந்தவர்கள் இந்த கைவல்யத்தைப் பெறுவதற்காக உபநயன க்ருத்யத்தைச் செய்து ஸந்த்யாவந்தனம் முதலிய யஜ்ஞங்களைச் செய்து வருவோம் என்ற வ்ரதத்தைக் கொண்டமையால், இவர்களையும் உபசாரமாகப் பெரியோர்கள் "த்விஜர்" என்று கூறுவார்கள். ஆனால், அந்த

*வ்ரதங்களை முறித்தவர்கள் சண்டாளர் எனப்படுவார்கள்.*

*(2) விவாஹத்திற்கு முன் உபநய்னந் தொட்டு ஸத்குரு வாஸஞ் செய்து, வேதாத்யயனம் தர்மஶாஸ்த்ரம் முதலிய பாடங்களைக் கற்று, குருஸேவை செய்து வருகின்ற ஶிஷ்யர்கள் ப்ரஹ்மசாரிகள்.*

**௧௫. உத்வேகங்களைச் செய்யாததும் (1), ஸத்யமும் ப்ரியமும் ஹிதமுமாகிய வாக்யமும், ஶாஸ்த்ர படனமும், வாங்மய தபஸ் என்று கூறப்படுகின்றது.**

*(1) கோபம் பொறாமை முதலிய தோஷங்களை உண்டுபடுத்தாததும்.*

**௧௬. மனப்ப்ரஸாதம் (1), ஸௌம்யத்வம் (2), மௌனம் (3), மனோநிக்ரஹம் (4), சித்தஶுத்தி (5) என்றவைகள் மானஸ தபஸ் என்று கூறப்படுகின்றன.**

*(1) மனத்தெளிவு, ஶாந்தி.*

*(2) ஸோமனைப்போல ஸந்தோஷத்தை விளைவிக்கும் களை. (ஸோமன்=சந்த்ரன்).*

*(3) மனம் வாக்குக் காயம் என்ற த்ரிகரண அடக்கம். இவற்றுள் மன அடக்கம் என்றது நினையாமலிருத்தல். நினையாமலும் நித்ரை கொள்ளாமலும் இருத்தலுக்கு நேர் ப்ரயோஜனம் ஆத்மதர்ஶனம்.*

*(4) ஐம்புலன்களை நாடியோடும் ஐம்பொறிகளோடு மனஸைச் செல்லவிடாமல் புத்தியில் ப்ரதிஷ்டை செய்தல். இப்படிப் பிடித்து வைத்தலுக்கு நேர் ப்ரயோஜனம் புத்திப்ரகாஶம், விசாரணையில் ஸித்தி.*

*(5) தீர்மானங்களில் கபடின்மை.*

**௧எ. பலத்தில் விருப்பமற்றவர்களும் [ஞானம் யோகம் என்றவைகளோடு] சேர்ந்தவர்களுமாகிய நரரால் மேலான ஶ்ரத்தையுடன் செய்யப்பட்ட மூன்றுவித தபஸை ஸாத்வீகம் என்று கூறுகின்றனர்.**

**௰௮.** ஸத்காரம் ([1]), மானம், பூஜை ([2]) என்றவைகளுக்காக தம்பத்தினால் எந்தத் தபஸ் செய்யப்படுகின்றதோ, அது இவ்விடத்தில் ([3]) ராஜஸம் என்று கூறப்படுகின்றது. அநித்யமாயும் ([4]) சலனம் பெற்றதுமாயும் ([5]) [இருக்கின்றது].

(1) *(பிறர் தன்னை) நல்லவனென்று மதித்தல்; பிறர் உபசரணை.*

(2) *(பிறர் தன்னைப்) போற்றுதல்.*

(3) *இந்தப் பூலோகத்தில்.*

(4) *பொய்யாயும் ப்ரயோஜனமற்றதாயும்.*

(5) *துக்கத்திற்கு இடமாயும்.*

**௰௯.** மூடஞானத்தால் ([1]) தன்னை வருத்தி ([2]) எந்தத் தபஸ் செய்யப்படுகின்றதோ, அல்லது அன்யனுடைய கெடுதலைக் கருதி,[எந்தத் தபஸ் செய்யப்படுகின்றதோ], அது தாமஸம் என்று கூறப்பட்டது.

(1) *அறியாதவர்களோடு பழகின பழக்கத்தால்.*

(2) *தன் மனதையும் தேஹத்தையும் வருத்தி.*

*இனி தானம் மூவகைப்படும் என்று கூறப்படும்.*

**௨௰.** [தக்க] தேசத்தில் ([1]), காலத்தில் ([2]) பாத்ரத்தில், ப்ரதியுபகாரத்தைச் செய்ய இடமில்லாதவனுக்குக், கொடுக்கவேண்டும் என்று [மனம் வைத்து], எந்தத் தானம் கொடுக்கப்படுகின்றதோ, அது ஸாத்விக தானம் என்று நினைக்கப்பட்டது.

**௨௰௧.** ப்ரதியுபகாரத்துக்கோ, பயனைக்கருதியோ, எது ஸம்மதமில்லாமல் கொடுக்கப்படுகின்றதோ, அது ராஜஸம் என்று கூறப்பட்டது.

**௨௰௨.** அதேசத்தில், அகாலத்தில், அபாத்ரத்தில் ([1]) ஸத்காரம் இல்லாமலும் ([2]), அபமானம் செய்தும் எது கொடுக்கப்படுகின்றதோ, அது தாமஸம் என்று கூறப்பட்டது.

(1) *தானத்துக்குத் தகாதவனுக்கு.*

(2) *உபசரணை இல்லாமலும்.*

ஆஹாரம் யஜ்ஞம் தானம் தபஸ்களின் விபாகங்களைக் கூறி முடித்து, அடுத்த மந்த்ரங்களில் உபாஸனைக்குரிய மந்த்ரங்களின் பீஜாக்ஷரங்களால் பெறப்பட்ட ப்ரயோஜனங்களைக் கூறுகின்றார்.

**உ௱௩. ப்ரஹ்மத்திற்கு ஓம் தத் ஸத் என மூன்றுவித நிர்த்தேஸம் (1) அமைக்கப்பட்டன (2). ப்ராஹ்மணர்களும் வேதங்களும் யஜ்ஞங்களும் அதனால் (3) பூர்வகாலத்தில் விதிக்கப்பட்டன.**

(1) *அறிதற்கு ஏற்பட்ட குறி.*

*இந்த நிர்தேஸத்தால் லுந்தவை, ஓம் பாவ கர்மம், தத் பாவ கர்மம், ஸத் பாவகர்மம். ஓம் பாவ கர்மம் ஸ்வர்க்காதி பலன்களைப் பற்றி நிற்கும் (௰எ. உ௰). தத் பாவ கர்மம் மோக்ஷத்தைப் பற்றி நிற்கும் (௰எ. உ௰௫). ஸத் பாவ கர்மம் பந்தத்துக்கும் மோக்ஷத்துக்கும் பொது (௰எ. உ௰௬).*

(2) *"ஓம்" "தத்" "ஸத்" என்ற பதங்கள் பரமேஶ்வரனது ஆக்ஞையால் அவரை, அல்லது அவருடைய பூர்ண ஐஶ்வர்யங்களைப் பெற்ற வேறு தேவர்களை, குறிக்கு*

(3) *ப்ரஹ்மத்தால், பரமேஶ்வரனால்.*

**உ௱௪. விதியில் (1) கூறப்பட்ட யஜ்ஞம் தானம் தபஸ் என்ற ப்ரஹ்ம வாதிகளின் (2) க்ரியைகள் "ஓம்" என்று கூறி ப்ரவர்த்திக்கின்றன (3).**

(1) *வேத கர்ம காண்டத்தில்.*

(2) *கர்ம காண்டமே முக்யமென்று நிஶ்சயித்தவர்களின்; கர்மாதிகாரிகளின்.*

(3) *நடைபெற்று வருகின்றன.*

**உ௱௫. பலத்தைக் கருதாமல், மோக்ஷத்தை விரும்புகின்றவர்களால் யஜ்ஞம் தபஸ் பலவித தானங்கள் "தத்" என்று கூறிச் செய்யப்படுகின்றன (1)..**

(1) *நிஷ்காம புத்தியோடு யஜ்ஞம் தானம் தபஸ் என்ற கர்மங்களைச் செய்கின்ற ஞானதிகாரி (மோக்ஷாதிகாரி) "தத்"*

என்ற பீஜாக்ஷரத்தை மந்த்ரங்களோடு சேர்த்து ப்ரயோகஞ் செய்வான்.

௨௰௬. பார்த்த, ஸத் பாவத்திலும் ஸாது பாவத்திலும் "ஸத்" என்றது உபயோகிக்கப்படுகின்றது (1). அவ்விதமே சிறந்த கர்மத்தில் "ஸத்" ஶப்தம் சேர்க்கப்படுகின்றது (2).

(1) "ஸத்" என்ற பீஜாக்ஷரம் எக்காலமுமுள்ள பொருளைப்பற்றியும், இடையிலே உண்டான பொருளைப்பற்றியும், நல்லபொருளைப்பற்றியும் நல்ல ஆசாரங்களைப்பற்றியும் ப்ரயோகமாகும்.

(2) மங்கள கார்யங்களிலும் "ஸத்" பதம் ப்ரயோகமாகும்.

௨௰௭. யஜ்ஞத்திலும் தபஸிலும் தானத்திலும் ஸ்திதி "ஸத்" என்று கூறப்படுகின்றது (1). தத் பொருளைக் கருதின கர்மமும் "ஸத்" என்றே கூறப்படுகின்றது (2).

(1) காத்தலுக்கு (ஸ்திதிக்கு) உரிய மந்த்ரங்களோடு "ஸத்" பதம் ப்ரயோகமாகும்.

(2) மஹேஶ்வர உபாஸன மந்த்ரங்களும் "ஸத்" பத ஸம்பந்தமாயிருக்கும்.

௨௰௮. பார்த்த, ஶ்ரத்தையற்று ஹோமிக்கப்பட்டதும், கொடுக்கப்பட்டதும், செய்யப்பட்ட தபஸும் அஸத் (1) என்று கூறப்படுகின்றன. இறந்தபின் அது இல்லை. இவ்விடத்திலும் இல்லை (2).

(1) ப்ரயோஜன மற்றது.

(2) ஶ்ரத்தையற்றுக் கர்மங்களைச் செய்கின்றவனுக்கு இறந்தபின் ஸ்வர்க்காதி ஸுகமுமில்லை. இவ்வுலகத்தில் பிறந்தபின் அவற்றால் இங்கும் ஒரு ஸுகமுமில்லை.

---

உபநிஷத்கள் என்றும், ப்ரஹ்மவித்தை என்றும், யோகஶாஸ்த்ரம் என்றும், பகவத்கீதைகள் என்றும் கூறப்பட்ட க்ருஷ்ணார்ஜுந ஸம்வாதத்தில் ப்ரஸித்திபெற்ற ஶ்ரத்தாத்ரய விபாகயோகம் என்ற பதினேழாம் அத்யாயம் முற்றிற்று.

# பதினெட்டாம் அத்யாயம்.

## மோக்ஷ ஸந்ந்யாஸ யோகம்.

---

[அஃதாவது, ஜீவாத்மா மோக்ஷத்தைப் பெறுவதற்கு ஸந்ந்யாஸம் அவஶ்யமென்றும், ஸந்ந்யாஸத்தின் நிஜ லக்ஷணமாவது, விஷய ஸங்கத்தையும் கர்மபலனையும் நீக்கிக் கர்மாநுஷ்டானங்களைச் செய்தலே என்றும், இந்த ஸந்ந்யாஸப் பழக்கத்தைப் ப்ரயாஸப்பட்டு ஆரம்பித்து வளர்த்தால், அது முதிர்ந்து நைஷ்கர்ம்ய ஸித்தியைக் கொடுக்கும் என்றும், உயர்திணை ஜீவர்களின் பக்வங்களுக்கேற்றபடி ஒவ்வொருவனையாரும் அநுஷ்டிக்கவேண்டிய ஸ்வதர்மங்கள் ப்ராஹ்மண கர்மம் க்ஷாத்ர கர்மம் வைஶ்ய கர்மம் ஶூத்ர கர்மம் என "சதுர்வர்ண" கர்மங்களாகும் என்றும், ஒருவனது ஸ்வகர்மப் ப்ரீதியாலும் ஸ்வகர்ம அநுஷ்டானத்தாலும் நைஷ்கர்ம்யம் ஶீக்ரத்தில் பழுக்கும் என்றும், நைஷ்கர்ம்யத்தைப் பெற்றவன், ஞான நிஷ்டையைப் பெற்று ப்ரஹ்ம பூயத்தை அடைகிறான் என்றும் உபதேஶித்ததை அர்ஜுநன் கேட்டுச் சிந்தித்தான் என்று விளக்கும் பதினெட்டாம்பாடம்.

இந்தப் பாடத்திலுள்ள ஆரிய உண்மைகள் கீழ்வருமாறு விரிக்கப்பட்டன.

மந்த்ரம் க தொட்டு யஉ வரையில் ஸந்ந்யாஸத்தின் லக்ஷணம் கூறப்பட்டது.

ஸந்ந்யாஸத்தின் பொது லக்ஷணமாவது, புத்தி விஷயங்களைப்பற்றி விசாரிக்கும்பொழுது, ஆசைகளால் ஏவப்பட்டு விஷயங்களிற் சிக்காமல் அஸங்கமாயிருந்து விசாரித்தும், சித்தம் அஸங்கமாயிருந்து தீர்மானித்தும், அஹங்காரம் அஸங்கமாயிருந்து தீர்மானித்த கர்மங்களில் ப்ரவேஶித்தும், கர்மங்களால் வரப்பட்ட ஸுகபலன்களை மனம் கருதாமலும், கர்மங்களை லோகோபகாரமாகச் செய்தலாம்.

# அத்யாயம், ௰அ.

ஸந்ந்யாஸத்தின் விசேஷ லக்ஷணமாவது ஸாத்விக ஸந்ந்யாஸம், ராஜஸ ஸந்ந்யாஸம், தாமஸ ஸந்ந்யாஸம் என்றவையாம்.

மந். ௰௩ தொட்டு ௨௰௨ வரையில் கர்மத்துக்குக் காரணம் ஸ்தூல சரீரமும், ஸூக்ஷ்ம சரீரமும், கர்த்ருத்வ மோஹமும், ரஜஸ் குணத்தின் சேஷ்டையும், மஹேச்வரனும் கூடிய பஞ்சகம் என்றும், இந்தக் கர்ம ஜனன வஸ்துக்களை அறிந்தாலன்றி ஸந்ந்யாஸம் ஒருவில் ஸித்திக்காது என்றும், விளக்கப்பட்டது.

மந். ௰அ தொட்டு ௨௰௨ வரையில் கர்மப் ப்ரவ்ருத்தி வஸ்துக்கள் ஞாதா (அறிகின்ற ஆத்மா), ஞேயம் (அறியப்பட்ட பொருள்), ஞானம் (ஞேயத்தைப்பற்றி ஞாதா அறிந்த அறிவு) என்றும், இந்த த்ரிபுடிகள் கூடிநின்றதால் கர்மம் நடைபெறுகின்றது என்றும், இவற்றிற்குப் பெயர் "கர்ம சோதனா" வஸ்து (கர்மத்தை நடத்திவைத்தலுக்குரிய பொருள்)என்றும், கூறப்பட்டது.

மந். ௨௰௩ தொட்டு ௩௰௩ வரையில் கர்த்தா கரணம் கர்மம் என்ற வேறு த்ரிபுடிகள் ஒன்றுகூடிக் "கர்ம ஸங்க்ரஹம்" (மந். ௰அ) எனப்படும் என்றும், இவற்றுள் கர்த்தா ஸாத்விக ராஜஸ தாமஸங்கள் என மூவகைப்படும் என்றும், அவ்வாறே புத்தி தைர்யம் ஸுகம் என்ற கரணம் ஒவ்வொன்றும் தனித்தனி மூவகைப்படும் என்றும், அவ்வாறே கர்மமும் மூவகைப்படும் என்றும், மேலும் உயர்திணை ஜீவர்களின் ஜன்ய குணங்களுக்கு ஏற்றபடி கர்மம் ப்ராஹ்மண க்ஷத்ர வைச்ய சூத்ர கர்மங்கள் என நால்வகையாக ஸ்ருஷ்டிக்கப்பட்டன என்றும், இவை சதுர்வர்ண கர்மங்கள் எனப்படும் என்றும், இவற்றுள் ஜன்ய குணத்துக்கு ஒத்த கர்மம் ஸ்வதர்மம் எனப்படும் என்றும், ஜன்ய குணத்துக்கு ஒவ்வாத கர்மம் பரதர்மம் எனப்படும் என்றும், ஸ்வகர்மப் ப்ரீதியால் நைஷ்கர்மம் சித்திக்கும் என்றும், பரதர்ம அநுஷ்டானத்தால் மனம் கெட்டு ஆத்ம உத்தாரணத்துக்கு உபயோகப்படாது என்றும், உபதேசிக்கப்பட்டது.

# அத்யாயம், ௰௮.

மந். ௫௰ தொட்டு ௫௰௬ வரையில் ஸந்ந்யாஸத்தின் ப்ரயோஜனம் ஞானநிஷ்டை என்றும், இதனால் ப்ரஹ்மபூயம் வரும் என்றும் விளக்கப்பட்டது.

மந். ௫௰௭ தொட்டு ௬௰௭ வரையில் அர்ஜுநனுக்கு யுத்தஞ் செய்தலைப்பற்றி விஶேஷ உபதேஶம் கூறப்பட்டது.

மந். ௬௰௮ தொட்டு ௭௰௧ வரையில் பகவத்கீதா பாராயண பலன் சொல்லப்பட்டது.

மந். ௭௰௨ தொட்டு ௭௰௩ வரையில் அர்ஜுநனுடைய ஸம்ஶயத் தீர்வும், மந். ௭௰௪ தொட்டு ௭௰௮ வரையுல் ஸஞ்ஜயனுடைய மகிழ்ச்சியும், கூறப்பட்டன.

எனவே, இந்த அத்யாயத்தின் ப்ரதான பிரிவுகளாவன:—

I. ஸந்ந்யாஸம், ... மந். ... 5—12.

II. கர்மகாரணம், ... மந். ... 13—17.

III. கர்மசோதனையாகிய ஞாதா ஜ்ஞேயம் ஞானம், மந். ... 19—22.

IV. கர்ம ஸங்க்ரஹமாகிய கர்த்தா, கரணம், கர்மம், ... மந். ... 18, 23—49.

கர்ம ஸங்க்ரஹம்.
- கர்த்தா, ... மந். 26—28.
- கரணம்,—
  - புத்தி, ... மந். 30—32.
  - தைர்யம், ... மந். 33—35.
  - ஸுகம், ... மந். 36—39.
- கர்மம், ... மந். 23—25, 41—49.

V. ஸந்ந்யாஸத்தின் ப்ரயோஜனமாகிய ஞாநநிஷ்டையும் ப்ரஹ்மபூயமும், ... மந். 50—56.

VI. அர்ஜுநனுக்கு விஶேஷ உபதேஶம், மந். 57—67.

VII. பகவத்கீதா பாராயண பலன், மந். 68—71.

VIII. அர்ஜுநனுடைய ஸம்ஶயத் தீர்வு, மந். 72—73.

IX. ஸஞ்ஜயன் மகிழ்ச்சி, ... மந். 74—78

---

அர்ஜுநந் கூறினன்:—

௧. ஹ்ருஷீகேஶ, கேஶிநிஷூதன (1), மஹாபாஹு, ஸந்ந்யாஸம் த்யாகம் என்றவைகளின் தத்வத்தை (2) வெவ்வேறாக அறிய விரும்புகிறேன்.

(1) "கேஶி" என்ற அஸுரனைக் கொன்றவனே ("நிஷூதன").
(2) உண்மையை; உள்ள விஶேஷங்களை.

ஸ்ரீ பகவான் கூறினர்:—

௨. [சில] கவிகள் காம்ய கர்ம ந்யாஸத்தை ஸந்ந்யாஸம் என்று அறிகின்றனர் (1). [சில] அறிவாளிகள் ஸர்வ கர்மபல த்யாகத்தை த்யாகம் என்று கூறுகின்றனர் (2).

(1) சில வித்வான்கள் ஸந்ந்யாஸம் என்பது ஆத்மோபாய கர்மங்களை விடாமற் செய்தலும், இஷ்டகாம்ய ஸித்திக்காக ஏற்பட்ட கர்மங்களை முற்றாக விடுதலும், என்று கூறுவார்கள்.
(2) சிலர் கர்மங்களால் பெறத்தக்க பலன்களைக் கருதாமல், செய்யவேண்டிய கர்மங்களைச் செய்தலே ஸந்ந்யாஸம், அல்லது த்யாகம், என்பார்கள்.
"ந்யாஸம்" என்ற பதம், "நி" என்ற உபசர்க்கமும், "அஸ்" (இருத்தல்) என்ற தாதுவுங் கூடி, வைத்தல், ஒப்புக் கொடுத்தல், நீக்கல் என்று பொருள்படும்.
"ஸந்ந்யாஸம்"=முற்றாக ஈஶ்வரனுக்கு ஒப்புக்கொடுத்தல்=ஈஶ்வரார்ப்பண கர்மாநுஷ்டானம்.

௩. சில விவேகிகள் (1) தோஷம்பெற்ற கர்மத்தை விடவேண்டும் என்று கூறுகின்றனர் (2). சிலர் யஜ்ஞம் தானம் தபஸ் என்ற கர்மங்களை விடக்கூடாதென்று [கூறுகின்றனர்.]

(1) "மநீஷிண:"=மநீஷை (மனதைச் செலுத்தும் கருவியாகிய புத்தியை) பெற்றவர்கள்.

(2) யஜ்ஞம் தானம் தபஸ் என்ற கர்மங்களை விக்நமற்றுச் செய்தல் அஸாத்யம் என்றும், ஆதலால் கர்மாநுஷ்டானம் அநுஷ்டானியை தோஷங்களிலேயே அழுத்தும் என்றும் (அத். ௰அ, மங். ௪அ), அவற்றை எல்லாம் விட்டுச் சும்மா இருத்தலே நன்று என்றும், கூறுவார்கள்.

அதாவது, சிலர் கர்ம அநாரம்பத்தை ஸந்ந்யாஸம் என்பா (மங். ௩).

சிலா காமய காம அநாரம்பத்தை ஸந்ந்யாஸம என பர் (மங். ௨).

சிலர் கர்மபலத் த்யாகத்தை ஸந்ந்யாஸம் என்பர் (மங்.௨).

இனி, பகவானுடைய திருவுள்ளம் ௪ தொட்டு ௧௨ வரையில் கூறப்படும்.

**௪. பரதஸத்தம (1), புருஷவ்யாக்ர (2), அந்த த்யாகத்தில் (3) எனது நிஶ்சயத்தைக் கேள். த்யாகம் மூன்றுவிதமாகக் கூறப்பட்டது.**

(1) பரத வம்ஶத்தில் மிகச் சிறந்தவனே.

(2) புருஷப் புலி, புலிபோன்ற புருஷன், துஷ்டர்களை நிக்ரஹஞ் செய்கின்ற புருஷன்.

(3) த்யாகத்தைப்பற்றி, ஸந்ந்யாஸத்தைப்பற்றி.

**௫. யஜ்ஞம் தானம் தபஸ் என்ற கர்மம் விடத்தக்கதன்று. அதுவே செய்யத்தக்கது. விவேகிகளின் யஜ்ஞம் தானம் தபஸ் பரிஶுத்தியைச் செய்கின்றவைகள் (1).**

(1) யஜ்ஞம் தானம் தபஸ் என்ற காமங்களை ஶ்ரத்தையோடு செய்தால், பரிஶுத்தி அமையும். ஆதலால், அவற்றைத் தினமும் தவறாது செய்தல் வேண்டும்.

காம்ய புத்தியோடு கர்மங்களைச் செய்தால், ப்ரவ்ருத்தி மார்க்கத்துக்குரிய த்ரிலோக ஸஞ்சாரம் கிடைக்கும். நிஷ்காம புத்தியோடு செய்தால், நிவ்ருத்தி மார்க்கத்துக்குரிய ஞானமும் மோக்ஷமும் கிடைக்கும்.

௬. ஆனால் (1), பார்த்த, [விஷய] ஸங்கத்தையும் [கர்ம] பலன் களையும் நீக்கி இந்த கர்மங்கள் செய்யத்தக்கவை (2) என்றது எனது உத்தம நிஶ்சய மதம் (3).

(1) தெய்வத்தில் ஶ்ரத்தைவைத்துச் செய்யப்பட்ட யஜ்ஞும் தானம் தபஸ்கள் அநேக ஸுகபலன்களைத் தரும் என்பது உண்மையாயினும், சித்தஸுத்தி பெறுவதற்கு.

(2) கர்மாநுஷ்டானி கர்மத்தால் பெறத்தக்க பலன்களை விரும்பாமல், "தயாள பரமேஶ்வரன் என்னுளிருக்கும் விஷயப்பற்றுக்களைத் தீர்த்து என்னைப் பரிஶுத்தனுக்க வேண்டுமென்று கர்மங்களை ஸ்ருஷ்டித்தபடியால், நான் விஷயஸுகங்களைப் பற்றேன், ஸச்சிதாநந்த ப்ரபுவையே அண்டி எனக்குரிய கர்மங்களை அவரது ஆக்ஞைகளாகக் கொண்டு அவரையே நினைத்து நிறைவேற்றுவேன்" என்ற புத்தியோடு கர்மங்களைச் செய்யவேண்டும்.

(3) இந்த ஈஶ்வரார்ப்பண கர்மாநுஷ்டானமே ஸந்ந்யாஸங்களில் உத்தம ஸந்ந்யாஸம். இதுவே பரம உபதேஶம்.

இதற்குக் கீழான ஸந்ந்யாஸங்கள் ராஜஸ தாமஸ ஸந்ந்யாஸங்கள் என்று மந். எ—அ இல் விளக்கி, உத்தம ஸந்ந்யாஸமாகிய ஸாத்விக த்யாகம் மந். ௯—௰உ இல் விரிவாகக் கூறப்பட்டது.

எ. நியத கர்மத்தை (1) விடுவது சரியன்று. அதை மோஹத்தால் (2) விடுதல் தாமஸ ஸந்ந்யாஸம் என்று கூறப்பட்டது. (3)

(1) ஸந்த்யாவந்தனுதி நித்ய யஜ்ஞும் தானம் தபஸ் என்ற கர்மங்களை.

(2) மூட புத்தியால்.

(3) தாமஸ ஸந்ந்யாஸமாவது எந்த உத்தம நியாயத்திற்காக யஜ்ஞாதி கர்மங்கள் ஸ்ருஷ்டிக்கப்பட்டன என்று விசாரித்தறியாமல் அநுஸரிக்கப்பட்ட மூடத் த்யாகம்.

அ. காய க்லேஶ பயத்தால் (1) எந்தக் கர்மத்தைத் துன்பமென்று விடுவானே, அவன் ராஜஸ த்யாகத்தைச் (2) செய்து, த்யாக பலனைப் பெறவேமாட்டான்.

(1) தேஹத்திற்காவது மனஸுக்காவது துன்பம் ("க்லேஶம்") வருமென்ற பயத்தால்.

(2) விட்டதால் பெறவேண்டிய துக்க நிவாரணையை, மோக்ஷத்தை.

ராஜஸ ஸந்ந்யாஸமாவது யஜ்ஞம் தானம் தபஸ் என்றவை எல்லாம் மனஸுக்கும் தேஹத்துக்கும் வேதனைகளைக் கொடுக்கும் என்ற பயத்தால் விடப்பட்ட கர்மாநுஷ்டானம்.

துன்ப பயத்தால் அநுஸரிக்கப்பட்ட ராஜஸ ஸந்ந்யாஸத்திற்கு நிர்மல புத்தியுமில்லை, மோக்ஷ ஸித்தியுமில்லை என்பது கருத்து.

மோக்ஷம் என்றது துக்க பய விஷாதங்களினின்று நீங்குதல். காய க்லேஶத்தை அநுஸரித்த ராஜஸ ஸந்ந்யாஸிக்கு மோக்ஷம் வெகு தூரமாகும்.

**க. ஸங்கத்தையும் (1) பலனையும் (2) நீக்கி, செய்யவேண்டிய (3) எந்தக் கர்மம் உறுதியாகச் (4) செய்யப்படுகின்றதோ, அந்த த்யாகம் (5) ஸாத்விகம் என்று ஒப்புக்கொள்ளப்பட்டது (6).**

(1) தோன்றி அழியும் பொருள்களைப்பற்றிய ஆசையோடு புத்தி கூடுதலையும்.

(2) நற்கர்மங்களால் வரும் விஷய ஸுகங்களையும்.

(3) ஒருவனுக்குரிய.

(4) ஶ்ரத்தையோடும் ஸ்திரமாகவும்.

(5) அந்த விஷயஸங்கத் த்யாகமும் கர்மபலத் த்யாகமும்.

(6) ஸாத்விக த்யாகம், அல்லது, ஸாத்விக ஸந்ந்யாஸம்= காம ஸங்கமும் கர்மபலனும் எனக்கு வேண்டாம் என்ற புத்தியோடு செய்யப்பட்ட யஜ்ஞம் தானம் தபஸ் என்ற கர்மாநுஷ்டானங்கள்.

**ய. மேதாவியும் (1), ஸம்ஶயமற்றவனும் (2), ஸத்வமுள்ளவனும் (3) ஆகிய த்யாகி (4) அகுஶல கர்மத்தை த்வேஷிக்க மாட்டான் (5). குஶலத்தில் ஸங்கம் பெறமாட்டான் (6).**

(1) நல்லறிவு பெற்றவனும்.

(2) விபரீத நினைவுகள் அற்றவனும்

(3) உண்மையான நிலையில் நிற்கின்றவனும்.

(4) ஸாத்விக ஸந்ந்யாஸி.

(5) கர்மங்களைச் செவ்வையாக அநுஷ்டியாதவனை அவமதிக்கமாட்டான்.

"அகுஶல கர்மம்"=ஸகாமபுத்தியோடு செய்யப்பட்ட கர்மம்.

(6) செவ்வையாகக் கர்மங்களை அநுஷ்டிக்கிறதைப்பற்றியும் அபிமானம் கொள்ளான்.

"குஶல கர்மம்"=நிஷ்காம புத்தியோடு செய்யப்பட்ட கர்மம்.

எனவே, ஸாத்விக ஸந்ந்யாஸி அபிமானமற்றுத் தனக்குரிய கர்மங்களை ஈஶ்வரார்ப்பண புத்தியோடு லோகோபகாரத்துக்காக நிறைவேற்றுவான் என்பது கருத்து.

**௰௧. கர்மங்களை முற்றாக விடுவதற்கு தேஹியால் முடியாது. ஆதலால், எவன் கர்மபலத்தை விடுவானோ, அவன் த்யாகி என்று கூறப்படுகின்றான் (1).**

(1) ஜீவாத்மாவோடு ஸம்பந்தப்பட்ட ஐம்பொறிகளும் அந்தஃகரணங்களும் கர்மேந்த்ரியங்களும் தத்தந் தொழில்களைச் செய்துகொண்டேயிருக்குமாதலால், கர்மங்களை "நான் விட்டேன்" என்ற வார்த்தை ஒவ்வாது. "ஸந்ந்யாஸம்" என்ற பதத்தின் மெய் அர்த்தம் கர்மாநுஷ்டானத்தில் கர்மபல த்யாகம் என்றே கொள்ளவேண்டியது.

**௰௨. அத்யாகிகளுக்கு (1) அநிஷ்ட, இஷ்ட, மிஶ்ரம் என்று மூன்றுவித கர்மபலன் இறந்தபின் ஸம்பவிக்கின்றது (2). த்யாகிகளுக்கு ஒரிடத்திலும் ஸம்பவிக்கின்றதில்லை (3).**

(1) கர்மபலத் த்யாகம் செய்யாதவர்களுக்கு.

(2) பலனை விரும்பிக் கர்மங்களை அநுஷ்டிக்கின்றவர்களாகிய அஸந்ந்யாஸிகளுக்கு மூவித கர்மபலன்கள் இறந்தபின்

புசிப்பிற்கு வருகின்றன. அக்கர்மபலன்கள் ஸாம்யபலன்கள் என்றும், அஸாம்ய பலன்கள் என்றும், ஸாம்யமும் அஸாம்யமும் கலந்த (மிஸ்ர) பலன்கள் என்றும், கூறப்படும்.

இந்த பிறவியில் செய்யப்பட்ட கர்மங்களின் பலன்கள் இப்பிறவியிலேயே புசிப்புக்கு வரா. வேறொரு பிறவியிலே வரும் என்பது பற்றி, "இறந்தபின் ஸம்பவிக்கின்றது" என்றார்.

"பலம்" (தமிழில் பலன்) என்ற பதம், "பல" (நிஷ்பத்தி, உற்பத்தி, பிறப்பு) என்ற தாதுவிலிருந்து ஜனித்து, பிறக்கின்ற வஸ்து என்று பொருள்படும்.

கர்மம் செய்தால் அச்செயலிலிருந்து ஓர் பீஜம் (வித்து, விதை) உண்டாகும். இந்த பீஜம் அத்ருஸ்யமாயிருப்பதால் "அத்ருஷ்டம்" எனப்படும். பீஜத்திலிருந்து வ்ருக்ஷம் வருவதுபோல, புண்ய பீஜத்திலிருந்து ஸுகமும், பாபபீஜத்தில் நின்று துக்கமும், புண்யமும் பாபமும் கலக்கப்பட்ட பீஜத்திலிருந்து ஸுகதுக்கங்கள் கூடிய அநுபவங்களும் தோன்றும்.

நரக ஸ்வர்க்க அநுபவங்களுக்குப்பின், பூலோகத்தில் இந்த பீஜங்கள் புருஷகாரத்தை (புருஷனுடைய ப்ரயத்தனத்தை) அடைந்து, ஸுக துக்கங்களை விளைவிக்கும். உழப்பட்ட க்ஷேத்ரம் பீஜமில்லாமல் நிஷ்பலமாவதுபோல, பூர்வ புண்ய பீஜமில்லாமல் புருஷகாரம் (முயற்சி) சித்திக்காது. (மஹாபாரதம், அநுஸாஸந பர்வம், அத். ௬, ௩—௪௰௭).

ஜனனங்கள் தோறும் அநாதிகாலந் தொட்டு ஆத்மாக்கள் யான் எனது என்ற புத்தியோடு செய்த கர்மங்களின் பீஜங்கள் கணக்கற்றுக் கால தேஸ நியதி தத்வங்களில் கட்டுப்பட்டு இருக்கும். இந்தக் கர்ம பீஜங்களின் பெயர் ஸஞ்சிதமாம். (குவிக்கப்பட்டதாம்).

ஸஞ்சித கர்மபீஜங்களில் சில, பக்வப்பட்ட காலத்தில், இப்பிறவிக்குரிய தநு கரண புவன போகங்களை ஆரம்பிக்கும். இப்படி இந்த ஜனனத்தில் புசிப்புக்கு வருகின்ற கர்மங்கள் ப்ராரப்த கர்மம் எனப்படும். ஸ்தூல தேஹம் என்ற பேறு முதல் மரண எல்லை என்ற சாக்காடு வரையில் அநுபவிக்கப்

பட்டவை எல்லாம் ப்ராரப்தங்கள்.

"ப்ர", "ஆ", என்ற உபஸர்க்கங்களோடு "ரப்" (ஆரம்பித்தல்) என்ற தாது கூடி "ப்ராரப்தம்" ஆயிற்று. இந்தப் பதம் ஓர் பிறவியை ஆரம்பிக்கும் வஸ்துவாகிய கர்மபீஜத்தையும், அப்பிறப்புத் தொட்டு இறப்பு வரைக்கும் தொடர்பாக ஸம்பந்தப்பட்ட கர்மபீஜங்களையும், குறிக்கும்.

ப்ராரப்த கர்மபலன்களைப் புசிக்கும் பொழுது, விருப்பு வெறுப்பால் ஏவப்பட்டு யான் எனது என்ற புத்தியோடு கர்மங்களைச் செய்தால், அவற்றில்நின்று புது பீஜங்கள் உண்டாகி, பழைய ஸஞ்சித பீஜங்களோடு குவிக்கப்பட்டு, பின் ஒரு காலத்திற் பக்வமடைந்து, புசிப்புக்கு வருமாதலால், இவை ஆகாம்ய (வரப்போகின்ற) கர்மம் எனப்படும்.

கர்மங்களின் பலன்கள் ஆறுவகைப்படும். அவையாவன: பேறு (பெற்ற தேஹம், பிதா, மாதா, பிறந்த ஸ்தானம், அதை அடக்கிய தேஶம், அரசாட்சி, பாஷை, கல்வித்திறம், உத்யோகம், தனம், பத்னி, பிள்ளைகள், ஸ்நேஹிதர் முதலியவைகள்); இழவு (தன்னை விட்டு போகின்றவையெல்லாம்); இன்பம் (ஸுக அநுபவங்கள்); பிணி (துன்ப அநுபவங்கள்); மூப்பு (தேஹத்தோடு தேஹி ஸம்பந்தப்பட்டிருக்கும் காலம்); சாக்காடு (மரணம்), என்பவையாம்.

இப்பிறவியில் புசிக்கப்பட்ட இந்த ஆறு பலன்களுக்குங் காரணம் முற்பிறவிகளில் செய்யப்பட்ட கர்மங்கள் என்றதற்கு ஆன்ற ஸாக்ஷிகள் பரமேஶ்வரனுடைய அவதார புருஷனாகிய ஸ்ரீ க்ருஷ்ணபகவானும், அவர் உபதேஶத்தைப் ப்ரஸ்தாபித்த வ்யாஸ பகவானுமே.

(3) நிஷ்காம கர்மாநுஷ்டானிகளாகிய ஸாத்விக ஸந்ந்யாஸிகளைத் தாம் செய்யும் கர்மங்களில்நின்று ஜனிக்கும் பலன்கள் பற்று.

நிஷ்காம கர்மாவைப் பற்றாத பலன்கள் இவனுடைய மித்ரர்களையும் ஶத்ருக்களையும் பற்றும். மித்ரன் ஸுகபலனைப் பெறுவான், ஶத்ரு அஸுக பலனைப் பெறுவான்.

இப்படி நிஜ ஸந்ந்யாஸத்தின் பொது லக்ஷணத்தைக்கூறி, அடுத்த ௪ மந்த்ரங்களில் கர்மகாரணங்களை விசாரித்து, இவற்றை அறிந்தவன் "அகர்மா" ஆவான் என்று ௰௭ ம் மந்த்ரத்தில் விளக்குவார்.

௰௩. மஹாபாஹோ, க்ருதாந்த ஸாங்க்யத்தில் (1) ஸர்வ கர்ம ஸித்திக்காக (2) கூறப்பட்ட இந்த பஞ்சகாரணங்களை (3) என்னுடைய [வாக்கினின்று] அறி.

(1) "க்ருதாந்தம்"="க்ருத" (முற்றுகிய, பூர்த்தியான)+ "அந்த" (முடிவு)=கர்மத்தின் பூர்ணமுடிவு.

"க்ருதாந்த ஸாங்க்யம்"= கர்மாநுஷ்டானங்களெல்லாம் முடிவு பெறுகின்ற மெய்யறிவு.

இந்த மெய்யறிவை "ஸாங்க்யம்" என்றும், "வேதாந்தம்" என்றும், பல ருஷிகள் கூறியிருக்கின்றனர். அத். ௨. ௩௰௯.

"க்ருதாந்த ஸாங்க்யத்தில்"=கர்மங்கள் பூர்ணப்படுகின்ற உபநிஷத்களில்.

(2) எல்லா யஜ்ஞங்களாலும் தானங்களாலும் தபஸ்களாலும் மாநுடர் முடிவான மோக்ஷ பலனைப் பெறும் பொருட்டு.

(3) கீழ்வரும் ஐந்து கர்ம காரணங்களை.

௰௪. அதிஷ்டானமும் (1), கர்த்தாவும் (2), வெவ்வேறான காரணமும் (3), பலவித வெவ்வேறு சேஷ்டையும் (4), இவைகளில் (5) ஐந்தாவது (6) தைவமே (7).

(1) ஸ்தூல தேஹமும்.

"அதி" என்ற பதமும், "ஸ்தானம்" (இடம்) என்ற பதமுங் கூடி, "அதிஷ்டானம்" என்று திரிபு பெற்று வந்தது. இது இந்த்ரியங்களின் இருப்பிடமாகிய ஸ்தூல ஶரீரம் என்று பொருள்படும்.

(2) கர்த்ருத்வ மோஹம் பெற்ற ஜீவாத்மாவும்.

(3) ஐவித பிரிவுகளையுடைய ஸூக்ஷ்ம ஶரீரமும்.

(4) துடின கோலங்களைக் கொண்ட ரஜஸ் குணமும்.

(5) இவைகளைப் பற்றிய.

(6) ஐந்தாம் காரணம்.

(7) மஹேஶ்வர ஸம்பந்தமே ("தைவம்"=தேவ ஸம்பந்தம்). ஐஶ்வரயோகமே. அத். ௯. ஶ்ரு. (௨).

கர்ம ஜனனத்துக்கு பஞ்சகாரணங்கள் தநுவும், கரணமும், கர்த்ருத்வமோஹம் பெற்ற ஆத்மாவும், சேஷ்டைரூப ரஜஸ் குணமும், கர்ம சக்ரத்தை நடத்திவைக்கின்ற பரமேஶ்வரனும், என்று கூறி, அடுத்த மந்த்ரத்தில் மாநுடர் கர்மேந்த்ரியங்களால் எவ்வித கர்மங்களைச் செய்தாலும், அவைக்கு அதிஷ்டாநாதி பஞ்சகமே காரணம் என்று சாதிக்கின்றார்.

**௰௫. ந்யாயமான அல்லது விபரீதமான (1) எந்தக் கர்மத்தை மனம் வாக்கு காயங்களால் மனுஷன் ஆரம்பிக்கின்றனோ, அதற்கு (2) இவ்வைந்துகளோ காரணங்கள் (3).**

(1) விதிக்கப்பட்ட அல்லது விலக்கப்பட்ட.

(2) ஆரம்பிக்கும் கர்மத்துக்கு.

(3) மனம் வாக்குக் காயங்களால் எந்தப் புண்ய கர்மம் அல்லது பாப கர்மம் செய்யப்படுமோ, அந்தக் கர்மத்துக்கு காரணங்கள் அதிஷ்டாநாதி பஞ்சகமே.

**௰௬. இவ்விதம் இருக்க (1), எவன் அக்ருத (2) புத்தியோடு கூடியிருப்பதால் ஆத்மாவை மாத்ரம் (3) அதில் (4) கர்த்தாவாக அறிகிறனோ, அந்த துர்மதி (5) அறிகின்றானில்லை (6).**

(1) அதிஷ்டாநாதி பஞ்சகம் கர்மத்துக்குக் காரணமாக இவ்விதமிருக்க.

(2) ஶ்ரவண மனன அப்பியாசங்களால் ஸம்ஸ்க்ருதப்படாத.

(3) "ஆத்மாநம் கேவலம்"=ஜீவாத்மாவை, அல்லது தேஹத்தை, மாத்ரம்.

(4) ஆரம்பிக்கப்பட்ட கர்மத்தில்.

(5) அந்த மூடன்.

(6) கர்ம காரணத்தைப் பற்றிய உண்மையை அறியமாட்டான்.

**௰எ.** எவனுக்கு பாவனை(1) அஹங்காரம் பெறவில்லையோ, எவனுக்கு புத்தி மறைக்கப்படவில்லையோ, அவன் இவ்வுலகத்தாரை ஹிம்ஸித்தாலும் ஹிம்ஸிக்கின்றவனுமில்லை, பந்திக்கப்படுகின்றவனுமில்லை (2).

(1) மனோபாவனை; மனவில் தோன்றும் நினைவுகள்.

(2) அஹந்தை மமதையற்று, மஹேஶ்வரனே ஸகல க்ருத்யங்களையும் நடத்தி வருகின்றார் என்ற உண்மையை உள்ளபடி அறிந்த ஜீவன்முக்தனுடைய மனம் வாக்குக் காயங்களால் பிறர் கண்டிக்கப்பட்டால், அக் கண்டனை அவனுடைய கண்டனையன்று என்றும், மஹேஶ்வரனது கண்டனையே என்றும், அறியவேண்டியது. ஜீவன்முக்தனுடைய கர்மங்கள் ஸுக துக்க பந்தனங்களை அவனுக்குக் கொடா.

இதுவரையில் கர்மத்துக்குக் காரணம் அதிஷ்டானாதி பஞ்சகம் என்று கூறி, வரும் மந்த்ரத்தில் கர்மங்களை நடத்திவைத்தனுக்குரிய எல்லைகள் "கர்மசோதனை" எனப்படும் என்றும், இது ஞாதா ஞேயம் ஞானம் என்ற ஞானத் த்ரிபுடிகள் என்றும், கர்மத் த்ரிபுடிகளாகிய கர்மமும் கரணமும் கர்த்தாவும் கர்மஸங்க்ரஹம் எனப்படும் என்றும், கூறப்பட்டது.

**௰௮.** கர்மசோதனை (1) ஞாதா (2), ஞேயம் (3), ஞானம் (4), என்று மூன்றுவிதம்.

கர்மஸங்க்ரஹம் (5) கர்மம் (6), கரணம் (7), கர்த்தா (8) என்று மூன்றுவிதம்.

(1) கர்மங்கள் ப்ரவேஶித்து ஜீவிக்கின்ற எல்லைகளாகிய ஞானத்ரிபுடிகள்.

"சோதநா" என்ற பதம் "சுத்" (ஜீவிக்கச் செய்தல்) என்ற தாதுவினின்று ஜனித்து, நின்றிடும் இடம் என்று பொருள்படும்.

"கர்மசோதநா"=கர்மங்கள் பற்றிப் ப்ரவ்ருத்திக்கும் எல்லைகள்.

அஃதாவது, கர்மங்கள் ஞாதா என்னும் ஜீவாத்மாவையும் அவனுடைய ஞேயத்தையும் ஞானத்தையும் பற்றிநின்றே இல

கும். வேறொரு பொருளில் கர்மப் ப்ரவேஶம் இல்லை.

(2) அறிகின்ற ஸாக்ஷி; ஜீவாத்மா.

(3) அறியப்பட்ட விஷயம்.

(4) அறிகின்ற ஸாக்ஷியும் அறியப்பட்ட விஷயமும் எந்த நிலையில் ஸம்பந்தப்பட்டதோ, அந்த ஸம்பந்த நிலை ஞானம், அல்லது அறிந்துகொண்ட நிலை, எனப்படும்.

கர்மம் என்ற பொருள் இந்த ஞானத்ரிபுடிகளைத் தாவியே நிற்கின்றது. இவை இல்லை எனில், கர்மத்துக்கு ப்ரவ்ருத்தி இல்லை. ஞாதாக்களாகிய ஜீவர்களைப் பற்றியும், ஜ்ஞேயங்களாகிய நாநாவித ஆத்ம அநாத்ம யோக்யப் பொருள்களைப் பற்றியும், ஞானங்களாகிய அறிவுகளைப் பற்றியுமே கர்மம் ப்ரவ்ருத்திக்கும், நடைபெற்றுவரும். ஞாதா, ஞானம் ஜ்ஞேயம் அன்றிக் கர்மத்திற்கு விலாஸம் இல்லை, நின்றுடும் இடமில்லை.

(5) கர்மக் கூட்டங்கள்; கர்மக் கொத்துக்கள்; ஒன்றை ஒன்று கவர்ந்துகொண்டு நிற்கின்ற கர்மசொரூபங்கள்.

"ஸங்க்ரஹம்" என்ற பதம் "ஸம்" (செவ்வையாக) என்ற பகுதியும், "க்ரஹம்" (பிடித்தல், கவர்தல்) என்ற பதமுங் கூடி "ஸங்க்ரஹம்" என்றாகி, ஒன்றைஒன்று தாவி நிற்கும் ஏகஜாதி வஸ்துக்கள், என்று பொருள்படும். இவை ரஜஸ் குணப் ப்ரக்ருதி அம்ஶங்களாகிய கர்மம், கரணம், கர்த்தாவாம்.

(6) ஒருவனுடைய மனம் வாக்குக் காயங்களால் செய்யப்பட்ட செயல்கள்.

(7) உள்ளம் மனம் புத்தி சித்தம் அஹங்காரம் என்ற உட்கரணங்களும், மெய் வாய் கண் மூக்குச் செவி என்ற புறக்கரணங்களும், ஸாதாரண வழக்கத்தில் கரணங்களென்று கூறப்படினும், ஈண்டு புத்தியும், புத்தியின் ஒரு நிஶ்சய நிலையாகிய தைர்யமும், மனவில் ப்ரதிபலிக்கின்ற இஷ்ட காம்ய பூர்த்தியாகிய ஸுகமும் "கரணங்கள்" என்று கூறப்பட்டன.

(8) கர்மத்தைச் செய்கின்றவன்.

ரஜோகுணத்தால் ஏவப்பட்டுக் கர்மேந்த்ரியங்கள் கர்மங்களைச் செய்கின்றபடியால், கர்மேந்த்ரியங்களே கர்த்தாக்கள்

எனலாம். ஆனால், மூடபுத்திமான்கள் "நான்" என்ற தேஹமே அல்லது ஜீவாத்மாவே "கர்த்தா" என்று நினைக்கின்றனர். இந்த ப்ரபல்ய விமூடார்த்தப்படி ராஜஸ கர்த்தா என்றும், தாமஸ கர்த்தா என்றும் இருவகைக் கர்த்தாக்கள் உளர். வேறொரு வகையான புத்தியோடு, அதாவது, நான் என்று நினையாமலும் பேசாமலும், தனக்கு வகுக்கப்பட்ட கர்மங்களைச் சரியாக நடத்திக்கொண்டிருப்பவன் ஸாத்விக கர்த்தா எனப்படுவான். வரும் ௨௰௬—௨௰௮ மந்த்ரங்களில் இந்த மூவகைக் கர்த்தாக்கள் கூறப்பட்டார்கள்.

இனி, கர்மசோதனையில், ஞானமும், கர்மஸங்க்ரஹத்தில் கர்மமும் கர்த்தாவும், பரமேஶ்வரனால் செய்யப்பட்ட குண விபாகத்தால், மூவகையாகும் என அடுத்த மந்த்ரத்தில் விளக்கினார்.

**௰௯. குணபேதத்தால் (1) ஞானமும் கர்மமும் கர்த்தாவும் மூன்று விதமாகவே குண ஸம்க்யானத்தில் (2) உரைத்திருக்கின்றது. அவ்வண்ணமே அவைகளையும் கேள் (3**

(1) பகவான் அருளிய குண விபாகத்தால்.

(2) குண + ஸம் + க்யானம் = குணங்களை சரியாகக் கணக்கிட்டுக் கூறும் ஶாஸ்த்ரம். ("க்யா" என்ற தாதுவின் அர்த்தம் கணக்கிடுதல்).

"குண ஸம்க்யானம்" என்ற நூல் கபிலமுனிவரால் இயற்றப்பட்டதால், அது "காபிலம்" என்றும் கூறப்படும். இக்காலத்தில் இதைக் காணோம். ஸாங்க்யமும் வேதாந்தமும் வெவ்வேறன்று. உ. ௩௰௯ க்குரிய உரையைப் பார்த்தறிக.

(3) அந்த ஞான ஶாஸ்த்ரத்தில் கூறினவாறு நான் உனக்குக் கூறுவேன், கேட்பாயாக.

வரும் மூன்று மந்த்ரங்களில் (௨௰—௨௰௨ இல்) மூவகை ஞானம் கூறப்பட்டன. இவற்றில், முதன்மை பெற்ற ஏக பாவனை செய்யத்தக்க அறிவாகிய ஸாத்விக ஞானம் ௨௰ ம் மந்த்ரத்தில் விளங்கும்.

உய.. விபாகஞ் செய்யப்பட்ட பூதங்களில் (1), விபாகஞ் செய்யப்படாததும் மாறுதலில்லாததுமாகிய (2) ஏகபாவத்தை (3) எதனல் (4) அறிகின்றனே, அந்த ஞானத்தை ஸாத்விகம் என்றறி.

(1) ப்ரக்ருதி வஸ்துவைக் கொண்டு இயற்றப்பட்ட வெவ்வேறு தேஹங்களில் [வஸிக்கும் ஏகபாவத்தை].

(2) பிரிக்கத்தக்க ப்ரக்ருதியைப்போல பிரிக்கக்கூடாததும், பிறப்பு வளர்ச்சி இறப்பு என்ற விகாரங்கள் இல்லாததுமாகிய.

(3) ஏகமாயிருக்கின்ற வஸ்துவை, அதாவது, பரமேஶ்வரனை.

(4) எவ்வகை ஞானத்தால், அதாவது, ஏக பாவனை செய்யக்கூடிய அறிவால்.

இந்த மந்த்ரத்தின் அர்த்தம், கண்டித பதார்த்தங்கள் யாவும் அகண்ட பதார்த்தத்தில் உள்ளன என்றும், கண்டனவெல்லாம் கண்ணால் காணக்கூடாத வஸ்துவினின்று தோன்றின என்றும், எந்த அறிவு அறியத்தக்கதோ, அது ஸாத்விக ஞானம் என்பபடும் என்பதே.

மேகம் மின்னல் இடி முதலிய தோற்றங்களும், நிலம் மலை நதி கடல் கப்பல் வீடு ஜனங்கள் முதலிய தோற்றங்களும் பூத ஆகாஶத்தில் உள்ளன போல, பூத ஆகாஶம் மாயை என்ற மன ஆகாஶத்தில் உள்ளது என்றும், மன ஆகாஶம் நிர்குண வஸ்துவாகிச் சிதாகாஶத்தில் (சித் அகாஶத்தில், அகண்டாகார சித்தில், பரமாத்மாவில்) உள்ளது என்றும், புத்தியால் நிதானித்து அறியும் அறிவு ஸாத்விக ஞானம் எனப்படும்.

விஶால புத்தியை முன்னிட்டு அறியாமல், எந்த அறிவு பரமாத்மாவை நேரே அநுபவ முறையாக அறியுமோ, அந்தப் பேரறிவு (அகண்டாகார அறிவு) ஸாத்விக ஞானத்துக்கு மிக மேற்பட்டது.

த்வந்த்வங்களில்நின்ற விலகின ஸமத்வபுத்தியோடு கூடியிருக்கும் ஜீவாத்மா ஸமதர்ஶனியாகி, விகல்ப நாம ரூபங்கள் யாவற்றையும் ஏக பாவனை செய்த மாத்ரத்தில், அவற்றுள் இ

ருக்கின்ற அகண்டாகார வஸ்துவை அநுமானிப்பான்' என்று விளக்கி, அடுத்த மந்த்ரத்தில் நாநாவித பேதங்களை வெவ்வேருக அறியும் அறிவு ராஜஸ ஞானமாகும் என்ருர்.

**உ௰க. ஸர்வபூதங்களில் (1) வெவ்வேறு நாநாவித பாவங்களைப் (2) பற்றின எந்த ப்ரதக் ஞானமோ (3), அந்த ஞானத்தை ராஜஸமாக அறி (4).**

(1) ஸகல தேஹங்களில்.
(2) தோற்றங்களை.
(3) வெவ்வேருகப் பிரித்து அறியும் அறிவோ.
(4) தனக்கு முன்னிருக்கின்றவைகளை, த்வந்த்வ மோஹம் பெற்ற புத்தி வெவ்வேருகப் பிரித்தும், அவைகளின் பேதங்களைப் பாராட்டியும் நிற்கும். த்வந்த்வ புத்தியோடு கூடினஞாதா நாநாவித ரூபங்களையும் அவற்றின் வேற்றுமைகளையும் அறியுமேயன்றி, அவற்றிற்கும் அகண்ட வஸ்துவுக்கும் உள்ள ஆதார ஆதேய ஸம்பந்தத்தை அறியாது. இவ்வித ஞானம் ரஜஸ்மய ஞானம்.

இனி, உ௰உ இல் தாமஸ ஞானம் கூறப்படும்.

**உ௰உ. [தனக்கு இதுதான்] எல்லாம் போல (1) [நினைத்து] ஒரு கார்யத்தில் அழுந்தினதும் (2), காரண கார்ய விசாரணை அற்றதும் (3), தத்வார்த்தத்தை அறியாததும் (4), அல்பமும் (5) ஆகியு எந்த ஞானமோ, அது தாமஸம் என்று கூறப்பட்டது (6).**

(1) "க்ருத்ஸ்நவத்"=எல்லாம் போல.
(2) ஒரு பொருள் போக அல்லது வர இருந்தால், அந்த ஒன்றைத் தனக்குடைய ஸகல பொருள்களும் போகின்றன போலவும் அல்லது வரவேண்டியவை போலவும் நினைத்து, அதனில் மிகப் பற்றுள்ளதாயும்.
(3) ப்ரக்ருதி விஷயங்கள் காரண கார்ய ஸம்பந்தமாகவே, கால தேஶ திக் என்ற பரிஸ்சின்னங்களைப் பற்றித், தோன்றியும் வளர்ந்தும் அழிந்தும் வருமென்ற உண்மையை அறியாததும்.
(4) ஆத்ம லக்ஷணங்களை அறியமாட்டாததும்.

(5) ஆசைகளால் பந்திக்கப்பட்டுச் சிறியதானதும்.

(6) தாமஸ ஞானியின் புத்தி, விருப்பு வெறுப்புகளால் ஏவப்பட்டு, சலனத்தை அடைந்து அல்ப ஶக்தியோடிருக்கும், ஆத்ம விஷயங்களை அறியமாட்டாது, காரண கார்ய ஸம்பந்தங்களை விசாரிக்காது, சிறிய சங்கதிகளை மலைபோலப் பாராட்டி மிக வருத்தப்படும்.

இனி, கர்ம பேதங்களை அடுத்த மூன்று மந்த்ரங்களில் கூறுவார்.

**உ௰௩.** [விஷயங்களில்] ஸங்கமில்லாமல், ராக த்வேஷமில்லாமல், எந்த நியதகர்மம் பலத்தைப் பெற விருப்பமற்றவனுல் செய்யப்பட்டதோ, அது ஸாத்விகம் என்று கூறப்பட்டது (1).

(1) ஸாத்விக கர்மமாவது, விருப்பு வெறுப்பால் ஏவப்படாததும், விஷய ஸங்கங்களில் நின்று ஜனிக்காததும், ஶுபாஶுப பலன்களை நாடாததும், ஆகிய சிந்தனைகளும் வாக்குக்களும் செய்கைகளுமாம்.

**உ௰௪.** கர்மத்தை நிறைவேற்ற விருப்பமுடையவனுல், அல்லது அஹங்காரம் பெற்றவனுல், வெகு முயற்சியுடன் எது செய்யப்படுகின்றதோ; அது (1) ராஜஸமென்று கூறப்படுகின்றது (2).

(1) அந்தக் கர்மம்.

(2) ராஜஸ கர்மமாவது, எடுத்த கர்மத்தை நிறைவேற்றவே வேண்டும் என்ற ஆவலோடும், அல்லது நானே இந்தக் கர்மத்தை முடிக்க வேண்டும் என்ற எண்ணத்தோடும், வெகு முயற்சியோடு செய்யப்பட்ட கர்மம்.

**உ௰௫.** அநுபந்தத்தையும் (1), கெடுதியையும் (2), ஹிம்ஸையையும் (3), புருஷகாரத்தையும் (4) கவனிக்காமல், மோஹத்தால் எந்தக் கர்மம் தொடங்கப்படுகின்றதோ, அது தாமஸம் என்று கூறப்படுகின்றது (5),

(1) தன்னைச் சூழ்ந்திருக்கும் பந்தனங்களாகிய கடைகளையும்.

(2) தனக்கு வரும் நஷ்டத்தையும்.

(3) பிறருக்கு உண்டாகும் துன்பத்தையும்.

(4) "பௌருஷம்"=புருஷகாரம், தனது வல்லபம், (ஊக்கம், இடம், பொருள், ஏவல்).

(5)தாமஸ கர்மமாவது தனக்குள்ள ஶக்தியையும் தடைகளையும் வரும் நஷ்டங்களையும் ஆராயாமல் செய்யப்பட்ட கர்மங்கள்.

இனி, கர்த்தாவின் பேதங்களை அடுத்த மூன்று மந்த்ரங்களிற் கூறுகின்றார்.

**உ௬௬. ஸங்கத்தை விட்டவனும் (1), நான் என்று பேசாதவனும் (2), தைர்யம் உத்ஸாஹங்களோடு கூடியவனும் (3), ஸித்தி. அஸித்திகளில் விகாரமற்றவனும் (4), ஆகிய கர்த்தா ஸாத்விகன் என்று கூறப்படுகிறன் (5).**

(1) விஷயங்களில் அழுந்தாத மனமுடையவனும்.

(2) கர்மங்களைச் செய்யும் பொழுது "நான், நான்" என்ற அஹந்தை நிறைந்த வார்த்தைகளை உச்சரிக்காதவனும்.

(3) ஸ்திர புத்தியையும் ஊக்கத்தையும் பெற்றவனும்.

(4) வெற்றி தோல்விகளில் ஸமத்வம் பெற்றவனும்.

(5)ஸாத்விக கர்த்தா விஷய ஸுகத்தை மதிக்காமல், த்வந்த்வங்களை ஸமப்படுத்தி, நான் என்ற நினைவும் பேச்சுமற்று, தனக்குரிய கர்மங்களை தைர்யத்தோடும் உத்ஸாஹத்தோடும் நிறைவேற்றுவான்.

அடுத்த ஶ்லோகத்தில் ராஜஸ கர்த்தாவின் லக்ஷணம் கூறப்படும்.

**உ௬௭. ராகம் பெற்றவனும், கர்ம பலத்தைப் பெற விருப்பமுடையவனும், லோபமுடையவனும், ஹிம்ஸையைச் செய்கின்ற ஸ்வபாவம் பெற்றவனும், ஶௌசமற்றவனும், ஸந்தோஷத்தையும் துக்கத்தையும் [மாறி மாறிப்] பெற்றவனுமாகிய கர்த்தா, ராஜஸன் என்று கூறப்பட்டான் (1).**

(1) ராஜஸ கர்த்தா ஆசையால் ஏவப்பட்டு விஷய ஸுகங்

களை நாடி, தனக்குத் தடையானவர்களைத் துன்பப்படுத்தியும், கொடுக்கவேண்டியதைக் கொடாமலும், ஒருவேளை ஸந்தோஷத்தையும் இன்னொருவேளை துக்கத்தையும் அநுபவித்துக்கொண்டும், பரிஸாத்தமற்றும், கர்மங்களைச் செய்வான்.

**உ௰அ.** [மனஸை புத்தியோடு] சேர்க்காதவனும் (1), பிறந்தபடி தேர்ச்சியற்று இருப்பவனும் (2), ஸ்தப்தனும் (3), கபடனும், அன்பற்றவனும் (4), சோர்வுபெற்றவனும் (5), வேலைகளை நெடுநேரம் இழுத்துச் செய்கின்றவனும் (6), ஆகிய கர்த்தா தாமஸன் என்று கூறப்படுகின்றன் (7).

(1) "*அயுக்த:*=சேர்க்காதவன். அதாவது, இந்த்ரியங்களையும் மனஸையும் புத்தியோடு சேர்த்து அடக்கிவைக்காதவன். ஸமத்வ புத்தி இல்லாதவன். அத். உ, ௪௰அ.

(2) "*ப்ராக்ருத:*"=ப்ரகருதியில் (தாய் வயிற்றில்) நின்று பிறந்தபடி திருத்தமற்று இருப்பவன்.

(3) ஸ்தம்பம்போல இருக்கின்றவன்; தடியன்.

(4) "*நைஷ்க்ருத்திக:*"=(நி+க்ருத்திக) நற்கர்மம் அற்றவன்.

(5) "*விஷாதி*"=தளர்ச்சியடைந்தவன்.

(6) "*தீர்க ஸூத்ரீ*"=நெடுநூலன்.

(7) தாமஸ கர்த்தா ஐம்பொறி அடக்கமற்றுப் பஹிர் முகமாகத் திரிவான், கல்வி நற்குணம் உத்ஸாஹம் கீர்த்தி முதலிய ஶ்ரேயஸான ஸம்பத்களை மதிக்கமாட்டான். (ஆதலால், இவன் ஶ்ரேயோபிமானம் அற்றவன்), புண்ய கர்மங்களைச் செய்யான்; தீமைகளைச் செய்வான், சோர்வுக்கு ஆளாயிருப்பான், தான் செய்யவேண்டிய வேலைகளை நெடுநேரஞ் சென்றே செய்வான், என்று இந்த மந்த்ரத்தில் கூறி, அடுத்த ஆறு மந்த்ரங்களில் கரணம் என்ற பதத்தில் அடங்கிய புத்தியையும் தைர்யத்தையும் விரிக்கின்றார்.

**உ௰௯.** தனஞ்ஜய, குணவேற்றுமையால் மூன்று விதமாகக் கூறப்படுகிற புத்தி பேதத்தையும் தைர்ய பேதத்தையும் தனித்தனியாகவும் முற்றாகவும் கேள்.

**௩௰. பார்த்த, ப்ரவ்ருத்தி மார்க்கத்தை(1) பந்தமாகவும் (2) அகார்யமாகவும் (3) பயமாகவும் (4), நிவ்ருத்தி மார்க்கத்தை (5) மோக்ஷமாகவும் (6) கார்யமாகவும்(7) அபயமாகவும் (8), எந்த புத்தி அறிகின்றதோ, அது ஸாத்விகீ புத்தி (9).**

(1) விஷய ஸுகங்களை வ்ருத்தி செய்தலுக்குரிய கர்மாநுஷ்டானங்களை.

"ப்ரவ்ருத்தி மார்க்கம்"=விஷய ஸுக வ்ருத்தியைச் செய்யும்வழி. தோன்றி மறையும் ஸ்வர்க்காதி விஷய ஸுகங்களில் இச்சைகொண்டு, அவற்றைப் பெறுதற்காக ஒருவன் அநுஷ்டிக்கும் யஜ்ஞம் தானம் தபஸ் என்ற கர்மங்கள்.

(2) அறிவைச் சுருக்குகின்றதாகவும். விஷய ஸுக விருப்பங்களால் மனஸும் புத்தியும் கட்டுப்பட்டால், அவற்றின் ப்ரகாஶமும் உத்தாரண ஶக்திகளும் குன்றும். ஜீவாத்மாவின் ஸாக்ஷித்வமும் விஶாலமற்றிருக்கும்.

விஷய ஸுக விருப்பங்களில் ஜீவாத்மா அழுந்தினால், சிற்றறிவு இன்னுஞ் சிறியதாகும். இதுவே ஜீவாத்மாவுக்கு பந்தமாகும்.

பற்றப்பட்ட விஷயங்கள் வாராதாயின், அல்லது வந்து அழியுமாயின், துக்கத்தைக் கொடுக்குமாதலால், ப்ரவ்ருத்தி மார்க்கத்தை "துக்கப் ப்ரவ்ருத்தி மார்க்கம்" என்றும் பெரியோர் சொல்வார்கள்.

(3) தனக்கு அப்ரயோஜனமானதாகவும்; துன்பங்களை விளைவிக்கின்றதாகவும்.

"அகார்யம்"=கார்யம் இல்லாதது, தனக்கு நன்மையைக் கொடாதது.

(4) இறப்புப் பிறப்பைத் தருவதால், அஞ்சத்தக்கதாகவும்.

(5) விஷய ஸுக வ்ருத்தியைக் கருதாமல் செய்யப்பட்ட கர்மாநுஷ்டானங்களை.

"நிவ்ருத்தி மார்க்கம்"=விஷய ஸுக வ்ருத்தியை விட்டவழி சிற்றின்பம் என்ற துக்கத்தை ஒழித்த மார்க்கம்; முத்திநெறி.

(6) துக்க விமோசனமாகவும்.

(7) ஆத்மாவுக்கு ப்ரயோஜனமானதாகவும்; துக்க நிவ்ருத்தியைக் கொடுப்பதாகவும்.

(8) பிறப்பிறப்பைக் கொடாதபடியால் அச்சத்துக்கிடமில்லாததாகவும்.

(9) ஸாத்விக புத்தி (ஸம்ஸ்க்ருதத்தில், ஸாத்விகி புத்தி) யஜ்ஞம் தானம் தபஸ்களை ஸ்வர்க்காதி ஸுகங்களைப் பெறுதற்கு முயலாது என்றும், அக்கர்மங்களை ஈஶ்வரார்ப்பணமாகச் செய்வித்து, ஆத்மாவைத் துக்க பய விஷாதங்களில்நின்று ஒழிவிக்கும் என்றும், இந்த மந்த்ரத்தில் கூறி, அடுத்த மந்த்ரத்தில் ராஜஸ புத்தியின் லக்ஷணத்தைப் போதிக்கின்றார்.

௩௰௧. பார்த்த, எதனால் (1) தர்மத்தையும் [அதன்] கார்யத்தையும் (2), அதர்மத்தையும் [அதன்] அகார்யத்தையும் (3), உள்ளபடியல்லாமல் (4) ஒருவன் அறிகின்றனோ, அந்தப் புத்தி ராஜஸீ (5).

(1) எவ்வித புத்தியால்.

(2) ப்ரயோஜனத்தையும்; அதன் நற்பலனையும்.

(3) அப்ரயோஜனத்தையும்; அதன் தீய பலனையும்.

(4) "அயதாவத்"=விபரீதமாக, மாறாக, உண்மைக்கு விரோதமாக.

(5) ராஜஸ புத்தி (ஸம்ஸ்க்ருதத்தில்,ராஜஸீ புத்தி) விருப்பு வெறுப்புக்களுக்கு அடிமைப்பட்டிருப்பதால், லோகத்தில் ஸூக்ஷ்மமாக இயங்கும் தர்மத்தின் ஸ்வரூப லக்ஷணங்களை உள்ளபடி அறியாது, ராஜ பயத்தையும் ஜன பயத்தையும் தவிர்த்தால்,விதிகளை அநுஸரிப்பதற்கும் விலக்குகளை விடுவதற்கும் நியாயம் உண்டோ என்று மயங்கும்; தர்மங்களும் புத்திநிலைகளும் குணங்களும் இகபர ஸுகங்களும் அஸுகங்களும் பரமேஶ்வரனால் காரண கார்ய ஸம்பந்தமாகவே இயற்றப்பட்டன என்ற உண்மைகளை உபதேஶித்தாலும்,விபரீதமாகவே அர்த்தம் செய்யும்; அதர்மங்களின் கார்யங்களையும் உள்ளபடி அறியாது என்று இந்த மந்த்ரத்தில் விளக்கி, அடுத்ததில் தாமஸ புத்தியின் தன்மையை விரிப்பார்.

௩௰௨. பார்த்த, எது (1) தமஸினால் மறைக்கப்பட்டு(2) அதர்மத்தைத் தர்மமென்றும் (3), [அவ்விதமே] ஒவ்வொரு பொருளையும் விபரீதமாகவும் எண்ணுகின்றதோ (4), அந்த புத்திப் தாமஸீ (5).

(1) எந்த புத்தி.
(2) அறியாமை என்ற இருளினால் மூடப்பட்டு.
(3) பாப புண்ய கர்மங்களின் வித்யாஸங்களை அறியாமலும்.
(4) அப்படியே குணங்களுக்கும், புத்திகளுக்கும், கர்த்தாக்களுக்கும், ஸுகங்களுக்கும், ஸந்யாஸங்களுக்கும், தெய்வங்களுக்கும், பிரமாணங்களுக்கும், ஆசாரங்களுக்கும், அனுசாரங்களுக்கும் இன்னும் அநேக பொருள்களுக்கும் உள்ள பேதங்களை மிஸ்ரமாக்கி அறிகின்றதோ.

அடுத்த மூன்று மந்த்ரங்களில் தைர்யம் விபாகப்படுத்தப்பட்டது.

தைர்யம் என்றது தீரனுடைய தன்மை, திடபுத்தி பெற்றவனுடைய உறுதிநிலை.

௩௰௩. பார்த்த, யோகத்தினின்று விலகாத (1) எந்த தைர்யத்தால் மனஸ், ப்ராணன், ஞானேந்த்ரியங்கள் என்றவைகளின் க்ரியைகளைத் தரிக்கின்றனோ (2), அந்த தைர்யம் ஸாத்விகம்.

(1) த்வந்த்வ ஸமத்வத்தில் ப்ரதிஷ்டை பெற்ற. (உ சயஅ).
(2) மனஸின் க்ரியையாகிய நினைத்தலையும், ப்ராணன் அபானன்களின் க்ரியைகளாகிய உள்மூச்சையும் வெளிமூச்சையும், ஞானேந்த்ரியங்களின் க்ரியைகளாகிய பார்த்தல் கேட்டல் முதலியவற்றையும், சிதறவிடாமல் காக்கின்றனோ.

தைர்யத்தின் ஜனனமும் ஸ்வபாவமும் இதில் விளக்கப்பட்டது. புத்தியின் ஸ்திரநிலை அமைதற்கு மனஸும் ப்ராணனும் ஞானேந்த்ரியங்களும் தத்தம் க்ரியைகளைச் சலனமற்றுச் செய்தே பழகவேண்டும். ஓர் ஆபத் வேளையில் நினைவுகளும் மூச்சுக்களும், பார்த்தல் கேட்டல் முதலிய ஐம்பொறித் தொழில்களும் சிதறினால், புத்தியும் சிதறி, தன் ஸ்திரத்தன்மையை

இழக்கும். பயத்தை உண்டுபடுத்துங் காட்சியாவது ஸப்தமாவது ஸம்பவித்த உடனே ஸாதாரண மனுஷர்கள் பெருமூச்சு விட்டு, மனம் பதறிக், கண்ணேயும் காதையும் பொத்துவார்கள், அல்லது ஓடித் தட்டழிந்து விழுவார்கள். இதெல்லாம் அதைர்யஸாலிகளின் கோலங்கள்.

ஸாத்விக தைர்யவானுக்கு த்வந்த்வ ஸமத்வம் உண்டு. அதாவது, உயிரோடிருத்தலும் உயிரை இழத்தலும், வெற்றியும் தோல்வியும், புகழ்ச்சியும் இகழ்ச்சியும், ஸுகமும் அஸுகமும், ஒன்றாய்த் தோன்றுவதால், கண் எதைக் கண்டாலும், காது எதைக் கேட்டாலும், தேகம் எதை ஸ்பர்ஸித்தாலும், அவன் பயங்கான். மனஸும் நடுங்காது. எனவே, ஸாத்விக தைர்யமானது த்வந்த்வ ஸமத்வத்தைப் பற்றியும், மனஸ் ப்ராணன் ஞானேந்த்ரியங்கள் என்ற கரணங்களின் அமைதியான தொழில்களைப் பற்றியும் ஜீவிக்கின்றது.

அடுத்த மந்த்ரத்தில் ராஜஸ தைர்யம் விளக்கப்படும்.

**௱௰௪. ஆனல் பார்த்த, அர்ஜுந, ஒருவன் ஒரு கர்மம் செய்யுங் காலத்தில், எந்தத் தைர்யத்தால் பலனை விரும்பித் தர்மார்த்த காமங்களைத் (1) தரிக்கின்றனோ, அந்தத் தைர்யம் ராஜஸம்.**

(1) தர்மம் அர்த்தம் காமம்= அறம் பொருள் இன்பம்.

புருஷன் என்ற ஜீவாத்மா, தன் மலங்களை நீக்கும் பொருட்டு, பகவானல் வகுக்கப்பட்ட நான்கு அர்த்தங்களை (பொருள்களை) ப்ரயாஸப்பட்டு அறிய வேண்டும். அவ்வறிவால் மல நீக்கம் உண்டாகி ப்ரஹ்மபூயம் அமையும். அப்பொருள்கள் "புருஷார்த்தம்" (புருஷன் தேடத்தக்க பொருள்) எனப்படும். அவையாவன, தர்மம் (அறம்), அர்த்தம் (பொருள்), காமம் (இன்பம்), மோக்ஷம் (துக்கநிவ்ருத்தி) ஆம்.

"தர்மம்" அல்லது அறம் என்றது ஆத்மோபாய கர்மங்களாகிய யஜ்ஞம் தானம் தபஸும், தத்தம் வர்ணத்துக்குரிய ஜீவனோபாய கர்மங்களும்.

"அர்த்தம்" அல்லது பொருள் என்றது ஆத்மோபாய கர்மங்களுக்கும் ஜீவனோபாய கர்மங்களுக்கும் ஸஹாயமான பொ

ருள்கள். இவற்றில் முக்யப்பொருள் அரசு அல்லது ராஜாங்கம். இஃதில்லாவிடத்து இல்லறமாவது துறவறமாவது செவ்வையாக நடைபெறாது. ராஜாங்க வலிமையைக்கொண்டு த்ரவ்யந் தேடல் முதலிய கர்மங்களைப் பயமற்றுச் செய்யலாம்.

காமம் அல்லது இன்பம் என்றது காதலனும் காதலியும் கருத்துறவுபடுதல்.

இந்த மந்த்ரத்தில் ராஜஸ தைர்யம் நிவ்ருத்தி மார்க்கத்தால் பெறத்தக்க மோக்ஷம் என்ற புருஷார்த்தத்தில் ப்ரதிஷ்டை பெறாதென்றும், ப்ரவ்ருத்தி மார்க்கமாய்ச் சென்று இல்லம் பொருள் பெண் என்ற அல்ப புருஷார்த்தங்களை மிகப்பற்றுடன் தேடும் மனஸுக்கு ஸ்திரத்தன்மையைக் கொடுக்குமென்றும், விளக்கி அடுத்த மந்த்ரத்தில் தாமஸ தைர்யத்தின் தன்மையைக் கூறுகின்றார்.

**௩௰௫. துர்மேதை (1) பெற்றவன் எதனால் நித்ரையையும் பயத்தையும் துக்கத்தையும் விஷாதத்தையும் மதத்தையும் விடுகின்றனில்லையோ, அந்த தைர்யம் தாமஸம் (2), ஓ பார்த்த.**

(1) கெட்ட புத்தி; கேட்டைத்தரும் வஸ்துக்களை நல்லவை என்று அறியும் புத்தி.

(2) தாமஸ புத்தியானது பயம் துக்கம் சோர்வு தூக்கம் என்றவற்றை அநுஸரித்துக்கொண்டே இருக்கும்.

இனி, மனவலில் உதயமாகின்ற ஸுகத்தைப் புத்தி அறிவதால், ஸுகத்தின் வகைகளை வரும் மூன்று ஶ்லோகங்களால் விரிக்கின்றார்.

ஸுகத்தோடு ஸம்பந்தப்பட்டது துக்கம். துக்கத்தின் லக்ஷணம் உ. அக்குரிய (1) ம் உரையில் விளக்கப்பட்டது.

ஒரே விஷயம் மனஸுக்கு ஒருவேளையில் ஸுகமாகவும் மற்றொருவேளையில் துக்கமாவும் இருக்கக்காண்டலால், விஷயங்களில் ஸுகதுக்கத் தன்மைகள் இல்லை என்பது நிஶ்சயம். விஷயங்களில் ஸுக துக்கங்கள் இல்லை எனின், அந்தத் தன்மைகள் எங்கிருக்கும், எங்கு தோன்றும், என்ற வினவுக்கு முறையே விருப்பிலும் வெறுப்பிலும் இருக்கும் என்றும்,

மனஸில் தோன்றும் என்றும், விடை அளிக்கப்படும்.

விருப்பு ஒரு விஷயத்தைப் பற்றி மனஸில் ஏற, மனஸ் அந்த விருப்பை உடனே உதறாமல், அதற்கு அநுகூலமாயிருந்து விருப்பங்கொண்ட விஷயத்தை நினைத்துக்கொண்டிருக்குங் காலமெல்லாம், அத்ருஶ்ய விருப்பின் ஆபாஸம் மனஸில் ஸுகவடிவமாய் விளங்கும். இடங்கொடாதுபோனால், அந்த விருப்பம் மறைந்துவிடும், நாஶப்படும். மனஸ் வெறுப்புக்கு அநுகூலமாயிருந்தால், வெறுப்பின் ஆபாஸம் மனஸில் அஸுகமாய்த் தோற்றும்.

எனவே, ஸுகதுக்கங்களுக்கு மூலம் விருப்பும் வெறுப்புமே. அவை விளங்கும் இடம் அவைக்கு அநுகூலமான மனஸே.

புத்தியும் ஜீவாத்மாவும் விருப்பு வெறுப்புக்களில் அடங்கிய ஸுக துக்கங்களை விருப்பு வெறுப்புக்களிலேயே காணாமல், அவை மனஸில் ஏறின ஸமயத்தில் மாத்ரம் கார்யப்படுவதால் அக்கார்யப்பொருள்களை ஸுக துக்கங்களாகக் காண்கின்றன.

௩௰௬—௩௰௯ மந்த்ரங்களில் ஸாத்விக ராஜஸ தாமஸ ஸுகம் கூறப்படும்.

**௩௰௬—௩௰௭. பரதரிஷப, இப்பொழுது என்னிடம் மூன்றுவித ஸுகத்தைக் கேள். அப்யாஸத்தால் (1) எதில் (2) [ஒருவன்] ரமிக்கின்றனோ (3), துக்கத்தின் முடிவையும் (4) பெறுகின்றனோ, எது (5) முதல் விஷம்போலவும் முதிர்ச்சியில் அம்ருதம் போலவும் [இருக்கின்றதோ] (6), அந்த ஸுகம் ஸாத்விகம் என்று கூறப்பட்டது. அது ஆத்மபுத்திப் ப்ரஸாதத்தால் (7) பிறந்தது.**

(1) ஸத்குரு ஸேவை, ஞானஶாஸ்த்ர விசாரணை, யோக ஸாதனை என்ற பழக்கங்களால் பெற்ற.

(2) எவ்வித ஸுகத்தில்.

(3) மேன்மேலும் ஆநந்தங் கொள்ளுகின்றனோ.

(4) "து:காந்தம்"=துக்கத்தின் முடிவு; மோக்ஷம்.

(5) எவ்வித ஸுகம்.

(6) ஆரம்பத்தில் வருத்தமாயும் துன்பம்போலவும், பழக ப்பழக தேவாம்ருதம் போலவும்.

(7) ஆத்மாவில் ப்ரதிஷ்டை பெற்ற புத்தியின் தெளிவால்.

ஸாத்விக ஸுகம் ஆத்மாவில் ப்ரதிஷ்டைபெற்ற புத்தியில்மாத்ரம் ஜனிக்கும். லோக ஸுகங்களையும் தேஹ ஸம்பந்தமாக வந்த இனம் ஜனம் முதலியவற்றிலுள்ள அபிமானத்தையும் விட்டு, யோகாப்யாஸத்திலும் ஆத்ம விசாரணையிலும் ப்ரவேசிக்கும் பொழுது, மனஸும் புத்தியும் கஷ்டப்படும். இந்த அரிய பழக்கங்களால் ஆணவாதி மலங்களில்நின்று மனஸும் புத்தியும் மேன்மேலும் தெளிவுபெற்று, ஆத்மாவை அண்டியே ஜீவிக்கும் காலத்தில், தேவாத்ம சக்தியின் அழிவற்ற ஸுகமும் ப்ரகாசமும் அவற்றில் நேரே ப்ரதிபலிக்கும். இது "ஸாத்விக ஸுகம்" எனப்படும்.

கூ௰அ. விஷயேந்த்ரிய ஸம்யோகத்தால் (1) எது (2) முதல் அம்ருதம்போலவும் முதிர்ச்சியில் விஷம் போலவும் [இருக்கின்றதோ], அந்த ஸுகம் ராஜஸம் என்று கூறப்பட்டது (3).

(1) இந்த்ரியங்கள் தத்தம் விஷயங்களை நாடிப் புணர்வதினால்.

(2) எந்த ஸுகம்.

(3) ராஜஸ ஸுகம் இந்த்ரிய விஷய போகத்தில் நின்றே உதயமாகும். இந்த்ரியம் தன் விஷயத்தை ஸ்பர்ஸித்தவுடனே ஜன்யமாகின்ற ராஜஸ ஸுகம் மிக மதுரமாயிருக்கும். ஆனால், அந்த விஷயத்தை மீளவும் அநுபோகஞ்செய்ய, அதில் விருப்பங் குன்றி முடிவில் வெறுப்புண்டாகும்.

கூ௰கூ. நித்ரை, ஆலஸ்யம் (1) ப்ரமாதம் (2) என்றவைகளில் நின்று பிறந்த எந்த ஸுகம் முன்னும் (3) பின்னும் (4) ஆத்மாவை மோகிப்பிக்கின்றதோ (5), அது தாமஸம் என்று கூறப்பட்டது (6).

(1) சோம்பல்.

(2) மறதி.

(3) ஆரம்பத்திலும்.

(4) முடிவிலும்.

(5) அறிவை இருளில் அழுத்துகின்றதோ.

(6) தாமஸ ஸுகம் நித்ரை சோம்பல் மற்தி என்ற மூடங்களில் நின்று ஜனிக்கும். ஆரம்பத்திலும் முடிவிலும் அறிவை ஒரேவிதமான அறியாமையில் ஆழ்த்திக் கெடுக்கும்.

**௪௰. எந்த ஸத்வம் (1) ப்ரக்ருதியில்நின்று பிறந்த மூன்று குணங்களினால் விடப்பட்டதோ (2), அது பூமியில் [நரர்க்குள்] இவது, ஸ்வர்க்கத்தில் தேவர்களுக்குள்ளாவது, இல்லை (3).**

(1) எந்த அழிவற்ற வஸ்து, எந்த முக்தப்பட்ட ஆத்மா.

(2) ப்ரக்ருதி விகாரங்களாகிய தாமஸ ராஜஸ ஸாத்விக குணங்களில்நின்று கைவல்யமானதோ.

(3) அந்த அழிவற்ற வஸ்து ("ஸத்வம்"), பூலோகத்தில், மானுடதேகத்தில் இருந்தால், மநுஷ்யன் என்று கூறலாகாது; ஸ்வர்க்கலோகத்தில் தேவதேகத்தில் இருந்தால், தேவன் என்று கூறலாகாது. அது பரமாத்மாவே, ஸதாஶிவமே.

**௪௰௧. பரந்தப, ப்ராஹ்மண க்ஷத்ரிய வைஶ்ய ஶூத்ரர்களின் கர்மங்கள் (1) ஸ்வபாவ ஜன்ய குணங்களினால் வகுக்கப்பட்டன (2).**

(1) சதுர் வர்ணிகள் அநுஸரிக்கவேண்டிய கர்மங்கள்.

ப்ராஹ்மண புத்தி உடையவனுக்குரிய ஆத்மோபாய கர்மங்கள் வேதம் ஓதுதலும், யஜ்ஞம் தானம் தபஸ் செய்தலும், ஜீவனோபாய கர்மங்கள் வேதம் ஓதுவித்தலும், யஜ்ஞம் செய்வித்தலும், தானம் வாங்குதலுமாம்.

க்ஷத்ரிய புத்தி உடையவனுக்குரிய ஆத்மோபாய கர்மங்கள் வேதம் ஓதுதலும், யஜ்ஞம் தானம் தபஸ் செய்தலும், ஜீவனோபாய கர்மங்கள் க்ராம தேஶ அதிகாரமும் ஜனபத்த்ராணமும் (ஜனங்களை ஆபத்தில்நின்று காத்தலும்) ஆம்.

வைஶ்ய புத்தி உடையவனுக்குரிய ஆத்மோபாய கர்மங்கள் வேதம் ஓதுதலும், யஜ்ஞம் தானம் தபஸ் செய்தலும், ஜீவனோபாய கர்மங்கள் பசு காத்தலும் உழுதலும் வர்த்தகமு

செய்தலுமாம்.

ஶூத்ர புத்தி உடையவனுக்குரிய் ஆத்மோபாய கர்மங்கள், வேத பாராயணத்தை நீக்கி, யஜ்ஞம் தானம் தபஸ் செய்தலும், ஜீவனோபாய கர்மம் மேல்வர்ணத்தாரில் ஒரு நல்ல எஜமானனைப் பற்றிய பரிசாரகமுமாம்.

(2) சதுர்வர்ணிகளுடைய கர்மங்கள் அவர்கள் பிறவியிலே அமைக்கப்பட்ட குணங்களுக்கு ஏற்றபடியே விபாகப்பட்டன.

"ஸ்வபாவ ப்ரபவை: குணை:"=ஸ்வபாவ ஜந்ய குணங்களினால்.

குணங்களுக்குத் தக்கபடி கர்மங்கள் வகுக்கப்படினும், நற்குணங்கள் பூர்விக புண்ய கர்மங்களுக்குத் தக்கபடியே அருளப்படும்.

விதி விலக்கு ரூபமான தர்மத்தை அறியக்கூடிய ஜீவர்களின் புண்ய கர்மங்களுக்குத் தக்கபடி பரமேஶ்வரன் அந்தக்கரணத்தில் (உள்ளத்தில்) அவனவனுக்குரிய குணங்களை மாதாவின் கர்ப்பப் பையிலேயே அருள்வார். கர்ப்பத்திலிருந்து வெளியே வந்த ஜீவாத்மாவின் குணங்கள் மேன்மேலும் ஶுத்தப்பட்டு வருமாறு, அவைக்கு அநுகூலமான கர்மங்களையும் அருள்வார்.

பிறவியிலே அமைக்கப்பட்ட குணங்கள் "ஸ்வபாவஜன்ய குணங்கள்" எனப்படும்.

அத்யாயம் ௩. ௩௰௫ க்கும், ௪. ௰௩க்கும் உரிய உரைகளை மீளவும் பரிசோதித்து எவ்விதம் பரமேஶ்வரன் குணத்தையும் கர்மத்தையுஞ் சேர்த்து ப்ராஹ்மணத்வம் க்ஷத்ரியத்வம் வைஶ்யத்வம் ஶூத்ரத்வம் என்ற சதுர்வர்ணங்களை ஸ்ருஷ்டித்தார் என்று அறிக.

வர்ணகுணங்கள் அந்தக்கரணத்தை இருப்பிடமாகக்கொண்டு புத்தியில் ப்ரகாஶிக்கும். எந்த மாநுடயோனியிலிருந்து ஆண்தேஹம் அல்லது பெண்தேஹம் பிறந்தாலும், எந்த தேஶத்தில் அது வஸித்தாலும், அதனுளிருக்கும் புத்தி ௪௰௨ இல் கூறப்பட்ட ப்ராஹ்ம குணத்தைப் பெற்றிருந்தால், அது "ப்ராஹ்மணபுத்தி" என்றும், ௪௰௩ இல் கூறப்பட்ட க்ஷத்

ரிய குணத்தைப் பெற்றிருந்தால், அது "க்ஷத்ரியபுத்தி" என்றும், ௪௰௪ இல் கூறப்பட்ட வைஶ்ய குணத்தை அல்லது ஶூத்ர குணத்தைப் பெற்றிருந்தால் "வைஶ்ய புத்தி" அல்லது "ஶூத்ரபுத்தி" என்றும், மஹான்கள் நிதானிப்பார்கள்.

ப்ராஹ்மண புத்தி உடையவனை "ஶர்ம" (ஸுகசொரூபி) என்றும், க்ஷத்ரிய புத்தி உடையவனை "வர்ம" (ஆயுததாரணி) என்றும், வைஶ்ய புத்தி உடையவனை "பாலித" (பசு தான்யம் தனம் என்றவற்றை வ்ருத்திசெய்து ரக்ஷிக்கின்றவன்) என்றும், ஶூத்ர புத்தி உடையவனை "தாஸ" (ஏவல் வேலை செய்கின்றவன்) என்றும் பெரியோர் அழைப்பார்கள்.

"ப்ராஹ்மணன்" என்ற பதம் ப்ரஹ்மத்தை ஸ்வாநுபவமுறையாக தரிஶித்தவன் என்று பொருள்படும். அதாவது, ப்ரஹ்ம ஞானியே ஸ்வய ப்ராஹ்மணனும். இவனே ஸுகசொரூபி.

ஏனையோர் யாவரும் துக்க சொரூபிகள். "ஶூத்ர" என்ற பதம், "ஶுச்" (துக்கம், ஶோகம்) என்ற தாதுவில்நின்று ஜனித்து, "த்ர" என்ற ப்ரத்யயத்தோடு கூடி, ஶோகம் அல்லது துக்கம் பெற்றவன் என்று பொருள்படும்.

பிறந்த நாள் தொட்டு ஏழாவது வயசுவரைக்கும் ஆசை கோபம் துக்கம் முதலிய கஶ்மலங்களால் மனஸும் புத்தியும் வாதிக்கப்படும் என்றும், அவற்றில்நின்று தப்புவதற்கு ப்ரஹ்மசர்யத்தை அநுஸரிக்கவேண்டும் என்றும், அந்த ஆஶ்ரமத்தை அநுஸரிக்கின்ற புத்தி "த்விஜன்" (இரண்டாம் பிறவியாகிய ஆத்ம தர்ஶனத்துக்கு அதிகாரி) என்றும், வேதாத்யயனத்தை விதிப்படி செய்கின்றவன் "விப்ரன்" என்றும், ஞானஶாஸ்த்ர விசாரணையில் ஶ்ரத்தையோடு ப்ரவேஶிக்கின்றவன் "உத்தம விப்ரன்" என்றும், பெரியோரால் கூறப்படுவர். இதற்கு ஆப்தர் வாக்கு,—

"ஜந்மநா ஜாயதே ஶூத்ர: ப்ரஹ்மசர்யோண ஹி த்விஜ:
விப்ரஶ்சாத்த்யயநேநைவ வஸ்து ஞாநாத்ததுத்தம:"

இதன் அர்த்தம்:—

பிறப்பினால் ஶூத்ரனாகிறான்; ப்ரஹ்மசர்யத்தால் த்விஜ

ணுகிறுன்; அத்த்யயனத்தால் விப்ரணுகிறுன்; வஸ்து ஞான த்தால் உத்தம விப்ரணுகிறுன்.

"விப்ர"=விதிர்ப்புப் பெற்றவன்.

மனம் வெதும்பி, உடல் புளகித்து நடுநடுங்கி, வேதமோதுகின்றவன் "விப்ரன்".

பத்திவைராக்ய விசித்ரத்தைப் பற்றித் திருச்சதகத்தில் ஸ்ரீ மாணிக்கவாசக ஸ்வாமி "மெய்தானரும்பி விதிர்விதிர்த்து......உன்னைப்போற்றி என்று திருவாய்லலர்ந்து அருளிஞர்.

முற்பிறவிகளில் செய்யப்பட்ட தராதரப்படி வர்ண குணங்கள் மாதாவின் கர்ப்பத்திலேயே அமைக்கப்பட்டன என்றும், அந்த வர்ண குணங்களைக்கொண்டே வர்ண கர்மங்கள் வகுக்கப்பட்டன என்றும் உபதேசித்திருப்பதால், வர்ணகுணமும் வர்ணகர்மமும் காரண கார்ய ஸம்பந்தம்பெற்ற வஸ்துக்கள் என்று அறியவேண்டியது. இவை பொன்னும் பொன் ஆபரணங்கள் போலவும் இருப்பதால், வர்ண குணங்களுக்கும் வர்ணகர்மங்களுக்கும் பேதமில்லை. இந்த அபேத தன்மை பற்றி, அடுத்த சுயஉ, சுயந, சுயச 'ம் ஶ்லோகங்களில் ப்ராஹ்ம க்ஷாத்ர வைஶ்ய ஶூத்ர குணங்கள் "கர்மங்கள்" என்று பேசப்பட்டன.

**சுயஉ.** ஶமம் (1), தமம் (2), தபஸ் (3), ஶௌசம் (4), க்ஷாந்தி (5), ஆர்ஜவம் (6), ஞானம் (7), விஜ்ஞானம் (8), ஆஸ்திக்யம் (9), என்ற ப்ராஹ்ம கர்மம் (10), ஸ்வபாவ ஜன்யம் (11).

(1) ஐம்பொறியடக்கம்.

(2) மனோநிக்ரஹம்.

(3) சண்டு, "தபஸ்" விருப்பு வெறுப்புகளால் வரும் துன்பத்தை அடக்குதல் என்று பொருள்படும்

(4) தேஹஶுத்தி.

(5) பொறுமை.

(6) நேர்மை.

(7) ஆத்மாவைப் பற்றிய கல்வி.

(8) ப்ரக்ருதியும் ப்ரக்ருதி கார்யங்களும் எவ்விதம் ஆத்

மாவோடு ஸம்பந்தப்பட்டு இருக்கின்றனவென்று கல்வி.

(9) ஆதமா உண்டு ("அஸ்தி") என்ற புத்தி, விஶ்வாஸம். ஆஸ்திக்யம்=அஸ்திபுத்தி. ஆத்மா இல்லை' என்றவன் "நாஸ்திகன்".

(10) ப்ரஹ்மத்தைப் பற்றிய குணங்கள்; ப்ரஹ்மத்தை அடைவதற்காகப் பகவானால் அருளப்பட்ட குணங்கள்.

(11) "ஸ்வபாவஜம்"=ப்ரக்ருதியில்நின்று பிறந்த ("ஜம்") ஸத்வ குணங்கள்.

இவை ஆத்ம அம்ஶங்களாயிருந்தால் ஸந்ந்யாஸம் (த்யாகம்) செய்தலுக்கு உரியவை ஆகா. ஆத்மா எது, ப்ரக்ருதி கார்யங்கள் எவை, என்று அறிந்தால்தான், ஆத்மா ப்ரக்ருதி குணங்கள் யாவற்றையும் விட்டுக் கைவல்யத்தை (நிர்குணத்தை) அடையும்.

**௪௰௩.** பௌரியம் (1), தேஜஸ் (2), தைர்யம் (3) ஸாமர்த்யம் (4), போரில் ஓடாமல் நிற்றல், ஈகை (5), ஈஶ்வரபாவம் (6) என்ற க்ஷாத்ர கர்மம் (7) ஸ்வபாவ ஜன்யம்.

(1) ஶத்ருவை ஹிம்ஸிக்கும் ஶக்தி.

(2) தனக்குள்ள த்ரவ்யம் பரோபகாரம் தண்ட ஶக்தி முதலியவற்றால் பெற்ற ப்ரகாஶம்.

(3) புத்தியின் ஸ்திரநிலையில் பிறந்த நிஶ்சயம்.

(4) ஸமர்த்தனது தன்மை; பலவிஷயங்களையும் யோசித்துக் கூட்டிமுடிக்கும் ஶக்தி.

(5) பரோபகார முயற்சியில் தன் த்ரவ்யத்தையும், வேண்டுமாயின் தன் உயிரையும், கொடுத்தல்.

(6) அடக்கியாளும் ஶக்தி; துஷ்டநிக்ரஹ ஶிஷ்டபரிபாலனம்.

(7) க்ஷத்ரிய புத்திமானுக்கு அருளப்பட்ட குணங்கள்.

**௪௰௪.** க்ருஷி கோரக்ஷணை வாணிஜ்யம் என்ற வைஶ்ய கர்மம் (1) ஸ்வபாவ ஜன்யம். பரிசர்யாத்மக கர்மம் (2) ஶூத்ரனுக்கு ஸ்வபாவ ஜன்யம்.

(1) உழுதலிலும் மாடுகாத்தலிலும் வாணிகத்தொழில்களாகிய கொள்ளல் விற்றலிலும் ப்ரீதிகொண்ட வைஶ்ய குணம்.

(2) பரிசாரக ரூப கர்மம்.

"பரிசாரக" (பரி+சாரக=சுற்றிலும் செல்பவன்)=ஏவினபடி சொன்னவேலைகளைச் செய்யக் காத்துநிற்பவன்.

ஸௌத்ரபுத்தியுடையவன் நல்ல எஜமானனைத் தாவி நிற்பான். அவன், துஷ்ட புத்தியுடைய எஜமானன், எவ்வளவு செல்வந்தனுயிருப்பினும், அவனிடஞ் சேவகஞ்செய்யான்.

**௪௰௫. ஸ்வகர்மத்தில் (1) ப்ரீதிபெற்ற மனுஷன் ஸம்ஸித்தியைப் (2) பெறுகின்றன். ஸ்வகர்மத்தில் ப்ரீதி பெற்றவன் எவ்விதம் [இந்த] ஸித்தியைப் பெறுகின்றனோ, அதைக்கேள்.**

(1) தனது ஜன்ய குணத்துக்கேற்றபடி விதிக்கப்பட்டகர்மங்களில்.

௩. ௩௰௫ க்குரிய உரையைப் பார்த்தறிக.

(2) "ஸம்ஸித்தி"=தான் இருக்கின்ற நிலைக்கு மேம்பட்ட வாழ்வு.

**௪௰௬. எதில்நின்றும் பூதங்களின் ப்ரவ்ருத்தியோ (1), எதனுல் இதெல்லாம் வ்யாபிக்கப்பட்டதோ, அதை (2) ஸ்வகர்மத்தால் அர்ச்சித்து (3) மனுஷன் ஸித்தியைப் பெறுகின்றன் (4)**

(1) எந்தப் பரமபுருஷனில்நின்று ஜீவாத்மாக்கள் லோகங்களில் ப்ரவேஶிக்கின்றார்களோ.

(2) அந்தப் பரமேஶ்வரனை.

(3) தன் குணத்துக்கேற்றபடி வகுத்த கர்மங்களாலேயே பூஜித்து. அதாவது, தனக்குரிய கர்மங்கள் எல்லாம் பரமேஶ்வரனதே என்ற புத்தியோடு நிறைவேற்றி.

முற்றுகவும் அன்போடும் செய்யப்பட்ட ஸ்வகர்மாநுஷ்டானம் பரமேஶ்வரனுக்கு வில்வார்ச்சனைபோலாகும்.

(4) நிஷ்காம புத்திமானுகி, க்ரமமாக மோக்ஷஸித்தியை அடைகின்றுன். ௩. ௩௰௫, (3).

**சுயஎ. நன்றாய் அநுஷ்டிக்கப்பட்ட (1) பரதர்மத்திலும், ஸ்வதர்மம் விகுணமாயினும் (2) சிறந்தது. ஸ்வபாவத்தால் நியமிக்கப்பட்ட கர்மத்தைச் செய்கின்றவன் கில்பிஷத்தைப் (3) பெறமாட்டான்.**

*(1) "ஸ்வநுஷ்டிதாத்"=பலர் புகழும்படி செய்யப்பட்ட.*
*(2) பலர் வியந்து பேசுவதற்கு இடமில்லாததாயினும்.*
*(3) மலதோஷத்தை.*

*இங்கு கூறப்பட்ட மந்த்ரம் ங. நு௰ரு இல் உள்ளது. அதனுரையைப் பார்த்தறிக.*

**சுய௮. தூமத்தால் அக்நி வ்யாபிக்கப்பட்டது போல, கர்மங்கள் எல்லாம் தோஷத்தால் வ்யாபிக்கப்பட்டிருப்பதால், கௌந்தேய, ஸஹஜ கர்மத்தைத், தோஷம் பெற்றதாயிருந்தாலும், விடக்கூடாது (1).**

*(1) நெருப்பு எங்குண்டோ அங்கு புகையிருந்து அதன் ப்ரகாஶத்தை மறைப்பதுபோல, ப்ரக்ருதிமலத்தில்நின்று விரிக்கப்பட்ட கர்மங்கள் அம்மலத்தால் வ்யாபிக்கப்பட்டு, மறதி மோஹம் சோம்பல் இடம்பம் முதலிய தோஷங்களைப் பெற்று நிற்கும். இவ்வித தோஷங்கள் ஸம்பவிக்கும் என்று பயந்து ஸ்வதர்மங்களை விடக்கூடாது.*

*"ஸஹஜ"=தன்னோடு பிறந்த.*

*ஸஹஜ கர்மங்கள்=ஒருவனுடைய ஜன்யகுணத்திற்கேற்றபடி விதிக்கப்பட்ட கர்மங்கள்.*

**சுய௯. ஸர்வத்தில் ஸங்கமற்ற புத்தி உடையவனும், ஆத்மாவை வஶப்படுத்தினவனும் (1), ஆசையற்றவனும், ஆகியவன் ஸந்ந்யாஸத்தால்(2) மேலான நைஷ்கர்ம்ய ஸித்தியைப்பெறுகின்றன்(3).**

*(1) மனோ நிக்ரஹஞ் செய்தவனும். மந். ருயக, (1).*
*(2) கர்மபல த்யாக அப்யாஸத்தால்.*
*(3) பரம்பேருகிய நிஷ்கர்மாவின் தன்மையை ஸ்திரமாக அடைகின்றான்.*

*இனி நைஷ்கர்ம்ய புத்தி பெற்றவனுக்கு ஞானநிஷ்டை அமையும் என்றும், ஞானநிஷ்டையால் ப்ரஹ்ம நிர்வாணத்*

தைப் பெறுவான் என்றும், அடுத்த ஆறு மந்த்ரங்களிற் கூறு கின்றார்.

௫௰. கௌந்தேய, ஸித்தியைப் (1) பெற்றவன் எவ்விதம் ப்ர ஹ்மத்தைப் பெறுகின்றனோ, எந்த ஞானநிஷ்டை மேலானதோ, அதைச் சுருக்கமாக என்னிடம் அறி.

(1) நைஷ்கர்ம்ய ஸித்தியை.

௫௰௧. மிக்க ஶுத்தியுள்ள புத்தியோடு கூடினவன் தைர்யத் தால் ஆத்மாவை வஶப்படுத்தி (1), ஶப்தம் முதலிய விஷயங்களை நீக்கி (2), ராக த்வேஷங்களை உதறி (3),

௫௰௨. ஜனமற்ற ஸ்தலத்தை அடைந்து, சிறுக உண்டு, மனம் வாக்குக் காயம் என்றவைகளை ஒடுக்கி (4), நித்யம் த்யானயோகபர னாய் (5) வைராக்யத்தைப் (6) பெற்று,

௫௰௩. அஹங்காரம், பலம் (7) தர்ப்பம் (8), காமம், க்ரோதம், பரிக்ரஹம் (9) என்றவைகளை விட்டு, மமதையற்று, ஶாந்திபெற்று, ப்ரஹ்மபூயத்தை அடைய வல்லவனுகின்றன்.

(1) ஐம்பொறிகளோடு ஓடாமல் மனஸைத் தன்வஶமா க்கி.

(2) ஐம்புலன்களை அபிமானிக்காமல்.

(3) விருப்பு வெறுப்புக்களை நீக்கி.

(4) த்ரிகரண அடக்கம் என்ற மௌனநிலையில் ப்ரவே ஶித்து.

(5) பரமேஶ்வரனைப் பரம்பொருள் என்று ஸதாகாலமும் எண்ணி.

(6) விராகத்தை, நிராஶையை.

(7) கர்மபல அபேக்ஷை.

(8) மதம், ஆணவம்.

(9) ஒருவனிடமிருந்து ஒன்றை வாங்குதல்.

௫௰௪. தெளிவு பெற்ற புத்தியை உடைய ப்ரஹ்மபூதன் (1) [ஒன்றையும்பற்றி] துக்கப்படமாட்டான், விரும்பவுமாட்டான். எல்

லாப் பூதங்களிலும் (²) ஸமனுயிருந்து மேலான மத்பக்தியைப் பெறுகின்றன்.

(1) *ப்ரஹ்ம மயமானவன், ப்ரஹ்ம ஸொரூபி.*
(2) *ப்ராணிகளிலும்.*

௱௫௫. [நான்] எவ்வளவாயும் (¹) எவனுயும் (²) இருக்கின்றே னே, அந்த என்னை பக்தியால் (³) தத்போருள் என்று அறிகின்றன். அதனுல் அதன்பின் (⁴) என்னைத் தத்போருள் என்று அறிந்து (⁵) ப்ரவேஶிக்கின்றன் (⁶).

(1) *எவ்விதம் அணுவில் அணுவாயும் மஹத்தில் மஹத்தாயும்.*
(2) *எவ்வாறு அவன் அவள் அது என்ற ரூபங்களுக்கு ஆதாரமாகவும், அடக்கி ஆளுகின்றவனுகவும். ௩ங. ௬௰௧.*
(3) *குருவிலும் ஶாஸ்த்ரத்திலும் உள்ள ஶ்ரத்தையால்.*
(4) *அப்படி ஶ்ரவணம் மனனம் செய்த பின்.*
(5) *ஸ்வாநுபவமாக அறிந்து.*
(6) *எனக்குள் ப்ரவேஶிக்கின்றுன்; என்னேடு கலக்கின்றுன்; ஸாயுஜ்ய பதவியை அடைகின்றுன்.*

௱௫௬. என்னை ஆஶ்ரயமாகக் கொண்டவன் (¹), எக்காலங்களிலும் எல்லாக் கர்மங்களையும் செய்கிறவனுனுலும், எனது அநுக்ரஹத்தால் (²) ஶாஸ்வதமாயும், மாறததாயும் உள்ள பதத்தைப் பெறுகின்றன் (³).

(1) *நானே அவனுக்குத் தக்க இருப்பிடம் என்று நிஶ்சயித்திருப்பவன்.*
(2) *எக்காலமும் உள்ளதாயும்.*
(3) *அவனுக்குரிய கர்மாநுஷ்டானங்கள் யாவற்றையும் அவன் செய்கின்றவன் போலக் காணப்படினும், எனது க்ருபையால் பரமாத்ம தர்ஶனத்தைப் பெறுவான்.*

*அகர்த்ருத்வ புத்தியின் மகிமையைப்பற்றி அறியாதவர்கள் "இவன் கர்மங்களைச் செய்கின்றுன், இவ்ன ஸந்ந்யாஸி*

அல்லன்", என்று கூறுவார்கள். அறிவாளிகள் இவனது கர்மங்கள் நடைபெற்றுவரக் கண்டாலும், இவன் அகர்த்தா என்றே மதிப்பார்கள்.

பகவான் பாமரஜனங்களின் எண்ணத்தை அநுஸரித்து "கர்மங்களைச் செய்கின்றவனுனாலும்" என்றார்.

இனி, வரும் பதினொரு மந்த்ரங்களில் அர்ஜுநனுடைய சொந்தக் கர்மங்களைப்பற்றி உபதேஶமாகும்.

**௫௰எ.** சேதஸால் (1) எல்லாக் கர்மங்களையும் என்னிடம் வைத்து, என்னையே மேலானவனுகக் கொண்டு, புத்தியோகத்தை (2) அடைந்து, எக்காலங்களிலும், என்னையே சிந்திக்கின்றவனுயிரு.

(1) விவேகத்தால்.
(2) த்வந்த்வ ஸமத்வத்தை.

**௫௰அ.** என்னையே சிந்திக்கின்ற நீ கடக்க முடியாத யாவற்றையும் எனது அநுக்ரஹத்தால் கடப்பாய். ஆனல், நீ அஹங்காரத்தால் கேளாதிருந்தால் கெட்டுப்போவாய்.

**௫௰கூ.** அஹங்காரத்தைப் பெற்று யுத்தஞ் செய்யேன் என்று நீ எண்ணினல், இந்த எண்ணம் பயனற்றது. உன்னைப் ப்ரக்ருதி [எனது ஆக்ஞையால்] நியோஜிக்கும் (1).

(1) ஏவும்.

**௬௰.** கௌந்தேய, ஸ்வபாவத்தால் பிறந்த ஸ்வகர்மத்தால் கட்டப்பட்டிருக்கவேண்டிய நீ, மோஹத்தால், [உனது க்ஷத்ரிய கர்மத்தைச்] செய்ய விரும்பவில்லையாகில், [அதற்கு] வஶப்படாதவனுலும் அதைச் செய்வாய்.

**௬௰க.** அர்ஜுந, யந்த்ரத்தில் ஏறின [பா]வைகளைப்போல எல்லாப் பூதங்களையும் மாயையால் நடாத்திக்கொண்டு, எல்லாப் பூதங்களுடைய ஹ்ருதயத்திலும் ஈஶ்வரன் நிற்கின்றார்.

**௬௰உ.** பாரத, எல்லா வழிகளாலும் அவனையே ஶரணமாக அடை. அவனது அநுக்ரஹத்தால் மேலான ஶாந்தியையும் அழிவற்ற ஸ்தானத்தையும் பெறுவாய்.

**௬௰௩.** ரஹஸ்யத்திலும் மிகரஹஸ்யமான ஞானம் இவ்விதம் என்னால் கூறப்பட்டது. இதை முற்றக ஆராய்ந்து எவ்விதம் விரும்புகின்றாயோ அவ்விதமே செய் (1).

(1) ௫௰௬—௬௰ இல் செய்யவேண்டிய கர்மத்தை நீ செய்ய விரும்பவில்லையாகில், எனது வல்லபத்தால் அக்கர்மம் உன் கையாலேயே நிறைவேற்றப்படும் என்ற திருவாக்கைக் கேட்ட அர்ஜுனன், அதனில் விருப்பங்கொண்டு, தன் கர்மத்தைப் ப்ரீதியோடு செய்வான் என்பதுபற்றி, "எவ்விதம் விரும்புகின்றாயோ அவ்விதமே செய்" என்றார்.

**௬௰௪.** எல்லா ரஹஸ்யங்களிலும் மிக ரஹஸ்யமான எனது பரம வாக்யத்தை மறுபடியும் கேள். எனக்கு நீ உறுதியான அன்பன் என்றதால் உனக்கு நன்மையை உபதேசிக்கப்போகிறேன்.

**௬௰௫.** என்னிடம் மனம் வைத்தவனாகவும், என்னிடம் பக்தி வைத்தவனாகவும், என்னையே பூஜிக்கின்றவனாகவும், இரு. என்னையே நமஸ்காரஞ் செய். என்னையே பெறுவாய். ஸத்யமாக ஸாதிக்கின்றேன். எனக்கு நீ ப்ரியன்.

**௬௰௬.** ஸகல தர்மங்களையும் நீக்கி (1) என்னை ஒருவனையே ஶரணமாக அடை. உன்னை எல்லாப் பாபங்களில்நின்று நான் விடுவிப்பேன். துக்கப்படாதே.

(1) உனக்குரிய கர்மங்கள் உன்னுடையவை அல்ல என்று நிஶ்சயித்து.

**௬௰௭.** இது உனக்கு (1). தபஸ் அற்றவனுக்கும் பக்தி அற்றவனுக்கும் ஒருபொழுதும் கூறலாகாது. தக்க ஶ்ரவணம் அற்றவனுக்கும் கூறக்கூடாது (2). எவன் என்னை மதிக்கமாட்டானோ (3) [அவனுக்கும்] கூறக்கூடாது.

(1) இந்த உபதேஶம் உனக்கு உரியது.
(2) "ஶுஶ்ரூஷா" என்ற பதம் "ஶ்ரு" (ஶ்ரவணம் செய்தல், கேட்டல்) என்ற தாதுவில் நின்று ஜனித்து, ஶ்ரவணத்தில் அதிகப் ப்ரீதி என்று பொருள்படும்,

தக்க குருவில் ஶ்ரத்தையுடையவனும், அவருக்குத் தொண்டு செய்து, அவர் தெய்வத்தையும் ஆத்மாவையும்பற்றி ஓதின பாடங்களை மேன்மேலும் கேட்க விரும்புகின்றவன் "ஶுஶ்ரூஷு" எனப்படுவான்.

(3) ஈஶ்வர நிஶ்சயமில்லாதவனோ.

இனி பகவத்கீதா பாராயணத்தின் பலன் அடுத்த நான்கு மந்த்ரங்களிற் கூறப்படும்.

**கூ௬௮.** எவன் இந்த பரம ரஹஸ்யத்தை எனது பக்தர்களிடம் கூறுவானோ, [அவன்] என்னிடம் மேலான பக்தியைச் செய்து என்னையே பெறுவான், ஸம்ஶயமில்லை.

**கூ௬௯.** அவனிலும் எனக்கு மிக ப்ரியத்தைச் செய்கின்ற வேறெருவன் மானுடர்களுக்குள் இல்லை. பூலோகத்தில் அவனிலும் அதிக ப்ரியனை வேறெருவன் உண்டாகமாட்டான்.

**௭௰.** தர்மத்தில்நின்று விலகாத ([1]) இந்த எங்கள் ஸம்வாதத்தை ([2]) எவன் அத்யயனம் செய்வானோ ([3]), அவனால் நான் ஞான யஜ்ஞத்தால் பூஜிக்கப்பட்டவனுதவேன் என்பது எனது சித்தம்.

(1) "தர்ம்யம்"=தர்மத்தையே ஆதாரமாகக்கொண்ட.

(2) க்ருஷ்ணார்ஜுந ஸம்வாதத்தை.

(3) படிப்பானோ, ஓதுவானோ.

இந்த மந்த்ரத்தல் பாராயணபலன் கூறி, அடுத்ததில் ஶ்ரவணபலன் கூறுகின்றார்.

**௭௰க.** ஶ்ரத்தை பெற்றவனும் ([1]), அஸூயை அற்றவனும் ([2]) ஆகிய எந்த மனுஷன் கேட்பானோ, அவனும் முக்தனுகி ([3]), புண்ய கர்மஞ் செய்தவர்களின் சிறந்த லோகங்களை அடைவான் ([4]).

(1) யஜ்ஞம் தானம் தபஸ்களில் ப்ரீதிபெற்றவனும். அத். ௰ஏ. ௲.

(2) ஞான ஶாஸ்த்ர விசாரணையில் பொறுதியீனம் அற்றவனும், அதாவது, அதில் ப்ரீதிபெற்றவனும்.

(3) முக்திக்கு அதிகாரியாகி.

முக்தி என்றது விடுதலை பெறுதல்; அதாவது, துக்கத்தில்நின்று விமோசனம் அடைதல்.

துக்க நிவாரணை பலவகையாயிருக்கும். நிலம் வீடு பெண் பிள்ளை பணம் முதலியவை தனக்கில்லை என்று துக்கித்தவன், புண்யகர்மங்களைச் செய்தால், விரும்பினவற்றைப் பெறுவான். பெற்ற ஸமயத்தில் துக்கந் தீரும். ஆனால், பெற்ற பேறுகள் அழிவுள்ளனவாதலால், அவற்றைப்பற்றி வேறு துக்கங்கள் உண்டுபடும். ஸ்வர்க்கபோகங்களும் இப்படியே. இதுபற்றி பூலோகத்திலாவது ஸ்வர்க்கலோகத்திலாவது அநுபவிக்கப்பட்ட விஷயஸுகங்களை "முக்தி" என்று பெரியோர் கூறார். அழிவுள்ள விஷயங்களுக்கும் விஷயஸுகங்களுக்கும் அப்பாற்பட்ட நிலையில் அநுபவிக்கப்பட்ட ஶுத்த ஆத்மஸுகமே "முக்தி" எனப்படும்.

இந்த அழிவற்ற துக்கவிமோசனத்துக்குக் கீழ்ப்பட்ட துக்க விமோசனங்களாகிய மேல் லோகப் ப்ராப்திகள் "பதமுக்திகள்" எனப்படும்.

(4) இந்த க்ருஷ்ணார்ஜுந ஸம்வாதத்தை ஶ்ரவணம் செய்கின்றவன் கைலாஸம் வைகுண்டம் முதலிய லோகங்களுக்குச் சென்று, அங்குள்ள பதவிகளில் ஒன்றைப் பெற்று நெடுநாள் ஸுகமாக வாழ்வான்.

கைலாஸ வைகுண்ட ஸத்யலோக ப்ராப்திகளைப் பெற்றவர்களில், சிலர் ஸாலோக பதவியைப் பெற்றும், சிலர் ஸாமீப பதவியைப் பெற்றும், சிலர் ஸாரூப பதவியைப் பெற்றும் வாழ்வார்கள்.

ஸாலோகபதவி என்றது உபாஸிக்கப்பட்ட மூர்த்திகளின் லோகப்பேறு. ஸாமீப பதவி என்றது ஓர் அரசன் வாழும் பட்டணத்தில் வஸிக்கின்றவன் அவரது அன்பால் தனது அரண்மனைக்கு அழைக்கப்பட்டு அங்கு வாழ்வது போல, மூர்த்திகளின் ஸந்நிதியில் வஸித்தல். ஸாரூப பதவியாவது பக்தனுடைய அதிஶ்ரத்தையால் அந்த மூர்த்திகளின் ஸகளரூபத்தைப் பெறுதல். இந்தப் பதமுக்திகள் மூன்றும் "ஸகளமுக்திகள்." இவற்றிற்கு மேற்பட்ட ஸாயுஜ்ய "முக்தி நிஷ்

களம். இந்த நிஷ்கள முக்தியில் துக்க நிவ்ருத்தி மூற்றுப் பெறும். இதுவே அழிவற்ற ஸ்வய முக்தி.

௭௰௨. பார்த்த, இது உன்னல் ஏகாக்ர சித்தத்தால் [1] கேட்கப்பட்டதா? தனஞ்ஜய, உனது அஞ்ஞான ஸம்மோஹம் [2] நாசத்தை அடைந்ததா?

(1) ஒரு துனிபெற்ற அறிவால், அதாவது, பலவிஷயங்களில் மனஸும் புத்தியும் செல்லாது, ஒரே நிலையில் நிற்கின்ற சித்தத்தால்.

(2) அறியாமையில்நின்று பிறந்த பெரிய மயக்கம்; தர்மத்தின் ஸூக்ஷ்ம கதியைப் பற்றிய மயக்கம்.

அர்ஜுநன் கூறினன்:—

௭௰௩. அச்யுத, உனது அநுக்ரஹத்தால் மோஹம் நீங்கிற்று; ஸ்மரணை என்னல் பெறப்பட்டது. ஸந்தேஹமற்று நிற்கின்றேன். உனது வாக்கை அநுஷ்டிப்பேன்.

இனி அடுத்த ஐந்து மந்த்ரங்களில், வேத வ்யாஸ பகவானது அநுக்ரஹத்தால் க்ருஷ்ணார்ஜுந ஸம்வாதமான்து ப்ரஹ்மாண்டத்திலுள்ள புண்யாத்மாக்கள் அறியும் பொருட்டு, ஸாத்விக குணம் நிறைந்த ஸஞ்ஜயன் மூலமாகப் ப்ரஸ்தாபமானதென்றும், ஸஞ்ஜயன் அளவற்ற ஆஶ்சர்யத்தையும் மகிழ்ச்சியையும் பெற்றான் என்றும் கூறப்பட்டது.

ஸஞ்ஜயன் கூறினன்:—

௭௰௪. மஹாத்மாவாகிய வாஸுதேவனுடையதும் பார்த்தனுடையதும், ஆஶ்சர்யத்தைச் செய்கின்றதும், ரோமங்களை மலரும்படி செய்கின்றதும், ஆகிய இந்த ஸம்வாதத்தை நான் இவ்விதம் கேட்டேன்.

௭௰௫. மிக ரஹஸ்யமும் பரமமாகிய இந்த யோகத்தைத், தானே நேராகக் கூறுகின்ற யோகேஶ்வரனுகிய க்ருஷ்ணனிடமிருந்து, வ்யாஸரது அநுக்ரஹத்தால், கேட்டேன்.

எ௰௬. ராஜனே (1), கேஶவன் அர்ஜுநன் என்றவர்களின் புண்யமும் (2) அத்புதமும் ஆகிய இந்த ஸம்வாதத்தை அடிக்கடி நினைந்து நினைந்து ஸந்தோஷிக்கின்றேன்.

(1) த்ருதராஷ்ட்ர பூபதியே.
(2) நற்பலனைக் கொடுக்கத்தக்கதும்.

எ௰௭. ராஜனே, ஹரியின் அத்யத்புதமான அந்த [விஸ்வ] நபத்தை நினைந்து நினைந்து எனக்கு மிக ஆஶ்சர்யமுண்டாகின்றது. மேன் மேலும் ஸந்தோஷத்தை அடைகின்றேன்.

எ௰௮. எதில் (1) யோகேஶ்வரனை க்ருஷ்ணனோ, எதில் வில்லைத் தரித்துக்கொண்டிருக்கின்ற பார்த்தனோ, அதில் லக்ஷ்மியும் விஜயமும் அழிவற்ற நிலையும் நீதியும் என்றே எனது எண்ணம்.

(1) எந்த ஹ்ருதயத்தில்.

---

உபநிஷத்கள் என்றும் ப்ரஹ்மவித்தை என்றும் யோகஶாஸ்த்ரம் என்றும் கூறப்பட்ட க்ருஷ்ணார்ஜுந ஸம்வாதத்தில் ப்ரஸித்தி பெற்ற மோக்ஷ ஸந்ந்யாஸ யோகம் என்ற பதினெட்டாம் அத்யாயம் முற்றிற்று.

---

பகவத் கீதா
தமிழ் மொழிபெயர்ப்பும் விருத்தியுரையும்
முற்றுப்பெற்றன.

---

# நூலுக்கும் உரைக்குமுரிய
# சொல் அகராதி.

## அ.



௬௨

## ஸா.

# பிழைதிருத்தமும் கூட்டவேண்டியனவும்.

| பக்கம். | வரி. | |
|---|---|---|
| 7 | 14 | தான் என்பதைத் தாம் எனவாசிக்க |
| 7 | 17 | தான் ,, தாம் ,, |
| 11 | 19 | பட்டுத் ,, பட்டும் ,, |
| 12 | 18 | அநேகநேக ,, அநேகாநேக ,, |
| 13 | 16 | "காக்கப்பட்டிருக்கின்றது" என்ற பதங்களுக்குப் பின் "ஆனால [யுத்த ஸாதனை] போதுமளவுடைய பாண்டவ ஸேனை [ஊக்கமில்லாத] பீமனால் காக்கப்பட்டிருக்கின்றது" என்ற பதங்களைக் கூட்டுக. |
| 14 | 16 | "மஹாவிஷ்ணு" என்ற பதங்களை விலக்கி, "ஸ்ரீக்ருஷ்ணனுக்குத் தநுர்வேதத்தை ஓதுவித்து யுத்தப் ப்ரயோகங்களைப் போதித்த ஸாந்திப்பநி என்பவருடைய புத்ரனை அவன் திமிங்கில வடிவங்கொண்டு ஸமுத்ரத்துக்குள் இழுத்துச் சென்று விழுங்கிவிட்டபடியால், தமது ஆசார்யர் வேண்டுகோளின்படி, ஸ்ரீக்ருஷ்ணன்" என்ற பதங்களைக் கூட்டுக. |
| ,, | 24 | சென்னாய் என்பதைச் செந்நாய் எனவாசிக்க |
| 19 | 2,3 | "அதர்மம் வ்யாபித்தால் குல ஸ்த்ரீகள் குற்றம் அடைவார்கள்" என்ற பதங்களை ௪-ம் வரியிலுள்ள "ஓ வார்ஷ்ணேய" என்ற பதங்களுக்கு முன் சேர்க்க. |
| 21 | 15 | "௲௱௬" என்றதை "௲௱௯" ஆகத் திருத்துக. |
| 22 | 3 | "எவ்விடமிருந்து" என்ற பதங்களுக்குப் பின் "இந்தத் தருணத்தில்" என்ற பதங்களைக் கூட்டுக. |
| 24 | 15 | ஸாஸ்த்ரம் என்பதை ஶாஸ்த்ரம் எனவாசிக்க |

## பிழைதிருத்தமும் கூட்டவேண்டியனவும்.

| பக்கம். | வரி. | |
|---|---|---|
| 25 | 1 | "ஸ்ருஷ்டிக்கப்பட்ட...காட்டும்" என்ற பதங்களை ஸ்ருஷ்டிக்கப்பட்டதாயும் ... காட்டுவதாயும்" என்று திருத்துக. |
| 35 | 3 | "குறைவில்லாதவனையும்" என்ற பதத்துக்குப்பின் "பழையவனையும்" என்று கூட்டுக. |
| 36 | 7 | "ஆதலால்" என்ற பதத்தை விலக்குக. |
| ,, | 17 | க்ருஷ்ணனுக்குப் என்பதை க்ருஷ்ணனுக்கு என்க. |
| 37 | 19 | "பார்த்த" என்றதை "பாரத" என்று மாற்றுக. |
| 40 | 12 | பூமியைப் என்பதை பூமியை எனவாசிக்க |
| 42 | 14 | "படித்தரம்" என்றதை "ஸோபானம்" என்று திருத்துக. |
| 43 | 6 | "பெயப்பொருளாகிய" என்றதை "மெய்ப்பொருளாகிய" என்று திருத்துக. |
| ,, | 9 | மெஞ்ஞானம் என்பதை மெய்ஞ்ஞானம் எனவாசிக்க |
| 45 | 9 | "தாபுமானஸ்வாமி" என்றதை "தாயுமானஸ்வாமி" என்று திருத்துக. |
| ,, | 12 | ப்ரர்ணலயம் என்பதை பராணலயம் எனவாசிக்க |
| ,, | 24 | ஸூசி என்பதை ஸூகி எனவாசிக்க |
| ,, | 30 | ஆத்மாவின என்பதை ஆத்மாவின் எனவாசிக்க |
| 45 | 12 | "யாங்சிற்—எனனு" என்றவற்றை "யாங்கிற்—என்னு" என்று திருத்துக. |
| 50 | 7 | "கவும்" என்றதற்குப்பின் "(4)" என்ற குறிப்பு இலக்கத்தைக் கூட்டுக. |
| 51 | 3 | போருள் என்பதை பொருள் எனவாசிக்க |
| 57 | 13 | "ஸமத்வம்" என்ற பதத்துக்குப் பின்னிருக்கும் அணைக்குறியை "என்ற" என்ற பதத்துக்கு அருகே சேர்க்க. |
| 66 | 28 | "க்ருதம்" என்றதில் "ம்" என்றதை விலக்குக. |
| 70 | 19 | "நிர்வாணத்தைப்" என்றதின்பின் "(7)" என்ற இலக்கத்தைக் கூட்டுக. |
| 71 | 21 | அத்யாய முடிவில் "உபநிஷத்கள் என்றும், ப்ரஹ்ம |

## பிழைதிருத்தமும் கூட்டவேண்டியனவும்.

| பக்கம் | வரி. | |
|---|---|---|
| | | 'மவித்தை என்றும் ... ப்ரஸித்திபெற்ற ஞான 'யோகம் என்ற இரண்டாம் அத்யாயம் முற்றிற்று" என்ற சொற்களைக் கூட்டுக. |
| 74 | 17 | பதிநான்கு என்பதை பதினான்கு எனவாசிக்க |
| ,, | 18 | எந்த ,, எந்தப் ,, |
| | | அந்த ,, அந்தப் ,, |
| 75 | 16 | மெஞ்ஞான ,, மெய்ஞ்ஞான ,, |
| 76 | 2 | மெஞ்ஞான ,, மெய்ஞ்ஞான ,, |
| ,, | 5 | மெஞ்ஞான ,, மெய்ஞ்ஞான ,, |
| 77 | 14 | உபேக்ஷத்து ,, உபேக்ஷித்து ,, |
| ,, | 28 | எர்ப்பது ,, ஏற்பது ,, |
| 79 | 1 | "வெறுத்லுப்" ,, "வெறுத்துப்" ,, |
| 81 | 29 | அவஸ்யம் ,, அவஶ்யம் ,, |
| 84 | 15 | அன்று ,, அல்லன் ,, |
| 89 | 2 | பயறின் ,, பயற்றின் ,, |
| 90 | 5 | அந்த ,, அந்தத் ,, |
| 91 | 1 | "(7)" ,, "(1)" ,, |
| ,, | 13 | ஸச்ஙி ,, ஸச்சி ,, |
| 91 | 24 | "க்ருதய" ,, "க்ருத்ய" ,, |
| 95 | 24 | "ஸூக்ஷ்ம" ,, "ஸௌக்ஷ்ம" ,, |
| 100 | 21 | "ஒன்றில் நின்று" என்ற பதத்தில் "ஒன்றில்" என்றதை விடுக. |
| 105 | 1 | "ன்த" என்றதை "தன்" என்று மாறுக. |
| ,, | 13 | இசைந்நு என்பதை இசைந்து எனவாசிக்க |
| 106 | 26 | "ஸங்க்ரத்தையும்" என்றதை "ஸங்கரத்தையும்" என்று திருத்துக. |
| 112 | 12 | "செய்" என்ற பதத்துக்குப் பின் "(5)" என்றதைக் கூட்டுக. |
| 113 | 24 | "அகர்த்தா" என்றதின் பின் "(௪. ௰௩)" என்ற இலக்கங்களைக் கூட்டுக. |

| பக்கம். | வரி. | |
|---|---|---|
| 114 | 20 | "ஸர்வஞர்னம்" என்றதை ஸர்வஞானம் என்று வாசிக்க. |
| 118 | 12 | "படித்தரத்தில்" என்றதை "படிகளில்" என்று திருத்துக. |
| 122 | 5 | "படித்தரங்களொன்றில்" என்றதை "படிகளில் ஒன்றில்" என்று திருத்துக. |
| 122 | 6 | "படித்தரத்தில்" என்றதை "படியில்" என்று திருத்துக. |
| 125 | 1 | கொண்ட என்பதை கொண்டே எனவாசிக்க |
| ,, | 10 | கெடுக்கும் ,, கொடுக்கும் ,, |
| 126 | 25 | "பண்ணுமைம்" ,, பண்ணுமை ,, |
| 127 | 13 | "ஸ்பரஶ" ,, ஸ்பர்ஶ ,, |
| 128 | | அத்யாய முடிவில் "உபநிஷத்கள் என்றும், ப்ரஹ்ம வித்தை என்றும், யோக ஶாஸ்த்ரம் என்றும், பகவத்கீதைகள் என்றும் கூறப்பட்ட ஸ்ரீ க்ருஷ்ணார்ஜுந ஸம்வாதத்தில் ப்ரஸித்தி பெற்ற கர்மயோகம் என்ற மூன்றும் அத்யாயம் முற்றிற்று" என்ற சொற்களைக் கூட்டுக. |
| 132 | 20 | அநேகநேக என்பதை அநேகாநேக எனவாசிக்க |
| 133 | 13 | "லய" என்ற பதத்தை விலக்குக. |
| 136 | 25 | "(1)" "(2)" என்ற இலக்கங்களை விலக்குக. |
| 136 | 27 | "(3)" என்றதை "(1)" ஆக மாற்றுக. |
| 136 | 27 | "(4)" "(5)" "(6)" என்றவற்றை விலக்குக. |
| 136 | 23 | "ஆறி" என்றதின்பின் "(2)" என்ற இலக்கத்தை எழுதுக. |
| 143 | 10 | "(3)" என்றதை "(2)" ஆக மாற்றுக. |
| 150 | 25 | "மந்த்ரத்தில்" என்றதை "மந்த்ரங்களில்" என்று [திருத்துக. |
| 151 | 1 | "அக்னி" க்குப்பின் "(2)" என்ற இலக்கத்தை எழுதுக. |
| 151 | 2 | "ஹோதா"வுக்குப்பின் "(3)" என்ற இலக்கத்தை எழுதுக. |

## பிழைதிருத்தமும் கூட்டவேண்டியனவும்.

| பக்கம். | வரி. | |
|---|---|---|
| 151 | 2 | "ஹவிஸாம்" என்றதற்குப்பின் "(4)" என்ற இலக்கத்தை எழுதுக. |
| 151 | 3 | "கர்மம்" என்றதற்குப்பின் "(5)" என்ற இலக்கத்தை எழுதுக. |
| 151 | 4 | "ப்ரஹ்மமே" என்றதற்குப்பின் "(6)" என்ற இலக்கத்தை எழுதுக. |
| 145 | 26 | "தேவர்களை" என்ற சொல்லின்பின் "மாத்ரம்" என்ற சொல்லைக் கூட்டுக. |
| 156 | 3 | "ஹோமாக்நியில்" என்ற சொல்லின்முன் "(2)" என்ற இலக்கத்தை எழுதுக. |
| 161 | 14 | "(3)" க்குப் பதிலாக "(8)" எழுதுக. |
| 162 | 20 | "மகழ்ந்து" என்பதை "மகிழ்ந்து" என வாசிக்க. |
| 167 | 16 | "தேகமன்று நான்" என்ற சொற்களை "தேகம் நான் அன்று" என்று மாறுக. |
| 168 | | அத்யாயமுடிவில் "உபநிஷத்கள் என்றும், ப்ரஹ்ம வித்தை என்றும் ......... ப்ரவஸித்திபெற்ற நான்காம் அத்யாயம் முற்றிற்று". என்ற சொற்களைக் கூட்டுக. |
| 169 | 20 | "அவற்ருற்" என்றதில் "ற்" என்றதை "ல்" என்று திருத்துக. |
| 171 | 3 | "தவந்த்வ" என்றதில் "த" என்றதை "த்" என்று திருத்துக. |
| 171 | 17 | "ஸாங்க்யம" என்றதில் "ம" என்றதை "ம்" என்று திருத்துக. |
| 173 | 9 | "கஷ்டப்பட்டார்" என்றதை விலக்கி "கஷ்டத்தைஅடைந்தேன்" என்று எழுதுக. |
| 173 | 10 | "தன்" என்றதை "தமது" என்று மாறுக. |
| 173 | 11 | "பரிபூரணானந்த்ம்" என்றதில் "த்" என்றதை "த" என்று மாறுக. |
| 173 | 12 | "கண்டனவெல்லாம்" என்றதில் "ல்" என்றதை விலக்குக. |

பிழைதிருத்தமும் கூட்டவேண்டியனவும்.

| பக்கம். | வரி. | |
|---|---|---|
| 173 | 18 | "சருதி" என்றதை "ஶ்ருதி" என்று திருத்துக. |
| 173 | 19 | "கேட்டு" என்றதை "கேட்டும்" என்று திருத்துக. |
| 173 | 28 | "புசித்தார்" என்றதை "புசித்தேன்" என வாசிக்க. |
| 173 | 29 | "அநுசரித்தார்" என்றதை "அநுசரித்தேன்" என்க. |
| 174 | 9 | "நிராஶி" க்குப்பின் ";" என்ற குறிப்பை எழுதுக. |
| 174 | 16 | "யோகத்தைங்" என்றதில் "ங்" க்குப் பதிலாக "ச்" என்று எழுதுக. |
| 175 | 24 | "போகம்" என்றதை "யோகம்" என்று மாற்றுக. |
| 176 | 7 | "கர்பங்களை" "கர்மங்களை" என்று திருத்துக. |
| 176 | 26 | "சிந்த" என்றதை "சித்த" என்று திருத்துக. |
| 176 | 29 | "அவர்" என்றதை "அவர" என்று மாற்றுக. |
| 185 | 8 | "கவனிப்பன" என்றதை "கவனிப்பன்" என்று மாற்றுக. |
| 185 | 29 | "தம்" என்றதை "தம்மை" என்க. |
| 186 | 15 | "சமர" என்பதை "சமரச" என வாசிக்க. |
| 191 | 26 | "கொண்ட முனியோ" என்றதைக் "கொண்டானே அவனே முனி" என்று திருத்துக. |
| 192 | 11 | "ஸாஹ" என்பதை "ஸாக" எனவாசிக்க. |
| 200 | 20 | "தன்னை மதித்துப் பிறர்" என்றதை "தன்னைப் பிறர் மதித்து" என்று மாறுக. |
| 208 | 18 | "லயபோகத்தை" "லயயோகத்தை" என்று திருத்துக. |
| 210 | 8 | "பேறை" என்பதை "பேற்றை" எனவாசிக்க. |
| 218 | 6 | "நிராஸை" ,, "நிராஶை" ,, |
| 220 | 2 | "ஸாத்தி" ,, "ஶாத்தி" ,, |
| 223 | 6 | "ஸஷ்ட" ,, "அஷ்ட" ,, |
| 225 | 14 | "என்றும்" ,, "என்னும்" ,, |
| 228 | 7 | "மாட்டார்கள்" ,, "மாட்டார்" ,, |
| 228 | 19 | "மாத்ரு பூதேஶ்வர" என்றதை விலக்குக. |

# பிழைதிருத்தமும் கூட்டவேண்டியனவும்.

| பக்கம். | வரி. | |
|---|---|---|
| 229 | 4 | "ப்ரவண" என்றதை "பரபவண" என்று திருத்துக. |
| 229 | 1 | "உபாதியியில்" என்பதை "உபாதியில்" என்க. |
| 238 | 6 | "பிரளாமல்" ,, "பிறழாமல்" ,, |
| 230 | 9 | "(ஆர்த்)" என்றதை "ஆர்தி:=" என்று திருத்துக. |
| 240 | 17 | "தேஸத்தில்" என்றதை "தேஶத்தில்" என்று திருத்துக. |
| 240 | 22 | "விரிகின்ற" என்றதை "விரிக்கின்ற" எனமாறுக. |
| 250 | 20 | "ஸருஜ" என்றதை "ஸ்ருஜ்" என்று திருத்துக. |
| 256 | 17 | "உன்னை" என்றதை "என்னை" என்று திருத்துக. |
| 256 | 22 | "ஜாக்ரதஶையை" என்றதற்குப்பின் "கூ, எ-க்குரிய உரையை, 270—274 ம் பக்கங்களில், பார்த்தறிக" என்று கூட்டுக. |
| 257 | 13 | "மனுஷ்யருடைய" என்றதற்குப் பின் "ஆயிரம்" என்று கூட்டுக. |
| 258 | 13 | "பகலாகிய" என்றதற்குப்பின் "ஆயிரம்" என்று கூட்டுக. |
| 258 | 14 | "ராத்திரியாகிய" என்றதற்குப்பின் "ஆயிரம்" என்று கூட்டுக. |
| 268 | 20 | "வித்தையை" என்றதில் "யை" என்றதைவிலக்குக. |
| 274 | 22 | "ஸரீரங்கள்" என்றதில் "ஸ" என்றதை "ஶ" எனத் திருத்துக. |
| 292 | 18 | "விக்ஷயத்தில்" "க்ஷ" என்றதை "ஷ" எனமாறுக. |
| 293 | 28 | "உந்தமக்கல்வியில்" ந் என்றதை த் என்றுமாறுக. |
| 320 | 17 | "அஸ்வத்தமும்" என்றதில் ஸ் என்றதை ஶ் என்று திருத்துக. |
| 320 | 25 | "அஸ்வத்த" என்றதில் ஸ் என்றதை ஶ் எனமாறுக. |
| 321 | 1 | "காஶியபர்" என்றதில் ஶி என்றதை ஶ் எனமாறுக. |
| 321 | 25 | "எனவாம" என்றதை "என்பனவாம்" என்று திருத்துக. |
| 322 | 25 | "பாணஞ்செய்து" என்றதில் ண என்றதை ன எனத் திருத்துக. |

## பிழைதிருத்தமும் கூட்டவேண்டியனவும்.

| பக்கம். | வரி. | |
|---|---|---|
| 323 | 1 | "உச்சைஶ்ரவஸ்" என்றதில் ஶ என்றதை ஶ் எனத்திருத்துக. |
| 334 | 8 | "கஶ்யப" என்றதை "காஶ்யப" என்று திருத்துக. |
| 326 | 11 | " " " " " |
| 329 | 3 | "பலன் எதுவோ அதுவும்" என்றதை விலக்கி, "ப்ராரப்த கர்மபலனும்" என்று எழுதுக. |
| 346 | 10 | "இந்த்ரியங்களை நடத்துவோனே" என்றதை நீக்கி, "அத். உ. மந். க." என்று எழுதுக. |
| 370 | 19 | "பொருள்" என்றதின் பின் "என்று ஶ்ரவணம் செய்து" என்ற சொற்களைக் கூட்டுக. |
| 387 | 2 | "குணங்களை" என்றதின்பின் "ப்ராபல்ய உபாயத்தால்" என்று கூட்டுக. |
| 387 | 10 | "மூன்று" என்றதை நீக்கி, "ஒன்று கூடிய மூக்" என்ற சொற்களைக் கூட்டுக. |
| 387 | 11 | "அத்" என்றதை விலக்குக. |
| 387 | 11 | "குண த்ரய விபாகம்" என்று தொடங்கும் வரிக்குக் கீழே புது வரியாக மேல் வரும் சொற்களைக் கூட்டுக. "ப்ரக்ருதி ஜடப்பொருளாதலால் தன்னைத் தானே விபாகஞ் செய்யாது". "பரமேஶ்வரன் ப்ரக்ருதியுட் புகுந்து மிக மிஶ்ரமாயிருந்த குணங்களைத் தமது ஶக்தியால் ப்ராபல்ய அவஸ்தைகளில் நிறுத்தி, ஸத்வ ரஜஸ் தமஸ் என்ற குணத்த்ரயத்தை வகுத்தார்". |
| 390 | 32 | "ஸ்ரோதஸகளை" என்றதை "ஸ்ரோதஸ்களை" என்று திருத்துக. |
| 413 | 14 | "வார்த்தை" என்றதற்குப்பின் "ஏனெனில், ஈஶ்வர ஶக்திகள் ஜீவனுக்கு இல்லாதபடியால்" என்று கூட்டுக. |
| 443 | 29 | "பேற்றதும்" என்றதை "பெற்றதும்" என்று திருத்துக. |